திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-ஞானசம்பந்தகுரவேநமஃ.

# காசிகாண்டம்.

சைவசிரோமணியாகிய

அதிவீரராமபாண்டியமகாராஜன்

அருளிச்செய்தது.

இஃது

சூளை,

சுப்பராயநாயகரால்

பரிசோதிக்கப்பட்டு,

புரசை,

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1884







உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காசிகாண்டம்.

## பாயிரம்.

### விநாயகர்காப்பு.

மாற்றரியதொல்பிறவிமறிகடலினிடைப்பட்டுப்
போற்றுறுதன்குரைகழற்றூட்புணைபற்றிக்கிடந்தோரைச்
சாற்றரியதனிமுத்தித்தடங்கரையின்மிசையுய்ப்பக்
காற்றெறியுந்தழைசெவியகடாக்களிற்றைவணங்குவாம்.

### சிவபெருமான்.

வேறு.

சீர்பூத்தசெழுந்தரங்கத்தீம்புனன்மந்தாகினிதண்டேனூர்கொன்றைத்
தார்பூத்தசெஞ்சடையிலணிந்துமதன்மேல்விழைவுதணியானுகிக்
சார்பூத்தவிருவிசும்பிற்கங்கைநதிசூழ்கிடந்தகாசிவாழும்
ஏர்பூத்ததனிமுதலினிணையடிப்பூங்கமலமலரேத்துவாமே. (க)

### உமாதேவியார்.

வேறு

அலகிலாக்கருணையென்னுமந்தளிரீன்றுதொல்லை
யுலகெலாம்பூத்துக்கங்கையுவட்டெடுத்தொழுகுஞ்சென்னி
மலையினிற்படர்ந்தபச்சைமரகதக்கொடியைஞானக்
கலையமுதொழுகுந்தீஞ்சொற்கிளியினைக்கருத்துள்வைப்பாம். (உ)

ஸ்தல விநாயகர்.

கனைபொருகங்கையாற்றிற்காளிந்திமடுப்பதென்னச்
சொரிமதக்கலுழிவெள்ளஞ்சுழித்துவார்ந்தொழுகக்காசித்
திருநகரினிதுவைகுந்திங்களங்குழவிக்கோட்டு
வனைபுனைகளிநல்யானைமலரடிவணங்குவாமே. (௩)

குமாரக்கடவுள்.

இலைமுகப்பைம்பூண்டாங்கியோர்குடியிருந்தகொம்மை
முலைமுகிழ்பூத்தவள்ளிமுயங்குதோள்வெற்பினானை
மலைமுகம்புழுங்கவாட்டிமாமுதறடிந்துவெய்ய
கொலைபழுத்தொழுகும்வைவேற்குழகனைவணங்கல்செய்வாம். (௪)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

கேழ்கிளர்புனிற்றுத்திங்கள்கிடந்தொளிர்சடையோன்பங்கி
ருழிருங்கூந்தற்பேதைதடமுலைத்தீம்பான்மாந்தி
யேழ்நிலவரைப்புமுய்யவீர்ந்தமிழ்மாரிபெய்த
காழிமாமுகிலின்செய்யமலரடிகருத்துளவைப்பாம். (௫)

திருநாவுக்கரசுநாயனர்.

வேறு.

கருவாழிக்கனைகாணுச்சாக்கியர்கள்கற்றாணிற்சிக்கயாத்துப்
பெருவாழியிடைவீழ்ப்பவதுபுணையாக்கரையேறிப்பெட்பினுள்ள
முருகாமெய்ம்மயிர்பொடிப்பவோங்கெயின்மூன்றெரித்தோனை யுவந்து
பாடுந்,திருநாவுக்கரசனிருசேவடிப்பூங்கமலமலர்சென்னிசேர்ப்பாம்(௬)

சுந்தரமூர்த்திநாயனர்.

வேறு.

கதழெரிநேமிதாண்டிக்கராங்கவர்குரவனீன்ற
மதலையையழைத்தசெங்கண்மாலெனவருந்துருமம
லதிர்கடலமிர்தமன்னவருந்தமிழ்ப்பதிகம்பாடி
முதலைவாய்ப்பிள்ளைதந்தமுதல்வனைவழுத்தல்செய்வாம். (௭)

மாணிக்கவாசகசுவாமிகள்.

வேறு

கொழுதியினவரியளிகள்கூட்டுண்ணுங்கொன்றையந்தார்க்குழகன்
ருளிற், பழுதறுசொற்பாமாலை புனைந்தேத்தியெறிதிரைநீர்ப் பரவையா
டை,முழுதுலகுமதிக்கவிகைதனிநிழற்றியொருசெங்கோன்முறைநடாத்
தும், வழுதிமுனம்பரியழைத்தவாதவூரிறைவனடி வழுத்தல்செய்வாம்.

அறுபத்துமூவர்.

முறுவற்றண்கதிர்மதியுமுரிபுருவக்குனிசிலையுமூசிவண்டு
சுழிகற்குமலர்க்குழலுங்குழைதடவுங்கருந்தடங்கட்கயலுந்தாங்கு

மறுவற்றமதிமுகத்துமானிடத்தர்மழுவலத்தர்மலர்த்தாள்சேர்ந்த
அறுபத்துமூவர்மலரடியிணைகளைமதுசிரத்தணிதல்செய்வாம் (௯)

பரமாசாரியர்.

திருக்கிளர்வெண்பிறைக்கொழுந்துஞ்செஞ்சடையுமறிமானுந்திண்டோளெட்டு, முருக்கிளர்வெம்புலியதளுங்கரந்துமானுடவடிவினுலகிற்போந்து, மருட்கிடனுமெனைப்பிணித்தவல்வினையின்றொடரனைத்துமாயறுறி, யருட்கடைக்கணளித்தாண்டசுவாமிதேவன்றிருத்தாளகத்துள்வைப்பாம். (௧0)

சிவனடியார்கள்.

அவிராழிச்சுடர்ப்படைகொண் டுலகளிக்குநெடுமாலு மயனுங்காணுத், துவர்வாய்மெல்லியல்பாகன் றிருவருள்பூண்டிரங்குதிரைசுருட்டுங்தெண்ணீ, ருவராழிசூழ்கிடந்தவிருநிலத்திற்பாதலத்திலும்பர்நாட்டில், சிவவேடந்தரித்தவர்மற் றெவருளரங்கவர்மலர்த்தாள் சென்னிசேர்ப்பாம். (௧௧)

வேறு.

அறந்தவாதொழுகும்வைதிகசைவநெறியினிலகணிலமருங்கிற்
பிறந்துளோர்பிறவாகின் றுளோர்பிறப்போர்பெய்கழற்றுமமைப்போதின்
மறந்திடாதன்புபூண்டுளோர்யாவராயினுமுவந்துமற்றவர்தஞ்
சிறந்தபூங்கமலமருட்டிவீடளிக்குஞ்சேவடிசென்னியிற்சேர்ப்பாம். ()

வாழ்த்து.

வேறு.

அருமறைமுனிவர்வாழ்கவானினம்வாழ்கதெண்ணீர்
விரிதிரையுலகங்காக்கும்விறல்கெழுவேந்தன்வாழ்க
மருவியதிங்கடோறுமழைவளஞ்சுரக்கவெங்கோன்
பொருவறமொழிந்ததொன்னூல்பொற்பொடும்பொலிகமாதோ. (௧௩)

சிறப்புப்பாயிரம்.

வேறு.

புவிபுகழுங்காசிகண்டம்பொருவில்பராசரன்புதல்வன்புகன்றவாறே
செவிவழியினமுதுகுத்ததெனமதுரம்பொழிதமிழாற்றெரித்தல்செய்தா
னுவவுமதிக்குடைநிழற்றவோராழிதிசையுருட்டியொலிநீர்வேலை
யவனிபுரந்தருள்வழுதியதிவீரராமனிகலரசரேறே. (௧௪)

புராணவரலாறு.

வேறு.

நீற்றொளிபழுத்தநெற்றியன்றொன்ஞானிகழ்த்தியவறநெறியமிழ்த
மூற்றிருந்தொழுகுநாவினனெண்டோளொருவனையெண்ணியவுளத்தன்

மாற்றருஞ்சிறப்பிற்கண்டிகைமாலைமருளறவிளங்கியமெய்ய
னூற்றருந்தவத்துச்சூதமாமுனிவனைமிசாரணியத்தினடைந்தான். (கரு)

சூதமாமுனிவன்வரவெதிர்நோக்கித்துகளறமுக்குறும்பெறிந்து
மாதவக்கிழமைபூண்டுளோர்யாரும்வருகெனமுகமனன்கியம்பித்
தீதறயாங்களிழைத்தநற்றவத்தின்செய்தியாற்போந்தனையென்ன
வாதரம்பெருகியருக்கியமுதலயாவையுமுறையினிலளித்தார். (கசு)

வழிவரல்வருத்தமாற்றியபின்னர்சூதமாமுனிவரமகிழ்வான் [ழிந்த
மொழிதருபதினெண்புராணமுமுன்னர்மொழிந்தனைகாந்தத் துண்மொ
பழுதறுகாசிகாண்டமீயின்னும்பகர்ந்திடல்வேண்டுமென்றிரப்பப்
பொழிதருகருணைவியாதனைவணங்கிச்சூதமாமுனிவரன்புகலும் (கஎ)

பாயிர-முற்றிற்று.

---

# பூர்வகாண்டம்.

## முதலாவது.

## நாரதர்விந்தவரையைக்கண்ட அத்தியாயம்.



திருவளர்மகதிவீணைத்தெய்வமாமுனிவன்றெண்ணீர்
கருமதையாற்றின்மூழ்கிகாணிலத்துயிர்கட்கெல்லாங்
கருதியவனைத்துநல்குங்குடிலையங்கடவுட்போற்றி
வருதலும்பொருவில்விந்தமால்வரையினிதுகண்டான். (க)

குழைத்துவிண்படருங்கோட்டுக்கோழரையதவம்யாவும்
பழுத்தனநின்றதோற்றம்பைந்துழாய்ப்படலைத்திண்டோ
ளழற்பொலிதிகிரிமாயனளப்பருமண்டமெல்லாம்
விழுத்தகுமெய்யிற்றாங்கிநின்றெனவிளங்கிற்றன்றே (உ)

மின்றிகழ்கமஞ்சூற்கொண்டல்படிதலும்வேழமென்னுச்
சென்றொருவேழமேற்பச்செவிவளிவிசையிற்சிந்திக்
குன்றிநின்றகன்றமேகங்கொல்சினக்களிநல்யானைப்
பின்றொடர்ந்தேகவஞ்சிப்பெயர்ந்தமாலியானைபோலும். (௩)

தளிமுகிற்படலமந்தண்சாரலிற்றவழவோங்கி
வெளிமுகடணவுசென்னிமீக்கிளர்மரங்களெல்லாம்
நளிர்நிலாமணிக்கற்பாறைநகைமதிதவழமல்குங்
குளிர்புனற்றிவலைமாந்திக்குழைத்தனவளருமன்றே. (௪)

வண்டொடுகிஞ்சிறாந்தேனுமலர்ப்பொதியவிழ்த்துவார்ந்த
தண்டுளிதலைமார்ந்துதண்ணறுஞ்சாரற்றாழ்ந்த

கொண்டலினனைந்தகூந்தற்குறத்தியர்குழாங்கொண்டேகி
விண்டொடுகுடுமியேறிவிரித்தனர்புலர்த்துவாரே. (௫)

தடஞ்சினைமரங்களெல்லாஞ்சந்தனம்வேழமெல்லாங்
கடம்பொழிபுழைக்கைகால்வாய்க்கழற்சினக்களிநல்யானை
யடைந்துலாம்விலங்கியாவுமருங்கடிநரந்தநாவி
யிடைந்துறுபறவையாவுங்கின்னரமிதுனமாதோ. (௬)

இனையனவளங்கொள்விந்தமானுடவுருவமெய்திக்
கனைகதிர்ச்செல்வனென்னக்கதிர்பரந்தெறிக்கப்போந்த
வினையறுதவத்துமிக்கவீணைமாமுனியைக்காணுப்
புனைகழல்வழுத்தவெண்ணிப்போயெதிர்கொண்டதன்றே. (௭)

தீங்தொடைமகதிவீணைத்தெய்வமாமுனிவன்ருளி
லேங்கெழிற்குடுமிக்குன்றங்குழையொடுமிறைஞ்சிற்றென்ருற்
பாங்தளின்பிடரின்மேயபடுகடலுடுத்தபாரின்
வாய்ந்தநற்றவத்தின்மிக்கதுளதெனவகுக்கலாமோ. (௮)

வணங்கலுந்தழீஇக்கொண்டன்பின்வரம்பிலாவாசிகூறும்
பிணங்குநூன்மார்பனுள்ளம்பெட்புறவுவகைபொங்க
விணங்கியமுகமனேடுமருக்கியமுதலவீந்து
தணிந்துதாள்வருடிப்போந்தவருத்தமுந்தவிர்த்ததன்றே. (௯)

மாதவவிவணீபோதமனத்திருளகன்றதம்பொற்
பாதநுண்டுகளாலின்றென்பவக்கடறூர்ந்ததிற்றைத்
தீதறுநாளுநன்னுளாயதுசேணினேங்கு
பூதரமென்னும்பேருமெனக்கினிப்பொலிந்ததன்றே. (௧0)

என்றலுமுயிர்ப்புவீங்கிநாரதனிருப்பநோக்கித்
துன்றிரும்புவிகளெல்லாஞ்சுமப்பவன்யானேமற்றைக்
குன்றெலாஞ்சுமக்குமென்னல்கூற்றலாற்றரிக்கலாற்ரு
பொன்றிணிந்திருக்குநீரான்மேருவும்பொலிந்ததன்றே. (௧௧)

உயர்தருமத்தமில்லாநிடதமுமவுணரோங்குஞ்
செயிருடையுதயவெற்புஞ்செம்மையினீலக்குன்று
மியல்புறநடத்தல்செல்லாரேவதக்கிரியுநாகம்
பயிலியற்பொதியவெற்புமெனக்கிணைபகரலாமோ. (௧௨)

கண்ணில்மந்தரமும்வெய்யகடும்பனிநலியவோங்கு
மண்ணலங்குடுமிக்குன்றுமகனிலஞ்சுமக்கலாகா
விண்ணுயர்சையமுங்கிரவுஞ்சமும்வேலைஞாலத்
தெண்ணுறுகிரிகள்யாவுமெனக்கிணையல்லமாதோ. (௧௩)

என்றிகல்விந்தங்கூறவிருஞ்சடைக்கடவுள்வைகுங்
குன்றமேமுதலாயுள்ளகுலவரையனைத்துமிற்க
நன்றுகொலிதனுக்குற்றமனச்செருக்கென்றுநக்கு
மன்றலங்கமலப்புத்தேண்மகனுளத்தெண்ணிச்சொல்வான். (௧௪)

உடைதிரைப்பரவைஞாலத்துயர்விசும்பகடுதோயுங்
கடவுண்மால்வரைகட்கெல்லாமிறையெனக்கழறலென்னே
வடவரைநின்னையாதுமதிக்கிலாதுரைத்தமாற்றந்
தடவரைக்கிறைவநின்பாற்சாற்றுவான்புகுந்தேனால். (௧௫)

நின்னுழையடைந்தபோழ்தினெட்டுயிர்ப்பெறிந்தவாறு
மன்னதுகருதியென்னுவறைந்துநன்முகமன்கூறி
யின்னிசைமகதிவீணையிருந்தவர்க்கிறைவன்வானோர்
பொன்னகரதனைநோக்கிப்போயினன்போயபின்னர். (௧௬)

வேறு.

வீழ்புலன்வழிமனம்விடுநர்வாழ்க்கையுஞ்
சூழ்வினைமுடித்திடார்துய்த்துவாழ்வதுங்
தாழ்விலன்புடையதன்றமரிகழ்ந்திட
வாழுநர்வாழ்க்கையும்வாழ்க்கையாகுமோ. (௧௭)

திருந்தலர்புகழொடுஞ்செல்வந்துய்த்திட
வருந்தியுங்கருணையோடடிசில்வாய்மடுத்
தருந்தியுந்துயின்றுநல்லின்பமாற்றியு
மிருந்துயிர்சுமப்பதிலிறத்தனன்றரோ. (௧௮)

புந்தியைக்கொடியவெம்பசியைப்பொற்பினை
யந்தமின்முயற்சியைத்துயிலையாற்றலை
நந்தலிலுயிரினைநன்னர்நெஞ்சினைச்
சிந்தையொன்றெய்திடிற்சிதைக்குமென்பவே. (௧௯)

உருத்தெழுவெப்புநோய்பழகினுய்யுமா
றருத்தியமருந்தினிலமையுஞ்சிந்தைவெப்
பெரித்துநாள்பற்பலகழியினீண்டுமால்
வருத்துவரோவிஃதாற்றவல்லரோ. (௨௦)

மெய்ம்மைநூற்றுறைபடிவீணைவல்லவன்
பொய்ம்மொழிபுகல்வனென்றெண்ணல்புல்லிதே
யம்மவோமேருவுமமருக்கெண்ணுமே
னம்முடையெறுழ்வலிநன்றுநன்றரோ. (௨௧)

பொலனெடுங்கிரிக்குறுபுகழ்ச்சியாதவன்
வலம்வருகின்றதால்வந்ததாமவன்

செலவினைத்தடுப்பனென்றெண்ணித்தெண்டிரை
யுலகளந்தவனெனவிசும்பினோங்கிற்றே. (உஉ)

மழகதிர்கனைகடன்முகட்டின்வந்துமே
லெழுவதுசெய்கடனிறுத்தற்கெண்ணுபு
பழமறையந்தணர்பார்க்குந்தன்மைபோ
னிழலுமிழ்மணிவரைநோக்கிநின்றதே. (உங)

நாரதர்விந்தவரையைக்கண்டவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சo.

---

இரண்டாவது,

## தேவர்கள் பிரமலோகமடைந்த அத்தியாயம்.

அருமறையந்தணர்கடன்களாற்றிட
மருவிரிகமலமேல்வண்டுபாண்செய
விரிகதிர்திசைதொறும்பரப்பும்விண்ணவன்
முரிதிரைக்கருங்கடன்முகட்டிற்றோன்றினான். (க)

எழுந்தவெய்யவனழற்கிறைவன்றிக்கினைக்
கழிந்துபோய்ச்செந்தமிழ்க்கடவுண்மால்வரை
தழங்கிசையருவியிற்றவழுந்தென்றலங்
கொழுந்துலாந்தென்றிசைக்குறுகன்மேயினான். (உ)

கனைகதிர்ப்பரிதியங்கடவுள்வானவன்
றனைவயப்புரவிகடேண்டச்செல்கில
வெனையரோதடுப்பவரொன்னவெண்ணுரு
வனைகழலருணனும்வணங்கிக்கூறுவான். (ங)

என்னுடைப்பணியினலன்றியெல்லொளி
மன்னவபொலங்கிரிவலங்கொளேலென
மின்னகுமணிதிகழ்விந்தமால்வரை
தன்னுடைவலியினாற்றடுத்ததாமென்றான். (ச)

என்றலுமிருட்குறும்பெறியும்வெய்யவன்
றன்றிருவிசும்பெலாமறைத்ததோற்றத்தா
னன்றுநன்றிதன்வலியென்றுநன்மணிக்
குன்றினைவியப்பொடுங்குறித்துநோக்கினான். (ரு)

வடதிசைக்குணதிசைமருவிவாழுநர்
படர்வெயில்கனற்றலிற்பையுளெய்தினர்.

குடதிசைதென்றிசைக்குழுமிவாழுநர்
மிடையிருட்பிழம்பினுளுள்ளம்வெம்பினர். (௬)

அருமறைவேள்விகண்முதலவாகிய
கருமமென்றனைத்தவையாவுங்காய்கதி
ரிரவியஞ்செல்வனையின்றியின்மையால்
விரிகடலுலகெலாந்துயரின்வீழ்ந்தவே. (௭)

தோற்றுவித்தளித்தவைதுடைத்தல்காலங்கள்
போற்றுதல்வெங்கதிர்ப்புனிதனன்றிமற்
றூற்றுநரின்மையாலுலகம்யாவையு
மாற்றருஞ்சித்திரமென்னவைகுமால் (அ)

ஓரிடைவெயிலிருளோரிடத்ததாய்ச்
சேர்தலினுரகருந்தேவர்யாவரும்
பார்மிசைமுனிவரும்பங்கயாசனன்
வார்கழற்றூமனையடைந்துவாழ்த்தினர். (௯)

வேறு.

அருவமாயுருவமாகியாதியாயநாதியாகிப்
பிரமமாயடைதற்கெட்டாப்பேரின்பவீடதாகி
யிரணியகருப்பனுகியாருமாயெவையுமாகித்
தெரிவரும்பொருளாய்நின்றநின்னடிசென்னிசேர்ப்பாம். (௧௦)

எழுதருமறைகட்கெய்தாதெங்குமாய்நின்றாய்போற்றி
மொழியுடன்மனதுக்கெட்டாமுழுப்பரம்பொருளேபோற்றி
தொழுதகுதவத்தோர்நெஞ்சத்துவெளியதனிற்றோன்றி
யழிவருஞ்சோதியாயவருமறைக்கொழுந்தேபோற்றி. (௧௧)

விச்சையாயவிச்சையாகிவிளங்குமுக்குணத்திற்றோன்றி
முச்செயல்புரியாநின்றமூவராய்க்காலமேவா
இச்சையிற்புருடனுகியிறைஞ்சுநர்பவத்தில்வீழு
மச்சமதகற்றிநின்றவமலனேபோற்றிபோற்றி. (௧௨)

ஐம்பெரும்பூதமாகியவற்றுறுகுணங்களாகி
யைம்பொறியாகியந்தக்கரணமாயறிவுமாகி
யைம்பெருங்கருமமாகியனைத்தினுந்தோய்ந்துந்தோயா
வைம்பெருங்கடவுளாகுமாதிநின்னடிகள்போற்றி. (௧௩)

வெருவருங்காமமாதிவெஞ்சுறவெறியநீங்கா
விருவினைத்திரைகளெற்றும்பிறவியங்கடலுளெய்தி
மருளுறுமுயிர்களெல்லாம்வருந்துறாதேற்பஞான
வருளுருவெடுத்தவுன்றனடியிணைக்கன்புசெய்வாம். (௧௪)

உயிர்ப்புறுமறைகள்வேரிவ்வுலகெலாஞ்செய்யபொற்றூள்
பயிர்ப்புறுகிலநின்சென்னிபரமவாகாயமாகும்
வியப்புறுசுழிகளுந்திநடுவெளியாகுமெய்யின்
மயிர்த்தொகையனைத்துமெண்ணில்வான்றருக்குலங்களாமால். ( )

கடவுணின்மனத்திற்றோன்றுங்கலைமதிகண்ணிற்றோன்றும்
படர்வெயிற்கதிரைகான்றுபாயிருள்பருகும்வெய்யோன்
மிடைதருபுவனமெல்லாநின்னுழைமேயவேத்தப்
படுபுகழ்புகழ்வோன்போற்றப்படுவிலநீயேயாமால். (௧௬)

என்றடிதொழுதுபோற்றியிமையவர்நிற்பவோருங்
குன்றிருஞ்சிறைகளீர்ந்தகுருசில்வாண்முகத்தைநோக்கித்
துன்றிருவிசும்பினின்றும்போந்தமைசொல்லுகென்ன
மன்றலங்கமலப்புத்தேண்மனமகிழ்ந்துரைக்கலுற்றான். (௧௭)

வழுத்துமித்துதியாலெவ்வேனைமுகுந்தனைமழுவலானை
முழுத்தபேரன்புமுற்றிமுறையினிற்பரவினோர்க்கும்
விழுத்தகுபொருள்களாகிவேண்டுவவெறுப்பநல்கித்
தொழத்தகுமறைகளேத்துந்தூயவீடளித்துமன்றே. (௧௮)

வெருவரலொழிந்துநெஞ்சின்வெந்துயர்தவிர்கவீவி
ரருமறைமுதலவாயவிஞ்சைசான்மகங்களால்ற
பொருவறும்வாய்மைநீதிபுனிதமாதவங்கள்யாவு
முருவுகொண்டெம்மைநீங்காதுவப்பொடுமினிதுவைகும். (௧௯)

ஒலிமுதற்புலன்களைந்துமொடுக்கியுட்கரணஞ்செற்றோ
ரலகினன்மறையுந்தெள்ளியறநெறித்துறையுணின்றோர்
பலன்விழையாதுநோற்போர்பத்தினிப்பெண்டிராவின்
குலமினிதருந்தப்பைம்புற்கொடுப்பவர்தவத்தின்மிக்கோர். (௨௦)

பிறர்மனைவிழைதல்செய்யார்பெற்றதாய்தந்தைதாளி
னறுமலர்தூவித்தாழ்வோர்நான்மறைக்கிழவர்பாதத்
துறுபுனனுகர்வோர்கங்கைக்கரையினிலுடலநீத்தோர்
மறைபுகழ்பிரயாகைதன்னின்மாகநீர்படிந்ததூயோர். (௨௧)

ஒளிமதியயனஞ்சார்ந்தோருடையகோமுகியைமீந்தோ
ரளியுடனிறந்தோர்க்கெல்லாங்கயையினிலன்னமீந்தோர்
தெளிவுடன்புனிதராகித்திங்களொன்றிடையிட்டுண்போர்
களிதருகாமமாதிகழிமலங்கழுவுநீரார். (௨௨)

ஈங்கிவர்யாருமெம்பாலினிதுவீற்றிருந்துபின்னர்
நீங்கருங்காசிதன்னிற்பிறந்துவெண்ணீற்றுமேனிக்

கோங்குறழ்முலையாள்பங்கன்குரைகழற்கமலம்போற்றி
யாங்கவனருளான்மீளாப்பேரின்பமடைவர்மாதோ. (உ௩)

உறுபுலனடக்கிவேதநெறிவழியொழுகிநின்ற
வறுதொழிலோரும்யானுங்குலமோன்றுமவருளாய்ந்து
மறுவறுமறையோர்தம்பான்மந்திரமனைத்தும்வைத்தேன்
றெறுவிடையவிகள்யாவுந்தோமறத்தொகுத்துவைத்தேன். (உ௪)

ஆன்குளம்படியிற்சேர்ந்தவருந்துகடோயப்பெற்ற
வூன்பயில்யாக்கைகங்கைதோய்ந்ததாமருப்பினுச்சி
வான்புனற்கடவுட்பேர்யாறிருக்கும்வானிலவுகாலுங்
கூன்பிறைமுடித்தசெல்விகொம்பிடைவதியுமாதோ. (உ௫)

கோசலந்தெய்வநன்னீர்நருமதைகோமயந்தா
ஞசறுயமுனைதீம்பாலலைபுனற்கங்கையாகு
மாசில்வெண்டிங்கட்கண்ணிவரதனுமயனுமாலுந்
தேசுடையதனிலென்றுஞ்சேர்ந்தினிதிருப்பரன்றே. (உ௬)

உலகெலாமுறுப்பின்வைகுமாவினையுவந்துபோற்றி
வலம்வரிற்றேவையெல்லாம்வலம்வருபயனுண்டாகுங்
குலவும்வானுதியான்மெய்யிற்றைவரிற்கொடுநோய்துன்பங்
கலதிபோய்நறுமென்கூந்தற்கமலைவந்தடையுமன்றே. (உ௭)

குடநிகர்செருத்தனல்லான்கோதறுமுனிவர்வேதங்
கடவுண்மீன்கற்புமாதர்வள்ளியோர்வாய்மைகாப்போ
ரிடைவிடாதுவந்துதானம்வழங்குநரொழுவராவார்
புடவிகீழ்விழாதெஞ்ஞான்றுமெளிதினிற்பொறுக்குநீரார். (உ௮)

விளங்குநம்முலகின்மேலாம்வைகுந்தமதன்மேற்கந்தன்
வளங்கெழுமுலகம்வெற்பின்மாதுலகதனின்மேலாங்
களங்கனியனையகண்டனுலகதன்மேலாம்பாங்க
ருளங்கவர்வனப்பின்மேவுங்கோவினதுலகமாமே. (உ௯)

கூறுநான்மறைவல்லோருக்கானினைக்கொடுக்குமேலோ
ரீறில்பேரின்பந்துய்த்துநனைதினைமூப்புமின்றி
யாறெலாம்பாலாய்ச்செய்யவளறுபாலடிசிலாய
வீறுயர்கோலோகத்தின்மேவிவீற்றிருப்பர்மாதோ. (௩o)

ஏதமின்மறைகடோரிருபிறப்பாளரல்லா
ராதியிற்றோன்றிநின்றவேதமுமங்கமாறு
மோதியபுராணநூலுங்கண்களோடுள்ளமாகு
மேதகுமவையிலாதார்விழி[illegible]மனமிலாதார் கு ர ள் று (௩௧)

விந்தமால்வரைபொற்கோட்டுமேருவோடிகலிவெய்யோ
னந்தரத்தியங்காவண்ணந்தடுத்ததாலமரீரிங்கு
வந்தநீர்காசிதன்னில்வான்றவம்புரியாநின்ற
செந்தமிழ்முனிவனல்லால்யாரதுதீர்க்குநீரார். (௬௨)

காசியினுறையுமுக்கட்கனியருட்கடலின்மூழ்கி
யாசறவிளங்குகின்றகுடமுனிக்கரியதுண்டோ
தேசுடைமுனிபானீவிர்சென்மின்களென்னவோதி
வாசமென்கமலவீட்டுமறையவன்மறைந்துபோனான். (௬௩)

உடைதிரைப்பரவையேழுங்குடங்கையின்வாரியுண்ட
கடவுண்மாமுனிவன்றன்னைக்காண்பதுநிமித்தமாகப்
படவரவசைத்தமுக்கட்பரமன்வீற்றிருக்குங்காசி
யடைதுநாமென்றுநெஞ்சங்களித்தனரமரரெல்லாம். (௬௪)

காசியைக்குறித்துச்செல்லுங்கால்களேகால்களாகுங்
காசியைவழுத்துநாவேநாவெனக்கழறலாமால்
காசியின்கதைகள்கேட்குஞ்செவிகளேசெவிகளாகுங்
காசியையினிதுகாணுங்கண்களேகண்களாமால் (௬௫)

எனவுளமகிழ்ச்சிபொங்கவிமையவர்குழாங்கொண்டேகிக்
கனைதிரைக்கங்கைசூழுங்காசியிலடைந்தாரொன்னா
வினையறுதவத்துச்சூதன்வேட்கையோடிருந்துநோற்ற
முனிவரரினிதுகேட்பமுகமலர்ந்துரைத்தானன்றே. (௬௬)

இரண்டாவது: தேவர்கள்பிரமலோகமடைந்த
வத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௭௬.

---

மூன்றாவது,

## தேவர்கள் அகஸ்தியர் ஆசீர்மத்தில்வந்த அத்தியாயம்.

---

மாசிறவத்தின்றுறைபோயமறைதேர்முனிவர்மகிழ்கூர்ந்து
காசியடைந்துவிண்ணவர்களிழைத்தவாறுங்கடல்பருகு
மாசின்முனிவற்சேர்ந்ததுவுமன்னோன்விந்தமடக்கியதும்
பேசுகென்னச்சூதமுனிபிறழாதினிதின்மொழிந்தனனால். (௧)

ஆயுமலர்க்கற்பகநாறுந்தேனருவிகொழிக்குமகல்விசும்பின்
மேயபுகழ்விண்ணவர்போந்துவிரிநீர்மணிகன்னிகையாடிக்
காயுங்கதிரோன்குணக்கெழுந்தகாலைக்கடவகடன்கழித்துத்
தூய்மறையோர்மனங்களிப்பத்துகடீர்தானத்தொழின்முடித்தார். (௨)

பொங்கிப்பரந்ததிரைக்கங்கைப்புனல்சூழ்காசிநகருறையுந்
திங்கட்கண்ணிமுழுமுதலின்செய்யமலர்த்தாளிணைதொழுது
கொங்கிற்பொலிந்தநறுமலர்தூய்க்கோயில்வலங்கொண்டோரைந்து
கஞ்சும்பொழுதுகழித்துமனங்களிகொண்டுருகிக்கனிந்தனரால். (௩)

எரிநீர்க்கங்கைசூழ்கிடந்தவின்னநகரினெஞ்ஞான்றும்
பறவையினமும்விலங்குகளுமிறக்குங்காலைப்படர்சடையெம்
மிறைவன்புகன்றாரகப்பிரமவுபதேசத்தாலீறில்கதி
பெறுபவென்னிலீங்குறைவார்பெறுபேறியாமோபேசுவதே. (௪)

இன்னகரினிடைப்பிறந்தமலத்தின்புழுவுமீறெய்தின்
மன்னும்பிறவிக்கடற்படிந்துவருந்தாதழியாவீடெய்து
முன்னரிழைத்தநல்வினைகண்முழுதுமுலப்பின்விசும்பொழிந்து
பின்னுநிலத்தினிடைவந்துபிறப்பேநமதுபேறினிதால் (௫)

மற்றநகரின்வீற்றிருந்துமதிவெண்கவிகைதனிநிழற்றுங்
கொற்றவேந்தராதலினுங்குளிர்வெண்டரளமணிவரன்றி
யெற்றுதிரைநீர்க்காசிதனில்யாரோயேனுமிறத்தலினி
தொற்றைநுதற்கட்பெருமானுறையுந்தன்மைத்தாதலினால். (௬)

முளரிப்பொகுட்டில்வீற்றிருக்குமுதல்வன்பகற்போதெட்டிலொன்றிற்
குளிர்வெண்மதிச்செஞ்சுடர்ப்பரிதிகுடுமிவரையின்சிறகரிந்த
மிளிருங்குலிசப்படைசுமந்தவேந்தன்முதலோரிறந்திடுவ
ரளவில்பிரமாழிந்திடினுமழியாரிந்நகருறைவோர். (௭)

மறிமானேந்துமொருபாகன்வாழுங்காசிக்கேகுதுமென்
றறியான்சொல்லுமடிக்கடியோர்புரவிமகப்பேறடைந்திடுவன்
குறியாநடந்துகுரைதிரைநீர்க்கங்கையாடிக்கொன்றைபுனை
யிறையோன்பாதந்தொழுமவர்பேறெம்மாற்கூறுந்தகைமைத்தோ (௮)

கடவுட்கங்கைப்பேரியாறுகாணிலாடிற்கடன்கழிக்கிற்
றொடில்வானெறிசென்றடைந்திடுவர்சூழ்ந்துகோயில்வலம்வந்த
மிடியாற்காசிமுழுமுதலைவணங்கிமுத்திமண்டபத்தோ
ரொடியாயினுமுளநிறைந்திடுவோர்நுவலற்கரியவீடடைவர். (௯)

என்றுகாசிவீறனைத்துமெண்ணியெண்ணிவியப்பெய்தி
முன்றற்றருவினீழலுறைவைரப்படையோன்முதலமர
ரொன்றிநீங்காமுக்குறும்புமெறிந்துபுலன்களோரைந்தும்
வென்றகலசமுனியுறையுமிருக்கைநோக்கிவிரைந்தெழுந்தார். (௧௦)

அழலுங்கனலும்வெய்யவனுமழற்றுவாகிமருண்மாலைச்
சுழலிமதிபோற்குளிர்தூங்கும்புரிகோட்டிரலையிளங்கன்று
முழைமுயலுனைறவெம்புலிப்பறழும்வினையாட்டயருமுள்ளெயிற்றுத்
தழல்கட்பாம்பின்றல்வாயுயிரையுயிர்த்தெலிகடணித்துயிலும். (௧௧)

அரிமானேற்றிற்கூன்பிறைக்கோட்டண்ணல்வேழமுதுகுரிஞ்சும்
வெருவாச்சரபந்தலையணையாவெங்கணரிமான்விழிதுயிலும்
புரிகோட்டிரலைபுனிற்றுமறிபொங்கியெழுந்துவால்குழைத்துப்
பரிவாற்கடைவாய்ப்பாலொழுகப்பாய்வெம்புலியின்முலையுண்ணும். ()

கேழற்பன்றிமருப்பினிலங்கிளையாளுமலிமேற்றுயிலும்
பேழ்வாய்க்கரடிமயிருளர்ந்துமுதிர்சூன்மந்திபேனெடுக்கு
மூழிக்கனல்பாய்ந்தொழுகுவிழியுரகங்கீரிமேலுறங்கு
மாழைச்சிறுமான்குழக்கன்றைறவுந்துநரிகடைவருமால். (௧௩)

பொருவின்மறையினுபநிடதப்பொருள்கடேர்ந்துபூவையொடு
முருவச்செந்தார்ப்பசுங்கிள்ளையுரையாநிற்கும்பலவிலங்கும்
வெருவல்செய்யாதடுசினத்தவேடர்சிலையின்முதுகுரிஞ்சுங்
குருகுவாவியருகிருந்துழகளுமீனங்குத்தாவால். (௧௪)

கவரியினங்கள்கடைகுழன்றுகருமைவார்ந்தவாலதனைக்
குவிமென்கொங்கைக்குறத்தியர்தங்குழலோடொப்புக்காணுமிக
நவையென்றெண்ணிக்கூரெயிற்றுக்கொடுவெம்புலியுநயந்ததனை
கவர்தல்செய்யாதெஞ்ஞான்றும்பசுந்தோட்டறுகுகறித்திடுமால். (௧௫)

புழுவுந்தசையும்வெண்ணிணமும்பொதிந்தகுரம்பைவீக்குதற்குக்
கழியூனுகர்ந்தோர்கொடுநரகிற்கற்பகாலங்கிடந்தழுந்தி
விழைவின்முன்னர்தாநுகர்ந்தவிலங்குமவர்தம்மெய்த்தசையை
யழிவெம்பசியாறபறித்தருந்தலென்னும்பான்மையறிந்தேயோ. (௧௬)

கொன்றுவிலங்கின்றசைநுகருங்கொடுமையோரவ்விலங்கினுடற்
றன்றுமயிரெத்தனையாமத்துணையகாலமவ்வெந்நரகி
னென்றுநுகர்வாய்ப்புழுவொழுகவுழப்பரென்கையுணர்ந்தேயோ
கன்றுசினவெங்கொடுவிலங்கும்புலவூன்றின்னக்கருதாவால். (௧௭)

ஒருமீன்புலவுவாய்மடுப்பினொழியுந்நசைகளனைத்தினையும்
பரிவானுகர்ந்தோர்வீழ்கின்றபாழ்வெந்நரகிற்படிவரென
மருமாமறையின்பொருடேர்ந் தோவந்தாமரைநாண்மலர்ப்போதுளும்
விரிநீர்வாவியயின்மீன்கள்விழுங்காதுலவும்புள்ளினமே. (௧௮)

நசையானறவுவாய்மடுத்தோர்நரகிலளப்பினுளழுந்தி
வசையான்மீட்டுங்கள்ளுண்ணுமாந்தராகிலத்துதித்து
மிசையாதனவுமிசைவரெனும்வேதமொழியின்பொருளுணர்ந்தோ
யிசைதேர்சுரும்பர்மதுகரமென்றிருந்துந்தேறலருந்தாவே. (௧௯)

சேவலன்னமணப்பதற்குச்செல்லவிருடியுறைவிடமென்
றுவியன்னபெடைவிலக்குமந்தண்மாவிலிளங்குயிலுங்

கூவல்செய்யாப்புவக்கடலேக்குழவிமதிவேணியனன்றி
யாவர்கடத்துவாரொன்றைப்பூவைகிளியோடியம்புமால். (உ0)

இனேயதாயவாசிர்மத்தெறிக்கும்வடவைப்பேரொளியுங்
கனேவெங்கதிருமொருங்கெழுந்துகதிர்விட்டெறிக்கும்பான்மையெனத்
தனிநான்மறையோர்வடிவெடுத்ததன்மையென்னவொளிதழைத்து
வினேதீர்தவத்துக்குறுமுனிவனுறைதனேக்கிவிழிகளித்தார். (உக)

மடமென்பிணையினிளம்புனிற்றுமறியுந்தறுகட்கூரெயிற்று
கொடுவெஞ்சினத்தபுலிப்பறழுங்குலவியாடுமுற்றத்துக்
கடவுட்கற்பினிகரில்லாக்காதற்பன்னிகமலமல
ரடிமென்சுவடுகண்ணுறலுமமரர்யாருமவணங்கினரால். (உஉ)

குறைகூறுதற்குவந்தடைந்தகுலிசப்படையோன்முதலமரர்
கறவூற்றிருந்தபொதியவிழ்க்குளிர்மென்கமலமலர்ப்பொகுட்டி
லுறைவோனென்னவினிதியற்றும்யோகமொழிந்துவீற்றிருக்கு
மறையோன்கமலமுகநோக்கிவாழிவாழியெனவுரைத்தார். (உஙு)

ஏத்துமமரர்தமைநோக்கியெழுந்தமுகமனினிதியம்ப
வாழ்த்தியுவந்தாங்கவர்க்கியன்றவிருக்கையீந்துவானுலக
நீத்தெங்குடிலிற்புகுந்ததென்னேயென்றுனெறிபிலேம்பொறியுங்
காத்துமறையின்பொருடெரிந்தகடவுட்பெருமாதவத்தோனே. (உச)

மூன்றாவது, தேவர்கள் அகஸ்தியர் ஆசிர்மத்தில்வந்த
அத்தியாய முற்றிற்று.
ஆக - திருவிருத்தம் - க00.

நான்காவது,

## கற்பிலக்கணங் கூறிய அத்தியாயம்.

தீதெறிந்ததமிழ்முனிசெப்பலும்
யாதுசொற்றனர்விண்ணவரொன்றருள்
மாதவத்தினர்கேட்பமகிழ்வுடன்
சூதமாமுனிசொல்லலுற்றனரோ. (க)
அரியநான்மறைதேருமகத்தியன்
பரிவினன்மொழிகேட்டலும்பண்புடைக்
குரவன்வாண்முகநோக்கினர்கோதிலா
விருவிசும்பினிமையவர்யாருமே. (உ)
பனிவிசும்பினிழிந்துபரிவொடும்
பூனேகருங்கழல்விண்ணவர்போந்தமை

முனிவகேட்டிமொழிகுவல்யாவென
வினிதினந்தணனேக்கியியம்புவான். (௩)

மன்னுகானினுமோங்குவனாயினு
முன்னருந்தவமாற்றுமுனிவரி
லன்னமூர்தியையன்றியருந்தவ
நின்னையொப்பவர்நீணிலத்தியாவரோ. (௪)

கங்கைசூடியகண்ணுதற்சாமிதன்
பொங்குபேரருள்பூண்டவருந்தவ
வங்கண்வானத்தமரர்குறையுறி
னெங்குமேவுவர்நின்னிடத்தன்றியே. (௫)

செயிரில்கற்பின்றிகழ்மணிக்குன்றனே
யயிலன்ஞணின்மனைக்குரியாளெனி
லுயரருந்தவவுன்றனுளந்தனிடை
முயல்லேதுமுடிததற்கரியதே. (௬)

விளங்கருந்ததிமேனைசுநீதியுட்
ளெங்குசாவித்திரியனசூயைநின்
களங்கமற்றதோர்கற்புடையாளொடு
முளம்பொருந்திகர்சொலவொண்ணுமே. (௭)

கொழுநனுண்டபின்முனுகர்கொள்கையும்
விழிதுயின்றபின்றுஞ்சலுமென்றுயி
லெழுதன்முன்னமெழுதலுமேயன்றே
பழுதில்கற்புடைப்பானவயர்செய்கையே. (௮)

எரிமணிப்பொலம்பூண்சுமந்தின்னுயிர்க்
குரியகேள்வருவப்பமுன்னெய்துவார்
பிரியுங்காலையிற்பெய்கலன்யாவையு
மொருவிமாசுடலுண்டிடைவைகுவார். (௯)

இனியகேள்வர்முனியினெதிர்நின்று
துனிகொண்ஞ்சொடெதிர்மொழிசொல்கிலா
ரனையகேள்வரெறியினுமன்பொடுங்
கனிவர்நெஞ்சகங்கற்புடைமாதரே. (௧௦)

எய்துமிற்றுறந்தேகலரில்லகல்
லைதயலார்முகக்காணினுஞ்சாம்புவார்

மைமயில்காதலர்வந்தெனையாயினுஞ்
செய்திரென்றலுஞ்செய்தனமென்பரால். (கக)

விழுமுவுகண்ணுறன்மேதகுனோன்புறல்
பழுதிற்றாநதியாடுதல்பண்ணவர்த்
தொழுதுவாழ்த்துதரேுமறுகற்பினோர்
கொழுநரேவலினன்றிக்குறிக்கொளார். ௱ (கஉ)

வனையுந்தங்கலன்மாற்றவட்கியினு
முனிவுசெய்கலர்மூப்பினர்சேர்வுறுத்
தனியிற்சேர்கலர்தாம்பிறரிற்புகார்
புனிதநெஞ்சுடைப்புண்ணியமாதரே. (கங)

திருந்துமாயுள்சிதையுமென்றெண்ணித்தம்
பொருந்துகாதலர்நாமம்புகன்றிடா
ரிருந்தபோதன்றித்தாமுணிருந்திடா
ரருந்துமிச்சிலமிழ்தினுகர்வரால். (கச)

அறந்தவாத்தமதன்பருளினுற்
றுறந்துளோர்பிறப்போர்தொழில்செய்குநர்
சிறந்ததொல்குலத்தெய்வம்பசுவிருந்
திறந்துளோர்க்கும்பகுத்தினிதுண்பரால். (கரு)

மேவுகாதலருள்ளம்விழைந்தன
வேவுமுன்னர்குறிப்பினியற்றுவார்
தாவிலன்பர்தமையலர்தூற்றிடும்
பூவையன்னவர்புன்முகநோக்கிலார். (கசு)

இல்லறத்திற்கியையவனவிட்டுவ
ரல்லசெய்தேவறிதினழித்திடார்
புல்லுகாதலராயுட்பொலிவுற
மல்லலோங்கணிமஞ்சளணிவரால். (கஎ)

கொழுநன்சொற்கடவாதுறைகொள்கையே
வழுவினல்லறம்வான்றவமாற்றுன்
றொழுதுதெய்வம்பராய்மலர்தூவுதல்
பழுதில்கற்புடைப்பத்தினிக்கென்பவே. (கஅ)

அழகின்வீக்கஞ்சிறிதிலராயினு
மொழிவினோய்நிரம்புற்றனராயினுங்
கிழவுத்தன்மையராயினுங்கேள்வரைப்
பழுதுசொல்கலர்பண்பின்முயங்குவார். (ககூ)

அன்பர் துஞ்சிடிற் றுஞ்சுதலாங்கவர்
துன்பமெய்திடிற்ருமுமத் துன்புற
லின்பமுற்றிடிலின்புற்றிருத்தலே
மன்பெருந்தவங்கற்புடைமாதர்க்கே. (உ0)

வாள்விழிக்குலமங்கையரன்பர்பொற்
ருள்விளக்கியதண்புனல்கங்கையக்
கேள்வரேகிளர்தேவர்கண்மூவரி
லாளுமெய்ம்மையடிகளென்றெண்ணுவார். (உக)

ஆன்றகற்பினர்பூப்பினகன்றுறை
மூன்றுநாளுமுகமலர்காட்டலர்
தோன்றயாதுஞ்சொல்லார்புனலேய்ந்தபின்
சான்றகாதலர்தம்முகநோக்குவார். (உஉ)

புனிதமாநதிப்பூம்புனலாடுநா
ளினியகாதலர்வேற்றிடமெய்திடி
லனையகேள்வனையன்பின்மனக்கொடு
பனிவிசும்பிற்பரிதியைநோக்குவார். (உங)

வசையில்காதலர்தாய்தந்தைதனவகுறி
லசதியாடிலரன்பரைத்திடின்
மிசையுநல்லமுதேனும்விடுத்துள
நசையினேடும்பொருக்கெனநண்ணுவார். (உச)

தாதைதன்னினுநதன்னையர்தம்மினு
மாதர்மென்மொழிமைந்தர்கடம்மினுங்
கோதில்கற்புடையார்தங்கொழுநர்பாற்
காதல்கூர்ந்துகளிமகிழ்வெய்துவார். (உரு)

உரலிலம்மியிலோங்குமுலக்கையிற்
பரவும்வாயிற்படியின்முறத்தினிற்
றிருவகன்றிடுமாலெனச்சேர்ந்திரார்
பொருவில்கற்புடைப்புண்ணியமாதரே. (உசு)

உரியகேள்வருவந்துபணிந்திடா
தரியநோன்பொடுபூசனையாற்றுவார்
கரியகூற்றுவன்றூதர்கடிந்திட
வெரியுந்தீநரகத்திடையெய்துவார். (உஎ)

கடிமணஞ்செயுங்காதலர்தம்பழி
முடனையோடுமொழிபவர்மற்றவு.

ருடன்வெகுண்டுரையாடுநரோரியாய்
முடுவலாகப்பிறப்பர்முடிவினே. (உஅ)

கொழுநர்சீறிற்சூறுகிமுன்வைபவ
ருழுவையாகப்பிறப்பருருத்துநெஞ்
சழலமாற்றவட்சீறுமறிவிலோர்
கழல்கட்கூகைப்பிறப்பிற்கழிவராய் (உகூ)

ஏதிலான்றனெழில்கண்டுவப்பவர்
பேதுசெய்தழல்பேயுருவெய்துவார்
காதலன்பசிக்கக்களித்துண்பவர்
பாதகஞ்செயும்பன்றியிற்றோன்றுவார் (௩0)

மருவுகாதலராருயிர்மாய்ந்திடி
லெரியின்மூழ்கியிறந்துபடுவதற்
கருநெறித்தலைவைக்குமரிவையர்
புரவினன்மகப்பேறுபொருந்துவார். (௩க)

முற்றுசெந்தழன்மூழ்கியகற்பினோர்
புற்றராக்கொடுபுள்ளரசேகல்போ
லெற்றுகாலபடர்கைபறித்தினி
துற்றகேள்வரொடும்பரினேகுவார் (௩உ)

கொழுநன்பாவியெனினுங்கொழுநனோ
டழலின்மூழ்கினள்கற்புடையாளெனின்
விழியிலன்னவட்காணில்வெங்கூற்றுவ
னுழுவலன்பனைக்கைவிடுத்தோடுமே. (௩௩)

வடபுலத்துவயங்குமருந்ததிக்
கடவுட்கற்பினர்காந்திதங்கண்ணுறிற்
படர்சிகைக்கனல்வெங்கதிர்பான்மதி
சுடர்மழுங்கிப்பொலிவிலதோன்றுமால். (௩ச)

நீடுகாதலனோடுயிர்நீத்திடும்
வீடில்கற்பினண்மெய்ம்மயிரொன்றினுக்
காடகப்பசும்பொன்னிலத்தாயிரங்
கோடிகாலங்கொழுநனொடின்புறும். (௩ரு)

கற்புமேயகனங்குழைமாதரைப்
பெற்றுளோர்தம்மரபும்பெருந்தவக்
கற்பினாற்கொண்டகாதலனாருயிர்ச்
சுற்றம்யாவுந்துறக்கத்தினெய்துமால். (௩சா)

பொருவில்கற்பின்வழீஇயபுன்மங்கைய
ருரியமூன்றுமரபினுள்ளோரையும்
வெருவந்தேங்கிவிழுங்கியுமிழ்கிலா
வெரியுந்தீநரகிற்குடியேற்றுவார். (௩௭)

நண்ணுகற்புடைநங்கையர்சீறடி
மண்ணினெவ்விடந்தோயினுமற்றஃ
தெண்ணுகின்ற தலங்களெவற்றினும்
புண்ணியத்தலமென்றுபுகல்வரால். (௩௮)

கவ்வைவெண்டிரைக்கங்கைமுதலவாந்
தெய்வமாநதியாவுஞ்செறிந்ததம்
எவ்வமற்றிடக்கற்பினையிந்திடு
நவ்விநோக்கியராடநயக்குமால். (௩௯)

மண்ணுநன்மணிவேய்ந்துவயங்கிய
வண்ணமாடங்களாயினுங்கற்புடைப்
பெண்ணினல்லவரில்லெனிற்பேய்க்கண
நண்ணுகின்றவனமெனநாட்டுவார். (௪௦)

காற்றும்வெய்யகனகதிருங்கடற்
றோற்றுதண்ணிலவுச்சுடர்த்திங்களும்
போற்றுகற்பிற்புரிகுழற்பூங்கொடி
மேற்சேறும்பொழுதுள்ளம்வெருவுமால் (௪௧)

மேவுகாதலன்வியப்புனல்பொழி
காவியங்கட்கலன்கழிமாதரை
யாவிநீத்துக்கிட ந்திடும்யாக்கைபோல்
யாவருந்தொடற்றென்றியம்புவார். (௪௨)

மாறருங்கலனீத்தமகளிரை
யாற்றெதிர்ப்படினேகலராயலாற்
போற்றிவாழ்த்துகல்பூண்கழிமாதரில்
வேற்றுமாதர்சொல்லெவ்விடமென்பரால். (௪௩)

கைம்மையாகியகற்புடைமங்கையர்
தம்மொழுக்கந்திறம்பிடிற்றுமலா
லம்மதங்குலத்தோரையுமாரழல்
வெம்மைசேர்நரகத்திடைவீழ்த்துவார் (௪௪)

நிழல்செய்பொற்கலனீத்தமடந்தையர்
குழலினைக்குறையாதுமுடித்திடி

லழல்கட்கூற்றுவன்றூதர்மற்றுங்கவர்
விழையுங்கேள்வனேப்பாசத்தில்வீக்குவார். (௪௫)

மருவுகாதலன்மாய்ந்திடின்மங்கைய
ரொருபகற்பொழுதுண்டரும்பாக்கிலே
விரியும்பாயல்வெறுத்துமண்மேற்றுஞ்சி
யரியநோன்புகளாற்றிடவேண்டுமால். (௪௬)

சுடர்செய்பொற்கலனீத்திடுந்தோகையர்
கடவுள்பூசனைகாதலினூற்றியு
முடலமாசுணவுள்ளுயிர்நீத்திடா
தடகுழலமருந்திடவேண்டுமால். (௪௭)

எரிசெய்பொற்கலனீத்தவரின்னணம்
விரதம்பூண்டுவிழுத்தவமாற்றிடிற்
பரவுகின்றபதியுலகெய்துபு
பொருவிலாவரும்போகநுகர்வரால். (௪௮)

இன்னவற்றுளியம்பியகற்பிய
லன்னைநின்னிடத்தெய்தினளாதலி
னுன்னையேத்திவினையொழிந்தோமெனா
மன்னுமாதவன்பன்னியைவாழ்த்தினன். (௪௯)

பொருவில்கற்புடையாள்பதம்போற்றிய
தெருளுநெஞ்சுடைவிண்ணவர்தேசிகன்
முரிதிரைக்கடலுண்டமுனிவனைப்
பரவியின்மொழிபற்பலகூறுவான். (௫0)

குடிலைநீயிவள்கோதறுமாமறை
வடிவினற்றவநீயிவள்வான்பொறை
யடிகளாதலினின்னுளத்தாயுங்கான்
முடிவுறுதனவில்லைமொழியினே. (௫௧)

ஐயவானத்தமரர்கள்யாவருஞ்
செய்வதொன்றிலராகித்திகைப்புற
மையல்விந்தம்வளர்ந்ததுவானுற
வெய்யவன்றடந்தேரைவிலக்கியே. (௫௨)

பொன்னங்குன்றொடிகலிவிண்போகுப
ரன்னவெற்பின்வலியையடக்குவார்
முன்னமேழ்கடலுண்டமுனிவர
நின்னையன்றிநிகழ்த்திடின்யாவரே. (௫௩)

என்றுதேவர்குரவனிசைத்தலுங்
குன்றின்வீக்கங்குறைப்பலமரர்நீர்
சென்றுநும்பதிசேர்கெனவோதினன்
துன்றுவேலைபருகியதூயவன். (ருச)

நான்காவது-கற்பிலக்கணங்கூறிய-அத்தியாயம்-முற்றிற்று.

ஆ-விருத்தம்-கநிச.

ஐந்தாவது.

## அகஸ்தியர்விந்தத்தையடைந்தஅத்தியாயம்.



விண்ணவர்யாவருமேகியபின்னர்விரிகொன்றைக்
கண்ணிமிலேச்சூழ்செஞ்சடைமுக்கட்கனிதன்னை
யெண்ணிமனத்தாலேம்புலனென்னுமிகல்செற்றோ
னண்ணுமுலோபாமுத்திரையோடுநவில்கின்றான். (க)

குன்றமனைத்தின்வார்சிறையீர்ந்தகுலிசத்தோ
னின்றொருவெற்பையடக்கும்வலித்திறமில்லான்போல்
நின்றுதவத்தைநிரப்பும்வேதியனென்னும
னன்றுகொனம்முறைவந்ததுகற்பினலமிக்கோய். (உ)

பன்னிருவெய்யவரீறுசெய்கூற்றுப்படர்செந்தீ
மன்னியவட்டவசுக்கள்மருத்துவர்வானோர்க
ளுன்னினுமண்டமனைத்துமிடிந்திடுமொல்லார்போ
லென்னுமுழையெய்தியிரந்தமையெண்ணுறிலென்னேயோ (ஙு)

இருநிலமேத்தியகாசியில்வாழ்தர்கிடையூறு
வருமெனமாதவரோதியமாற்றம்வழக்காகும்
பொருவறுதேவருநம்மையிரந்துபுகன்றார்பூங்
கருநெறிசேர்தருமென்குழலீங்கதுகண்டேமால். (ச)

தத்துவம்யாவுமுணர்ந்துதனிப்பொருடானுகிக்
கைத்தலமேவியநெல்லியெனும்படிகண்டோர்கள்
சித்தமுவந்துறைகாசியிலீசன்றிருவுள்ள
மித்திறமாகவிளைந்திடின்மாற்றுவதெவ்வாறே. (ரு)

மெல்லியல்பங்கனுவந்துறைகாசியைவிட்டேனத்
தொல்லைநெடும்பதிதன்னைவிரும்புதல்சூழுங்கா
னல்லமிர்தந்தனதங்கையிருப்பவுநச்சாமற்
புல்லறிவோடுபுறங்கைநக்குதல்போலாமால். (சு)

அறத்தினிருப்பிடமாகியகாசியடைந்தோர்கள்
வெறுத்தறிவில்லவர்போலதுதன்னைவிடுத்தக்கால்
மறுத்துநினைத்திடிலெய்துவதெங்ஙனமாசின்றித்
திறப்படமுத்திவிழைந்தவர்விட்டயல்செல்லாரே. (எ)

மூவரிருப்பிடமாய்முகிலூர்திமுதற்றேவர்
மேவருதற்கரிதாயருண்முத்தியின்வீடாயிப்
பாவமகற்றுறுகாசியின்வாழ்வுபடைத்தோர்கள்
யாவரவர்க்கரிதாயவிழுப்பொருள்யாதேயோ. (அ)

வையகமேழுமிடிந்திடுகாலையுமாயாதே
யையனெடுத்தொளிர்சூலநுதிக்குளமைந்தோங்கு
மெய்யுணர்வோருறைகாசியைவிட்டொருநற்றான
மெய்தமனத்தைவிடுக்குநர்பேதைமையென்னேயோ. (கூ)

மாசுறுபேதைமைதம்மைமறைப்பமறைந்தாறு
வாசையெனுஞ்சுறவெற்றுபவக்கடலாழ்கின்றோ
ரீசனுவந்துமையோடகலாமலிருந்தோங்கு
காசியெனும்புணையன்றியெவ்வாறுகடப்பாரே. (க0)

செய்யவழற்றலைநின்றுதவம்பலசெய்தாலு
மெய்தரும்யோகமளப்பிலநாளுமிழைத்தாலு
மையறுகாசியைவார்பிறைசென்னிவனைந்தாடு
மையனருட்சிறிதின்றியடைந்திடலாகாதே. (கக)

அறம்பொருளின்பமியற்றுதவத்தினடைந்தாலுங்
கறங்குதிரைக்கடனஞ்சநுகர்ந்தருள்காமாரி
யுறைந்தவளங்கெழுகாசியினல்லதையொன்றானு
மிறந்துபிறந்துழல்வோர்தனிமுத்தியினெய்தாரே. (கஉ)

அருமறையாகமமாகியநூல்களனைத்தேயும்
பொருவறுகாசியையன்றிவழுத்தல்பொருந்தாவா
லிருவினைவிட்டொருமும்மலமாயையிகழ்ந்தோர்கள்
திருவமர்காசியைவிட்டயலோர்பதிசெல்லாரே. (கஙு)

இடைகலைபிங்கலைவாலைசிறந்திடணிவைகூடு
முடிவறுவாரணசிநடுவுயர்சுழிமுனையென்று
விடையமறுத்துயர்மெய்த்தவமேவியகாபாலி
யடைவினுரைத்தனனிங்கருக்கிணையாதேயோ. (கச)

இத்தலையெய்திபிறக்குநர்யாருமினிப்பாற
வுத்தரிகங்கொடுமாதுமைவீசிடவுமையோர்பால்

வைத்தவரும்பொருண்மேவருதாரகமறையோதி
முத்தியளித்திடுமிப்பதியார்விடமுயல்வாரே. (கரு)

ஆசில்வளங்கெழுமூவுலகத்தினுமாயுங்காற்
காசிநகர்க்கிணையாகியநற்பதிகாணேமால்
மாசறுதிங்கண்முடித்தயர்மன்றுண்மகிழ்ந்தாடு
மீசனையொப்பவர்தேவகணத்திடையாரேயோ. (கசா)

(வேறு.)

என்றுகுறுமுனிவினைந்துகாலராசனையருள்சூரியக்கர்கோனைத்
தன்றமரர்முற்பிரமன்சமபிரமனைத்துரண்டதரனையார்க்கு
துன்றுபவக்கடல்கடத்துந்துண்டிவிநாயகனைவரிச்சுரும்பர்வீழு
மன்றனறுமலர்தூவிச்செய்யபொலந்தாமரைத்தாள்வணங்கியேத்தி (கஎ)

ஆசாகேசகாபிநிந்தாமணிபோற்றிச்சித்திவிநாயகனென்றுய
தேசாரும்விநாயகரோரைவரடிபணிந்துவரிசிந்திநீண்ட
வேசாநல்லெழிலுன்கட்கொற்றவைதன்றுணைப்பாதமிறைஞ்சிநஞ்சீர்
பேசாரிற்றமியனையிக்காசியைவிட்டகற்றுவதுபெருமைத்தாமே. (கஅ)

தேவருறுபகைதொலைப்பத் ததீசிமுதுகென்பளித்தான்றிருமால் வேண்ட, வோவறுசீரொறுழ்வலித்தோள்கொடுஞ்சிறையபுள்ளரசுமூர்தியானன்; மாவலிமூவுலகளித்தான் மதுகையிடவருநரிரமுன்மெழுங்கிஞரால், மேவரியகாசியைவிட்டும்பருறுகுறைமுடித்தல்விழுமிதாமால் (ககூ)

என்றினையபலகூறிக்குழவிமதிபுனைசடிலத்தெம்மான்காசித், துன்றுசராசரம்பலவுந்தொழுதுவலம்கொண்டகல்வான்சுருங்கவோங்கு, குன்றினுறுவலிதணிப்பான்குறுமுனிவனைகுதலுங்குழைந்துமாழ்கிப், பொன்றினர்தம்முகம்போலப்பொலிவழிந்ததுயர்விந்தப்பொருப்புமாதோ. ()

ஆற்றலரும்பெருந்தவத்துக்குறுமுனிவன் காசிநகரகன்றுஞாலம், போற்றுபெருங்கற்புடையலோபாமுத்திரையினொடுபோதலோடு, மூற்றிருந்துநறவொழுகுங்கமலநாயகனியங்காதும்பர்யார்க்கு, மாற்றரியவலிபுடைத்தாயெழுந்துதிசையளந்தோங்குவரையைக்கண்டான். (உக)

கடலேழுமொருகுடங்கைக்கொண்டகுறுமுனிவருதல்காண்டலோடு, முடல்வேர்வுவரவுள்ளம்பதைபதைப்பத்தலைபணிப்பவுயிர்ப்புவீங்கிப், படியூடுபுகுவதெனப்பணிந்துமறைக்கிழவரெழிற்படிவந்தாங்கித், தடமேருவுடனிகலும்விந்தவரைமுனிவனடிதாழ்ந்ததன்றே. (உஉ)

தன்றுணைத்தாடொழுதெழுந்தவிந்தவரை முகநோக்கித்தவத்தின் மிக்கோ, னின்றுமுதல்பொதியவரைநீங்கியானிவ்வழிமீட்டெய்துகாறு,

முன்றனதுபேருருவமிவ்வண்ணமிருக்கவெனவுரைத்துப்போனான், தெ
ன்றலிளங்குழவியொடுதீந்தமிழுமினிதுலவுந்தென்பான்மன்னே (உ௩)

அருந்தவத்தோ னேகுதலும்விந்தமால் வரையுளத்தினச்சநீங்கிப்
புரிந்துபுரிந்தவனேகும்வழிநோக்கிநோக்கியுடல்புளகம்பூப்பப், பெருந்
தவத்தோன்சபியாமலேகுதலாலின்றன்றேபிறந்தோமென்று, வருந்திர
ணிபணிந்திருப்பப்பரிதிவானவன்மேருவலங்கொண்டானால். (உச)

மலர்தலையவுலகமெல்லாம் பண்டுபோற்றருமநெறிவளர்ந்தநாளுங்
கலனிழந்தமகளிரிளைமுலைபோலவிந்தவரைகவின்கடீர்ந்த, துலைவறுநற்
றவமுனிவ னமலனுறைகாசிநகருள்ளத்தோரா, வலர்கமலப்பொருட்டு
றையுந்திருமகள்சேர்சினகரத்தையடைந்தான்மன்னே. (உரு)

மூவுலகுமிடரியற்றுமடலவுணருயிரொழியமுனிவுகூர்ந்த, பூவை
யுறழ்திருமேனியருட்கடவுள்கனமார்பிற்பொலிந்துதோன்றித், தேவரு
லகினும்விளங்குபுகழ்க்கொல்லாபுரத்தினிதுசேர்ந்துவைகும், பாவையி
ருதாடொழுதுபழமறைதேர்குறுமுனிவன்பழிச்சுகின்றான். (உகூ)

கொழுதியிசையளிமுரலுந் தாமரைமென்பொகுட்டிலுறைகொள்
கைபோல,மழையுறழுந்திருமேனிமணிவண்ணனிதயமலர்வைகுமானே
முழுதுலகுமினிதீன்றவருட்கொம்பேகரகமலமுகிழ்த்துநாளுங், கழிபெ
ருங்காதலிற்றெழுவோர்வினைதீரவருள்கொழிக்குங்கமலக்கண்ணாய். ()

கமலைதிருமறுமார்பன்மனைக்கிழத்தி செழுங்கமலக்கையாய்செய்ய,
விமலைபசுங்கழைகுழைக்கும்வேனிலான்றனையீன்றவிந்தைதூய, வமுத
கும்பமலர்க்கரத்தாய்பாற்கடலுளவதரித்தோயன்பர்நெஞ்சத், திமிரமக
ன்றிடவொளிருஞ்செழுஞ்சுடரேயெனவணக்கஞ்செய்தான்மன்னே. ()

மடற்கமலநறும்பொகுட்டிலரசிருக்குஞ்செந்துவர்வாய்மயிலேமற்
றுன், கடைக்கணருள்படைத்தன்றேமணிவண்ணனுலகமெலாங்காவல்
பூண்டான், படைத்தனனான்முகக்கிழவன்பசுங்குழவிமதிபுனைந்தபரம
ன்றானுந், துடைத்தனனின்பெருஞ்சீர்த்தியெம்மனோராலெடுத்துச்சொ
ல்லற்பாற்றே. (உகூ)

மல்லனெடும்புவியனைத்தும்பொதுநீக்கித்தனிபுரக்குமன்னர் தாமு
ங், கல்வியினிற்பேரறிவிற்கட்டழகினிகரில்லாக்காட்சியோரும், வெல்ப
டையிற்பகைதுறந்துவெஞ்சமத்துவாகைபுனைவீரர்தாமு, மல்லிமலர்ப்
பொகுட்டுறையுமணியிழைநின்னருளைக்கமடைந்துளாரே. (௩0)

செங்கமலப்பொலந்தாதிற்றிகழ்ந்தொளிருமெழின்மேனித்திருவே
வேலை, யங்கணுலகிருடுறக்குமலர்கதிராய்வெண்மதியாயமரர்க்கூட்டும்,
பொங்கழலாயுலகளிக்கும் பூங்கொடியேநெடுங்கானிற் பொருப்பின்மண்
ணி,லெங்குளைநீயவணன்றேமல்லுல்வளஞ்சிறந்தோங்கியிருப்பதம்மா.()

என்றுதமிழ்க்குறுமுனிவன்பன்னியொடுமிருநிலத்திலிறைஞ்சலோடு
நன்றுனதுதுதிமகிழ்ந்தேநான்மறையோயித்துதியைநவின்றோர்யாரும்
பொன்றலரும்பெறும்போகநுகர்ந்திடுவரீங்கிதனைப்பொறித்தவேடு
மன்றமனையகத்திருப்பின்வறுமைதருந்தவ்வையவண் மருவல்செய்யாள்.

அந்தணநின்றுயரநிந்தேங்காசிநகரகன்றெவரோயாற்றவல்லா
ரிந்துவகிர்புனைசடிலத்திறையவனுக்காசிதணந்தேகியோங்கு
மந்தரவெற்பினையடைந்துகாசிபிரிந்துறைவிரகமம்மர்நோயால்
வெந்துயருற்றவண்மேவவிரிஞ்சன்முதல் வானவரைவிடுத்தல்செய்தான்.

கஞ்சமலரயன்முதலோர்கண்ணுதல்பான்மீளாதுகாசிமேவி
யெஞ்சலினல்வளநோக்கியிருந்தனர்பைந்துளவணியுமெம்மான்சூழ்ந்த
வஞ்சனையான்முழுமுதல்சேர்காசிநகர்தனின்விரும்பிமகிழ்ந்தானென்று
னெஞ்சுதனிற்காசிதனைப்பிரிந்தேகநினைப்பவரோநெறியிலாதார். (௬௪)

அருமறையோய்காசிவருமிருபத்தொன்பானுகத்திலடைதிநீயுங்
குருபரனைக்கலைமுழுதுமுனக்குணர்த்துசுடர்வடிவேற்குமரன்றன்னை
மருவுவையீண்டகன்றேகினணித்தாகக்கங்கைநதிவளங்கொள்காசிப்
பொருவருஞ்சீர்த்தலமுழுதுமற்றவனேநீயுணரப்புகல்வனென்றான். ()

உரவுநீர்க்கடலேழுமொருகுடங்கைதனிலேந்தியுண்டமேலோன்
விரைகொள்பூந்தாமரையின்மெல்லியலேயடிவணங்கிவிளங்குகற்பின்
பொருவில்சீர்ப்பூவையொடுந்திசைமுகனையருஞ்சிறையிற்புகுத்துஞான
முருகவேளினிதுறையும்பதிதேடியவன்பாதமுன்னிச்சென்றான். (௬௬)

ஐந்தாவது அகஸ்தியர் விந்தவரையையடைந்த
அத்தியாய முற்றிற்று.
ஆ-திருவிருத்தம்-௧௧௦.

## ஆறாவது,
## தீர்த்தமகிமையுரைத்தஅத்தியாயம்.

அங்கணுலகிருணீக்கியருந்தவத்தோனேகுமொருநெறியினுப்பண்
டிங்களிளம்பசுங்குழவிக்கோடுரிஞ்சநறியமுகைசிதைந்துதண்ணென்
கொங்குகமழ்நறுங்கொன்றைத்தேனருவியலைத்தொழுகுகோடரத்துக்
கங்கைநதியுவட்டெடுக்குங்கடவுளுறைதிருச்சைலங்கண்ணுற்றானே. (௧)

வேறு.

பன்னிகேளிப்பருப்பதம்யோசனை
யுன்னிலெண்பத்துநான்குகன்றோங்கிடு

மன்னுமியாவுமிலிங்கவடிவின
துன்னுவார்தம்பவங்கடுடைக்குமால். (௨)

ஆதலாலிவ்வனைவலங்கொண்டவர்ப்
போதுதூவிப்பணிகெனப்பொற்றொடி
யீதுநண்ணிற்பிறப்பறுமென்றிடிற
றீதில்காசியைச்சிந்திப்பதென்கொலோ. (௩)

என்றுபன்னியியம்பலுமுத்திவி
டொன்றநல்குபதிபலவுண்டென
மன்றநற்றவரோதினர்மாணிழை
நன்றுகேட்டியெனநவின்றனரே. (௪)

வேறு.

அதிர்புனற்பிரயாகைவிளங்குமோங்காரமவந்திகாலாஞ்சரமயோத்தி
மதுரைகோகன்னம்புட்கரமகராலயந்துவாரகைவளக்காஞ்சி
வெதிரிகாச்சிரமந்திரியம்பகங்கங்கைவேலையிற்புகுமிடஞ்சிந்து
நதிசரச்சொதியோடொன்றிடங்குருக்கேத்திரமொடுநைமிசாரணியம். ()

விரிபுனற்கங்காத்துவாரைநற்றுறக்கம்வீடருணீடருச்சைலம்
பிருகுகச்சஞ்சீர்பெற்றுயர்பிருகுதுங்கமென்றின்னனவன்றித்
தரைபுகழ்தாராதீர்த்தம்வெண்டரங்கச்சத்தகோதாவிரித்தடமென்
றுரைபெறுகடவுட்டீர்த்தமாநிலத்திலுண்டெனவோதினருயர்ந்தோர். ()

சத்தியந்தானஞ்சம்மதமின்சொற்சாற்றுதலொருவழிப்படுதல்
புத்தியேமுதலகரணமோர்நான்குமடக்குதல்புலன்கள்போம்வழியி
லுய்த்திடாதமைத்தல்பொறைதிடஞானமுயிர்க்கெலாந்தண்ணளிபுரித
லித்திறமனைத்துமானததீர்த்தமெனவெடுத்தியம்பினர்மேலோர். (எ)

அறத்துறைபயிலுமானததீர்த்தமாடலராகிகீராடிற்
புறத்தழுக்கொழிவதல்லதுபுனிதராகிலர்பூந்திரைசுருட்டுஞ்
சிறைப்புனலதனின்முழையுறழ்பகுவாய்த்தீவிழிச்செறியெயிற்றிடங்கர்
சுறக்குலமுதலவளப்பருங்காலந்தோய்ந்ததாற்றுறக்கமுற்றனவோ. (அ)

வேறு.

முதுக்குறைவிலாதவர்மொழியுந்தெய்வநன்
னதிப்புனலாடினுநவையினீங்கலர்
மதுக்குடம்பன்முறைவழாம்பின்மாநதிப்
புதுப்புனலாடினும்புனிதமெய்துமோ. (௯)

கற்றதங்கல்வியுங்கடவுட்பூசையு
நற்றவமியற்றலுநவையிருணமும்
மற்றுளவறங்களுமனத்தின்பாலழுக்
கற்றவர்க்கேபயனளிக்குமென்பரால். (க0)

பொறிவழிப்புலன்செலாதடக்கிப்புந்தியை
நிறைபரம்பொருளிடைநிறுத்துநின்மல
ருறைவிடமல்லதையுள்ளதாங்கொலோ
வெறிபுனற்றீர்த்தமென்றியம்பப்பட்டதே. (கக)

உரைப்பருமானததீர்த்தமோதிடிற்
சுருக்கமின்ஞானநீர்தோய்தன்மற்றது
விருப்பொடுவெறுப்பெனவிளம்பப்பட்டதோர்
கருப்புகுத்திடுமலங்கழுவுமென்பவே. (கஉ)

உடலுறுமவயவத்துத்தமாங்கம்போற்
றொடுகடல்வரைப்பினுட்டோயுமாற்றினுட்
கடவுண்மாநதியுளவவற்றிற்காதலாற்
படிகுநரழிவிலாப்பதத்திற்சேர்வரால். (கங)

புண்ணியதீர்த்தங்கள்பொருந்தியாடினோர்
மண்ணிடைப்பறவைகள்விலங்குமற்றுள
வெண்ணருமியோனிகள்யாவுமெய்திடார்
விண்ணிடைக்கடவுளராகிமேவுவார். (கச)

அறத்திறந்திறம்பினோரருளிலாதவர்
துறக்கமொன்றில்லெனச்சொல்லும்புன்மையோர்
சிறப்புடைப்பயனுறுத்தர்க்கஞ்செய்குநர்
பெறற்கருந்தீர்த்தநற்பயன்பெறார்களே. (கடு)

அருளுடன்றீர்த்தங்களாடவேண்டினோ
ரொருபகலுணவொழிந்தொழுகுமும்மதக்
கரிமுகன்றுளிணைகருதிமற்றைநாட்
பரிவொடுபாரணம்பண்ணியேகுவார். (கசு)

மன்பெருந்தீர்த்தங்களாடிமாநிலம்
பொன்பசுமுதலிவைவழங்கிப்பூசுரர்க்
கன்பினுலமுதுறழடிசிலூட்டிப்பின்
றென்புலத்தவர்கடன்செய்யவேண்டுமால். (கஎ)

ஒருத்தனைத்தன்மனத்துன்னிவான்புனற்
றிருத்தகுதீர்த்தங்களாடல்செய்திடி,

றருப்பையாலவனுடறன்னேயொப்பதோ
ருருப்படவியற்றிநல்லுதகமாட்டுவார். (௧௮)

ஆடகமளித்துநீராட்டுவித்தவர்
கூடுவரோரிருநான்குகூறுமற்
றூடுநரொருபதினுறிலொன்றுதாங்
கேடில்பேறடைகுவர்கிளக்குங்காலையே. (௧௯)

அலைபுனற்றீர்த்தங்களடைந்தவற்றைநா
ளுலைவரப்பாகிலையுண்டிநீத்துப்பின்
றலைமயிர்குறைத்துநீர்த்தடத்துமூழ்கிடி
னிலைபெறுபாவங்களனைத்துநீங்குமால், (௨௦)

காசிமாயாபுரியவந்திகாஞ்சிமற்
றேசைகோளயோத்திவண்டுவரையொப்பறு
மேசிலாமதுரையென்றிசைக்குமேழ்பதி
மாசறுமுத்தியைவழங்குமென்பவே. (௨௧)

ஒலிபுனற்பிரயாகைகேதாரமோங்குசீர்
மலிதிருச்சைலமென்றுரைக்குமாண்புடை
நிலைபெறுதலங்களுநினைத்தற்கெய்துரு
வலைவறுமுத்தியையினிதளிக்குமால். (௨௨)

நெடுநிலவரைப்பினினிகழ்த்துதானங்கண்
மடிவறுமுத்தியைவழங்குமென்றது
கடவுணீர்க்கங்கைசூழ்காசிமாநக
ரடைவதற்கேதுவாயமைந்தவாற்றினல். (௨௩)

ஏதமில்தானங்கள்யாவுங்காசிபோன்
மேதகுமுத்தியைவிளைத்திடாவெனச்
சீதரன்கணத்தினோர்சிவசன்மாவினுக்
கோதியகதையினைமுனிவனேதுவான். (௨௪)

ஆறாவது-தீர்த்தமகிமையுரைத்த அத்தியாய முற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-௨௧௪.

---

ஏழாவது,

## சத்தபுரியின்சிறப்புரைத்த அத்தியாயம்.

---

மல்லல்வளஞ்சிறந்தோங்குவடமதுரைப்பதியினிலோர்மறைவலாள
னெல்லையினற்றவமாற்றியினிதீன்றசிவசன்மாவென்போன்மேனாட் [க்
டொல்லைமறைப்பொருடேர்ந்துதுகளறுசீர்ப்பலகலையின்றுறைகள்போகி
கல்வியெனும்பெருங்கடலின்கரைகடந்துநிதியீட்டிக்களித்தானன்றே. (௧)

இயற்றரியபலவினையம்யாவுமுயன்றருந்தியமெனைத்துமீட்டி யுயிர்க்குயிராமழலைமொழிக்கிண்கிணிக்காற்சிறுவர்களையுவப்பினீன்று பயிர்ப்புறமிற்கிழத்தியொடுமளகையர்கோனெனப்போகம்பலவுந்துய்த்து வியப்பொடுதன்புதல்வர்பெறவீட்டுநெறியினைத்தினையும்விழைவிலீர்ந்தான்.()

மழவிடைபோற்செம்மாந்துமகளிர்வரிவிழிகளிப்பவாழுநாள்போ
யெழிலிளமையுருவகலக்கோலூன்றிநரைதிரைவந்தெய்தநோய்செய்
கிழனுற்றுமறனியற்றுதித்துணைநாள்கழிந்தமெனக்கேடினெஞ்சங் [ன்
குழைவுறக்கண்பனிதூங்கச் சிவசன்மாவுளத்தினிடைக்குறித்தல்செய்தா

தாளாண்மையுடனிதியம்பலவீட்டிவிஞ்சையினுற்றர்க்கமேற்று
வாளாநற்பகலனைத்துங்கழித்தனன்செஞ்சடைமௌலிவரதனன்பர்க்
காளாகியாங்கவரைத்தொழுதிலன்வண்டுழாயலங்கலண்ணருளின்
மாளாதவன்பினெடுங்கொழுமலர்தூஉய்வணங்கியுளமகிழ்ந்திலேனல். ()

ஐங்கரனைச்செவ்வேளையலர்கதிர்வானவனைவழிந்தமுதங்காலுந்
திங்களிளங்கண்ணிபுனைசெல்விதனைவழிபாடுசெய்திலேனீண்
மங்குறவழ்குடுமிநெடுஞ்சினகரங்கடேவுறையவகுத்திலேன்வான்
பொங்குபுனற்றடங்கூபங்குளத்தொடுநற்றருமமிவைபுரிந்திலேனல் (ரு)

அருநெறியினிழல்பரப்பத்தழைகுழைக்கும்பராரைமரமமைத்திலேன்றண், மருவுயிர்க்குநறுந்துளவமொன்றேனுமினிதுவைத்துவளர்த்திலேனல், விரைகமழுநறுந்தண்ணீர்வேனில்வாய்வேட்டவருக் களித்திலேனுட் கருதரியவருமகங்கள்பலவாற்றித்தேவர்கடன்கழித்திலேனல் (சு)

அழிபசியால் வருந்தாமலந்தணருக்கின்னமுத மளித்திலேன்செல், வழிவருத்தம் தீர்ந்தேகவாங்கவர்க்குக்குடைசெருப்பு வழங்கிலேன்வண், டழைபசுந்தோட்டறுகுபறித்தானருந்தக் கொடுத்திலன்றண்கழனிபைம்பொ, னிழைதவழுங்கொம்மைமுலைக்கன்னியரைமறையவர்கட்கீந்திலேனல். (எ).

முதல்வனுருத்திரசமகம்பவமான நாடோறுமொழிந்திலேன்வெங், கதமெரியிலெட்டுவிக்கழிபெரும்பாவக்கடலைக்கடந்திலேனற், புதையிருளும்வெள்ளியுமோர்பதின்மூன்றுந்திதியுடனே பொருந்துசெங்கேழ்க், கதிரவன்வாரமுமொழிந்த நாளரசைவலங்கொண்டு களித்திலேனல். (அ)

தகரமதியாலவட்டம்பாகிலைநல்விரைகமழுந்தண்ணீர்ப்பந்தல்
துகடீர்ந்தபுனனிறைக்குமணிக்கும்பங்கலையினைதடுலங்குசோதி
புகலாதசுடர்முதலதானமுழுவதுமறையோர்க்களித்திலேனு
லிகலோடுங்காலீடர்கொடும்பாசத்திறுக்கிலினியென்செய்கேனே. (கூ)

ஆய்ந்தமுதுமறையவர்க்குமதிதியர்க்கும்பூசைபுரிந்தறிகிலேனு
லேய்ந்தவிருவினை தொடருமல்லாமனமதேயென்றிருந்தவில்லும்
வாய்ந்தமனைக்கிழத்தியரும்புதல்வருமிவ்வுடலுமுடன்வருவதுண்டோ
வீய்ந்துகொடுநரகமூழ்ந்திநல்குரவாய்மறுமையிலுமெலிகுவேனே. (௧௦)

என்றினையபலகூறிநிலையில்லாயாக்கையினியிருக்குங்காறுங்
குன்றினும்வார்திரைசுருட்டுங்கடலாடைப்புவியிடத்துங்கோதிதீர்த்தஞ்
சென்றுகொடுந்துயரகலவாடுவலென்றுளத்தினிடைச்சிந்தைசெய்தான்
மன்றவருந்தவமாற்றும்வடமதுரைப்பதிவாழுமறைவல்லோனே. (௧௧)

தெள்ளுமுதுமறைக்கிழவன்சத்தபுரியிடத்தினியாஞ்சேறுமென்னு
வொள்ளியநல்லோரைதனிலேங்கரன்பொற்றுமனைத்தாளுவந்துபோற்றி
முள்ளரையசெழுங்கமலமுகையுடைந்துவழிதேறன்முருகுநாறு
மள்ளலஞ்சேற்றகல்வயல்சூழயோத்திமாநகரதனிலடைந்தானன்றே. (௧௨)

சரயுநதிப்புனல்படிந்துதென்புலத்தோர்கடன்கழித்துத்தழல்செய் வேள்வி,யருமறையோரினிதுவப்பவமுதுறழுமின்னடிசிலமையவூட்டிப், பரிவினொடு மங்கரிற்பஞ்சராத்திரமுறைந்துபவளஞ்சிந்தி, விரிகதிர்வெண்மணிகொழிக்கும் வீங்குபுனற்பிரயாகைதனின்மேவினனே. (௧௩)

உடைதிரைநீர்ப்பிரளயத்துமார்க்கண்டன்முதன்முனிவருறைவதாய
வடதருவைப்புனிற்றுமதியலேபுரட்டுங்கங்கையொடுவேனந்தவேணிக்
கடவுளைவெண்மணிகொழிக்கும்பாலாழிதுறந்துசெழுங்கமலையோடு
மடியர்துயரகற்றுவலென்றினிதடைந்தமாதவனையாங்குக்கண்டான். (௧௪)

பெறலரியதருமத்தின்பேறெல்லாம்விரிதெண்ணீர்ப்பிரயாகையாற்று
ளுறலிலொருநுண்மணற்குநிகர்தூங்காகொடும்பாவமனைத்துமன்ன
துறுபெயர்கேட்பினுநடுங்குமாடுநருமாண்டுவதிந்துயிர்விட்டோருங்
குறைவில்பரகதியடைந்துவீற்றிருப்பரெனமறைகள்கூறக்கேட்டான். ()

செங்கதிர்ச்செல்வனுமாதிகேசவனுங்கண்களாய்த்தெய்வநன்னீர்ப்
பொங்குதிரைமணிகொழிக்கும்வானையசிகைகளாய்ப்புனலிற்றோய்ந்தோர்
வெங்கொடும்பாதகந்தொலைத்துவீடுதருந்திருவேணிவேணியாய
கங்கைவிரிபுனலாடைக்காசியணங்கினைநோக்கிக்களித்தானன்றே. (௧௬)

மதிதவழுமுயர்பொலங்கோட்டிமையநெடுவரைமுதலவரைகள்யாவுந் [ம்
த்தைமலர்ப்பைந்தருமுதலதருக்களுமெண்ணறுபுவனந்தனிலுள்ளோரு
விதிமுறையினுக்கடைந்துபுகழ்மாகத்திங்கடனில்விளங்கும்வெய்யோன்
கதிர்மணித்திண்டேர்கடவுபுலரியின்வாய்ப்புனலாடக்கண்ணிற்கண்டான்.

கண்டுகளிமகிழ்தூங்கியாங்கதனின்வளமனைத்துங்கருத்திலோர்ந்து, மண்
டுபிரயாகைதனிலோர்திங்களுறைந்ததற்பின் வளங்கோள்கங்கைத்,

தண்டுறைசூழ்காசிநகர்புகுமளவின்மலர்தூவித்தாழ்ந்துதாழாத், திண்டி
றல்வெங்கரிமுகத்தோ னிலங்கும்பாலந்தாமனாத்தாள் சென்னிசேர்த்தி.

கடவுண்மணிகன்னிகையின்புனல்படிந்துதிரைபுரட்டுங்கங்கையாடி
யடைவிலருமுனிவர்கடன்றென்புலத்தோர்கடனாற்றியோரைந்தாய
விடயமறுத்திடுமறையோனேம்பெருந்தீர்த்தமுமூழ்கிவிரிந்தகொன்றைத்
தொடைபுனையுமகிலேசன்றாளிணைவணங்கியந்நகரைத்துதித்தல்செய்தான். ()

தூயசெழுங்கங்கையலைசுழித்தெறியும்புனலிலொருதுளியுண்டோருந்
தாய்முலைப்பான்மீட்டருந்தாத்தன்மையாலாங்குடலந்தனைவிட்டோர்க்கு
வேயனையதோளிபங்கன்றாரகத்தைவலச்செவியில்விளம்புறன்றாற்
சேயுயர்விண்ணவருலகோகாசிநகர்க்கிணையாகச்செப்புமாறே. (௨௦)

முத்தியளித்திடுநகரிந்நகரெனவேயறிந்துமுதுக்குறைவிலாரிற்
சத்தபுரியிடத்தினும்போய்வருதுமெனுஞ்சங்கற்பந்தவிருமென்னாப்
பித்தரிறநீவினைகள்பிடர்பிடித்துந்தப்புறம்போகிப்பிறைசேர்வேணி
யத்தனினிதுவந்துறையுமல்லல்வளஞ்சிறந்தோங்குமவந்திசேர்ந்தான். ()

ஆதியுகமொழிந்துவருமூன்றுகத்துமாகாளமவந்திமற்றை
யோதுவளஞ்சிறந்தோங்குமுச்சினியெனுநகரிலுடன்றகூற்றைக்
காதியிடுமாடகேசுரர்தாரகேசுரர்மாகாளரென்னச்
சோதிவடதருவினிழலினிதுறையும்பரமனடிதொழுதுபோனன். (௨௨

காதலிற்சென்றிறந்தோர்க்குச்சாரூபஞ்சிவனளிக்குங்காஞ்சிக்கேகி (ட்
யாதரத்தினேழ்பகலாண்டிருந்திறந்தோரொன்பனைத்துமலங்கற்றிண்டோ
சிதரன்றன்வளையாழியுருவாகுந்துவாரகையிற்சென்றபின்னர்
மாதவத்தோரொஞ்ஞான்றுமுறைவந்துறைமாயாபுரியின்வந்துசேர்ந்தான். ()

பொன்னகரினுயர்மாயாத்துவாரமென்றும் பொருவிலரித்துவாரமென்று
துன்னுதடங்கரைக்கங்கைசுழித்திடைபோதலிற்கங்காத்துவாரமென்று[ந்
மின்னணமுப்பெயருடைத்தாய்வைகுந்தத்தினிதேறுமேணியாக
மன்னியமாயாபுரியிலினிதிருந்தானருந்தவத்துமறைவல்லோனே. (௨௪)

தோமறுமேகாதசிநோன்பினிதாற்றிக்கங்குலிடைத்துயிலுறமற்பூ
மகள்கேள்வனைவணங்கிமறுநாட்பாரணமினிதுபுரியுமுன்ன, ரேழுறவெ
ப்பொடுகுளிர்வந்தெய்திடலுமிறப்பதனையெண்ணிமாயோன்,காமருபொ
ற்செழுங்கமலமலர்பொருவுமிருசரணங்கருத்துட்கொண்டான். (௨௫)

வாளமரின்வெருவாதுமருமம்போழ்ந்தவிலுருவமடிந்துளோருந்
தாளிணைகள்சிவப்பூரத்தீர்த்தயாத்திரைபோகிச்சாகின்றோருங்
காளமுகிலெனக்கரியகாலபடர்தமைவிழியிற்காணுரொன்று [ன்
காணுமறையுளைப்படிதென்னிவெருவொழிந்தானருமறை கணவிலுநாவா

வெய்யகொடுநோய்கனற்றவேழுநாள்கழிந்ததற்பின்மேனிவாடிக்
கையறவாய்ச்சிவசன்மனிறந்திடலுந்தண்டுளவோன்கணங்களாய
பொய்யிறவச்சுசீலனுமெய்ப்புண்ணியசீலனுந்திதலைபூத்துவீங்கு [ரால்.
தொய்யின்முலையரம்பையர் சூழ்விமானமொடு மிருபிலத்திற்றோன்றினு

வளங்கெழுமாயாபுரியிற்சிவசன்மனெனு மறையோன்மாய்தறன்று
ற், களங்கனிபோன்மேனியான்சாரூபமடைந்துவருகணங்களோடு, முளை
ங்கவருமரமகளிரொண்மணிச்சாமரையிரட்டவொளிருஞ்செம்பொன்,வி
ளங்குமணிவிமானத்துவிண்ணவர்பூமழைதூவவிசும்பிற்போனான்.(உஅ)

ஏ-வது, சத்தபுரியின் சிறப்புரைத்த அத்தியாயமுற்றிற்று

ஆ திருவிருத்தம்-உ௬உ.

---

எட்டாவது.

## சிவசன்மாவையியமன்எதிர்கொண்டஅத்தியாயம்.

---

என்னமாமுனியியம்புதலுமேழைபுகல்வாள்
முன்னமேழ்பதியுநல்குமுயர்முத்தியெனநீ
சொன்னவாமெழுழியமாயனதுதொல்லையுருவ
மன்னவேதியனடைந்ததெவனென்னவறைவான். (க)

ஆசிலாதபதியாறினுமடைந்திடுதலக்
காசியெய்தியுயர்முத்திபெறுகாரணமதா
மாசிலாவினையவாறுசிவசன்மன்வினவக்
கேசவன்கணமொழிந்ததுகிளத்துவனரோ. (உ)

மேவுகின்றகணநாதனைவியந்துமறையோன்
யாவைநும்பெயர்நலங்கிளர்சுசீலனெனவுந்
தாவருந்தருமசீலனெனவுந்தொழிலினு
லோவிலன்பொடுநினைத்தனனுரைத்திடனலும். (௩)

நறையிதழ்க்கமலைகேள்வனடிநண்ணுமடியா
ரறிவதற்கரியதாயபொருள்வேறுமுளதோ
மறையவர்க்கிறைவவெம்பெயர்மதிக்கிலவையே
குறைவினற்கதைகள்கேட்டனகுறித்துமொழிவோம். (௪)

என்றுகூறியுடனேகுதலுமோருலகுகண்
டொன்றுமிவ்வுலகமியாதுவிகடங்கொளுருவுங்
குன்றுசெல்வமுமுள்ளாரெவர்கள்கூறுகெனலு
நன்றுகேளெனமகிழ்ந்துகணநாதர்நவில்வார். (௫)

இலகுவெண்பிறையெயிற்றெரிகள்சிந்துபகுவா
யலகைசேருலகமீதுசுசியின்றியரனை
மலர்கவீனருமின்றெனவளித்துமனநொந்
துலவினேடுதுயருற்றவருமிங்குறைவரால். (௬)

தாதருந்திவரிவண்டுமுரறண்டுளவினேன்
சீதரன்றனதுதாள்பரவுதெய்வமறையோ
யீதுகுய்யகவுலோகமிவணுளுமுறைவோர்
கோதில்வெற்றிபெறுகுய்யகரெனப்புகலுவார். (௭)

தொகுக்தநற்பொருளறத்தினுயர்தூயவர்பெறப்
பகுத்தருந்தியிடலின்றியுயர்பாழிவயினிற்
புகுத்திமன்னுயிர்களுக்கிடர்புரிந்திலர்களாய்
மிகுத்தவன்பினுறைவாருறைவரென்னவியவா. (௮)

ஆங்குநின்றகலுமங்கெறியிலோருலகுகண்
டீங்குமேயவுலகெவ்வுலகமென்னவினவத்
தேங்கனீந்தொழுகுதெள்விளியுடைத்திவவியா
ழோங்குசெல்வமுறுகந்திருவர்வாழுலகமே. (௯)

அரியநல்விரதமாற்றுநர்களன்பினுருக
விருவிசும்புறையும்விண்ணவனையாழினவில்வோர்
புரிநரம்பிசைமகிழ்ந்தரசர்நல்குபொருள்கொண்
டுரியதானமுனளித்தவர்களிங்குறைவரால். (௧௦)

ஆதிநம்பனுருநாதவுருவாகுமெனமுன்
னோதுகின்றமறையாவையுமுணர்ந்திடுதலாற்
கீதமீசன்முனநாளுநவில்கேண்மையுடையோர்
தீதிலிவ்வுலகுசேர்குவரொனுவுனைசெய்தார். (௧௧)

ஆண்டுநின்றுசெலுமங்கெறியிலோருலகமுன்
காண்டலோடுமிதெவ்வுலகமென்றுகழற
மாண்டநற்றவமியற்றருமறைக்கிழவகேள்
வேண்டுபோகநுகர்விஞ்சையர்கள்மேவுலகமே. (௧௨)

பயன்விழைந்துசிவபூசைபுரிவோர்பயிலுவோர்க்
கயிலுமின்னடிசிலாடைபொருள்யாவுமுதவி
மயல்செய்கின்றபொருணச்சுதலிலாதுமகிழ்கூர்ந்
தியலிசைப்பனுவனல்குமவரிங்குறைவரால். (௧௩)

என்றியம்புகணநாதருடனேகுநெறியின்
மன்றலோதியரமங்கையர்நெருங்கியிருபால்

நின்றுசாய்மரைமிரட்டவொளிர்நீலவரைபோல்
வென்றிசேர்தருமன்வந்துளம்வியந்துபுகல்வான். (௧௪)

அரியநான்மறைமுதற்பலகலைக்குமறிவா
லொருவனுயினையுவப்பினொடுசத்தபுரியு
மருவிவல்வினைதுடைத்தனைமகிழ்ச்சியதனாற்
பொருவினின்னையெதிர்காணியபுகுந்தனனியான். (௧௫)

என்னநன்முகமனன்பொடுமியம்பிமறைதேர்
மன்னருந்தவனைவாழ்த்திவிடைகொண்டுமகிழ்வாற்
றுன்னுகாலபடர்சூழ்வரவிளங்குதருமன்
றன்னிருப்பதியில்வந்தினிதுசார்ந்தனனரோ. (௧௬)

தருமனேகலும்வியந்துசிவசன்மன்மொழிவா
னுருவும்வாய்மையுமுளத்தினையுருக்கவிழைவான்
மருவியேகுமிவனேமறலிமற்றிவனையோ
வெருவும்வெய்யவுருவத்தினனெனப்புகல்வதே. (௧௭)

வடிவமீதலதுமற்றுமுளதோவினையன்மாட்
டடைவர்யாரிவனகர்க்கணடையாதகல்வர்யார்
புடைகொள்சையமினியீதுகொல்புகன்றிடுகவென்
றடனுறைந்திடுகணங்களொடுரைக்கமொழிவார். (௧௮)

தருமநீதிபொறையன்பொடுதயாவிவைகளோ
ருருவுகொண்டனையன்மற்றிவனையொக்குமவர்யா
ரருமறைக்கிழவநின்னிகரருந்தவர்முனம்
பொருவினல்வடிவின்வந்துமுகமன்புகல்வனால். (௧௯)

அலகிலாவுயிரடங்கலும்விழுங்குபகுவா
யிலகுவாளெயிறிலங்கவெரிசிந்துமுசல
மலைதிரண்டனபுயங்களில்வயங்கியொளிர
வுலறுகுஞ்சிவடவைக்கனலையொத்தெரியவே. (௨௦)

ஆழிவெண்டிரையுயிர்த்தகொலையாலமுடனே
யூழிவெங்கனலொருங்குசுழல்கண்களுமிழப்
பாழிவாயிதழ்துடிப்பவெடிபட்டுநெடுவா
னேழுமுட்குமுருமுக்குரலிடித்ததிரவே. (௨௧)

வெய்யபாதகர்வெருக்கொளுமுருக்கொடுநிணத்
தொய்யில்பூசுகதைசுற்றியெதிர்தோன்றிமறலி
கையில்வாண்மழுவசைத்துலவுகாலபடரைச்
செய்யகட்கடையினோக்கியிவைசெப்பிடுவனால். (௨௨)

துன்முககாகதைசுழற்றிநெறியற்றவிவர்தஞ்
சென்னிமூளைகடெறிந்திடவடித்திடுதிமற்
றன்னபாதகரடித்துணைபிடித்துமறுக
மன்னுபாறையிலடித்துடலமாய்த்திடுதியால். (௨௩)

வெட்டுவாள்கொடுகழுத்தினின்மிதித்துவிழியைத்
தொட்டகழ்ந்திடுதுடிக்கவடிபாசமதனாற்
கட்டியங்கவர்கழுத்தறவிறுக்கறையின்வா
யிட்டரைத்திடுதிமெய்த்தசையையீர்ந்திடுதியால். (௨௪)

பிறர்மனைக்குரியபேதையரிடத்துவிழைவாய்க்
குறுகுகாலிணைகுறைத்திடுதிகொம்மைமுலைமே
லிறுகுறத்தழுவுகையிணையையீர்தியவர்மே
லுறுசினத்தினொடுமூசிகணிறுத்திடுதியால். (௨௫)

வெம்மையோடுபிறர்தம்பழிவிளம்பியுழலுஞ்
செம்மையில்லவர்கடையுமிழும்வாயிலயலார்
தம்மில்வாழ்பவரைநோக்கினர்தடங்கண்மிசையும்
அம்மவோவெனவிருப்புமுளைகொண்டறைதியால். (௨௬)

மின்னுநக்ககனிர்வேள்விகடபய்திரமிகப்
புன்மையில்லவர்தமைப்புழிப்புகன்றவிவரைத்
துன்னுமூளைதசைசோரிநிறைபாழ்நரகின்வாய்ச்
சென்னிகீழுறமடுத்தனல்செறித்திடுதியால். (௨௭)

போற்றுதம்பொருள்புதைத்துவறியோரின்மெலியா
நாற்றிசைக்கணுநடந்தடிவருந்திநசையா
லேற்றருந்துமவர்கையதனிலெண்ணெயொழியா
தூற்றிருந்தொழுகவாக்கியெரியூட்டிடுதியால். (௨௮)

தருக்குமைம்புலனெறிந்துபொறைசால்குரவனை
மருக்கொள்கொன்றைபுனைவானவன்முதற்கடவுளைச்
செருக்கினோடுபழிசெப்புமவர்வாயினிடைசெம்
புருக்கிவெந்தழல்கனன்றெழுகவூற்றிடுதியால். (௨௯)

விருப்பினோடொருவனீவதுவிலக்கியிடுவோ
ருணாக்குநாவையறுவேதியரொடும்பர்பொருளை
யருப்பமாயினுநுகர்ந்தவர்வயிற்றையகழா
விருப்புமுள்ளொடுமேலப்புழுநிறைத்திடுதியால். (௩௰)

உம்பர்வேதியர்விருந்தினையூட்டிநுகரார்
தம்பசிக்கணிறணிப்பானிதுய்த்தவிவரை

வெம்புகண்டகருளத்தின் மிகவெம்மைபுரியுங்
கும்பிபாகநரகத்திடைகுளிப்பவெறிவாய். (௩௧)

உடல்சினத்தறுகணுக்கிரமுகத்தவதெளிந்
தடைகுநர்க்கிடரிழைத்தவரையஞ்சொன்முதிரா
மடநடைப்புதல்வராருயிரைவவ்வுமிவரைக்
கொடியமாரவுரவத்திடைகுளிப்பவிடுவாய். (௩௨)

மருள்செய்கின்றநறவுண்டவரைமண்டுகடல்போற்
குருதிவாய்நரகினுய்த்திடுதிகோதினெறிசே
ரருமறைக்கிழவராருயிர்செகுத்தவிவரை
யிருள்செறிந்தநரகத்திடையெடுத்தெறிதியால். (௩௩)

மாலுழந்துகுருபன்னியைமணந்தவிவரைச்
சாலநற்பொருள்கரந்துகவர்தன்மையரைவெங்
காலசூத்திரமெனுங்கொடியகாய்நரகின்வா
யோலிடும்படியிழுத்துநனியுய்த்திடுதியால். (௩௪)

ஆயநான்மறையருந்தவர்தமாவிகவருந்
தீயபாவமுதனுன்குநனிசெய்யுமவரோ
டேயினேரையசிபத்திரமெனப்பெயரவாங்
காயும்வெந்நரகினிட்டுடல்கனற்றிடுதியால். (௩௫)

ஈட்டுபாதகரைவெய்யதழலெண்ணெயிடையே
மாட்டிமற்றவருடற்றசைகள்போழ்ந்துவளையுந்
தோட்டியென்னவொளிர்துண்டமதனுற்பறவைகள்
கூட்டுணுங்கொடியகோரநரகத்திடுதியால். (௩௬)

தேடருந்துணைவராறெடுதிருந்திழையினர்
வாடிநொந்துளம்வருந்தவதைசெய்தவிவரைக்
கூடசன்மலியெனுங்கொடியவெந்நரகினிட்
டாடன்மாபுயவெம்மத்திகையெடுத்தறைதியால். (௩௭)

மாதர்தம்மனையிருப்பவயன்மங்கையர்தமைக்
காதலான்மருவுகையிணைபிடுங்கியெறிவெங்
கோதமுற்றுமனைதோறெரிகொளுத்துமிவரை
யேதமெய்தவெரிகாலுநரகத்திடுதியால். (௩௮)

கோளுரைத்துநிதிகொள்பவர்நடுப்புகல்கிலார்
மூளநஞ்சமிடுவோர்கிறையின்மல்குமளவி
னுளும்வஞ்சகமிழைத்தவர்நடுக்கமுறவெங்
காளகூடநரகத்தினிடைகட்டியெறிவாய். (௩௯)

இச்சையுற்றருளினேடுமினிதாடுபுனல்வாய்ப்
பிச்சரென்னவுமிழ்நீர்மலம்விடுத்தபிழையோ
ரச்சமுற்றழுதரற்றிநனியாவிமறுக
மிச்சில்வெய்யகொடும்பாழ்நரகின்வீழ்த்திடுதியால். (௪0)

கருவழித்தவர்கடங்களுடலைக்கருவியா
லரிபொருத்துபினுமம்பியிடையிட்டனைநெடுந்
திரிகைவாயிடைதிரித்துருவமாக்கியடரா
வெருவருங்கொடியபாழ்நரகில்விட்டிடுதியால். (௪௧)

அறுசுவைப்பொருள்பகர்ந்துழலுமந்தணர்தமை
நறியகன்னலிடுமாலையினறுக்கிடுதிதம்
முறைதிறம்பவுலகாளுமுடிமன்னவர்தமை
வறியகூவலிடைதள்ளுதிமறிந்துவிழவே. (௪௨)

மருள்கொடுக்குநறைவிற்கும்வணிகக்கபடரை
வெருவரத்தசைகளென்புபொடியாகவிரைவி
னுரலிலிட்டுயருலக்கையினிடித்தொழிகலா
நரகிடைப்பதைபதைக்கநனிநண்ணவிடுவாய். (௪௩)

நெடியகந்தரமறைக்கிழவர்நேமியரசர்
படியில்வாழ்வணிகர்முன்னம்வெருவாதுபழிசூழ்ந்
தடிகணீட்டியசதுர்த்தரையதோமுகமெனுங்
கொடியபாழ்நரகினிட்டுடல்குறைத்திடுதியால். (௪௪)

மற்றொருத்தன்மனையாடனைமணந்தவிவரை
கற்பிகந்துபிறர்போகநுகர்கன்னியர்தமைச்
செற்றுவெங்கனல்கனிந்தொழுகுசெம்புருவநீர்
பற்றிமேவுதிரொனப்பதைபதைக்கவிடுவாய். (௪௫)

பாசபாணிவிடமெண்ணெயொடுபஞ்சிபொருண்மே
லாசைகூரநனிவிற்றுழலுமந்தணர்தமை
யூசல்போலுயரநாற்றியழல்பொங்கியுமிழு
மாகசேர்கரியசேற்றிடைமடுத்திடுதியால். (௪௬)

அரியநோன்பினிதினாற்றியிடைவிட்டயர்வுறுந்
திருவில்பாதகரையீயினொடுவண்டுசெறியும்
நிரயமுட்புகவிடுத்திடுதிர்நீவிரெனநின்
றுரவுசொல்லினொடுபாவிகள்முனுற்றிடுவனால். (௪௭)

அன்னபாவிகணமன்புகறல்கேட்டுளயரா
முன்னர்நாடொறுமிழைத்தபிழைமுற்றுமுணரா

வென்னைசெய்துமினியென்றுமதிமாழ்கிவெருவோ
டென்னருங்கொடியதூதர்முனுறப்பதறுவார். (சஅ)

முறைவழாதுலகமுற்றுமினிதாழிநடவு
மறைதருங்கழலலங்கல்வடிவேலரசனைப்
பொறையினேடளவளாயெதிர்புகுந்துமகிழ்வான்
மறலிபூசனைபுரிந்தடிவழுத்தியிடுமால். (சகூ)

மறைவலோர்கண்முதனான்குவருணத்தவர்களு
நெறிவழாதுதமொழுக்கநெறிநின்றனர்களேற்
றெறுசினத்தபகரேர்தியணிசெம்பொனணைமே
லுறைதிரொன்றினிதுவந்துமுகமன்புகல்வனுல். (ருo)

வேறு.

தருமசேனன்விடபருமன்றந்தவக்கிரன்சயத்திரதன்
பருதிவடிவேற்காந்தமனும்பாசன்றிறல்கொள்பராந்தகன்வெங்
குருதிவடிவாட்டிபதனுவாக்குக்கீரியுமாத்தனன்சிறந்த
வுருவத்தண்டார்ச்சகத்திரசித்துவனுச்சுவன்போருச்சுனனே. (ருக)

எறிவேற்றுனைபுரிஞ்சயன்சீரிரந்திதேவன்பலகலையின்
றுறைபோயுயர்ந்தபரமாத்திசுவனுவாவென்றிவர்முதலாந்
திறல்வாளரசர்விண்ணுலகிற்சிறந்தசுதர்மைமண்டபத்தி
னுறைவார்திருகுசினமறலியுறையுநகரிற்செல்லாரே. (ருஉ)

நீலகண்டன்மழுவேந்திநெற்றிக்கண்ணன்பூதேசன்
காலகாலன்விடையூர்ந்தோன்கங்கைசூடிகாமாரி
சூலபாணிகரியுரித்தோன்றேகைபாகன்காபாலி
யாலமுண்டோன்மதிசூடியந்தகாரியீசானன். (ருந)

வாசுதேவன்சனார்த்தனன்போர்மதுசூதனனச்சுதனெடுமா
லீசனரன்சங்கரன்கிரிசனிறைவன்பினாகபாணிசிவன்
கேசிநாசன்மணிவண்ணன்கெருடத்துவசனரசிங்க
னூசமில்லோன்விடையூர்திநம்பன்மிருத்துஞ்செயன்பாகன். (ருச)

அரவாபரணனழலேந்தியட்டமூர்த்திசெகதீசன்
புருடோத்தமன்கேசவன்கண்ணன்புயங்கசாயிபுள்ளூர்தி
யரமன்சாந்தன்கணநாதன்பவன்முக்கண்ணன்சருவேசன்
றிரிவிக்கிரமன்கமலைபதிதேவன்சவுரிமாதவனே.

புராரிதாமோதரன்சயம்புபூவைவண்ணன்கோபாலன்
முராரியனந்தன்கோவிந்தன்முகுந்தன்சார்ங்கபாணியரி

கிரீசனென்னும்பெயர்முதலாக்கிளக்குநாமநூற்றெட்டும்
பராவுமவர்கள்யமனுலகம்படாராரழியாப்பதம்பெறுவார். (௫௬)

என்றுசிவசன்மாவினுடனினவண்டேதமருவுயிர்க்கு
மன்றற்றுளவோன்கணநாதர்வகுத்துமொழியுமமைபத்துப்
பொன்ருழ்திதலைப்பொம்மன்மூலைப்புரிமென்கூந்தலரமகளி
ரொன்றிமகிழ்வோடினிதுறையுமுலகமதனைக்கண்ணுற்ருர். (௫௭)

எட்டாவதுசிவசன்மாவையியமனைதிரிகொண்ட அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௬௬.

---

ஒன்பதாவது.

## சிவசன்மாசூரியலோகங்கண்ட அத்தியாயம்.

கண்டுமகிழ்வோடினியகண்கவர்வனப்பிற்
றெண்டையிதழ்மாதரிவர்யார்கொலெதிரேதோன்று
மண்டுவளமெய்துலகம்யாதெனவழங்க
விண்டுகணநாதர்கள்வியந்தினிதுரைப்பார். (௧)

ஈங்கிவர்கள்வேள்விபுரிவோனாயிமையோனா
னீங்கரியகாதலுறநெஞ்சினையுருக்குந்
தீங்குதலைமென்மொழியதெய்வமடமாதர்
வாங்குதிரைவேலையமுதத்திறெழும்வந்தார். (௨)

பொன்னெழுகிவார்ந்தனையபொற்புடைநரம்பி
னின்னிசையவீணையொடுபொணிநடமுஞ்சொற்
பன்னரியதெய்வநவில்பாடைகலைமாட்சி
மன்னுமதனூல்சுரதவிஞ்சையிவர்வல்லார். (௩)

அலம்புசைமனோகையுருப்பசியணிப்பூஞ்
சிலம்புபுனைசிறடியுமாவதிதிருந்து
நலந்திகழுமேனைகைகலாவதிநடத்தா
விலங்குகனமஞ்சைநிகர்காந்திமதியென்பார். (௪)

மனங்கவர்கலாநிதிசுபானனைமழைக்க
ணனங்கதிலகங்கிருதுசுற்கையழகாருங்
கனங்குழையினுண்மதனமோகினிகளிப்பாற்
றினம்புதுநலந்தருதிலோத்தமையரம்பை. (௫)

சந்திரகலைசந்திரவிலேகைதவசுற்கை
யைந்துபரிவேள்விபுரிவோரணையுமங்கை

யுய்ந்திடநினைந்துபலவேள்விகளுஞற்றும்
வெந்தழலிலந்தணர்விரும்புமடமாதர். (சு)

இன்னவர்களாதிமடவாரொடனையரொன்னி
லன்னவர்களாறுபதினயிரவராவார்
மன்னிளைமையோடுயர்வனப்பொருவிலாதா
ருன்னுவிழைவின்படியுருப்பலவெடுப்பார். (எ)

இங்கிவர்களன்றியுயரோழ்கடல்வளைப்பின்
மங்கையர்கண்மாதவுபவாசம்விடுபோதி
லங்கதுதல்னெஞ்சமறியாதுதவறுற்றூற்
கொங்குநமழ்விண்ணிலுறைகூத்தியர்களாவார். (அ)

தீதின்மனமன்பொடுபொருந்துதல்செயாம
லேதிலனொருத்தன்வலைநிற்புணரினேங்கிக்
காதலனைநெஞ்சுறநினைந்தருகுகற்பின்
மாதர்களுமிவ்வுலகம்மைவடுவரன்றே. (கூ)

தூயமறையோனொடுவிரும்புமொருதோகை
யேயகலவிக்கினிதியைந்தவைகொடுத்தோ
ராயபலன்வேட்டுயருந்தவமுயன்றோர்
மீயுயருமிவ்வுலகமேவுவர்களன்றே. (க0)

கன்னியையொருத்தனுறுகாதலொடுசேரி
லன்னவளுமன்றுமுதலாகநனிவாட
மன்னிவிரதத்தொடும்வருந்தியுறைவாளேற்
றன்னிகரில்பொற்பினொடுமிவ்வுலகுசார்வாள். (கக)

என்றுகணநாதர்களியம்பவவைகேளா
நின்றினிதுசென்னெறியினீதிமறைவல்லோன்
மன்றல்கமழ்செங்கமலவாண்முகமலர்ந்துந்
துன்றுகதிரோன்மருவுதொல்லுலகுகண்டான். (கஉ)

மின்பொருவுசெங்கதிர்விரிந்திருள்விழுங்கும்
பொன்பிறழுமோருருளினேழ்புரவிபூண்ட
மன்பெரியதேரிலுறைவானவனைநோக்கி
யன்பொடுவணங்கவருள்செய்தனனகன்றான். (கந)

ஆதவனகன்றிடலுமந்தணனுரைப்பான்
யாதுதவமாற்றினர்களிவ்வுலகுசேர்வார்
போதல்புரிதேவிணியென்புகறிரென்னக்
காதலொடவிண்டுசணநாதர்களுரைப்பார். (கச)

பூதமெலவயுந்தனிபுரந்திடுவன்யாவ
னேதமறமுத்தொழிலியற்றிடுவன்யாவன்
வேதவடிவாய்த்தனிவிளங்குமவன்யாவன்
மாதவவவன்கொலிவனென்னமறைகூறும். (கசு)

இன்னகதிர்வானவனையானெனமதித்துப்
பொன்னடிபணிந்தினிதுபூசனைபுரிந்தோர்
மன்னுவர்களிப்பதம்வழுத்தல்புரியாதோர்
துன்னவரிதாகுமிருடேங்குலகுசேர்வார். (கரு)

வேறு.

கதிர்ஒளிந்திடுங்காயத்திரியினை
யுதயகாலையிலுச்சியின்மாலையில்
விதியினோதல்விடுத்துறைகின்றவர்
பதிதராகுவரேழுபகலினே. (கஎ)

வேறு.

பொருவருங்காயத்திரியினையுதயம்பொருந்திடுமள்வுநின்றுரைத்து
மருவுநண்பகலிற்பரிதியைநோக்கிநவின்றுபுன்மாலையம்பொழுதில்
விரிகதிருடுக்கடோன்றிடுகாறும்விறையொடுமௌனமாயிருந்து
திரிதருபுலன்களடக்கிஎர்செபிக்கிற்செங்கதிருலகிடைச்சேர்வார். (கஅ)

மைந்துடைக்கொமந்தேகாசுரர்த்தெறுவான்மாலையுங்காலையும்பகலு
மந்தணருதவுமருக்கியப்புனலையாதவனினிதுவந்தருள்வான்
முந்துசீர்க்காயத்திரியினுற்காலமும்முறையருக்கியம்புரித
னந்தலில்சிறப்பாருலகமோர்மூன்றுந்தானமாய்நல்குதல்பொருவும். ()

அறிவருங்காயத்திரிதனக்கிணையாயறைவதொன்றில்லையாங்கதுபோ
னிறைபுனல்வளங்கூர்காசியம்பதிக்குநிகர்தருபதியுமாங்குறையு
மிறைவனைநிகர்க்குங்கடவுளுமிலையாலியம்புகாயத்திரியெழுதா
மறையொடுங்கமலமலரினுன்முகற்குமீன்றதர்யெனவகுத்துரைப்பார். ()

தெரிவருந்தவத்துக்கோசிகன்காயத்திரிதனைச்செபித்ததாலன்றோ[தான்
வருமறைப்பிரமவிருடியாய்ப்படைக்கு மருந்தொழிற்கொருவனுயமர்ந்
பரவுநான்மறையுமறுவகைநூலும்பயின்றுளானந்தணனல்லன்
பொருவில்சீர்க்காயத்திரிதனைவிதியிற்புகன்றுளானந்தணனுவான். (உக)

கருதருஞ்சுடருமலரினுன்முகனுங்கருங்கடல்வண்ணனுமறையுந்
தெரிதருகாயத்திரியெனப்புகல்வர்மறைகளுமங்கனஞ்செப்பும்
பரிசினுற்காயத்திரிக்குமோள்ளொளியபரிதிவானவற்குமெஞ்ஞான்றும்
பொருவிலாவாச்சியவாசகபாவசம்பந்தமுண்டெனப்புகல்வர் (உஉ)

சிறந்தபல்லுயிர்க்குமெண்பெருந்திசைக்கும்வியாபியாஞ்செங்கதிர்ச்செல்வன், பிறந்ததும்பிறவாதிருப்பதும்பிறக்கப்படுவதும்பேசிலாங்கவனே, யறிந்துணர்காயத்திரிதனையோதியலர்கதிர்ச்செல்வனையன்பா, னறுந்துணர்தூவிக்கைதொழுமவரேநண்ணுமிப்பதியில்வீற்றிருப்பார்(௨௩)

அருக்கபூசத்திலருக்கமூலத்திலருக்கவத்தத்திலுத்திரத்திற்
றிருக்கிளரருக்கவாரமென்பதனிற்செழுஞ்சுடர்ப்பரிதிவானவனைக்
கருத்துறநினைத்துமெய்ம்மயிர்பொடிப்பக்கைதொழுதிருகணீர்வார
மருக்கிளர்மலர்தூயிறைஞ்சுநர்தமதுமனத்தினில்விழைந்தனபெறுவார்.

பூசமாதத்திலருக்கவாரத்திற்புலரியினீரிடைப்படிந்து
மாசறுதானமோமநற்செபங்கண்மனமகிழ்சிறப்பவாங்கியற்றிப்
பேசருங்காமக்குரோதம்விட்டருளாற்பிறங்குசெங்கதிரவற்றொழுவோ
ரேசலில்வனப்பிலரம்பையர்மருவவிரவிநன்பதத்தில்வீற்றிருப்பார். ()

மருவியவயனத்தருமறைகூறுமந்திரம்புகன்றுதென்புலத்தோர்க்குரியநற்கடன்கள்கழித்துளோர்நறுநெய்யுடன்றிலவோமங்கள் புரிந்தோர், பரிவொடுகடவுட்பராயிஞேர்விளங்குபரிதிபோன்றிலங்குருவெடுத்துப்,பெருகுநோய்துன்பமூப்பிவையொழிந்துபிறங்குமிப்பதத்தினிலுறைவார். (௨௬)

மேயநல்லயனத்தெறிபுனல்படிந்துவேதியர்க்கரும்பொருள்வழங்கார்
வாயில்கடோறுமில்லெனவிரந்துமறுகுவர்வாளெயிற்றரவஞ்
சேயொளிவிரிக்கும்பரிதியைத்தீண்டுகாலையிற்றிலத்தொடும்பொருளைப்
பாய்புனற்குருக்கேத்திரந்தனிற்றானம்பண்ணினரிப்பதம்பெறுவார். ()

இரவியையராத்தீண்டெல்லையிலெறிநீர்யானையுங்கங்கையைநிகர்க்கு
மருமறைக்கிழவரியாருநான்முகனைப்பொருவுவரரும்பொருளவையும்
விரிசுடர்ப்பைம்பொன்போலுமவ்வேலைவீங்குநீராடுதலோமம்
புரிதனற்றானம்வழங்குதலிரவிபதத்தினிற்பொருந்துகாரணமாம். ()

ஆயிரங்கதிரோனெனும்பெயர்முதலாவலர்கதிர்ப்பரிதியீருகத்
தூயநான்மறையுமியம்பியவெழுபானுமமும்விதிமுறைதுதித்து
மேயபேரன்பாற்கொழுமலர்தூவிவிரைமலர்ச்சேவடிதொழுவார்
பாயிருள்பருகியுலகெலாம்விளக்கும்பகலவன்பதத்தில்வீற்றிருப்பார்.()

செம்பின்வள்ளத்திற்றண்புனனிறைத்துச் செய்யசாந்தறுகுவெள்ளரிசி, வம்பவிழலரிப்போதுதூய்முழந்தாண்மண்ணிடையூன்றிமுன்னுரைத்த, வைம்பதோடிருபானுமமுமோதியாங்கதுசென்னிமாட்டேந்தித், தம்பொறியடக்கியருக்கியங்கொடுப்போர்தயங்குமிப்பதத்தினிற்சார்வார். (௩௦)

மன்னுபேரொளிகட்குறையுளாம்பரிதிவானவன்பெருமையைய யாரே, மின்னதென்றெடுத்துமொழிகுவரெம்மாலியன்றனமொழிந்தனமெ ன்னுத், தன்னமர்கணங்கண்மொழிதல்கேட்டன்னோர்தம்மொடுவிழை விறுங்கைகன்று, சென்னெறியதனிற்புரந்தரனுறையுமுலகுகண்டுளமகி ழ்சிறந்தான். (௩௧)

ஒன்பதாவது சிவசன்மாசூரியலோகங்கண்ட அத்தியாயம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௩௦.

---

பத்தாவது.

சிவசன்மாதெய்வலோகங்கண்ட அத்தியாயம்.

காண்டலோடும்விழிகள்களிப்புற
வீண்டுதோன்றுமுலகமியாதென
மாண்டநற்றவன்கேட்டிடவான்றொட
நீண்டமாயன்கணங்கணிகழ்த்துமால். (௧)

கனைத்துவண்டுஞ்சுரும்புங்கனலிய
நனைப்பொலந்தருநண்ணிவ்வுலகினை
நினைப்பருந்தவப்பேற்றினிலைபெற
மனத்தினுல்வகுத்தான்மயனென்பவே. (௨)

மன்பெருந்தருமாணிழைநல்கலாற்
பொன்செய்கொல்லருமில்லைபுதியவா
யன்பிற்றுய்ப்பனவாணினநல்கலா
லின்பவுண்டியடுநருமில்லையால். (௩)

அண்ணல்யானையடலயிராவத
மண்ணுசெய்யமணிகள்சிந்தாமணி
யுண்ணுமுண்டியமிர்தமுயர்பொழில்
கண்ணகன்சினைக்கற்பகச்சோலையே. (௪)

வாமமேகலையாரரமங்கையர்
தாமவீதிகள்யாவுந்தமனியஞ்
சேமநற்குடியாவையுந்தேவர்கள்
காமதேனுக்கறவைகளென்பவே. (௫)

கருமணித்தொகைகள்ளிருள்காட்டலும்
விரிபசும்பொனிளவெயில்வீசலு

மருவலன்றிவுளங்கெழுமாநகர்க்
கிரவுமில்லைபகலுமிங்கில்லையால். (௬)

திருவநீணகர்காக்குந்திறலினேன்
மருவுமேழ்திசைப்பாலர்மணிமுடி
பொருதுசேர்ந்துவெயிற்கதிர்பூத்தொளி
ரெரிமணிக்கழலிந்திரனென்பவே. (௭)

புரவிமாமகநூறுபுரிந்துளோர்
கருநெடுங்கட்புலோமிசைகண்கவர்
வருமுலைத்தடம்புல்லியிம்மாநகர்க்
கரசராகவிங்கிருந்தாள்வரால். (௮)

ஆன்றவேதமறைதருமுப்பத்து
மூன்றுகோடியமரர்முறைமுறை
சான்றகேள்விச்சதமகன்பூங்கழல்
வான்றுணைப்பதம்போற்றிவணங்குவார். (௯)

வெருவலின்றிமருமத்துவேனுழைந்
துருவநாட்பினுயிர்விடுமன்னவ
ரருமகம்புரிவிப்பவராற்றுந
ரெரிசெய்பொன்னிலத்திங்கணெய்துவார். (௧0)

துலங்குசெம்பொற்றுலைபுகுமன்னவ
ரலங்குளைப்பரிநன்மகமாற்றுந
ரிலங்குபைம்பொனளப்பிலவீந்துளோர்
நலங்கொளிவ்வுலகத்திடைநண்ணுவார். (௧௧)

தவமிழைத்துந்தனிமகமாற்றியும்
புவிகளேழும்புரந்திடும்வேந்தரு
மவுனசித்தரரக்கரியக்கர்மற்
றெவருமிங்கணெய்தவிரும்புவார். (௧௨)

எனவிளம்புதல்கேட்டியுன்மாதவன்
றனைவிலேகுநெறியினோர்தொன்னகர்
முனம்விளங்கியதியாதுமொழிகென
வினவலுங்கணநாதர்விளம்புவார். (௧௩)

ஈதுபாவகலோகமெரிபுகு
மாதர்வேள்விகளாற்றுமறையவர்
சீதந்தீர்ப்பனகல்குந்திறத்தினே
ராதரத்திவ்வுலகினடைவரால். (௧௪)

விண்ணுளோருமிவனுகர்மிச்சிலே
யுண்ணவேண்டுவரொண்பிறைக்கண்ணியன்
கண்ணுமீங்கிவனின்னகடவுளே
யெண்ணுருதவர்பாழ்நரகெய்துவார். (கரு)

இந்தவெந்தழற்செல்வனுக்கீன்றது
டந்தையாரெத்தவமுயன்றிப்பதம்
வந்தடைந்தனன்கூறுமின்மற்றென
வந்தணாளனுக்காங்கவர்கூறுவார். (கசு)

கொன்றைவேணிக்குழகனுக்கன்பினன்
மன்றநற்றவமாற்றிவரும்புலன்
வென்றுநோற்றபுகழ்விசுவாநர
னென்றுளானொருபிறப்பாளனே. (கஎ)

பெருமைசான்றபிரமசரியத்தின்
மருவுநாளின்மறைபயிலந்தண
னரிதினுற்றுறுமாச்சிரமங்களி
னூரியதியாதெனவுள்ளத்திலெண்ணினான். (கஅ)

இறந்துளோர்க்குமிரவலர்க்குந்தனி
துறந்துளோர்கட்குந்துப்புரவீதலா
லறந்தவாதுயரில்லறமாற்றுதல்
சிறந்ததென்னவினிதுளங்தேறினான் (ககூ)

ஏசலன்றியியம்பியநாள்களின்
மாசில்கற்பின்மனையவட்சேர்ந்திடல்
பேசுகின்றபிரமசரியமென்
றூசில்வேதங்களியாவுமறையுமால். (உ0)

இல்லறத்தினியைந்துங்கிளையொடும்
புல்லிப்பாத்துணனீத்தவர்பூந்திரை
மல்குநீர்படியாதவர்மாண்பொரு
ணல்கிடாரிவரோநரகெய்துவார் (உக)

அரியபூம்புனலாடியநாண்முதன்
மருவுபன்னிருநாளுமணந்திட
லொருவனிற்பிழையாமலொழுகுதல்
பெருமைசான்றபிரமசரியமே. (உஉ)

தனதில்லாளொடுமுத்தழல்வேள்விசெய்
தினிதினல்லறமாற்றியிருப்புழிவேல்

மனைவியோடும்வனத்திடைவைகிய
புனிதர்தம்மிற்புகழினனுவனுல். (௨௩)

புல்லுகானிற்பொருந்தியில்வாழ்க்கையின்
மல்குசெல்வமனத்திடையெண்ணினே
னில்லறத்தினிருந்துதவஞ்செய்வோ
னல்லன்வானப்பிரத்தனுமல்லனுல். (௨௪)

பெற்றவைகொண்டருந்திப்பெறுதன
மற்றியாவுமனத்தில்விழைந்திடா
திற்றிறம்பிலராகியிருக்குநர்
முற்றுநீத்தவர்தம்முளுமுந்தினோர். (௨௫)

அனைத்துநீத்தவராகியுமொன்றினை
மனத்தினுல்விழைந்தோர்மனைவாழ்குந
ரெனைத்துணைவளித்தாலுமற்றின்புறார்
நினைப்பருந்தவநீத்தபதிதரே. (௨௬)

இல்லறத்தினுயர்ந்ததொன்றில்லெனத்
தொல்லைநான்மறையாளன்றுணிவுறு
முல்லைமூரன்முகின்முலைக்கொவ்வைவாய்
வல்லிதன்னைமணம்புரிந்தானரோ. (௨௭)

மனையறந்திறம்பாதுமறையவன்
புனைசெய்மேகலையோடும்பொருந்துநாட்
கனையிருட்குழற்கற்புடைக்காதலி
முனைவகேட்டியெனமொழிவாளரோ. (௨௮)

அடிகணின்னருளெய்தியடியனே
னொடிவில்செல்வமுலப்பிலபெற்றனன்
வடவரைச்சிலையானன்னமைந்தனைக்
கடிதினல்கெனக்கைதொழுதேத்தினள். (௨௯)

அரனையன்னமகவையளித்தியென்
றுருவமேகலையாளிங்குரைத்தது
கருதியின்னவள்சொல்லன்றுகண்ணுதற்
றிருவுளச்செயலாமென்றுதேறினன். (௩௦)

மையகண்ணிமகவளிப்பேனுனத்
தையமெய்தலென்றுற்றியருந்தவஞ்
செய்யவெண்ணித்திரைபொருகங்கைசூழ்
வெய்யில்காசியிற்போயடைந்தானரோ. (௩௧)

மாசிலாதமணிகன்னிகைப்புன
லாசில்வேதியனுடிமுத்தாபமு
தேசினீக்கித்திருவளர்காசிவா
ழீசர்யாரையுமேத்தியிறைஞ்சினன். (கரு)

உடைதிரைப்புனற்றீர்த்தங்களொன்றற
வடைவினுடியருமறைவேதியன்
மிடையுமீசரில்யாவர்விளைழந்தன
கடிதினல்குவவொன்றுகருதினன். (கசு)

வேறு.

காசிநகரினிதுறையுமோங்காரவிலிங்கமுதற்கருணைகூறு
மாசறுமித்திராவருணவிலிங்கமீறுகவருமறைகளுன்கும்
பேசுபுகழிலிங்கத்தில்வீரேசனன்றிமிகப்பேறுநல்கு
மீசனெவனெனநினையாவுளமுருகிவிழிபனிப்பவிறைஞ்சிநின்றான். (கஎ)

அத்தலையில்வீரேசன்றிருமுன்னரமர்சத்திபீடந்தன்னில் [ர்
வித்தகஞ்சேர்பிரகடையொடுவிகடையெனுமணங்குறையுமதனின்பாங்க
சித்திவிநாயகனுறையுமீங்கிவரையெஞ்ஞான்றுஞ்சிந்தைசெய்வோர்
முத்தியினிதடைவரெனமுழுதுணர்ந்தமாதவத்தோர்மொழிந்தாரன்றே.

பஞ்சசுரனேழ்புவியும்புரக்கும்வசுபூரணனும்பழிப்பில்வேந்த
னஞ்சலிசெய்தருள்கொழிக்கும்வீரேசனடியிணையிலடைந்தார்செய்ய[ல்
க்ஞ்சமுகைகவற்றுமுலைக்கோதிலாவரம்பையெனுங கனிவாய்த்தீஞ்சொ
வஞ்சியரமகளாடல்புரிந்தவல்றவ்சேவடியின்மருவினளே. (கசு)

விரிகதிர்சூழ்பிறைமௌலிவேள்விபுரிதருபரத்துவாசன்மிக்க
வருமறைதேர்வேதசிரசெனுந்தவத்துமறைமுனிவனன்பினேடும்
பொருவிலுருத்திரசமகம்விதிமுறையினேதிநறும்புனலினுடி
யுருவினெடும்வீரேசன்றிருவுருவினென்றாகவுறைதல்செய்தார். (கஎ)

இன்னரமாதொருத்திதனதுயிர்க்குயிராயினிதுறையுங்கேள்வனேடு
மின்னிசையாழ்பயின்றீசன்சரணடைந்தாளெழிற்சங்கசூடனென்னும்
பன்னகவேந்தொளிகெழுதன்பணுமணிநீராஞ்சனஞ்செய் பரிசுதன்னுற்
றுன்னரிதாயணித்தாகும்பேரின்பக்கடல்படிந்துதுளைந்தானன்றே. ()

சிலைத்தடந்தோட்சயித்திரதன்வீரேசன்சேவடியிற் சிந்தைசேர்த்தி
நிலக்கிழமையனைத்துமுனமெய்தினன்விரதனுநகரில்வேந்து
மிலக்கமில்சீர்வசுதத்தனெனும்வணிகர்க்கிறைவனுமிவ்விறைவன்செய்ய
மலர்க்கமலத்தாள்வணங்கிவானவரும்பெறலரியமகப்பெற்றால். (கக)

ஆதலினிவ்வீரேசனடிபோற்றியருமகப்பேறடைகவென்று
வேதமறுமதிக்கூவப்புனலாடியைம்புலனுமிகலைநூறிக்
காதலெனுங்காமமுதன்முக்குறும்புமெறிந்துளத்துக்கவலைநீங்கி
வேதமுறைதெரிந்தருளும்விச்சுவாநரனரியவிரதம்பூண்டான். (௪0)

ஓர்திங்களோர்பகலுண்டோர்திங்களிரவருந்தியொருவாநல்கி
யோர்திங்களயின்றுமற்றையோர்திங்களெவ்வுணவுமொழிந்துதீம்பா [டி
லோர்திங்கள்குடித்தடைக்காயோர்திங்களருந்தியெள்ளி னுறுநுண்பிண்
யோர்திங்களுகர்ந்துபின்னரோர்திங்கள்பரிவினொடுமுறுநீர்மாந்தி.(௪௧)

ஓர்திங்களானுதவுமைந்தினையும்புனிதமாயுவந்துமாந்தி
யோர்திங்கள்சாந்திராயணம்புரிந்துதருப்பைநுனியொழுகுதெண்ணீ
ரோர்திங்கள்பருகிமற்றையோர்திங்கள்வளியருந்தியுடலம்வாட்டிப்
பாரெங்குமதிசயிப்பப்பன்னிருதிங்களுந்தவத்திற்பயின்றானன்றே. ()

திங்களொருபன்னிரண்டுங்கழிப்பமர்றைத்திங்கடனிற்றிரைகுலாய
கங்கைநறும்புனலாடிவீரேசனடிபரவுங்கருத்தினோடு
மங்குலுறுமவ்விலிங்கத்தாண்டிருநான்கமைந்துவளர்செவ்வியோடுந்
துங்கநெடுஞ்சடாமௌலித்தாபதன்போலொருருவுதோன்றக்கண்டான்.

வெண்ணீறுபுனைவடிவுமருமறைகண்மழலையுறமிழற்றுவாயு
முண்ணீர்மைதிரிந்துருகக்காதளவுமோடியருளொழுகுகண்ணுந் [ருங்
தெணணீர்முத்தெனவொளிருங்குறுநகையுஞ்சிறுசதங்கைச்சிலம்புந்தா
கண்ணீர்நுண்டுளிசோரமயிர்பொடிப்பவிதயமலர்களிப்பக்கண்டான். ()

அருவுருவாயேகமாய்க்குணங்குறிகளெவையுமின்றியசலமாகி
நிருமலமாயெவ்வுயிர்க்குமுயிராகிச்சுடரொளியாய்நித்தமாகிக்
கருதரியவானந்தக்கடலாகிமெய்ஞ்ஞானக்கனியாய்நின்ற
வரதநினதடிக்கமலமனத்திருத்திக்கொழுமலர் தூய்வழுத்தல்செய்வாம்.

இலகொளியகதிரொன்றாயிரம்புனல்பெய்குடங்கடொறுமியைந்துநாளு
மலகில்பலவுருவாகித்தோன்றுதல்போற்சராசரங்களனைத்துமாகி
யுலகமுழுவதற்குமொருதனிக்கடவுளாகியுலகளந்தமாலு
மலரயனுமறியாதுநின்றநின்றன்சேவடிகள்வணங்குவாமே. (௪௬)

கானலிடைத்தெண்ணீருங்கயிற்றினில்வாளரவுமலைகடலிற்பட்ட
கூன்முதுகிப்பியிற்றோன்றுவெள்ளியுமம்முதலுண்மைகுறிக்கிற்றீரு
மானவைபோனினையறியிற்றோன்றுசகமனைத்துநில்லாதழியுமாற்றாற்
றேனவிழ்பூங்கடுக்கையணிசெல்வநினதறைகழற்றாள்சென்னிசேர்ப்பாம்

நீரினிடைத்தண்மையுஞ் செந்நெருப்பினிடைவெம்மையும்வெண்
ணிலவுத்திங்கள், சேர்தருதட்பமுமிலகுசெஞ்ஞாயிற்றலிழற்சியுந்தீம்பா

னெய்யு, மீர்ம்மலரினறுமணமுமென்னலாயுலகமெலாமிருக்குமெந்தை,
வார்கழற்சேவடிக்கமலமறவொழுகுமலர்தூவிவணங்கல்செய்வாம்.(௪௮)

நோக்கின்றிக்கண்டுநெனிகையின்றிக்கொடுத்துமறைநுவல்வதாய
நாக்கின்றியறுசுவையுமினிதுணர்ந்துங்காலின்றிநடத்தல்செய்து
மூக்கின்றிமணங்கவர்ந்துஞ்செவியின்றிக்கேட்டுமறைமுதல்வரியார்க்கும்
வாக்கன்றிமனத்தினுக்குமெட்டாமென்றாமரைத்தாள்வணங்கல்செய்வாம்.

வண்டுழாய்ப்பசுந்தெரியன்மாயவனுநான்முகனும்வானுளோரும மண்டர்நாயகனுமறைமுனிவர்களு மறிவரிதாயன்புமுற்றும், தொண்டரானவர்க்கெளிதாய்த்தோன்றுதனிச்சுடர்க்கொழுந்தேசுருதியென்னும், பண்டைநான்முடிவிலுறைபராபரமின்னடிக்கமலம் பணிதல்செய்வாம்.

குலங்குடிகோத்திரமின்றிப்பிறப்பிறப்புப்பெயர்வண்ணங்குணமுமின்றி, யிலங்கொளியவெறுவெளியாயிருந்துகெடுநீருலகம்யாவும்வேட்ட, நலங்கொள்பொருளனைத்தினையுநல்குதலானவிர்மதிச்செஞ்சடையோய்மற்றுன், பொலன்கழற்றாமரைமலரென்புன்றலையின்மிசைசூட்டிப்போற்றுவேனல் (௫௧)

முதியவனீகாளையுநீமுதுக்குறைவிற்பாலனுநீமுளரிவாட்டு [ங்
மதிபுரையும்வாண்முகத்துமலைமடந்தைகொழுநனுநீவானோர்போற்று
கதழெரிகான்மூவிலைவேற்கங்காளநாதனுநீயாதலாலுன் [ம்
பொதியவிழ்தாமரையனையபூங்கழல்களெஞ்ஞான்றும்போற்றல்செய்வா

என்றினையதுதிகூறியிறைஞ்சுதலுமாங்கவனையெழுகவென்று, நன்றுதுதிமகிழ்ந்தனனீவிழைந்தனல்குவன்விரைவினவிறியென்ன,மன்றவுயிர்க்குயிராயவரதனினக்கறிவரிதாய்மற்றொன்றுண்டோ, புன்மொழிலேன்றனைகேட்டதென்னையெனமறைமுதல்வன்புகல்வன்மாதோ.௫௩

மின்போலுநுடங்கிடைநின் மனைக்கிழத்தியவள்வயிற்றின் விண்ணோர்போற்ற, வென்போலுமொருபுதல்வன்கிரகபதியெனும்பெயரினியைவனன்ப, முன்போல்யாரித்துதிப்பேருவகைபுரியட்டகமீதுலகினுளருமன்போடுந்துதித்திறைஞ்சில்வந்தியருமருமகப்பேறடைவர்மாதோ. ()

என்னமொழிந்தருந்தவத்தோன் வேட்டவரமுவந்தருளியிலிங்கமாப்பண், டுன்னுமிறைமறைந்திடலுஞ் சூழ்புலன்வென்றிருவினையுந் தொலைத்துநீங்கா, மன்னியவாணவமுதலமலமூன்றின்வேரகழ்ந்தமறைவலாளன், றன்னமர்காதலியுறையுமனையகத்தின்மகிழ்வினொடுஞ்சார்ந்தானன்றே. (௫௫)

பத்தாவது சிவசன்மாதெய்வலோகங்கண்ட அத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்- ௩௮௫.



## பதினொன்றாவது.

## சிவசன்மா அக்கினிலோகங்கண்ட அத்தியாயம்.



தொழுதகுதவத்தின்மிக்கதொன்மறையந்தணாளன்
விழைவொடுமறங்களாற்றிமேதகவொழுகுநாளி
லெழில்கனிந்தொழுகச்செம்மாந்தெழுமுலையறன்மென்கூந்தற்
கழையுறழ்தோளினாட்குக்கருப்பம்வந்துற்றதன்றே. (க)

அலர்முலையம்மெல்லோதியரிமதர்நெடுங்கட்செவ்வாய்
விலகிவில்லுமிழும்பூணாள்வியாழகேந்திரத்திற்றூய
நலனுறுமோரைதன்னினண்மலர்மாரிசிந்த
வுலகெலாமுவகைபொங்கவொருமகவுயிர்த்தாளன்றே. (உ)

பொன்மழைபொழிந்தவானம்பூநறுஞ்சுண்ணஞ்சிந்தித்
தென்வளையுயிர்த்ததென்றற்றிசைதொறுந்தவழ்ந்ததொல்கி
மின்னுறழ்மருங்குநோவவிஞ்சையர்மகளிராடக்
கின்னரமிதுனமியாவுங்கிளர்நரம்புளர்ந்தவன்றே. (ங)

அத்திரிமரிசிகார்க்கனங்கிராவசிட்டன்சன்னு
முத்தழல்வேள்வியாற்றுமுற்கலன்சிலாதன்சங்க
னுத்துங்கன்வியாதன்வாச்சனுரோமசன்பரத்துவாசன்
மெய்த்தவமதங்கன்தக்கன்விபாண்டகன்மிருகசிங்கன். (ச)

காசிபன்சாதுகன்னன்காவலனுபத்தம்பன்
கோசிகன்சீதன்பாங்கன்குர்ச்சன்றேவலனுரீதன்
மாசில்கண்ணுவன்மார்க்கண்டன்வான்மீகன்சாலங்காய
னுசாறுபிருகுசெஞ்சொலகத்தியன்வாமதேவன். (ரு)

நாரதனாதியாயநான்மறைமுனிவர்விண்ணோர்
கார்நிறச்செங்கண்மாயன்கலைமகள்கொழுநனந்தி
போருடைக்குலிசவேந்தன்பொன்புகருரகவேந்தர்
சீர்கெழுமறைவலாளனில்வயிற்சேர்ந்தாரன்றே. (சு)

உரவுநீர்க்கடல்களேழுமொலிகெழுகடவுளாறு
மருவியஞ்சாரற்குன்றுமலர்சினைத்தருக்களியாவு
மருவுதம்முருவமாற்றிமானுடவுருவுதாங்கி
யெரியழற்கடவுடோன்றுமில்வயிற்போந்தமாதோ. (எ)

விதிமுறைசாதகன்மம்வேதியன்சிறுவற்காற்றிப்
பதினொன்றாநாளினில்லின்பதியெனப்பேருஞ்சாத்தி
மதுமடைதிறந்துபாயும்வண்டுழாய்முகுந்தனேடுந்
ததைமலர்க்கமலப்புத்தேடன்னகர்க்கேகினானே. (அ)

தேசினிலுருவின் சனனையவிச்சிறுவற்பெற்ற
மாசறுகடவுட்கற்பின் மடந்தையைமறைவலானை
யாசிகள்கூறியீசனன்பினர்க்கரியதுண்டே
பேசிலென்றியாருந்தத்தம்பெரும்பதியடைந்தார்மன்னோ. (௯)

சிறுவனுக்குறையுநாளிற்றிங்களோர்நான்கிற்செய்ய
மறுகிடைமிதிப்பித்தாறுமதிதனிலவாய்செய்யா
வறையுமோராண்டில்வாய்ந்தமயிர்வினைமுடித்தாண்டைந்தின்
முறையின்முப்புரிநூலிட்டுமுதுமறைபயிற்றுவித்தார். (௧௦)

அறிவுடைக்குரவன்சான்றாய்விஞ்சைகளனைத்துமுற்றி
மறையினுக்கொருவனென்னவான்புகழுலகம்போர்ப்ப
வுறைதருநாளிற்றெய்வமகதியாழிசையினோங்கு
நறைமலர்ப்புத்தேளீன்றநாரதமுனிவன்போந்தான். (௧௧)

ஆயும்யாழ்முனியைப்போற்றியளவளாய்முகமன்கூறி
மேயநல்லிருக்கைநல்கும்விச்சுவாநரனைநோக்கி
மாயிருஞாலம்போற்றுமகவினைப்பயந்தாய்நின்போ
லேயினரியாரேசீர்த்திமகப்பெறூர்க்கின்பமியாதே. (௧௨)

தந்தைதாய்பணித்தல்செய்யுந்தவமலாற்றவம்வேறில்லை
மைந்தருக்கெதிகளேனும்வணங்குவர்தாயைத்தந்தை
யந்தமைந்தனையேபோற்றல்வேண்டுமற்றுதறன்னாற்
சிந்தையுற்றுணரிற்றாயேதந்தையிற்சிறந்தாண்மன்னோ. (௧௩)

எத்திருவுடையரேனுமின்கனிமழலைச்செவ்வாய்ப்
புத்திரனிலாதோரொன்றும்பொறியிலராயவாற்றான்
மெய்த்தவம்புரிந்துமைந்தர்ப்பெறுவதேவிழைவர்யாரு
முய்த்தநன்மகவுமோரேழ்பான்மையாயுரைப்பர்மேலோர். (௧௪)

மனைவிதன்கொழுநற்கீன்றோன்மற்றவனருளினாலே
யனையவளயலாற்கீன்றோனரும்பொருள்கொடுத்துக்கொண்டோ
னினிதுறுதெத்துமைந்தன்மகவெனப்புகுந்தமைந்தன்
றனையைசெய்தன்னுலாவியுய்ந்தவன்றனையராவார் (௧௫)

ஈங்கிவர்முறையிற்றாழ்வொனவெடுத்தியம்பிச்செய்ய
பூங்கழற்குமரன்றன்னைவருகெனப்புகன்றுநோக்கி
யாங்கவனிலக்கணங்களியாவையுமறைவலென்னத்
தூங்கிசைமகதிவீணைநாரதன்சொல்லலுற்றான். (௧௬)

கடிகொள்குங்குமச்சேறாட்டிநூலிறைற்காமனன்னா
னடிமுதன்முடியீறாகதான்முறையளந்துநோக்கி

னெடுமையுங்குறுக்குநூற்றெட்டங்குலமாகினீர்சூழ்
படிமுழுதுலகங்காக்கும்பார்த்திபனுவனின்னேன். (கஎ)

ஐந்துநீண்டைந்துநேர்ந்தேயாறிடமுயர்ந்தேழ்சேர்ந்து
மூந்துமூன்றகன்றுமூன்றுகுறுகிமூன்ருழ்ந்திருக்கு
மந்தமில்குணங்கள்முப்பானிரண்டொடுமமர்ந்தமார்ந்த
ரிந்திரதிருவினேங்கியினிதுவீற்றிருப்பர்மாதோ. (கஅ)

நீண்டிடமைந்துகண்கைகதுப்புநீண்முழந்தாண்மூக்கு
மாண்டுநேர்ந்திருக்குமைந்துமயிர்விரலுகிர்தோல்வெண்ப
லீண்டுயராறுநெற்றிதோள்வயிறிருகைமூலம்
பூண்டுயில்கொள்ளுமார்பம்பொற்புடைப்புறங்கையாமால். (கசு)

ஏழிடஞ்சிவத்தலங்கையிணையடிகடைக்கணண்ணங்
கீழிதழ்நகநாக்காகுங்கிளத்தியவகலமூன்று
தாழ்மருங்ககலநெற்றிகுறுகுமூன்றிடங்கள்சாற்றிற்
சூழ்கபோலம்முழந்தாளிழிததாண்குறியுஞ்சொல்லும். (உ0)

மூன்றிடமாழ்தலுந்திமொழியுடனுற்றலின்ன
வான்றவிச்சிறுவன்றன்பாலமர்ந்தனவன்றியேயுந்
தோன்றருன்மேன்மையாகத்தோன்றலாலங்கைவன்மை
யேன்றியல்பகர்தலாய்மற்றிவனிறையாகுமன்றே. (உக)

சிறுவிரறன்னினின்றுந்தற்சனியளவுந்தீரா
வுறுவரைகிடந்தவாற்ருலொழிவறுமாயுளெய்து
நறுமலர்த்தாளகளொாதறுததசைந்துவேர்வெழாதுநன்கா
யுறுபரடொத்தவாற்ருலுலப்பறுதிருவனுவான். (உஉ)

அங்கையில்வரைகளற்பமாகியுஞ்சிவந்துமேய
சங்கொடுகுலிசநேமிதநுவொளிர்மகரம்போல
விங்கிவன்றன்பால்வாய்ந்தவிலக்கணங்கிடக்கைதன்னுற்
பொங்குயர்வெறுக்கையெய்திப்புரந்தரன்போல்வனன்றே. (உங)

நெற்றியிலேந்துகீற்றுநிலவலால்வலமதாகச்
சுற்றியோர்தாரையாயிர்வீழ்தலாற்றுணைப்பொற்றுளி
துற்றுமேனேக்கிகோகைகிடத்தலாலொழுகுதாதுப்
பொற்புறுகமலவாசம்போன்மடிணக்கமழ்ந்தவாற்ருல். (உச)

கைவிரனீக்கமின்றியிருத்தலாற்கண்கடேன்போற்
செவ்விவாய்ந்திருக்குமாற்ருற்சிங்கத்தின்வயிறுபோல
வவ்வயினமைதறன்னுவரையுளுந்திருவுமல்கி
யெவ்வெலாத்திசையும்போற்றவின்பமுற்றிருப்பன்மாதோ. (உரு)

இலக்கணமுடையனாகுமீங்கிவன்பன்னீராண்டி
னலக்கணுற்றாவிசோரவசனியேறதிர்ந்துவீழும்
விலக்குவதுண்டேனீவிர்விலக்குகவென்றுகூறி
நலத்தகுமகதிவீணைநாரதன்போயினானே. (௨௬)

நாரதன்மொழிந்ததெண்ணிநவையறுபன்னியோடுஞ்
சீர்கெழுமறைவலாளன்றேசழிந்தாவிசோர
வார்பனிநெடுங்கண்போர்ப்பமற்றினியென்செய்வோமென்
றேர்கெழுகுமரற்புல்லியிடைவிடாதரற்றுகின்றான். (௨௭)

ஆற்றருந்தவங்களியாவுமாற்றியுமளப்பில்கால
நோற்றுநற்றானமெய்திநுவலருமறையால்விண்ணோர்ப்
போற்றியுந்தமியேனீன்றபுதல்வனைப்பயந்ததெல்லாங்
கூற்றினுக்குணவாய்வாளாக்கொடுப்பவோவென்றுநைந்தான். (௨௮)

பொறியிலாக்கொடியேற்கென்னோபுதல்வனையளித்தானெந்தை
யறநெறிதிறம்புகின்றேற்கருமகவிருக்குங்கொல்லோ
மறுகுபுன்னரகினின்றுமற்றினியெடுப்பாரியாரென்
றுறுதுயர்க்கடலின்வீழ்ந்துகரைபெறாதுழல்கின்றானே. (௨௯)

மாலயன்முதலோருய்யமறிகடலகட்டிற்றோன்று
மாலமுண்டிருண்டகண்டத்தமலவென்றுரைப்போர்தம்பாற்
காலன்வந்தணுகான்காலகாலனீயளித்தவிந்தப்
பாலனையளித்தல்வேண்டுமென்றுயிர்பதைத்துச்சோர்ந்தான். (௩0)

தந்தைதாய்வருந்தநோக்கித்தளர்ந்திடறவிர்கமுக்க
ணெந்தைசீரடியார்தம்பாலெய்திடாவெரிகட்பேழ்வாய்
வெந்திறற்கூற்றுமஞ்சுமசனியோவீழுமெண்டோ
ளந்தணன்மலர்த்தாள்போற்றியாங்கதுதடுப்பேனென்றான். (௩௧)

ஆங்கதுகேட்டலோடுமையநல்குரைத்தாய்தண்ணந்
தீங்கதிர்க்குழவித்திங்கட்கண்ணியன்செய்திகேட்டி
பூங்கழல்வழுத்துகின்றபாலற்காய்ப்புகைகுலாய
வோங்கழற்றறுகட்கூற்றையுதைத்துயிரளித்தானன்றே. (௩௨)

ஆசறுசுவேதகேதுவாருயிருய்யக்கூற்றின்
பாசமதொழித்துக்காத்தான்சிலாதன்மெய்ப்பாலனாவி
நாசமதுறாமற்பற்றுநமனையாங்கடர்த்தான்விண்ணோர்
வாசவனாவியுய்யமறிகடனஞ்சமுண்டான். (௩௩)

நிலந்தலைமயங்காவண்ணநெறியலாநெறிமேற்கொண்ட
சலந்தரனாவியுண்ணத்தாளினானேமியுய்த்தா,

னலந்தலைவிளைக்கும்வெய்யவந்தகாசுரன்றன்வாளு
ளுலந்திடவளப்பில்காலம்வெயில்டையுலர்த்தினனே. (௩௪)

வடவரைவில்லதாகவாசுகிநாணியேற்றிக்
கடனிறவண்ணனம்பாக்கதழெரிநுதியதாக
வடயலர்புரந்தீயூட்டுமழனிறக்கடவுட்போற்றி
யிடிவரல்விலக்குகெம்ணவேத்தினன்விடைகொண்டானே. (௩(

களங்கனியனையமேனிக்கண்ணனுங்கமலத்தோனு
மளந்தறிவரியதாகுங்காசியிலடைந்துபின்னர்த்
துளங்குநீர்க்கங்கைகளூழ்கித்தூமதிகண்ணியானை
யுளங்கனிந்துருகப்போற்றியுவப்பொடும்வழிப்பட்டானே. (௩௬)

முத்திவான்றருவின்பழுநிர்ந்தநற்கனியோதூய
சித்திநன்மூலையோமுத்திந்திருமகளோந்தும்பந்தோ
மெய்த்தவரிதயநீக்காவெறுவெளிச்சுடரதேயோ
வித்தலையெய்தியார்க்குமருள்புரியிலிங்கமாதோ. (௩௭)

இவ்வரிசைக்கிழவன்முன்னரியம்பியநெறியாலீசன்
பொன்னடிபரவப்பெற்றேமொன்றுளமுவகைபூப்பத்
தன்னுடைப்பெயராலாங்கோரிலிங்கந்தாபித்தியார்க்கு
முன்னரும்விரதமொன்றுமுறைபிறழாதுநோற்றான். (௩௮)

குடங்கணூற்றெட்டிற்கங்கைக்குளிர்புனலேந்தியம்பி
னுடன்றிலங்தோறுந்தெய்வவுருத்திரசமகந்தாட்டித்
தடந்திகழ்குவளையோராயிரத்திருநான்குசாத்தி
யடங்கலர்புரந்தீயூட்டுமண்ணலைவழிபட்டானே. (௩௯)

மென்பழனுறுதிங்கள்வீழ்சருகாறுதிங்க
ளின்புனலாறுதிங்களெறிவளியாறுதிங்க
ளன்புடனருந்தியீராண்டருந்தவமிழைத்தபின்னர்
மின்பயிலசனியேறுவீழ்நாளடைந்ததன்றே. (௪0)

அவ்வழிச்சிறுவன்முன்னரகலிருவிசும்புகாக்குந்
தெய்வதவயிரவொள்வாட்புரந்தரன்வந்துசேர்ந்து
வெவ்வினையறநீயாற்றுந்தவத்தினைவியந்தேன்மைந்த
வெவ்வரங்கேட்டியேனுந்தருகுவனியம்புகென்றான். (௪௧)

மணிநிறவண்ணன்செங்கேழ்மலரயன்முதலினோரை
யணுவளவேனுமுள்ளத்துணர்கிலேனமலனன்பர்
துணிவுறினவர்கட்கெய்தாப்பொருளைவைசொல்லினன்னோர்
பணிதலைக்கொள்ளுநீயோவளிக்குவவைபகர்தியென்றான். (௪௨)

அந்தணன்சிறுவன்கூறக்கேட்டலுமழலுநெஞ்சத்
திந்திரன்சினமீக்கூரவென்னினும்வலியன்கொல்லோ
சந்திரமௌலிபேதைமதியினைத்தவிர்த்திதாழா
துய்ந்திடவரங்கள்கேட்டியெனவவனுரைக்கலுற்றான். (௪௩)

நள்ளிருட்கங்குற்போதிலகலிகைநலனுண்டேருங்
கள்வநின்வெளிற்றுநெஞ்சம்பிறழ்ந்தவைகழறவேண்டாம்
வள்ளிலைச்சூலமேந்தியிடத்தலால்வரங்களம்ம
கொள்வனோபிறந்துஞ்செத்துங்குலவியவமரர்தம்பால் (௪௪)

என்னலுங்கனன்றுசீறியிருவிசும்பளிக்குமேலோன்
மின்னகுவயிரவொள்வாளுருமுகவிதிர்த்தலோடு
மன்னதுநோக்கிமைந்தனயர்தலுமமலன்றோன்றித்
தன்னமர்கையான்மேனிதைவந்துதளரலென்றான். (௪௫)

அயிலெயிற்றரவமார்த்தோனங்கையினீவப்பெற்றுத்
துயிலுணர்ந்தெழுந்தான்போலவெழுந்துறுதுயரநீங்கி
முயலறுதிங்கட்கண்ணிமுதல்வனைக்கண்ணிற்காணூஉ
மயிருடல்பொடிப்பக்கண்ணீர்வார்தரமகிழ்ச்சிகூர்ந்தான். (௪௬)

திருநகைசிறியகோட்டிச்சிறுவன்வாண்முகத்தைநோக்கி
வெருவினைபோலுமறறுனுளத்தினைத்தெரியவேண்டி
யுருமுவீழ்குலிசமேந்தியுற்றவனியானேபாரி
லிருவிசும்பினிலென்னன்பர்க்கியாரிடரியற்றுவாரே. (௪௭)

இந்திரன்பதிக்கும்வெய்யயமனுறைபதிக்குநாப்பண்
வெந்தழற்கடவுளாகியினிதுவீற்றிருத்தியென்னச்
சுந்தரப்பைம்பொன்மௌலிவிண்ணவர்வணங்கச்சூட்டித்
தந்தைதாயோடுமாங்குச்சார்கெனவருளினானே. (௪௮)

இங்குநீயமைத்துப்போற்றுமிலிங்கமென்றுஞ்வெய்ய
பொங்கழற்கடவுளென்னுநாமத்திற்பொலிவதாக
வங்கதுவழுத்தினோர்மேலசனிவீழாதென்றோதி
மங்கையோர்பாகன்றாயவிலிங்கத்தின்மறைந்திட்டானே. (௪௯)

ஆரழற்கடவுடன்மைபீதெனவறிதியின்னுஞ்
சீர்பெறவறியற்பாலதெரித்துநீகேட்டியென்னுக்
காருறழ்மேனியான்றன்கணமெடுத்தியம்பலோடும்
பார்புகழ்சிவசன்மாவும்பரிவொடும்பகர்தலுற்றான். (௫0)

௧௧-வது சிவசன்மா அக்கினிலோகங்கண்ட அத்தியாயம்-முற்றிற்று.

திருவிருத்தம் ௪௯0.

பன்னிரண்டாவது

# சிவசன்மா நிருதியுலகமும்வருணனுலகமுங்கண்ட

## அத்தியாயம்.

எரியின்றன்மையியம்பினிரீங்கினி
நிருதிதன்மைபுகழ்த்திடவேண்டுமென்
றரியநான்மறையந்தணன்கூறலுங்
கரியமாயன்கணங்களியம்புமால். (க)

இழிகுலத்துமியைந்துமறநெறி
வழுவலின்றிமறைதிறம்பாதுயர்
தொழுகுலத்தவர்தாண்மலர்சூடுவோர்
விழையுமிவ்வுலகத்திடைமேவுவார். (உ)

அரக்கரென்பதையல்லதுமற்றவ
ரிரக்கந்தம்முயிரென்னவுயிரெலாம்
புரக்குந்தன்மைபொறைநிறைவாய்மையா
லுரைக்கும்வானவர்தம்மிலுயர்ந்துளார். (ந)

நண்ணுமித்திசைநாளும்புரந்தரு
ளண்ணல்செய்தியமறருவங்கேட்டியால்
விண்ணினோங்குயர்விந்தப்பொருப்பய
லெண்ணில்வேடரிருக்கையொன்றுண்டரோ. (ச)

இங்குமேவியவேடர்க்கிறைவனும்
பிங்கலாக்கனருமதைப்பேரியாற்
றங்கரைக்கணிருந்ததரேகுநர்
தங்களுக்குகிடர்தீர்க்குந்தகைமையோன். (ரு)

கடவுட்கங்கைசூழ்காசியினேகுநர்க்
கடிசில்வைகுமிருக்கையரும்பொருள்
குடைசெருப்புக்கொடுத்தென்பெயர்சொலி
னிடைதடுக்குநரில்லெனவேவுவான். (சு)

கல்லென்சும்மைத்திரைபொருகங்கையிற்
செல்லுமன்பார்க்கிடுக்கண்செயுமென
வல்லியங்கண்முதலியமாக்களைக்
கொல்வதன்றிமற்றியாவுங்குறைத்திடான். (எ)

ஆறலைக்குநராலரனன்பருக்
கீறிலாமலினிதினளிக்குநாள்
மாறுகொண்டொருவேடன்வழிச்செல்வோர்க்
கூறுசெய்யவொளித்தயல்வைகினான். (அ)

அன்னகானிடையாரிருட்போதினிற்
றன்னும்வெய்யபுலிதொடர்ந்தேகலுந்
தன்னெடும்படைநீங்கத்தமியனாய்ப்
பொன்னிறக்கட்புளினனும்வைகினான். (௯)

அருநெறிக்கட்கரந்தமர்வேட்டுவன்
பொருவில்காசியிற்போகின்றவன்பணி
யுருமெனச்சென்றுரறிமற்றாங்கவர்
வெருவயாவும்பறித்திடும்வேலையின். (௰)

மங்கைபாகன்மலரடிகைதொழ
விங்குயாங்கள்புகுந்தனமித்தலைத்
துங்கவேடர்தொடர்ந்தனரொன்செய்கோம்
பிங்கலாக்கவெனப்பெயரோதினார். (௧௧)

வெஞ்சினப்புலிவேட்டத்தின்மேவிய
செஞ்சிலைப்பிங்கலர்க்கன்செவியிடைத்
தஞ்சமில்லவர்சாற்றொலியேற்றலு
மஞ்சலஞ்சலென்றாங்குவந்தெய்தினான். (௧௨)

வெங்கணைக்கினன்வீக்கியகச்சினன்
சிங்கவேற்றினெழுமடிசீற்றத்தன்
கங்கைசூடிதனன்பனைக்காய்ந்தநீ
ரெங்குமேவுதியென்றெதிர்ந்தானரோ. (௧௩)

ஈறிலாமலியானிங்கிருக்கவு
நீறுபூசிதனன்பனைநீவிரோ
வூறுசெய்குவிரென்றுரையாடினான்
மாறடர்த்தவரிவிற்றடக்கையான். (௧௪)

வரிவினாணொலிகேட்டிகல்வஞ்சகன்
வெருவியோடலும்வேதியரியாரையும்
புரியினுய்த்துவெம்போர்க்கறைகூவிமேற்
றிருகுவேடன்முன்சென்றெதிர்ந்தானரோ. (௧௫)

சிறக்குங்குலச்செய்தியொழிந்திவன்
மறக்குலக்குவழுவெனத்தோன்றினா

றெறுத்துமியாமெனவொக்கலைக்கூவினன்
வெறித்தகுஞ்சியன்வெள்ளியங்கண்ணினன். (கசு)

ஆங்கவன்றனிகூவநின்றூர்த்துடன்
வீங்குதோளினர்வில்லினர்வாளினர்
பாங்கரிற்பிங்கலாக்கனைப்பற்றுபு
வாங்குதெண்டிரைபோல்வளைந்தாரரோ. (கஎ)

முற்றுசேனைமுடிப்பமென்றன்புடன்
செற்றமின்றியெதிர்ந்துசெருச்செயு
மற்றநோக்கிக்கவசம்வில்வார்கணை
துற்றுமாவமிவைதுணித்தாரரோ. (கஅ)

வில்லும்வாளியுமின்றிவெறுங்கையான்
மல்லலேறனையானனிவாய்மடித்
தொல்லைமுன்சென்றமரினுழக்கலுங்
கொல்சினத்தோரரக்கன்குறைத்திட்டான். (கக)

கரியகந்தரக்கண்ணுதல்வானவ
னுரியவன்பர்க்குதவிபுரிந்துவெஞ்
செருவிலாருயிர்நீத்திடுஞ்செய்தியா
னிருதியாயினனென்னனிகழ்த்தினர். (உ0)

நிருதிசெய்திநிகழ்த்தினிர்நீதிசால்
வருணன்செய்திவகுத்துரைப்பீரெனச்
சுருதிநூற்றுறைபோயவன்கேட்டலும்
பொருவின்மாயன்கணங்கள்புகலுமால். (உக)

முன்னைநான்மறையாளர்க்குமுத்தமிழ்
தன்னலோடுங்கழனியளித்துளோர்
துன்னுதீர்த்தத்துறைபடிகட்டினோர்
மன்னுவெஞ்சிறைவல்லிவிடுத்துளோர். (உஉ)

முறையினீட்டுபொருள்கொடுமொய்ம்மலர்
துறைகொள்வாவிகுளம்பலதொட்டவர்
நெறியிற்சாலைதண்ணீர்ப்பந்தல்வைத்துளோ
ருறைவராலிவ்வருணனுலகினே. (உங)

உருத்திரற்றொழுதியோகினுறங்குமோர்
கருத்தமப்பிரசாபதிகண்ணென
வருத்திசேர்மகவாயசுசிட்டிமான்
விரித்ததெண்டிரைநீர்த்துறைமேவினன். (உச)

உறுதவத்துமுனிவருயிர்கிகர்
சிறுவரோடுமச்சோனத்திற்சேர்ந்துயர்
நறியதீம்புனலாடலுநண்ணியோர்
கறுவுசீற்றக்கராங்கவர்ந்தேகிற்றால். (உரு)

முதலையொன்றுயிர்வெளவமுனிவகின்
மதலைவீந்தனனென்றுமறையவர்
புதல்வர்வந்துபுகலவுங்கேட்டிலா
ளிதயமீசன்பதத்திலிருத்தலால். (உசா)

அண்டகோடிகளியாவுமாறுழைக்
கண்டுயோகங்கனிந்துறையந்தணன்
மண்டுதீம்புனலோடுதன்மைந்தனைத்
திண்டிறற்கராம்பற்றுபுசேறலும். (உஎ)

முழங்குதண்புனற்றேவிமுதுக்கரா
விழுங்குமைந்தனைவெய்யகராவொடுந்
தழங்குவாரியினுய்ப்பத்தழலெனப்
புழுங்கியோர்கணநாதன்பொருவிலான். (உஅ)

தெண்டிரைக்கடற்செல்வனைநோக்கிநீ
யண்டர்நாயகனன்புதல்வனைக்
கொண்டுவந்தரெவனெனக்கூறலு
மண்டுதெண்டிரையுள்ளமறுகியே. (உகூ)

மறுவில்செங்கதிர்மாமணியாவையுஞ்
சிறுவன்மேனியிற்சேர்த்திமுதலையோ
டெறிதிரைக்கடலெய்தியதன்மையாங்
கறிவினேத்தினனம்பொறிசெற்றுளான். (௩௦)

இன்னநோக்கிமுனிவனிருத்தலும்
பன்னுநான்மறைப்பாலனையார்கலி
யன்னவெய்யகராவொடுமாதிதன்
முன்னருய்த்துவணங்கிமொழியுமால். (௩௧)

ஆதிநாதவடியன்பிழைத்திலன்
காதிவெய்யகராங்கவர்பாலனைச்
சீதவான்புனற்றேவியென்பாலுய்த்தாண்
மாதவர்க்கிம்மகவையளித்தியால். (௩௨)

அண்ணனின்னுடையன்பன்புதல்வனென்
றெண்ணணியோர்கணநாதனிசைத்திட

வுண்மையேங்கியிங்குய்த்தனனெனத்
தண்ணந்தாமரைத்தாள்பணிந்தேகிற்றே. (௩௩)

கள்ளயர்வுயிர்க்குங்கமழ்கொன்றையோன்
றெள்ளுநான்மறையோய்நின்சிறுவனைக்
கொள்கவென்னலுங்குறிக்கொளா
வுள்ளமின்புற்றியோகமொழிந்திட்டான். (௩௪)

சேந்தகண்ணுஞ்செழுமலர்மார்பமுந்
தோய்ந்தகுஞ்சியுஞ்சோர்வுறுமுள்ளமுங்
காய்ந்தவெங்கட்கராங்கவர்கையுமா
யேய்ந்தமைந்தனைநோக்கினனின்புற்றான். (௩௫)

அன்பினோடுமடிதொழுமைந்தனை
யின்பமெய்தத்தழீஇயவிருந்தவன்
றன்பெருந்தவநோக்கித்தனையனு
மன்பெருந்தவமாற்றன்மனங்கொண்டான். (௩௬)

தந்தைநல்லருள்பூண்டுதழல்விழி
யெந்தைமேவியகாசியிலேகித்தன்
சிந்தைகூரச்சிவலிங்கமொன்றமைத்
தந்தமில்லதோர்மாதவமாற்றினான். (௩௭)

ஆற்றுநற்றவநோக்கியகமகிழ்ந்
தேற்றினேறுமிறைவன்மதலைமுன்
றோற்றிவேட்டனகேளெனச்சொல்லலும்
போற்றிநெஞ்சங்குழையப்புகல்வனால். (௩௮)

தளிநறுவுமிழ்கொன்றையந்தாரினோய்
நளிபுனற்கிறையாம்வரநல்குதி
யளியனுக்கெனத்தாழ்ந்தடிபோற்றினன்
வெளிறெறிந்தவிரிதருகேள்வியான் (௩௯)

தருணவெண்பிறைக்கண்ணியன்றூவருங்
கருணையோடுகடற்கிறையாகநல்
லருணயந்திட்டமரர்குழாந்தொழ
வருணனென்றுமணிமுடிசூட்டினன். (௪0)

சீர்கொண்மைந்தநீபோற்றுசிவலிங்கப்
பேருநின்பெயராகப்பெருந்தவத்
தார்வமோடுமருச்சனைசெய்துளோர்
நீரினோய்துகோயுறைவுநீங்குவார். (௪௧)

என்றுகூறியிறைவன்மறைதலுந்
தன்றுணைப்பெருஞ்சுற்றமுந்தானுமாய்
மன்றநாளும்வருணபதத்தினி
லொன்றியின்புற்றுவந்திருந்தானரோ. (சஉ)

கஉ-வது சிவசன்மா நிருதியுலகமும்வருணனுலகமுங்கண்ட
அத்தியாயம்முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-சுளஎ.

பதின்மூன்றாவது.

## சிவசன்மா வாயுவுலகமும் குபேரனுலகமுங்கண்ட அத்தியாயம்.



என்னநெடுமால்கணமுரைப்பவினியபொருடேர்மறைக்கிழவன்
முன்னுகாற்றின்வரன்முறையும்வழுவாதுரைத்திடெனமேலோடும
பொன்னங்கமலத்தயனோடும்புவனம்பூத்தோனருளடியார்
பன்னுமறையின்பொருடேர்ந்தமுனிவனோடும்பகர்தலுற்றார். (க)

ஈதுவளர்காற்றிறைவனகரின்னோன்காமக்குறும்பெறிந்த
தீதிறவத்துக்கசியன்றன்சிறுவன்காசிநகரடைந்து
பாதிமதிவேணியனிருதாள்பத்துநூறாயிரமாண்டு
காதலோடுமினிதேத்திக்கருதற்கரியதவம்புரிந்தான். (உ)

ஆற்றுந்தவத்தாலவனமைத்தவிலிங்கமதனிலமலனன்பாற்
றோற்றியுனதுதவமகிழ்ந்தோம்விழைந்ததியாதுசொல்லுகெனப்
போற்றுமறைதேர்கசியன்றன்புதல்வனுவகைமீதூர
வேற்றுக்கொடியோன்பாதமலரிறைஞ்சியேத்தத்தொடங்கினனால். (ங)

தண்ணங்கமலேகேள்வனுக்குந்தனிநான்முகற்கும்புரந்தரற்கு
நண்ணற்கியைந்தபதங்கொடுக்குளிர்மாமதிச்செஞ்சடையினே
யெண்ணற்கரியமறைநான்குமிதுவன்றிதுவன்றென்பதல்லாற்
கண்ணற்கரியாயென்போல்வாரெவ்வாறுன்னைக்கருதுவதே. (ச)

துதியுந்துதிக்கப்படுவோனுந்துதிக்குமவனுமுலகின்ற
விதியும்விதியையளிப்போனுமிவர்களறியாவிழுப்பொருளாம்
பதியுமாகியெவ்வுயிர்க்குமுயிராயவுற்றிற்பற்றில்லா
முதல்வநின்னையுணர்ந்தெவ்வாறெளியேனேத்தமுயல்வதுவே. (டு)

நீருஞ்சுலவியெறிவளியுநெருப்பும்புதைந்தநெடுவானும்
பூருமிந்துநாதமுதலெல்லையுமொருங்குபடைத்திடமுன்

பேரும்வடிவுமில்லாதவெம்மானின்னைத்தனித்துநந்தோங்
யாருமறியார்நின்சீர்த்தியானோநாவாற்புகழ்ச்சுவனே. (௬)

அருவமாகிச்சுலமின்றியொன்றாயுறையுமமைதிதனின்
மருவுமிச்சையுயிர்ச்சாசத்தியாகமறைப்பொருளா
மொருவநீயேசத்திசிவமென்னவிரண்டாயுறைந்திர்நும்
பொருவிலுருவஞானமிச்சைசத்தியுருவிற்பொருந்தியதால். (௭)

சத்திசிவமாநுமதிடத்திற்கிரியாசத்தியுதித்ததற்பின்
மொய்த்தவலகில்புவனமெல்லாமுறையினுதித்தஞானசத்தி
யெத்தமறாநல்லுருவநீர்கிரியாசத்தியுருப்பிறையை
வைத்தமௌலிபரைகிரியாசத்தியுருவாம்வளருலகும். (௮)

ஆயவாற்றாலினைத்தினுக்குமையநீயேகாரணமாந்
தூயமலரோனின்வலப்பாற்றுளவநெடுமாலிடப்புறனுஞ்
சாயுமெரிசெங்கதிர்மதியங்கண்மூன்றாகுநின்னதுமேயபு
மேயமறையாந்திரைபுரட்டும்விரிநீர்க்கடனின்வெப்பாமால். (௯)

இறைவநின்றுசெவிவெளியாந்திசையினைந்துமினதுகர
மறவின்மறையோர்நினதுமுகமற்றுன்றடந்தோள்வாள்வேந்தர்
செறியுந்திசைகள்விரிந்தகைநந்தகுறங்குவணிகர்தேவர்முடி
யுறையுங்கழல்கள்சூத்திரர்கடவம்பொற்சரணநின்னவரே. (௧௦)

வெண்ணுமாறுமெனவுறைந்திவ்வுலகமுழுதும்பெற்றாய்நீ
தன்னைத்துளவத்தாரோனுந்தண்டாமரையினுறைவோனு
மெண்ணவரியபரம்பொருணீயென்றேயேத்தியெனக்குவர
மண்ணவினின்மேலன்பென்றுமழியாதிருத்தலெனத்தொழுதான். (௧௧)

தொழுதசிறுவன்முகநோக்கிச்சூழ்ந்துநறைதந்தாதாடிக்
கொழுதியினவண்டிசைபயிலுங்கொன்றைவேணியருட்பரமன்
விழையுமுயிர்களனைத்தினுக்குமுயிராயுலகைவேந்தனைத்தும்
தழையுமோசைதிசைபோர்ப்பவடமேற்றிசையிற்சார்குதியால். (௧௨)

ஆர்வமோடுநீயினிதினமைத்தவிலிங்கம்பவனமாம்
பேர்தாங்கிதுபணிந்தோர்மதுபதியிற்பிரியாது
சார்கவென்னவரமுதவித்தாள்கொழிக்கக்கழைகுனிக்கு
மாரற்காய்ந்தோனருளொடுமவ்விலிங்கநாப்பண்மறைந்தனனால். (௧௩)

அஃதுகாற்றுக்கிறைசெய்தியாவுமுறைப்பவினிதுவந்து
கஃறுசினவெங்குறும்பெறிந்துமறைநூற்கடலின்கரைகடந்த
வெற்றிமுனிவனிக்கிறைவன்செய்தியனைத்தும்விளம்புகென
முற்றுமகிழ்ந்துமாயவகிலமொழியார்க்குத்துரைப்பார். (௧௪)

குடக்காய்த்தெங்கின்பழமுதிர்க்குறிக்குங்கயவர்க்கொடிவாளை
மிடற்பூங்கமுகின்மிடறொடிக்குமல்லல்வளங்கூர்காம்பிலையிற்
கடற்பாரனைத்துமிசைபோக்கிக்காமமுதலாமுக்குறும்பின்
றொடர்ப்பாடறுத்தவேள்விதத்தனென்னவுளனோர்நான்மறையோன்.

அன்னமறையோன்பலகாலமாற்றுந்தவத்தாலொருவொண்மோர்
கன்னற்குதலைமகவீன்றனவன்பேர்காமர்குணநிதியாம்
முன்னூற்கருமமுடித்ததற்பின்மதியின்வளர்ந்துமுறைநூற்றவர்பாற்
பன்னுமறையின்பரப்பனைத்துங்கடந்தான்பனுவலனைத்துணர்ந்தான் ( )

இனையகாலைப்பூழ்தூரப்புள்ளம்வேறுபடுநல்லவன்
மனையினீட்டும்பொருளனைத்துங்கவர்ந்துகொடும்போய்மதிமருட்டும்
வினையம்வல்லாபொருநூதின்வாள்ராவழங்கிமேவரிய
தனதுமதர்ப்பிலைமறைநெறியுந்திறம்பிநாளுந்தவறிழைத்தான். (௧௭)

தாதைமகனியாண்டுளனென்றுகேட்குந்தோறுந்தாய்வெருவி
யோதற்ககன்றனெனச்சூதுமறைத்துமொழியவுணர்கிலனாய்
தீதிறவத்துவேள்விதத்தனென்னுஞ்செழுநான்மறைவல்லோன்
காதற்புதல்வற்கருங்கற்பிற்காமர்கன்னிமணமுடித்தான். (௧௮)

வேறு

ஆயுண்மங்கலனவ்வருகெனவனைந்துநீயிழைக்குந்
தீயசெய்தியையுந்தையிலறுணர்ந்திடிற்செயிர்த்துக
காயுமென்னென்றுநின்னையுமெலப்படுங்கருதி
மாயவெங்கவறடுதலமைநதநியாய்மொழிகுவேன் (௧௯)

உந்தைசெய்தியுமொழுக்கமுமுணர்கிலையன்றி
மைந்தநங்குலக்கிழமையுமதிக்கிலைமறைதே
ரந்தணாளர்தஞ்சிறுவர்நல்லொழுக்கமிங்கறிந்துஞ்
சிந்தைசெய்கலையென்றுகண்கலுழ்ந்திவைசெப்பும் (௨௦)

ஊற்றிருந்துவாட்டடங்கணீர்சோரநின்றுரைக்கு
மாற்றங்கொள்கலாதாங்கவனுறைதலின்வஞ்சம்
வேற்றில்புறல்களுணல்வேட்டமவெங்கவறு
போற்றல்செய்குநர்புணர்ப்பினையாவரேதமிப்பார். (௨௧)

இன்னதன்மையினியைந்துளான்றனையிலிகின்ற
வன்னைகண்படுமமைதியிற்றந்தையாங்களித்த
மின்னுநன்மணிமெல்விரன்மோதிரங்கவர்ந்து
துன்னருங்கவறடுகர்க்கதனையுந்தோற்றான். (௨௨)

நினைவருந்தவமாற்றியங்கிரினன்மறையோன்
மனைவிகையிடைகொடுத்ததம்மணிவிரலாழி

யினிதணிந்துளாரொருவனை மறுகிடையெதிராப்
புனையுமாழிமற்றெனதெனவாங்கவன்புகல்வான். (௨௩)

பன்னற்கேள்வியோய்களவினிற்கொண்டிலன்பரிவர்
னென்னவென்றுகிற்சூதினிற்கவர்ந்துநின்பாலன்
மன்னுமோதிரமின்றுதோற்றனன்வனைகலன்கள்
பொன்னின்றூசிவைநாடொறும்பொருதுதோற்குவனால். (௨௪)

தீதினற்றவமறைபயினின்னிளஞ்சேயைச்
சூதுவல்லவர்சிகாமணியெனப்பலர்சொல்வர்
ரீதறிந்திலைபோலுமென்றெதிர்த்தவனுரைப்பக்
காதறீர்ந்துளம்வெள்கினன்கலைமறைக்கிழவன். (௨௫)

நாணொடுந்தனதில்வயிற்போகினான்மறையோன்
வாணிலாநகைபுரிந்துதன்மனைவியைநோக்கி
யேணில்சிந்தைநின்சிறுவனியாண்டேகினனென்னப்
பூணுலாமுலைநீர்த்துறைப்புகுந்தனனென்றாள். (௨௬)

ஈதுநிற்கயானெண்ணெயாட்டயர்வுழியீந்த
தீதிலென்கையிற்சிறுவிரன்மோதிரந்தருகென்
றேதவுள்வெரீஇநண்பகலுறுகடன்கழிக்கப்
போதிர்துய்த்தபினுழிநல்குவனெனப்புகன்றாள். (௨௭)

நெறியிகந்துதம்மரபினினீரலசெய்யு
மறுவின்மைந்தரைப்பெறுதலின்மகப்பெறாதொருத்
றுறைதனன்றுமற்றொருவனாலுயர்குலமுழுதுஞ்
சிறுமையெய்திலாங்கவற்றுறந்துறுபழிதீர்ப்பார். (௨௮)

என்னநூற்கடல்கடந்துளோருரைப்பதையெண்ணி
முன்னர்நின்றுபொய்மொழிந்திடுமுகிண்முலைத்துவர்வாய்ப்
பன்னிதன்னொடுமகத்துறந்தந்தணன்பரிந்தோர்
பொன்னின்வார்முலைப்பூவையைக்கடிமணம்புரிந்தான். (௨௯)

தந்தைநீத்தனன்றன்னொடுந்தாயினையென்று
வந்தமில்லதோர்வெந்துயர்க்கடலிடையாழ்ந்து
முந்துசெய்ததீத்தொழிலினைமுன்னிநெஞ்சழிந்து
சிந்தைசெய்தனன்செய்யுமாறென்னெனத்திகைத்தான். (௩௰)

கற்றிலேமொருகலைகளுங்கைப்பொருளீட்டப்
பெற்றிலேமினியெங்ஙனுய்குவமெனப்பேதுற்
றற்றமில்பசிக்கனல்கொளுந்திடவயர்போழ்தி
னொற்றையாழியன்குடகடற்றிரையில்வீழ்ந்தொளித்தான். (௩௧)

உற்றஞான்றுயர்சிவநிசியாதலினுவந்து
கற்றைவார்சடைக்கடவுளையருச்சனைபுரியு
மற்றோர்வேதியன்பின்றொடர்ந்தாலயமருவி
யற்றநோக்கினனேற்றமின்னமிழ்தெடுத்தயில்வான். (௧௨)

முருந்துவாண்கைபங்கனையருமறைமுதல்வன்
புரிந்தபூசனைகண்டுயில்பொருந்திலனாகி
வருந்திநோக்குபுவைகறையாமத்தினளவு
மிருந்துமற்றவன்றுயில்வதுகண்டனனெழுந்தான். (௧௩)

ஆண்டெழுந்துபோயீசன்முன்னமிழ்தினையெடுப்பக்
காண்டல்செய்திலன்மழுங்கியகனைசுடர்விளக்கைத்
தூண்டல்செய்துவெண்சோற்றினையெடுத்தனன்விரைவின்
மீண்டபோழ்திலோர்வேதியன்காலிடைமிதித்தான். (௧௪)

மிதித்தபோதிலவ்வேதியன்றுண்ணெனவிழித்து
மதித்திடாதிவண்வந்திடுகளவன்யாரென்னக்
கொதித்தநெஞ்சினல்கூக்குரலெழுப்பலுங்காப்போ
ரதிர்த்துவந்துகைப்படுத்துமற்றவன்றலையறுத்தார். (௧௫)

ஆக்கைநீத்திடுசிறுவனையந்தகன்றூதர்
வீக்கியேகலும்விடுமின்கள்விடுமின்களென்னாத்
தீக்கனன்றமிழ்மூவிலைச்சூலவேறிரித்துக்
காக்குமாறெழுங்கண்ணுதற்கணங்கள்வந்தடைந்தார். (௧௬)

நுதல்கிழித்தொளிர்விழியினன்கணங்களைநோக்கிப்
பதம்வழுத்திவெங்கூற்றுவன்றூதுவர்பகர்வார்
முதுகுலத்தொழுக்கிழந்துதாய்மொழிவதுமுனிந்து
மதிமருட்டிவெஞ்சூதினைவைகலுமிழைத்தோன். (௧௭)

பஞ்சின்மெல்லடிப்பாவைதன்மனைவயிற்பதைப்ப
வஞ்செஞ்சீறடிக்கூத்தியரணிமுலைதோய்ந்த
வஞ்சனெந்தைநின்மாலியங்கவர்ந்தனனிவன்மற்
றஞ்சுபோவதற்கிழைத்ததெத்தவமெனவுரைத்தார். (௧௮)

ஈதுகேட்டலுஞ்சிவநிசிதனிற்றுயிலின்றி
மாதுபாகனையன்பொடுவழிபடக்கண்டான்
சோதியஞ்சுடரொளியுறத்தூண்டினனவற்றாற்
றீதொழிந்தனன்கலிங்கநாட்டிறைவனாய்ச்சேர்வான். (௧௯)

என்றுகூறியசிவகணநாதரையிறைஞ்சிக்
கன்றுவெஞ்சினக்கூற்றுவன்றூதுவர்கயிற்றி

னென்றவீக்கியசிறுவனையொல்லையின்விடுத்துத்
தென்றிசைக்கிறைநகர்வயிற்சென்றடைந்தனரால். (௪௰)

நீர்க்குடக்கனிசுமந்துநீண்முடம்படுதெங்கின்
கார்க்குலந்துயில்கழனிசூழ்கலிங்கநாடளிக்கு
மார்க்கும்வண்கழலருந்தமன்புதல்வனாகென்னப்
போர்க்கணிச்சியோனடியராங்குரைத்தனர்போனார். (௪௧)

ஈசனன்பர்தமருளினாற்குணநிதியென்பான்
காசுகண்படுபுரிசைசூழ்கலிங்கர்கோன்மகவாய்
மாசிலாதநல்லோரையின்மகிழ்வுறத்தமனென்
றேசைபோகியபெயரொடுமுதித்தனனன்றே. (௪௨)

முற்பவத்துறுதொடர்ச்சியின்முதுக்குறைவெய்திச்
சிற்பரன்றிருவாலயமெங்கணுந்தீப
மற்பினாலமைத்தளப்பருமறம்புரிந்தீசன்
பொற்பதத்தினில்வைகலும்பூசனைபுரிந்தான். (௪௩)

இன்னநல்லறம்பற்பலநாளிருந்தியற்றிப்
பின்னர்மாய்தலும்பின்னுகலையந்தோறு
மின்னுசெஞ்சுடரேற்றலாற்சுடர்மணிவிளக்க
மன்னுகோநகரளகைக்குமன்னவனானான். (௪௪)

அளகைமாநகரீங்கிவன்முன்னினிதாண்ட
வொளிறுவேலரசெவனெனமறையவனுரைப்பக்
களிறுகூப்பிடக்கருணைசெய்கடவுளைப்பரவும்
வெளிறெறிந்தநற்கேள்வியோரிவைவிளம்புவரால். (௪௫)

விதியளித்திடும்புலத்தியனுதவுவிச்சிரவர்
மதலையாகியவச்சிரவணனரன்மலர்த்தா
டுதிசெய்தாங்கவனருளினாற்சுடர்மணியளகைப்
பதிபுரந்தனன்பதுமகற்பத்தினிற்பரிவால். (௪௬)

கற்பமாங்கதுகழிந்தபின்கமலவீட்டுறைவோ
னற்பினாலுயர்சராசரமனைத்தையுமளிப்பப்
பொற்செழுந்தருநீழல்வாழ்புரந்தரன்முதலோ
ருற்பவித்தலுமீங்கிவன்குபேரனாயுறைந்தான். (௪௭)

முன்னமாலயத்தொண்சுடர்தூண்டலான்முறையே
யின்னசெல்வமுமளகையும்பெற்றனனென்னாப்
பொன்னந்தாதுகுகொன்றையான்காசியம்புரியின்
மன்னியாங்கொருசிவலிங்கமகிழ்வொடுமமைத்தான். (௪௮)

மாசில்சித்தமாந்தகளியினன்புநெய்வாக்கி
யீசனன்றிவேறில்லெனுந்திட்பநுண்டிரியிற்
றேசுடைத்தனிஞானவொண்செழுஞ்சுடரேற்றி
யாசில்கொள்கையோன்பற்பகல்யோகினிலடைந்தான். (சுகூ)

அன்னகாலையினுங்கவல்றவத்தினை வியந்து
முன்னமூவெயின்முருக்கியமுக்கணெம்பெருமான்
பொன்னவாஞ்சுணங்கரும்பியபுணர்முலையுமையா
டன்னொடுஞ்சுடர்ப்பிழம்பெனவவ்வுழிச்சார்ந்தான் (எ0)

அளகைகாவலவாற்றியவருந்தவமகிழ்ந்தே
முளம்விழைந்தனவுரைத்தியாமுதவுவமென்னக்
களகணுகியகருமிடற்றெந்தையாங்குரைப்பத்
துளிகண்போர்த்திடநோக்கரிதாயிவைசொல்வான். (எக)

மாசிலாதவரளப்பிலரெழுந்தெனவயங்கும்
தேசுபூத்தநின்செழுமலாச்சேவடிகாணக்
கூசுகின்றனகண்ணிணைகூசிடாவண்ண
மீசநல்குதியன்னதேவரமெனக்கென்றான். (எஉ)

காக்குமாயனுங்கடிகமழ்கமலநாயகனும்
வாக்கினலுயர்மனத்தினற்காணொணுவடிவ
நோக்குமாறருள்புரிதலுநோக்கியப்பரனை
நீக்கமன்றிவாழன்னையைப்பார்த்திதுநினைவான். (எங)

முன்னவன்றிருமேனியினுறைந்திடமுயன்ற
தென்னநற்றவமென்னினுமிவளொளநோறு
துன்னிநோக்கலுமொருவிழிமறைந்திடவிவன்யார்
துன்னுவஞ்சகனெனவுமையரனொடுஞ்சொன்னாள். (எச)

மாதுநின்றவப்பெருமையைமதித்தனனல்லால்
யாதுசொற்றனன்முனியலையிவன்விழியருள்கென்
றாதிநாயகனறைதலுமம்பலத்தமர்ந்த
போதரிக்கணுளளித்தலும்பொற்கணனதுவே. (எரு)

இழந்ததன்விழிபெறுதலுமியக்கர்தம்பெருமான்
குழைந்தவெண்பிறைக்கண்ணியன்குரைகழல்வணங்கித்
தழைந்தவன்பினுற்பரையிருதாமரைச்சரணம்
விழைந்துபோற்றிநல்லுவகைமீதூர்ந்தெழத்தொழுதான். (எசு)

தொழுதவேந்தனைத்துணைமலர்க்கைகளாற்றைவர்
தெழுகவின்றுதொட்டென்னுயிர்த்தோழனீயென்றுப்

பழுதினல்வரமருளிநீபரவியவிலிங்கம்
விழையுநின்னுடைப்பெயரினால்விளங்குகவென்றான். (௫௭)

இயக்கர்விஞ்சையர்குய்யகர்கின்னரரிறைஞ்சி
வியக்கநீணிதிக்குபேரனும்பெயரொடுமேவிப்
பயக்குநல்வளத்தளகையிற்பரிவின்வாழ்கென்ன
முயற்களங்கமின்மதிமுகத்துமையிவைமொழிந்தாள். (௫௮)

வரமளித்தபின்வுரிமிடற்றஞ்சிறையறுகா
லரவவண்டிமிர்கொன்றையஞ்சடைமுடியண்ண
லுருவமேகலையுமையொடுமறைதலுங்குபேரன்
பரிவின்வாழுமிவ்வளகையீதெனப்பகர்ந்தனரால். (௫௯)

௧௩-வது சிவசன்மா வாயுவுலகமுங் குபேரனுலகமுங்கண்ட
அத்தியாயம்-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-௫௱௯.

---

பதினான்காவது.

## சிவசன்மா ஈசானனுலகமுஞ் சந்திரனுலகமுங் கண்ட அத்தியாயம்.

உரைத்தவிந்நகரின்கீழ்ப்பாலுலப்பறுசெல்வத்தோங்கித
திருத்தகத்தோன்றுகின்றவுலகெதுசெப்புகென்னா
வருத்தியின்மறையோன்கூறவாய்பிழிமலர்மென்கூந்தன்
முருக்கிதழ்க்கமலைகேள்வனடியவாமொழியலுற்றார். (௧)

ஈண்டுமுன்றோன்றுகின்றதீசானலோகமீங்கு
மாண்டநற்றவத்தின்மிக்கோர்மழுவலான்றளிலன்பு
பூண்டுளோர்பயன்வெஃகாதுபொங்கழல்வேள்விசெய்வோர்
காண்டகுசிறப்பின்மிக்ககண்ணுதலுருவிற்சேர்வார். (௨)

பகருமிவ்வுலகங்காக்குமவர்பதினொருவரன்னோர்
வகிர்மதிக்கண்ணியெந்தைமருவியகாசிநண்ணி
நிகரிலீசானலிங்கநெறியினிலமைத்துப்போற்றிப்
புகரினற்றவங்களாற்றிப்பூசனைபுரிந்தாரன்றே. (௩)

பூசனைமகிழ்ந்துதண்ணெனன்புனிற்றிளந்திங்கட்கண்ணி
யீசனல்லருளாலன்னோர்க்கீறிலாவாயுளோடு
தேசுறுபரிதிநாணச்செழுஞ்சுடர்ப்பிழம்பாயோங்கு
மாசறுதனதுதொல்லைமாணுருநல்கினானே. (௪)

ஆறணிசடையுநீலகண்டமுமலங்குசோதி
நீறணிமெய்யுஞ்செய்யநெற்றியிற்கண்ணுந்தோன்ற

மாறடுமழுவுமானுந்தரித்துவண்கடுக்கைசூடி
யேறுயர்த்தீசனென்னவீங்கினிதிருக்கின்றாரே. (௫)

எனவரிக்கணங்கள்கூறக்கேட்டனனேகுங்காலைப்
பனியிருவிசும்பினூடுபகலிடைநிலவுகாலுந்
தனிநகர்கண்டுமற்றிந்நகரெதுசாற்றுகென்னப்
புனைதுழாய்ப்படலைமார்பனடியவர்புகலலுற்றார். (௬)

மலரயன்மனத்திற்றோன்றுமத்திரிவரம்பில்காலு
மூலகிடைத்தவஞ்செய்காலைத்தாதுமேலோங்கியங்கட்
புலன்வழியொழுகிப்பத்துத்திசையினும்போர்ப்பத்திக்கா
மலர்முலைமாதர்தாங்கலாற்றலர்மண்ணின்வீழ்ந்தார். (௭)

சிந்தியதிவலைபைங்கூழாயினதிரண்டுவீழ்ந்த
துந்துநீருலகமுய்யவிமானமேலுலகம்பூத்த
வந்தணன்வைத்தானென்னவாருயிர்பெற்றுமுக்க
ணைந்தைவாழ்காசிமேவியிலிங்கமொன்றமைத்ததன்றே. (௮)

பரமனைவணங்கிநூறுபதுமநற்றவஞ்செய்காலை
யருள்களிந்திறைவன்றோன்றியந்தணரவனிபைங்கூழ்
விரியுநீரவற்றுக்கெல்லாம்வேந்தனுபுறைதியென்ன
வொருகலைவாங்கிக்கங்கையொழுகுவார்சடையில்வைத்தான். (௯)

ஒண்ணிறவுரோணிதன்னோடுவந்திடிதிருப்பமற்றைப்
பெண்ணலங்களிந்தமாதர்தந்தையோடதனைப்பேசத்
தண்ணளியிலாததக்கன்சபித்தலாற்பக்கந்தோறும்
விண்ணிடைத்தேய்தலோடும்வளர்தலுமேவினானே. (௧௦)

போற்றிமூவுலகுங்காக்கும்புரவலனாகிப்பின்ன
ராற்றருமிராசசூயமாற்றியிவ்வுலகமெல்லாஞ்
சாற்றுநான்மறையோர்க்கீந்துமையலோர்பாகத்தெந்தை
மாற்றருமருளாற்சோமனெனும்பெயர்மருவினானே. (௧௧)

முறையினிற்சந்திரேசன்முன்னர்நல்வேள்விசெய்து
நிறைதவம்புரிந்தபேற்றால்நிறையிதழ்முகைவாய்விண்ட
செறிமலர்க்கொன்றைவேணிச்சிகாமணியாயதன்றிக்
கறைமிடற்றரவம்பூண்டகண்ணுதற்கண்ணுமானான். (௧௨)

பரிதிவெங்கதிரால்வாடும்பற்பலவுயிருமுன்றன்
விரிகதிர்க்கற்றைதோயின்மெய்குளிர்ப்புறுகயாமும்
பொருவில்பூரணையினின்பேர்ப்புனைந்தவிவ்விலிங்கந்தன்னின்
மருவுதுமிமயமீன்றமயிலியன்மடந்தையோடும். (௧௩)

மதியுறுமூவாவிற்றிங்கள்வாரம்வந்திமையபின்முன்னாள்
விதியினிலுண்டிநீத்துவிழிதுயிலாதுகாலைக்
கதிர்மதிக்கூபமூழ்கியிறந்துளோர்கடன்களாற்றி
னதிர்புனற்கயையிற்பிண்டமிட்டபேறடைவரன்றே. (கசு)

சித்திரைத்திங்கடன்னினிறைமதிசேருங்காலை
யித்தலையெய்தியிந்தவிலிங்கத்தைவழிபட்டோர்கண்
முத்தியிலடைவர்சத்தியோகபீடத்தின்முன்னாட்
பத்தியின்வழிப்பட்டுய்ந்தோர்பலருளராவரன்றே. (கரு)

அட்டமிதோறுமிந்தப்பீடத்தினருச்சித்தோர்க்கு
மட்டவிழ்கூந்தற்சத்திவரமினிதளிக்குமென்னாக்
கட்டழலதனுஞ்ஜென்றிவார்சிலைக்காமற்காய்ந்த
விட்டொளிர்திங்களவேணிவிமலனுமறைந்துபோனான். (கசு)

அன்றுதொட்டுலகமெல்லாங்குளிர்ப்புறவகல்வான்போர்த்த
துன்றிருட்பிழம்புசீக்குஞ்சோமன்வாழுலகமீதா
மென்றுபூந்துளவோனனஞ்பரிசைப்பவேகுதலும்பன்மீ
னொன்றியவுலகநோக்கியாதெனவுரைக்கலுற்றார். (கஎ)

கசு-வது சிவசன்மாசானனுலகமும் சந்திரனுலகமுங்கண்ட
அத்தியாயம் - முற்றிற்று.
ஆ. திருவிருத்தம் ருருக.

---

பதினேந்தாவது

## சிவசன்மா தாரகையுலகமும் புதனுலகமுங்கண்ட அத்தியாயம்.

நறுமலர்க்கமலவீட்டுறையுநான்முகன்
றறுகழற்காற்பெருவிரலிற்றோன்றிய,
செறிதவக்கிழவனுந்தக்கன்சீர்பெற,
வறுபதுமகளிரையருளினனரோ. (க)

ஆங்கவர்தம்மின்மூவொன்பதங்கலார்
தீங்கறுகாசியின்வரணைத்தீரத்தின்
பாங்கரினிலிங்கமொன்றமைத்துப்புண்புடன்
றூங்கருமஞ்சினிற்றவமியற்றினர். (உ)

அகில்வயிரூர்ந்துமிழும்மெலோதியர்
இகழ்புருடாயுதமென்னுஞ்செய்தவங்
நகவுடனூற்றலுமகிழ்ந்துதாழ்சடை
வகிர்மதிக்கண்ணியான்வந்துதோன்றினான். (ங)

செய்தவமகிழ்ந்தனம்விழைதல்செப்புமின்
றையலீரென்றலுந்தலைவநின்[illegible]கர்
மையறுகொழுநனைவழங்குவாயென
வையனும்பெரிதுவந்தருளன்மேயினான். (௪)

கொலைபழுத்தொழுகியவேற்கட்கோதையீர்
மலர்தலையுலகினில்விருளைமாற்றுதண்
கலைமதிக்கடவுளுங்கணவனாமென
வலர்முலைபாகனுங்கருளினனரோ. (௫)

உயர்புருடாயுதமென்னுமொண்டவ
மயர்வறவாற்றலிற்புருடமாட்சிமை
யியல்புறவேண்டுழியடைதிரொண்ணிலாச்
செயிரறுமுடுக்களிற்சிறந்துவைகுவீர். (௬)

ஆர்வமுற்றமைத்தவிவ்விலிங்கமங்கையீர்
தாரகைப்பெயரதாய்த்தயங்கியோங்குக
வீர்ம்மதிப்பகத்தின்மீதிருந்திரீரொ
வார்சடையந்தணன்மறைந்துபோயினான். (௭)

மதர்விழிமங்கையர்திங்கள்வானவன்
பதியெனப்பயிலுறுபதமுற்றீதெனுங்
கதையினைக்கேட்டனனேருங்காலையிற்
புதனுபருலகினைப்பொருந்தநோக்கினான். (௮)

பொற்றருவிழுதுவிட்டனையபூஞ்சடை
நற்றவன்கணங்களைநயந்துநோக்குறு
சிற்பநூல்கிடந்தவித்தெய்வமாநக
ரற்புதமொழிகெனவறைதன்மேயினான். (௯)

கண்வழுக்குறுசுடர்காலுமோர்கலை
யண்ணறன்சடைமிசையமைத்தவாற்றினா
[illegible]
விண்ணவற்குள்ளமும்வேறுபட்டதே. (௧௦)

மருவுகாதலின்மதிக்கடவுள்வானவர்
வெருவினர்விலக்கவுங்குரவன்மேவிய
முருகுவாய்மடுத்தளிமுசுபூங்குழற்
றெரிவையைவலிதினிற்சேர்ந்திட்டானரோ. (௧௧)

பானிலாக்கடவுளுங்குருவின்பன்னியை
மானமற்றின்புறமணந்ததன்மையாற்

கூன்முதுகிளம்பிறைமுடித்தகோனன்றி
வேனில்வேள்பகழியார்விலக்கவல்லரோ. (௧௨)

வெய்யகூற்றுருத்தெறிவேலவிலக்கினும்
மெய்துழூழ்வினைத்தொடரெண்ணிமாற்றினுந்
தையலார்முழுமதிமுகத்திற்றங்கிய
மையகட்காலவேன்மாற்றலாகுமோ. (௧௩)

அரும்பெறற்செல்வம்வந்தடைந்தகாலையிற்
றிருந்தியநல்லறஞ்செய்துநாடொறும்
விரிந்தநற்புகழினைவிளைத்தல்வீறுசால்
புரந்தரற்காயினும்புரியலாகுமோ. (௧௪)

தனித்தனிமுச்சுடரியற்றித்தங்கிய
வனைத்துலகிருளையுமகற்றுநான்முக
னினைப்பருஞ்செல்வம்வந்தெய்தினீடிய
மனச்செருக்கெனுமிருளகற்றவல்லனே. (௧௫)

ஏர்பெறுமிருநிதிச்செருக்கையெய்திடிற்
றோசெவியுடையருஞ்செவிடராகுவ
ரோர்தருமுரைவலோரூமராகுவர்
கூர்விழியுடையருங்குருடராவரோ. (௧௬)

ஈர்ம்மதிப்புங்கவனிளநிலாநகைத்
தாரையைவிடுக்கலன்றருக்கிவைகலாற்
கார்முகங்குழைத்துவிண்காக்கும்வானவர்
போர்முகத்தழன்றுளம்புழுங்கியெய்தினர். (௧௭)

விண்ணவர்சோமனைவெகுண்டுளாரென
வெண்ணுருவன்பரொத்தவறிழைப்பினுந்
தண்ணளிபுரிந்தினிதளிக்குந்தாழ்சடைக்
கண்ணுதல்பினாகவிற்கைக்கொண்டெய்தினன். (௧௮)

எய்தினரமரருமமரினேற்றறிா
மையுறழ்கண்டனும்வரிவில்வாங்கின
னுய்யுமேயுலகுபோரொழிப்பல்யானெனச்
செய்யதாமரைமலர்ச்செல்வனெய்தினன். (௧௯)

புல்லறிவுடையவிப்புலவரோங்கிர்
வில்லொடும்போந்ததேகணைவிடுத்திடி
லல்லலுற்றுலகெலாமழியுமின்றெனா
வல்லியோர்பாகனைவணங்கிக்கூறுவான். (௨௦)

எந்தைமற் றிமையவர்க் கரவன் பன்னியை
மைந்தினிற் கவர்ந்தனன் மதியென் றோதலும்
வெந்திறற் கணிச்சியோன் விடுதி நீயெனச்
சந்திரன் விடுத்தனன் றாரை தன்னையே. (உக)

நண்ணிய பன்னி தன் கருப்ப நான் மறை
யண்ணறன் முனிவினுல் வீழ்ப்பவாங் கது
மண்ணிடை வீழ்தலும் வானி னோங்கிய
விண்ணவரொளி கெடவிளங்குகின் றதே. (உஉ)

மங்கையிக் கருவினை யுயிர்த்தன் மாசறு
மெங்குலக் குரவற கோவுவரியே யுடை
யங்கண் மாநிலத் திருள் பருகுமாய் கதிர்த்
திங்களுக் கோவெனத் தேவர் கூறினர் (உங)

பூண்சுமந் தோங்கிய பொம்மல் வெம்முலை
நாண்சுமந் தோங்கிய நடுக்க மெய்துறச்
சேண்பயிலமரரை முனிவு செய்தலும்
பாண்சுரும் பிமிர்மலர்ப் பரமன் கூறுவான். (உச)

வெறிமதுக் கலுழியஞ் சேற்றின் மென்சிறை
யறுபதம் வழுக்கி வீழ்ந் தரற்றுபூங் குழ
லுறுசினந் தணிதி மற்றெவர்க் குயிர்த்தனை
செறிக திருமிழுமிச் சிறுவன் றன்னையே. (உரு)

தேர்ந்திலன் யாது நீ செப்புகென்றலுங்
காந்தண் மென்முகிழ் விரல் கூப்பிக் கண்கவ
ரேந்திழை யிருட் குரும்பெறியுந் தண்சுடர்
வேந்தனுக் கீன்றன னெனவிளம்பினள். (உசா)

பைந்தொடி நல்லுரை கேட்டுப் பாற்கதிர்ச்
சந்திரன் கரங்களாற் றழுவியன் புடன்
மைந்தனை யுச்சிமோந் துளமகிழ்ச்சி கூர்
புந்தியா னுமழும் புதனெனவோதினன். (உஎ)

அண்ணலுமறைந்தனனம் பொற்றாமரைப்
பண்ணவன் மருவு தன் பதியினெய்தினன்
றண்ணிலா முகிழ்நகைத் தாரை தன்னொடும்
விண்ணவர் குரவனும் விசும்பினேகினன். (உஅ)

உருவினும் வலியினு முவமை வேறிலாத்
திருமிகு சிறுவனுந் திங்கள் வானவ

னருளொடுங்காசியிலடைந்துநல்லருள்
புரிதருமிலிங்கமொன்றமைத்துப்போற்றினன். (உக)

ஒருபதினுயிரம்பருவமுமணிகந்
தரியநற்றவமினிதாற்றுமேல்வையிற்
றெரிவையோர்பங்கமர்திங்கள்வேணியான்
மருவுமவ்விலிங்கத்தின்வந்துதோன்றினன் (௩0)

கார்வரனேக்கியகளிகொள்மஞ்ஞையி
னூர்வமோடினிதெழுந்தாடிக்கண்ணிணை
நீருகநெஞ்சகங்குழையமுக்கணன்
வார்கழற்சேவடிவணங்கியேத்தினன். (௩க)

மல்லலந்திருவொடுமகிழ்ந்துவாழினு
மல்லலம்படுகுழியழுந்திமாழ்கினுஞ்
செல்வநின்றுளிலென்சிந்தைநீங்கிடா
நல்வரமருள்கெனநவின்றுபோற்றினன். (௩உ)

இறைவனுமுளமகிழ்ந்துடுக்களியாவையு
முறைதருமுலகின்மேல்விளங்கியொன்பதென்
றறைதருகோளிலொன்றுகிவாழ்கெனப்
பெறலருநல்வரம்பெரிதுநல்கியே. (௩௩)

விதியினிற்போற்றியவிலிங்கம்வீறுசால்
புதனெனும்பெயரொடும்பொலிகவீண்டெனுத்
ததைமலர்க்கொன்றையான்மறையத்தண்ணிலா
மதிமகனிப்பதிவைகினனரோ. (௩௪)

அவ்வுலகிதுவெனவறைந்துசெல்வுழித்
தெய்வநன்மறையவன்சிறப்பினேங்கிய
கவ்வைசால்கவியுலகினிதுகண்ணுறு
மிவ்வுலகியாதெனவியம்பன்மேயினர். (௩௫)

கஙு-வது சிவசன்மா தாரகையுலகமும் புதனுலகமுங்கண்ட

அத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ருஅஅ.

பதினொருவது.

## சிவசன்மா சுக்கிரனுலகங்கண்ட அத்தியாயம்.

கொடியவவுணர்நிருதர்தொழுங்குரவன்பெயர்சுக்கிரனாகும்
படவெவ்வரவமருங்கசைத்துப்பரவைத்திரையினுதித்தெழுந்த
விடமுண்டிருண்டகண்டனருள்மிருதசஞ்சீவினியென்னு
மொடிவில்விஞ்சையினிதுணர்ந்தவரவோனீங்குவைகினனால். (௧)

மிருதசஞ்சீவினியென்னும்விஞ்சையெவ்வாறிவனுணர்ந்தான்
மருவுபெயர்சுக்கிரனென்னவந்ததெவ்வாறோதுகென
வரியமறைதேர்கலைமுனிவன்கேட்பவறுகால்குடைந்தூத
முருகுவிரியும்பசுந்துளவோனன்பர்வகுத்துமொழிகுவரால். (௨)

கூற்றம்வெருவவழலுமிழுங்கொலைவேலந்தகாசுரனென்
றாற்றல்சான்றவவுணனெடுமமரரியாருமமரினெதி
ரேற்றகாலைப்பசுங்குண்டல்முதலாமவுணரிறந்தொழியச்
சீற்றமிகுமோரவுணர்பதிசென்றுகுரவற்கியம்பினனால். (௩)

எண்ணிலவுணரமரர்விடுங்கணையாலாவிவீழ்ந்தொழிந்தா
ரண்ணனீவந்தளிப்பினல்லாதுய்யேமொழியுமெனவுரைப்பத்
தண்ணங்கமலப்புத்தேளையுவமைசாலுந்தனிமுனிவன்
றுண்ணென்றேகியமர்க்களத்திற்சுடர்வேலவுணனொடுசார்ந்தான். (௪)

வீந்தவவுணருயிர்பிழைப்பமிருதசஞ்சீவினியென்ன
வாய்ந்தவிஞ்சைமுறைக்கிழவனறையத்துயிலற்றவர்போல
மாய்ந்தோரியாருமுடனெழுந்துவடிவாள்விதிர்த்துவாய்மடித்துக்
காய்ந்துசுழல்கட்டழல்சொரியக்கனன்றமரிற்கைகலந்தார். (௫)

இறந்தோரியாருமுயிரெய்தியிகல்வெஞ்சமத்தினெதிர்ந்தனரென்
றறந்தாழ்நெஞ்சத்திமையோர்கள்வெருவாநந்தியுடனறையச்
சிறந்தவிசும்புதனிபுரக்குந்தேவர்வெருவாதிருத்தியென
மறந்தாழ்கணிச்சிவானவனைவணங்கிச்சிலாதன்மகனுரைப்பான். (௬)

ஐயவினதுதிருவருளாலருமாதவத்துப்பார்க்கவன்முன்
னெய்துமரியவிஞ்சையினாலிறந்தவவுணரியாவரையு
முய்யச்செய்தானினியமருய்யாரென்னவோதுதலுந்
தையல்பாகன்பார்க்கவனைக்கொணர்தியென்னச்சாற்றினனால். (௭)

சாற்றலோடுநந்தியருண்முக்கட்பரமன்றாள்வணங்கிக்
[illegible]ற்றுமனனும்புறங்கொடுப்பக்கடிதினேகியவுணரணி

விற்றுவிற்றுயிரிங்கோடத்துரந்துவெள்ளிதனைப்பற்றி
யேற்றுக்கொடியோன்முன்னுய்ப்பவிறையுமவனைவிழுங்கினனால். (அ)

மறுவின்முயற்சியில்லாதமக்கட்பேரன்றுமாற்றரிய
பொறியின்மாந்தர்தாளாண்மைபோன்றுமரன்மேலன்பில்லார்
நெறியினாற்றுநல்விரதம்போன்றுநிகரில்கவினின்றி
யெறிவேலவுணர்பெருஞ்சேனைபொலிவற்றிடரினாழ்ந்தனவே. (௯)

வெருவலவுணர்பார்க்கவனைமீட்பவின்னேயெனவெகுண்டு
முரசமார்ப்பவளைநரலமூரித்தானைமுன்னடப்பக்
கருவிமுகிலேய்த்தடங்குடுமிக்கைலையடைந்துகறைமிடற்ற
வரவாபரணன்கணங்களொடும்பொருதானந்தகாசுரனே. (க0)

அவுணர்க்கிறைவன்விடுகணையாலமரர்கணங்கள்வெருவெய்தி
வுவணமுயர்த்தோன்மயிலூர்தியுடன்வெஞ்சினத்தவேழமுகன்
றவளக்களிற்றுப்பெரும்பாகன்முதலாமமரர்தலைப்பெய்து
புவனமுழுதும்புகைப்படலம்போர்ப்பக்கணையால்புதைத்திட்டார். (கக)

தூர்க்கும்படையால்வளைப்புண்டுதுளங்குமவுணர்வெருவெய்தி
யார்க்குமமலைசெவிமுதல்வந்திசைப்பவடுவெங்களிற்றுரிவை
போர்க்குமமலன்வயிற்றுறையும்வெள்ளிகேளாப்புலம்புறுத்
தீர்க்கவரிதாமிடரெய்திப்போமாறுளத்திற்சிந்தித்தான். (கஉ)

சிந்தித்திருக்குங்காலையிளந்திங்கட்கண்ணியிறைவயிற்றி
லுந்துதடந்தேரவுணருடன்றேவருடற்றுங்கொடுஞ்சமருங்
கொந்துகமழுந்துழாயலங்கற்கொண்டன்முதலாம்வானவரு
மந்தமில்லாப்பகிரண்டமனைத்துநோக்கியின்புற்றான். (கங)

அன்னநோக்கியொருநூறாண்டியோகமொழியாதமர்வெள்ளி
பின்னரிறைவன்சுக்கிலமாய்வீழ்ந்துபெம்மானடிபரவ
மன்னுநமதுசுக்கிலமாய்வந்தவாற்றாற்சுக்கிரனென்
றுன்னையுலகம்புகலவினிதுறைதியெனலுந்தொழுதகன்றான். (கச)

அன்னோன்பெயரின்முறைவழுவாதறைந்தேங்கரியினுரிபோர்த்த
முன்னோனளித்தவிஞ்சைமுறைகேட்டிபிருகுமுனிபுதல்வ
னின்னோன்காசிநகரடைந்தோரிலிங்கமமைத்துமலர்தூவிப்
புன்னாள்வழிபாடியற்றிடவும்பரமன்றோன்றக்கண்டிலனால். (கரு)

உலவாகொடியமும்மலமுங்கழுவிப்புலன்களுள்ளடக்கி
யிலையார்கணிச்சிப்பெருமானையிதயகமலத்தினிதிருத்திக்
கலைதேர்முனிவனெய்யரியின்புகைவாய்மடுத்துக்கண்டூகிழா
வுலையாதோராயிரம்பருவமரியவிரதமாற்றினனால். (க௬)

ஆற்றுமரியதவநோக்கியந்தாமரையின்முகைய்விழத்
தோற்றும்பரிதியொருகோடியெழுந்தாலென்னச்சுடர்மேனி
யேற்றுக்கொடியோன்றேன்றுதலுமிதயங்களிப்பமயிர்பொடிப்பப்
போற்றியமரர்முடியுரிஞ்சுபொன்னங்கழலின்மிசைவீழ்ந்தான். (கஎ)

தொழுதுவீழ்ந்தமுனிவரனையெடுத்துமதுசுக்கிலத்தின்
விழையுமகவாய்வருதியென்றுமிருதசஞ்சீவினியென்னும்
பழுதின்மறையுமளித்திவணீபழிச்சுமிலிங்கநின்போராற்
றழைகவென்னவருள்கூர்ந்துதழற்கட்பரமன்மறைந்தனனால். (கஅ)

இன்னவிஞ்சையிவ்வண்ணமடைந்தபுகரினுலகமிஃ
தென்னவிளம்புமுறைகேளாவேகுநெறியினியன்முனிவன்
முன்னரங்காரகனுலகந்தோன்றலோடுமொழிகென்னப்
பொன்னார்திகிரிநெடுமாயனன்பரதனைப்புகல்கின்றார். (கக)

கக-வது சிவசன்மா சுக்கிரனுலகங்கண்டஅத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூ0எ.

பதினேழாவது

# சிவசன்மா செவ்வாய் வியாழம் சனியுலகங்கண்ட அத்தியாயம்.



செவ்வாயுலகீதரிசிந்தியமேல்
மைவார்விழிமங்கையொழிந்திடலும்
வெவ்வாளரவஞ்சடைமீதணியு
மவ்வானவனற்றவமாற்றினனால் (க)

தனைநோக்கியதாழ்சடையோனுதல்ற
பனிவேர்வுயர்பார்மிசைவீழ்ந்ததுவோர்
கனிவாய்மகவாயதுகண்டெறிநீர்
வனைமேகலைமங்கைவளர்த்தனளால் (உ)

மண்மங்கைவளர்த்தலின்மண்மகனென்
றெண்ணும்பெயரெய்தினனீங்கிவனுங்
கண்ணன்புகழ்காசியடைந்தெறிநீர்த்
தண்ணந்துறைவானதிசார்ந்தனனால். (ஙு)

வெங்காமமெறிந்துயர்மெய்ந்நெறியிற்
றங்காவிழைவோடுதவம்புரியப்
பொங்காரழன்மேனிபொடித்தெழலா
லங்காரகனாயினனன்னவனே. (ச)

நெறிசேர்தவநோக்கினைத்தருளான்
மறையோதியமைந்தன்முன்வந்தணுகி
யுறைவார்கடனஞ்சமருந்தியசீ
ரிறையோனுமளித்தனனிவ்வுலகே (௫)

ஏயாவோதுதல்கேட்டினிதேகுதலு
முனமோர்நகர்தோன்றமுதுக்குறைவாற்
றனிநான்மறையோனிதுசாற்றுகென
வினைதீர்கணநாதர்விளம்புவரால். (௬)

வேறு.

பனிமலர்க்கமலவீட்டுறையும்பண்ணவன்
முனமுலகியற்றுவான்முன்னுபோதவன்
மனனிடையத்திரிமரீசியங்கிரா
வெனுமிவர்முதலினோரெழுவர்தோன்றினர். (௭)

அனையரின்மறைபயிலங்கிராவருள்
புனையுமாங்கிரதனென்றுரைக்கும்பொற்புடை
முனிவனையீன்றனனவனுமுக்கணு
னினிதுறைதிம்புனற்காசியெய்தினன். (௮)

அருளினோரிலிங்கமாண்டமைந்துமீயுய
ரிருவிசும்புறைதருதேவராண்டினு
லொருபதினாயிரம்வருடமோங்கிய
பொருவருநற்றவம்புரிந்திட்டானரோ (௯)

ஏற்றிருங்கொடிவலனுயர்த்தியாணர்வெண்
ணீற்றொளிபுழுத்ததெண்ணிலவுக்கண்ணியா
னாற்றருந்தவத்தினுக்கிரங்கியாயிடைத்
தோற்றியாங்கிரதனைநோக்கிச்சொல்லுவான். (௧0)

அளப்பருந்தவமினிதாற்றியன்பினி
னுளத்தையிவ்விலிங்கத்தோடொன்றநோக்குபு
திளைத்தலினுலகெலாஞ்சிவனெனறுனைக்
கிளத்துகநெறிவழாக்கேடில்சிந்தையோய். (௧௧)

அருளினனீயினிதமைத்தலிங்கப்பேர்
பொருவருவியாழத்திற்பொலிகமற்றது
பரவினர்மலர்கொய்ப்பழிச்சினோரெலாந்
தெருளொடும்பூந்தியிற்சிறந்துவைகுவார். (௧௨)

முன்பெருங்குணங்களையுடையவாற்றினு
மென்பெருங்கருணையின்றியைந்ததாலுநீ

பொன்பயிலிருவிசும்பளிக்கும்புங்கவற்
கன்புடைக்குரவனேயாதியிண்டென. (௧௩)

அந்தரதுந்துபிகறங்கியார்த்தெழப்
பைந்தொடியரம்பையராடப்பங்கய
னிந்திரன்முதலினோரினிதினேத்திடச்
சுந்தரச்சுடர்மணிமௌலிசூட்டியே. (௧௪)

ஊற்றிருந்தழிநருவொழுகுகொன்றையேர்
னேற்றவவ்விலிங்கத்தின்மறைந்திட்டானிய
லாற்றல்வாசவன்முதலடைந்துளோரெலாம்
போற்றுதம்பதியிடைப்போயினாரரோ. (௧௫)

ஆதலால்வியாழத்தினுலகென்றுங்கவ
ரோதல்கேட்டேகுமங்நெறியிலோர்பதி
தீதறக்காண்டலுஞ்சிவசன்மாவிஃ
தியாதெனமாதவன்கணமியம்புமால். (௧௬)

வேறு.

அருந்தவக்கிழமைபூண்டகாசிபற்கறன்மென்கூந்தற்
கருந்தடங்கிடந்தவுண்கட்காரிகையதிதியென்னு
முருந்திளமுறுவற்பன்னிமொய்யிருட்பிழம்புசீய்க்குந்
திருந்துசெங்கதிர்கள்பூத்ததினகரன்றன்னையீன்றாள். (௧௭)

தூயநற்றவஞ்செய்தொட்டாவின்றருடுணைமென்கொங்கை
யாய்பிழியறன்மென்கூந்தற்சஞ்ஞிகைதன்னையன்பிற்
காயழற்கடவுள்சான்றாய்க்கடிமணம்புரிதல்செய்தான்
பாயிருள்பிழம்புசீக்கும்பரிதியஞ்செல்வன்றானே. (௧௮)

மல்லலைத்தெழுந்துவீங்கிமறங்கிளர்திணிதோட்கூற்றின்
றொல்லுலகளிக்கும்வைவச்சுதமநுவினையும்வெய்ய
கொல்சினப்பகடுதூண்டுங்கூற்றையும்யமுனையென்னு
ரினீன்றாள். (௧௯)

அன்னவள்வெய்யோன்மெய்யினழல்கதிர்க்காற்றாளாகித்
தன்னிழறன்னையாங்கோரணங்கெனச்சமைத்துநீங்கா
தின்னணமிருத்தியிவ்வாறியம்பனீயென்றுதாதை
தொன்னகர்க்கேகியன்னோர்க்குற்றவையனைத்துஞ்சொன்னாள் (௨௦)

ஆங்கதுகேட்டதாதையழலெழவிழித்துநோக்கி
யீங்கிதுபுரிவர்கொல்லோகற்புடைமகளிரென்னத்
தீங்கிழைத்தனமீட்டேகிற்கதிரவன்சீறுமென்னாத்
தாங்கருந்தவங்கள்செய்வானத்தராகுருவிற்சார்ந்தாள். (௨௧)

பதமழிசருகுதின்றுபரிதியைமன்றத்திலுன்னித்
திதலைபூத்தலர்ந்தகொங்கைசெய்தவம்புரியுமேல்லை
மதர்வைவேனோக்கிசெய்தமாயையமற்றிவளென்றெண்ணுன்
றண்தமலர்க்கூந்தற்சாயாதேவியைத்தழீஇனானே. (௨௨)

சாவணியென்னுமெட்டாமநுவினைச்சனியைவெய்ய
வேவெனமிளிருமுண்கட்பத்திரையென்னுமானே
யோவறும்மன்பினீன்றுமுன்னவருவப்பினீன்ற
மூவரைப்போற்றல்செய்யாண்முனிவொடுமிகழ்ச்சிசெய்தாள். (௨௩)

இகழ்வுமுனிதல்செய்யாண்மநுவினிநிருப்பப்பொங்கி
வெகுளியின்மறலிதாயையுதைப்பத்தாளெடுக்கும்வேலைத்
தகைவறுமுளத்தாளாகிச்சமனையேபுழுங்கச்சீறி
மகவின்றாண்முறிகவென்றுவன்பெருஞ்சாபமிட்டாள். (௨௪)

வேறு.

அன்னைமுனிந்தவாறனைத்துந்தாதைக்கடுங்கூற்றெடுத்துரைப்ப
வென்னைசெய்தபிழையென்மாமறையாதனைத்துமினிநியம்பக்
கன்னலனையதீங்குதலைப்புதல்வர்பிழைப்பினுளங்கனன்று
முன்னவரியகொடுஞ்சாபமீன்றோர்புகறன்முறையன்றே. (௨௫)

மழைமானோக்கிகொடுஞ்சாபந்தீர்தற்குனதுமலரடியிற்
புழுவாய்மடுத்துச்சிலதசைகளருந்தியொழிகவெனப்புகலா
விழைதாழ்பொம்மன்முலையணங்கினுள்ளமின்னேயறிவனெனும்
விழைவாற்றனதுமனைக்கிழத்தியுறையுமிருக்கைமேவினனால். (௨௬)

அன்னமென்னவெதிர்போந்துவணங்குமணங்கின்முகநோக்கி
முன்னரீன்றமக்களொருமூவர்தம்மைமுனிவுசெய்து
பின்னரீன்றமக்கடமைப்பெருகுமுவப்பிலளித்திடுத
லென்னையென்னவுளம்வெருவியாதுமுரையாதிருந்தனளால். (௨௭)

உரையாதிருப்பநிகழ்ந்தவெலாம்யோகினுணர்ந்துகொடுஞ்சாபம்
புரிவாளினைந்தவெங்கதிரோனுள்ளமோர்ந்துபுழுகொழுகு
மருவார்கூந்தற்செய்தியெலாமறையாதுரைப்பப்பொறையதனு
லருண்மீதூரமுனிவகற்றிமாமன்றன்பாலடைந்தனனால். (௨௮)

இரவியடைந்தென்மனைக்கிழத்தியாண்டையாளென்றுரைத்திடலும்
பொருவின்னதுகதிர்வெம்மைக்காற்றாளாகிப்பெரும்போக
மருவிநுகருத்தரகுருவிற்பெட்டைப்பரியின்வடிவாகி
யரியபெருமாதவமினிதொன்றாற்றாநின்றாளாயிழையே. (௨௯)

அம்மெலோதியிடத்துறையினழற்றாநினதுகொடியகதிர்
வெம்மையடக்கல்வேண்டுமெனவிடைகொண்டேகிப்பூண்சுமந்த

பொம்மன்முலையாங்கிருந்துதவம்புரிதனோக்கியிருள்சீக்குஞ்
செம்மற்கதிர்வானவனவள்பாற்பரியினுருவிற்சென்றடைந்தான். (கo)

மருவுபொழுதிற்குன்முகிழ்த்துமதர்க்குங்குவளைக்கருநெடுங்கட்
புரிமென்கூந்தல்யார்கொலெனப்புரியுமருமாதவணீங்கி
வெருவியோடப்பின்றொடரும்வேலைத்தாதுமூக்கின்வழிச்
சொரிதலொடுமருத்துவரோரிருவரதனிற்றோன்றினரால். (கக)

ஆயகாலைவெருவேனின்னல்பன்யானென்றரும்பெறறன்
மேயவுருவிற்றோன்றுதலும்விழைவினுற்றுந்தவப்பேற்று
லேயகொழுநற்சேர்ந்தனமென்றிரவியோடுமவளிருப்பச்
சாயாதேவியினிதீன்றசனியுங்காசிநகரடைந்தான். (கஉ)

ஆங்குமேவித்தன்னுடைப்பேரதனுலிலிங்கமொன்றமைத்துப்
பாங்கினியற்றுமருந்தவததானெடுவெண்டிங்கட்பைங்கண்ணிக்
கோங்கமுலையாளொருபாகன்புரியுமருள்மேற்கொண்டுவகை
யோங்குவெய்யோன்றருபுதல்வனினிதினுறையுமுலகிதுவே. (கங)

கங்கையெறிநீர்த்திரைகொழிக்குங்கட்வுட்காசிநகருறைபு
மங்கைபாகன்சினகரததின்றென்பால்மருவிவீற்றிருக்கும்
பொங்குகதிர்வானவனீன்றசனிப்பேரிலிங்கம்போற்றுமவ
ரங்கணுலகிலெஞ்ஞான்றுமழியாப்பெரும்பேறடைகுவரால். (கச)

என்றுகூறுமுறைகேளாவேகுநெறியிலைம்புலனும்
வென்றபெருமாதவனொழுவருறைதனோக்கிவிழிகளிப்பக்
கன்றுசினவெங்குறும்பெறிந்தமறையோரிவரார்கழறுகென
மன்றல்கமழுந்துழாயலங்கன்மாயனன்பர்வகுத்துரைப்பார். (கரு)

கஎ-வது சிவசன்மா செவ்வாய் வியாழம் சனியுலகங்கண்ட
அத்தியாயம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கூசஉ.

---

பதினெட்டாவது.

## சிவசன்மா சத்தவிருடிகளுலகங்கண்ட அத்தியாயம்.



அருந்தவம்புரியுமீங்கிவணையாய்மறை
திருந்துமேழிருடிகளென்றுந்தேமல
ரிருந்துலகியற்றுமேழ்பிரமனொன்னவும்
விரிந்தநூற்கேள்வியோர்விளம்புவார்ரோ. (க)

மலர்தலைநிலம்புகழ்மரீசியத்திரி
புலகனைப்புலத்தியன்கிரிதுபோற்றரு

மிலகுபேரங்கிராவசிட்டனீங்கிவர்
நலனுறுபன்னியர்நாமங்கேட்டியால். (உ)

தேசுறவிளங்குசம்பூதிதேவரும்
பேசருசூயைவான்சமைபிரீதிமற்
றோசைபோஞ்சந்ததிமிருதியோங்கிய
வேசிலாக்கற்பருந்ததியென்றோதுவார். (௩)

அருமறைநூற்பொருள்வடித்தவந்தணன்
பொருவறுமுலகெலாம்புனிதமாதவர்த்
தருதிறொன்றிசைத்தலுமவருந்தண்புனற்
றிரைதவழ்காசியிற்சென்றுமேயினார். (௪)

தம்பெயராற்றிகழிலிங்கந்தாபித்தோ
ரும்பர்வேட்டவியுணத்தவமுஞற்றலும்
வம்பவிழலங்கலங்கொன்றைவார்சடை
நம்பன்முன்றோன்றியிவ்வுலகைநல்கினான். (௫)

இருடிகள்பன்னியரெழுவர்தம்முளங்
கருணைசாலருந்ததிகடவுட்கற்பினைத்
திருமறுமார்பனுமயனுஞ்செல்வியு
முருவுடைவாணியும்விழையவோதுவார். (௬)

முப்புரிநூலணிமுனிவரேத்திய
மெய்ப்பொருளிலிங்கத்தைவிதியிற்போற்றுவோர்க்
கெப்பொருளெய்துதற்கரியமற்றவர்
செப்பரும்பிரமநற்பதத்திற்சேர்குவார். (௭)

கஅ-வது சிவசன்மாசத்தவிருடிகளுலகங்கண்டஅத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுசுக.

---

பத்தொன்பதாவது.

## துருவன்செய்கை அத்தியாயம்.



எனவுரைத்தேகுழிமேருவுச்சியிற்
கனைகதிர்க்கயிறுகைப்பற்றிக்கண்கவர்
தனியொளிபரப்பியசோதிசக்கரந்
துனைவினிலியற்றுவான்யாவன்சொற்றிரால்.

என்றருமறையவனியம்பவீர்த்துழாய்
மன்றனுறல்கலம்பரிதிமார்பினன்
பொன்றிகழ்திருந்தடிபோற்றியைம்புலன்
வென்றசீரடியவர்விளம்பன்மேயினர். (உ)

வேறு.

மைத்தோய்குமாயிரவாய்ப்பாம்பின்முடிக்கிடந்தபுவிபரிக்குந்தெண்ணீர்
முத்தாரந்துயல்வருந்தோட்சுவாயம்புமனுவாயமூரிவேலா
னுத்தானபாதனெனுமொருமகவையுவப்பினொடுமீன்றனல்லோன்
மைத்தாழ்பூங்கரியகுழற்சுருதியொடுசுநீதியையும்வதுவைசெய்தான். ()

கன்னல்பசுந்தேனொழுகுகனிபழுத்தாலனையமொழிக்காலவேற்கட் [ல்லி
பொன்னவிருஞ்சுணங்கணிந்தபொம்மன்முலைச்சுருதியெனும்புரைதீர்வ
யன்னவளுத்தமனென்னுமகவீன்றாள்சுநீதியெனுமறன்மென்கூந்த
லெங்கிலமும்புகழோங்கவீங்கிவனையருந்தவஞ்செய்தினிதினீன்றாள்.(௩)

மைதோய்ந்தமதர்நெடுங்கட்சுருதியருண்மைந்தனைத்தன் மடியின்
வைத்து, நெய்தோய்ந்தவடிவேலானிறையுளேமானரியணையினிருக்குமே
ல்வை, யைதேந்துமகலல்குற்சுநீதியுந்தன்மகவினைநல்லணிகள்பூட்டிக்,
கொய்தாமம்புனைந்துய்ப்பவவனுமபோய்த்தாதையடிகுறுகினனே. (௪)

சென்றடைந்தமழலை மொழிக்கிண்கிணிக்காற்றளர்நடையசிறுவன்
போந்து, வென்றிவடிவேல்வேந்தனரியணைச்சென்றேறுதலும்வெகுண்
டுநோக்கிக், குன்றிரண்டுதாங்கியெழில்கனிந்தொழுகுகற்பகப்பூங் கொம்
பரன்னாள்,கன்றுசினத்தொடும்வேந்தன்மடியேறலெனவிலக்கிக்கனன்று
சொல்வாள். (ரு)

நன்மரபுதனிற்றோன்றியரசன்மணிமுடிக்குரியநங்கையாய
வென்வயிற்றிற்பிறவாமற்பொறியில்லாளவ்வயிற்றினியைந்தமைந்தா
மன்னுறையுமரியணையிலேறறகாதெனவுரைப்பமைந்தன்மாழ்கித்
தன்னமர்தாய்மருங்கணைந்து தளர்வோடுமிவையனைத்துஞ்சாற்றினனே.

உரைக்குமகவினைத்தனதுகுமங்கிருத்திமெய்தழுவியுச்சிமோந்து, வ
ரைத்தடந்தோண்மன்னவன்றன்மனைவியரிற்றலைமைபெறுமாட்சிதன்னா
ல்,விருப்பமுறுதன்புதல்வற்கல்லாதிவ்வரசுரிமைமேவாதென்னுஞ், செ
ருக்கினுரைத்தனளவள்போற் றவம்புரியாவெவ்வியமெவன் செய்வதென்
றான். (அ)

அருந்தவத்தாற்பெறலரியவரசுரிமையாங்கவள்செய்தடைந்தாளெ
ன்னில், வருந்தியருந்தவமாற்றிவானவர்க்கும்பெறற்கரிதாய்வயங்குசோ
தி, திருந்துமுயருலகடைவன்விடை,தருதியெனவிருதாட்சென்னிசேர்த்
தான், பொருந்துதிரைக்கடற்பிறந்தவமுதனையமழலைமொழிப்புதல்வன்
றானே. (௯)

இருநான்குபருவமின்னுங்கிறைந்திலதுநெடிபடுகானிடையிற்போகி யொருவாதுதவம்புரிதற்கொன்றுமோகிற்பிரிந்து ழுய்வேன்கொல்லோ வெருவாவுள்ளுயிர்பதைப்ப மாற்றவுமொழிவிடத்தால் வெதும்புவே னின், னரிதாயமழலைமொழியமிழ்தருந்தா தாற்றுவன்கொலந்தோவென் றாள். (௧0)

அளியரற்றுநறுங்கூந்தலிவ்வண்ணமழுதரற்றியவலங்கூரத், தொளி பழுத்ததண்பணையிற்றுள்ளுகயல்செழுங்கமலப்பொகுட்டிற்றுஞ்சும், வ ளவயல்சூழ்நாடொருவிமழலைமொழிக்கிண்கிணிக்கான்மைந்தனேகி, மு ளியரில்சூழ்கொடுங்கானில்வெருவருமோர் தவமினிதுமுயலுமேல்லை

அழலூட்டிப்பின்னுகருமஞ்தொழிலேழ்முனிவரராண்டடைந்திக் கானத், துழைவேட்டுத்தவம்புரிந்தாயாணீயெனவவர்தாளுவப்பினே த்தி, மனழயோட்டுகொடைத்தடக்கையுத்தானபாதனருண் மதலையெ ன்றான், குழையோட்டிக்குமிழ்மறியுங்கொழுங்கயற்கட்சுநீதியருள்குமர ன்றனே. (௧௨)

உடைதிரைநீர்க்கடல்வலயம்பொதுநீக்கித்தனிபுரக்குமரவோன்மை ந்த, னெடிபடுகானிடைப்போந்து தவம்புரிதறகுறறவெவனிகழ்த் துகெ ன்ன, வடலரியாசனத்திருக்கைமறுததனடாயாங்கதனுலமரரியார்க்குந், தொடர்வரியபதம்பெறுதற கடைந்தனனியான்பெறுமுறைநீர் சொல்க வென்றான் (௧௩)

கன்னிகறும்பசுந்துளவின்குழையலங்கறுயல்வருதோட்காயாமேனி முன்னவன்பொன்னடிபோற்றின்முடியாதபொருளுளவோமுருகுநாறிப், பொன்னவிர்பூந் தாதவிழ்க்கும்பூங்கமலப்புத்தேளுமறுவுமன்னேன் றன்னுருவாகியவெழுத்தோரீராறுநவின்றெவர்க்குந்தலைவரானர். (௧௪)

கன்னியிளம்பசுந்தாற்றுக்கதலிவனம்விளிம்புடுத்தகழனிநாட்டு மன்னனருந்தவம்பேற்றின்வருபுதல்வவுலகளந்தமாயோன்செய்ய பொன்னடியையினிதயப்பூங்கமலத்தினிதிருத்திப்புலவர்யார்க்கு முன்னரியபதம்பெறுதியென்வுரைத்துக்கடவுண்மறைமுனிவர்போனர்.

௩௧-வது துருவன்செய்கைஅத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௬௪.

---



இருபத்தாவது

## துருவன் தவஞ்செய்த அத்தியாயம்.



துருவனுண்டகன்றுமதுவனத்தெய்திச்சுடருமிழொருமணிகிடந்த
திருமறுமார்பன்கழலிணைநினைந்துதிகழொளிதிசையெலாம்போர்ப்ப
வரியமாதவமொன்றியற்றலும்வெருவியார்பதமடைவதற்கின்னோன்
புரிகுவதிதனைக்கெடுப்பனென்றமரர்புங்கவன்புந்தியினோர்ந்தான். (க)

கருங்கயன்மருட்டிக்கடைக்குழையெறிந்துகாலவேல்பொருவுவாட்டடங்க,ணரம்பையர்குழாத்தோடளிவிருந்தயருமைங்கணைக்கிழவனைவிடுப்பிற், றிருந்துமென்மழலைச்சிறுவனுதவுற்கலவியிற்சிந்தைசெய்கிலன்மேல், வருந்திநெஞ்சழிவானலகையாலென்றுவன்பெரும்பேய்க்கணம்விடுத்தான். (உ)

விடுத்தவெங்கனற்க ணலகைமற்றெவையும் வெருவரவியற்றவும்வெருவான், சுடரப்படைத்திகிரியண்ணன்மேலன்பின்றுணிவுகண்டாங்கொர்பேய்விரகா,லடுத்தவனன்னையுருவுகொண்டெய்தியநம்பெறற்குமரவுன்றனையான், கெடுத்துயிர்வாழேனெனமருட்டிடவுங்கேடிலானுளந்துளங்கிலனும். (௩)

மழலைய ஞ்சிறுவனருந்தவம்புரியுமனவலிநோக்கியுள்ளுணடுங்கி, யழவிழிப்பனுஉத்தாட்கூளிமற்றியாவுமமரர்கோன் மருங்கணைக்கெம்மால், விழைவொடுஞ்சிறுவனருந்தவமபுரிதல்கெடுக்குமாறரிதெனவிளம்ப, வுழையுறுமமரர்குழுவொடுமலரோனுறையுளினெல்லையினடைந்தான். ()

தாளதாமரையிலரசுவீற்றிருக்குஞ்சதுமுகக்கடவுளைவணங்கி
வாளராமுடியிற்கிடந்தபார்பரிக்குமனுகுலத்தோன்றலாங்கியற்று,
நீளிருந்தவத்தாலார்பதம்பெறுவானினைந்தனன்கொல்லெனநிகழ்த்த[வ்
வாழுறும்பதத்தில்விழைவிலன்மேலாம்பதம்பெறுமருத்தியினழுந்தர,

ஆங்கவன்மேலாம்பதம்பெறுநீவிரடைந்திடும்பதமெவற்றினுக்கு
நீங்கருமுறுதிபயக்கிடுமென்னநான்முகனிகழ்த்தலுமகிழாப்
பூங்கழல்வணங்கியமரர்தம்பதத்திற்போயினர்துருவனுண்டியற்றுந் [வன்
றீங்கறுதவத்தாலுளமகிழ்ந்தருள்கூர், செங்கண்மாலவனுழைச்சேர்ந்து

கனகடல்வயிறுகுழையமத்தெரிந்துகடவுளர்க்கின்னமுதளித்த,வளை துழாயலங்கறுயல்வருந்தடந்தோண்மரகதவண்ணனைநோக்கி, நினைவரும்பிழைவிற்கண்பனிதூங்கநெஞ்சகங்குழைந்துநெக்குருக, வினையுநக்கையர்க்கோரிதயம்விட்டகலமென்மலர்ச்சேவடிபணிந்தான். (எ)

குவலயம்பொதிந்தருளைகழன்மூளரிவணங்குறுகுமரனையெடுத்தாங்
குவகையங்கடல்வாய்மடைதிறந்தென்னவுளங்கவர்முகிணைகைபுரிந்துன்
றவமினிதுவந்தேம்வேட்டனயாவுந்தருகுவமியம்புதியெனலு
மவையறகோற்றவரசிளங்குமரனுரணற்பழிச்சுகின்றனனால். (அ)

உ0-வது துருவன்தவஞ்செய்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஎஉ.

இருபத்தொன்றாவது.

துருவன்பதம்பெற்றஅத்தியாயம்.



குரைகழலமரர்கணத்திலிந்திரனீகோட்களிற்பரிதிவானவனீ
யுரைபெறுமுலகினுன்முகனுறையுமுலகநீயுடைதிரைக்கடலிற்
றிரைகொள்பாற்கடனீசடவுண்மாநதியிற்றீம்புனற்கங்கைநீயுயர்ந்த
வரைகளிலிமயப்பொருப்புநீயாவின்வளமிகுசுரபிநீயாமால். (க)

அரியநான்மறையிற்சாமநீயெழுத்திலகரநீயருமறைப்பொருளிற்
புரைதபநின்றவுபநிடதமுநீவேள்வியிற்புரவிநன்மகநீ
விரைவிலிவ்வளிநீவருணமோர்நான்கின்வேந்தனீமருவியகரணத்
துரைபெறுமனநீபூதமோரைந்திறுறுகிருவிசும்புநீயாமால். (உ)

ஊதியமதனிலருமகப்பேறுமுதியநீயுகநான்கி
லாதியாமுகநீதருக்களிற்சிறந்தவரசுநீயுடுக்களியானவயினு
மேதகவிளங்குபூசநீபுல்லிற்றருப்பைநீவிழையுநன்பொருளின்
மாதர்நீகருமமனைத்தினுஞ்சந்திவந்தனைமற்றுநீயாமால். (ங)

கொடிகளிற்சோமக்கொடியுநீயுலகங்கூறியயோகமோரெட்டி
லொடிவறுபிராணயாமநீபுவனமனைத்துநீயெனவுவந்தேத்தி
யடிமலர்தொழுததுருவனைநோக்கியாய்பிழிக்குறுந்துளிபிலிற்றுங்
கடிகமழ்படலைப்பைந்துழாயலங்கற்கடனிறவண்ணனீதுரைப்பான். (ச)

கழிபெரும்பதங்களெவற்றினுமேலாம்பதமுறக்கருதினையுணர்ந்தேம்
விழைவுறுபூதமியாவையுமன்னமயத்தினின்மேவுமவ்வன்ன
மழையினிற்றேன்றுமம்மழைதனக்குமருவுகாரணமெனவிளங்கு
மொழுகொளிச்சுடரோனவன்முதற்கோளுநாட்களுமும்பரினுலவும்.()

காற்றெனுங்கயிற்றின்வீக்கியுள்ளொளியகறங்கெனவிடையறாதுழலு
மாற்றருஞ்சோதிச்சக்கரந்திரித்துவடவரைமுகட்டினுன்றுயோ
டாற்றலீனிருத்திதற்பமொன்றிறக்குமமதியுமியானுமற்றீதனை
யேற்றுயர்கொடியோனருளினலடைந்தேனீந்நிதுனிளக்களித்தனனால்()

சலந்தரனுடலம்பிளப்பதற்கிறைவன்ருமனைத்தாளினலமைத்த
வலம்படுதிகிரிபெறவதைவிரும்பிவைகலும்வண்டுபாண்மிழற்ற
வலர்ந்தசெந்தோட்டுக்கமலமாயிரங்கொண்டருச்சனைபுரியுழியொருநா
ளிலக்கிதழ்க்கமலமொன்றிலாதென்கணிடந்தவனடியினிட்டனனல் (எ)

துகிர்விழுதோட்டிப்படர்ந்தெனக்கிடந்த நூய்சடையண்ணலுண்மகி
ழ்ந்து, திகிரியம்படையன்றளித்தனனதனும்றெண்டிரைக்கருங்கடற்புவி
யு, மகலிருவிசும்பும்பாதலமுழுதுமளித்தனனினக்குபானளித்த, புகல
ரும்பதமுங்கிலைபெறவேண்டிற்புராரியினருள்பெறவேண்டும். (அ)

காளமுண்டிருண்டமணிமிடற்றெந்தைகாசியிற்கார்த்திகைமதியி
னுள்விழவயர்தரெழுவதற்குளத்தினயந்தனல்வருதிநீயென்று
நீளிருந்தவஞ்செய்துருவனோடலங்கனேமியோனெழுவிசும்பின்
றேளிடைப்போகிக்காசியினெல்லேதோன்றழியதனினின்றிழிந்தான்.()

துருவனோடேகித்திரைபொருங்கடவுட்டிமேணிகன்னிகையாடி
யுருகியுண்ணெகிழக்கண்பனியுகுப்பவுவகையின்மெய்ம்மயிர்பொடிப்பக்
கருமணியனையதிருமிடற்றெந்தைகனைகழற்சேவடிவணங்கி
யரிதிறேரிலிங்கமிவ்வுழியமைப்பினதன்பலனளவிடலரிதால். (௰)

என்றினிதுவந்துமழகதிர்விரிக்கும்பொற்றுகிலெழின்மருங்கசைத்
த, மன்றலந்துளவோனுரைத்தலுந்துருவன்வயித்தியநாதர்நம்மருங்கி
னொன்றியவுளத்தோடிலங்கமொன்றமையாவுஞற்றருந் தவமினிதாற்ற
க், கொன்றையங்கண்ணிப்படர்சடைக்கூத்தன்விழைவொடுமாங்குவந்த
டைந்தான். (௧௧)

பழிபடுபுலன்களடக்கிநீநோற்றபரிசினுற்சிறுவவிப்பதத்தி
னழிவுறுதிருத்தியெனவரநல்கியாதிபம்பரமனேகுகலும்
விழைவொடுந்துருவனிப்பதமதனின்மேவிவீற்றிருந்தனன்பசிய [ன்
கழையிசைத்தாவின்கணங்குவித்தருளுங் கண்ணனுந்தன்னகரடைந்தா

துருவனுண்டமைத்தவிலிங்கமேத்திடுவோர்தூயநன்சரிதைகேட்டரு
ள்வோர், திரைபொருதுருவகுண்டநீர்க்கரையிற்றென்புலத்தவர்கடன்க
ழிப்போர், விரிதிரையளக்கர்சேறுபட்டொழிய மென்புனன்மொண்டு
கொண்டெழுந்த கருமுகில்வினர்ப்பவிருள்படுமேனிக்கண்ணன்வாழ்ப
தத்தில்வீற்றிருப்பார். (௧௨)

௨௧-வது-துருவன்பதம்பெற்ற-அத்தியாயம்-முற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-௬௮௫.

இருபத்திரண்டாவது.

## சிவசன்மர் மகலோகமுதல் நாலுலகங்கண்ட

## அத்தியாயம்.

என்னத்துருவன்சரிதையெல்லாமியம்பியேகுமந்நெறியிற்
றுன்னவரியமகலோகந்தோன்றநோக்கிச்சிவசன்மா
மன்னுமுலகமியாதென்னுமறங்கூரவுணர்மிடல்சாய்த்த்
பொன்னந்திகிரிவலனுயர்த்தபுத்தேளடியாபுகலுவரால் (௧)

இனையலோகமகலோகமிதனினறவமலிதுளவம்
புனையுங்கடவுள்பதம்பணிவோர்கற்பகாலம்பொருந்துவரென்
றனையோருரைப்பமுன்றோன்றுமுலகமியாதிங்கறைதிரெனச்
சனகாதியர்வாழ்சனலோகமிஃதென்றுணரச்சாற்றினரால். (௨)

ஏகுநெறியிலோருலகந்தோன்றலோடுமியாதெனலும்
யோகினிருந்தோரோதிங்களுண்டிநீத்தோரொருபருவ
மாகம்வருந்தவிமையாமலுறைவோருதிர்ந்தசருகயில்வோர்
மோகமெறிந்துமூச்சவித்தோர்திங்கட்கொருகான்மூச்செறிவோர். (௩)

இன்னோருறையுந்தவலோகமீதென்றியம்பியேகுதலு
முன்னோருலகமெதிர்தோன்றமுள்ளரிப்பொகுட்டின்வீற்றிருக்கு
மன்னோனுலகமெனமொழியாவன்னமுயர்த்தமறைக்கிழவன்
பொன்னார்கமலச்சேவடிகள்போற்றலோடுமவன்புகல்வான்: (௪)

வேயூலாவின்கண்குவித்துவெற்பொன்றேந்தியினிதளிக்குங்
காயாமலரினிறம்பழுத்தகமலக்கண்ணனுவந்துறையு
மாயாபுரியினிறந்தனல்வழுத்தற்கரியவெவ்வுலக
மேயாதுனக்குநீநினைப்பினெழுதாமறையின்பொருளுணர்ந்தோய். (௫)

ஆடகேசனுறைபுவனமதனிற்சிறந்ததிலாவளித
நீடுதரங்ககடலுடுத்ததீவோரேழுங்கெறிந்த
பீடார்சம்புத்தீவதனிற்பிரித்தகண்டமொன்பானில்
வீடில்பரதகண்டமொன்றேகருமபூமியெனவிளங்கும் (௬)

கமைசேர்மற்றைக்கண்டமெட்டிற்கன்பர்போகக்குறைநுகர்வா
ரியயத்தென்பாலொன்பானுயிரமென்றேதுமியோசனையி
னமையுமிமையவிந்தத்துள்மைந்நிலம்புண்ணியபூமி
யமுனைநதிக்குங்கங்கைக்குமிடையாகிலமந்தர்வேதி. (௭)

பொருவில்கடவுணிலக்கம்மிறப்புக்குக்குருக்கேத்திரஞ்சிறந்த
துறைசானைமிசாரணியம்தனிற்சிறந்ததொலைக்குநெடுந்
திரைசேர்பிரயாகையாங்கதனிற்சிறந்ததுதனிற்றெய்வநன்னீர்க்
கரைசேர்கங்கைசூழ்கிடந்தகாசிப்பதியேசிறந்ததால். (௮)

அன்னவாற்றலாங்கிறந்தோர்முத்தியண்டவருமறையோய்
நன்னதுள்ளம்விழைந்ததுவுமஃதென்றுணர்ந்தேனெடுமாயன்
றன்னையேத்துமடியர்சினைக்குரைப்பமொனலுநதாழ்ந்திறைஞ்சி
மன்னுகணங்கனொடுமாயன்பதத்திற்செல்வான்வழிக்கொண்டான். (௯)

௨௨ வது சிவசன்மா மகலோகமுதல்நாலுலகங்கண்ட
அத்தியாயம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௬௯௪.

இருபத்துமூன்றாவது.

சிவசன்மாவுக்கு அண்டத்தினளவுகூறியதும் மாலுக்கு
முடிசூட்டியதுமாகியஅத்தியாயம்

சடந்தயோசனையெத்துணையெத்துணைகடப்பான்
கிடந்தயோசனைமுதலியென்றடைகுவன்கிளர்கொ
றுடன்றுமுக்குறும்பெறிந்துயர்யோகினிநாளு
மடைந்தவந்தணன்கேட்டலுமாங்கவரறைவார். (௧)

ஏழ்தடங்கிரியேழ்பொழிலேழ்பெருந்தீவு
மாழ்பெருங்கடலேழுடையவனியினெல்லை
கேழ்கிளர்ந்தசெங்கதிரவன்கிளர்வெயிறகற்றை
சூழ்கிடந்தளவெத்துணைசொல்லினத்துணையே. (௨)

அன்னபூதலத்தும்பரினலர்கதிர்ச்செல்வன்
மன்னுமண்டலமிலக்கமியோசனைமதிக்கடவு
டுன்னுமண்டலமதனின்மேலத்துணையதன்மேன்
மின்னுதாரகைமண்டலம்விளம்பினற்றாமால். (௩)

ஈதின்மேற்புதன்மண்டலமிலக்கமோரிரண்டா
மோதுசுக்கிரனுலகதன்மீதிரண்டிலக்கங்
கோதில்சேயுலகத்துணைகுணிக்கின்மேலதனின்
மீதுபொன்னுலகத்துணையோசனைவிளம்பும். (௪)

இதனின்மேற்சனிமண்டலமிலக்கமோரிரண்டாங்
கதனின்மேலெழுமுனிவரரமர்ந்திணிதுறையுங்

துதிகொண்மண்டலமிலக்கமொன்றதனின்மேற்றுருவன்
பதமிலக்கமொன்றியோசனையாமெனப்பகர்வார். (ரு)

வேறு.

பூதலத்தின்மேற்பதினைந்திலக்கமாகும்புவலோகமதனும்பர் சுவருலோக, மேதமறுமெண்பத்தைந்திலக்கமாகுமிதனின்மேன்மகலோகமிரண்டுகோடி, யோதுசனலோகமதன்மேலெண்கோடியும்பரிற்பன்னிருகோடிதவலோகஞ்சேர், மேதகையவாங்கதன்மேலீரெண்கோடிவிளங்குறுசத்தியலோகம்விளம்புங்காலே. (சு)

ஆங்கதன்மேற்பிரமபதமூன்றுகோடி யதன்மேன்மாயவனுலகமூன்றுகோடி, யோங்குமதன்மேற்புனிற்றுத்திங்கள்வேணியும்பர்பிரானுறையுலகநான்குகோடி, யீங்கிதன்மேலிவைமூடுமண்டப்பித்தியொருகோடிநிலமுதலாயீறுகாறு, நீங்கருமைம்பதுகோடியாகுமேலோர்கிழ்த்திடுமியோசனைமறைநூனெறியினின்றேய். (எ)

ஓதியவிம்மூதுலகமனைத்துந்தோன்றவுலப்பரியதிருவருளாலினிதுநின்று, காதலுடன்காத்தழிக்குமிச்சைக்கென்றுங்காரணமாய்க்காரணாதீதமாகிச், சாதல்பிறப்பிவையின்றியநாதியாகித்தற்பரமாய்த்தனித்திகழுமவனேதெண்ணீர்ச், சீதநெடுந்திரைக்கங்கைபுடைசூழ்காசித்திருநகரில்வீற்றிருக்குஞ்செல்வன்றானே. (அ)

தூங்குமெயிலொருமூன்றுமெரியமுன்னந்தூநகைகோட்டியபரமன்சுடர்செய்நேமித், தாங்கியசெந்தாமரைக்கட்டேவைநோக்கிச் சராசரங்களனைத்தினுநீதானேயாகி, நீங்கரியமுத்தொழிலுமியற்றுகென்னநிறையுளமானரியணையிலினிதினேற்றி, யோங்குகதிர்நவமணியின்முகடுவேய்ந்தவொழுகொளிச்சாய்மரைகளிரண்டுவப்பினல்கி. (கூ)

பழுவயிரச்சலாகையொருகோடிவேய்ந்து பாயிருள்சீத்தொளிர்காம்புகொளுவிச்செய்ய, வழலுமுழுமணகுயின்றமகுடஞ்சேர்த்தியாயிரமியோசனைபரப்பினளவைத்தாக, வழுவறுநூற்கடல்கடந்ததெய்வத்தச்சன்மனத்தினான்மிகவருந்தியினிதிற்செய்த, முழுமதியினெழில்கவற்றிநிலவுகாலுமுத்தநெடுந்தனிக்குடையொன்றுவந்துநல்கி. (கo)

புலவுகமழ்சுடரிலைவேலமரர்விஞ்சைப்புரவலர்கின்னரரியக்கர்சித்தர்நாகர், குலமகளிரொருகாழ்முத்தணிந்துவீங்குகொம்மைமுலைப்பொறைசுமந்துகுழைந்துதேம்பி, யலமருநுண்ணிடைவருந்தநடிப்பவிண்ணோரஞ்சலிசெய்தலர்மாரிபொழிந்துபோற்ற, மலைமகடன்செழுங்கரத்தாற்கலசக்கள்பூட்டிமலர்மகளையாங்கவன்பாலமைப்பமன்னோ. (கக)

பொழிகதிர்மித்திலங்கொழிக்கும்புணரியேழிற்புரிவளைசூலுளைந்த லறிமுத்தங்காலு, மொழுகுபுனற்கங்கைமுதனதியிற்றெண்ணீ ரொள் ளொளிப்பொற்குடத்தேந்திமுறையினாட்டி, மழகதிருமிருளவெயிற்கற் றைகாலுமணிமவுலிசூட்டிமலர்ப்பொகுட்டின்மேய, பழமறையோன்மு தலமரரியாரும்போற்றிப்பணிகவெனமதுமலர்த்தாட்பணிதல்செய்தார்.

குழந்தைமதிக்கோடுரிஞ்சமுகைவாய்விண்டுகொழுநறவுகொப்பளி க்குங்கொன்றைமாலைத், தழங்குதிரைப்புனற்கங்கைபசும்பொன்றூற்றுந் தன்மையெனத்தாதுகுக்குஞ்சடிலத்தெம்மான், முழங்குதிரைப்பாற்கட லினடுவட்டுஞ்சுமுகுந்தன்முகநோக்கியநம்பொருளோடின்பம், வழங்கு திரீயெவ்வுயிர்க்குமுத்தியாமே வழங்குதுமும்மலமெறிந்தமதியினோர்க் கே. (௬௩)

ஆற்றல்வடிவாட்டடங்கையவுணராலுமகல்விசும்புதனிபுரக்குமமர ராலு, மாற்றரிதாயெவ்வுயிர்க்குமயக்கஞ்செய்யு மாயைதினைக்களித்தன மெம்மிடப்பானியே, யூற்றிருந்துநறவொழுகுந்துளவத்தாரோயுனையிக ழ்ந்தோரெமையிகழ்ந்தோரெனவோதி, யேற்றையிருங்கொடியுயர்த்த கங்கைவேணியிறைவனுயிர்தடங்கயிலையெயதினனே. (௬௪)

பொறிவரிவாளரவுடைப்புடைக்குஞ்சிற்றப் புள்ளரசுவலனுயர்த்த பூவைவண்ணன், மறியிளமான்கரத்தேந்துமண்ணல்செய்யமலரடிதன் மனத்திருத்திமகிழ்ச்சிகூர்ந்து, பெறலரியவைகுந்தத்தடைந்துநீங்தேன் பில்குபொலந்தாதுக்குந்தருவினீழ, லுறைதருவானவர்ப்பேணியவுணர் ச்செற்றுங்குறைந்தனனுன்மறைதெரிந்தவுணர்வின்மிக்கோய், (௬௫)

மூதுலகினிலையனைத்துமொழிந்தோமீளாமுத்திபெறுந்தன்மையினி மொழிவல்கேட்டி, தீதறுமாயாபுரியினுடலநீத்த செய்தியினல்வைகுந்த த்தினிதுமேவிக், காதலுறுமரமகளிர்குமுதச்செவ்வாய்க் கதிர்முறுவலி ன்னமுதங்களிப்பமாந்திப், போதுறைநான்முகன்யாண்டி லோராண் டெல்லைபுத்தேளிரடிபரவப்பொருந்திவாழ்வாய், (௬௬)

௨௧-வது சிவசன்மாவுக்கு அண்டத்தினளவுகூறியதும் மாலுக்கு

முடிசூட்டியதுமாகிய அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௭௧௦.

---

## இருபத்துநான்காவது

# சிவசன்மா முத்திபெற்ற அத்தியாயம்.

பாகடுகுகலைக்கடைசியர்களைந்தபனிமலர்க்குகட்டிமோட்டெருமை
நாகிளங்கமுகினறுநிழற்றுஞ்சுசந்திவர்த்தனமெனுநாட்டில்
வேகவெஞ்சிலைக்கையரசரேத்தெடுப்பவிருத்தகாளப்பெயர்மருவி
யோகையோடுலகமொருகுடைநிழற்றவுனதடிப்படுத்திவீற்றிருப்பாய் ( )

ஒண்டொடியனங்கலேகையேமுதலாமொருபதினாயிரமகளிர்
வண்டுபாண்முரலுநறுந்தொடைகிடந்தவளரிளவனமுலைமணந்து[தாங்
தெண்டிரையமிழ்திற்கனிந்தமென்மழலைச் சிறுவர்மூநூற்றுவர்ப்பயந்
தெண்டிசையரசரிடுதிறையளப்பவிருநிலம்புரந்திடுநாளில். (௨)

கங்கைநீர்ப்படிந்துகாவடிகொணர்ந்தகலைமறைமுனிவர்நிரபரவி [க
மங்கையோர்பாகத்தண்ணல்வீற்றிருக்குங்காசியின்வளனெடுத்துரைப்ப
தங்குமுற்பவத்தினறிவுவந்தெய்தித்தடங்கணீர்வாரவுண்ணெகிழ
விங்கியாமுனைத்தயாவையுங்கருதியின்பவாரிதியிடைதிளையா. (௩)

காவடிகொணர்ந்தமறையவர்க்களப்பில்காசொடுநிதிவழங்கிக்
கோவடுசுடாவேற்றிறல்கெழுமகற்குக்கொழுங்கதிர்மணிமுடிசூட்டி
யேவடுதடங்கட்செய்யவாயனங்கலேகையோடின்னருளசுரக்கு
மாவடுநோக்கிபங்கன்வீற்றிருக்குங்காசியினெல்லையின்மருவி. (௪)

அருமறைக்கிழவர்முகந்துகொண்டேகவளப்பருநிதிபலவழங்கி, யி
ருவினைதுடைக்குமிலிங்கமொன்றமைத்தாங்கீர்ம்புனல்வாவியொன்றகழ்
ந்து, திருவமர்செம்பொற்சினகரமியற்றித் திருவிழாநடத்திடுமேல்வை,
யுருவவார்சடிலனிலவுவெண்ணீறனொருசிவயோகிவந்தடைவான். (௫)

அடைந்தநீயாரையணங்கிவளியார்கொலாலயமியற்றினரியாவா, தொ
டர்ந்தவலவினைவேரறுத்திடுமிலிங்கப்பெயரெதுசொலலுதியென்ன, மி
டைந்துவண்டறைதாவிருத்தகாளப் பேர்வேந்தனியான்மெய்சிறையய
றுகாற்குடைந்துதேனருந்துபூங்குழலிவளென்கோமனைகிழத்தியெம
மால். (௬)

திருவமரிலிங்கப்பெயருணர்ந்திலன்யான்சினகரமியற்றினன்சிவனே
யரிய நற்றவஞ்செய்முனிவரவெனலுமன்புமிக்கூர்தரவிந்தக்
குருளைபோய்த்தடத்தினீர்முகந்தளித்தியென்னலுங்கொணர்ந்துநீரளிப்பப்,
பருகலுங்கிமவக்கன்மைநீக்கெண்டோட்பழமறையந்தணனாகி, (௭)

நிற்றலுமுன்னைக்கிழவுருநீத்துநிருமலனுருவினையெடுத்த
தெற்றெனவோடுமிளநகைகோட்டியீங்கிவன்முற்பவமதனிற்
கற்றுணர்சுபாசுப்பெயர்மறையவன்றன்கன்னிகைசுபானனையென்பா
னுற்றவம்புரியுநழித்துருவிவளைமணந்துதன்னுளலர்ந்ததனால். (௮)

கைம்மைபாயிவளுமங்நெறிவழாதுகடவுளர்ப்பேணியெஞ்ஞான்று
மும்மையிலேற்றவருந்தவப்பேற்றாலுரவுத்தோள்வழுதிதன்மகளாயி
ம்மையிலுதித்துதன்மனைவியாயினளினி யிறந்தமுற்பவத்திலில்வளங்கூர்
செம்மைசேர்மதுராபுரியினுமறையோர் சிவசன்மனெனும்பெயர்தரித்
தாய். (௯)

வளம்பெறுமாயாபுரியினிலுடலமாய்க்கதால்வைகுந்தமதனிற்
களங்கனியனையான்மலரடிதொழுதுசழிபெரும்போகங்களனுகர்ந்து
விளம்பருஞ்சேடபுண்ணியமதனால் நிவர்த்தனமெனவிளங்குந்
துளங்கல்றேயதரசனுய்த்தோன்றிச்சுரிகுழலோடுமீங்கடைந்தாய் (௰)

வேந்தநீயமைத்தசவிலிங்கநன்னுமர்விருத்தகாளேசுரமாக
வாய்ந்தநன்மலராலருச்சனைபுரிந்தோரரும்பெறன்முத்தியினையடைக
பாந்தள்ளிர்ப்பேளிபணங்கொடிநீயும்வருகெனமலர்க்கரம்பற்றிப் [ன்,
பூந்துணர்க்கொய்தைவெறிமணங்கமழும்புராரிதன்னிலிங்கத்திற்புகுவா

மற்றவர்கூறுமருமறையோனுமீந்துமாய்மாயவன்பதத்திற்
சென்றினிதடைந்துபெறலரும்போகந்துய்த்தபினந்நிவர்த்தனத்தில்
வென்றிவேந்தனாயாய்க்காசியிலடைந்துமேதகுமுத்தியெய்தினனென்
றின்றார் பூருபரவல்வினைமுழுவொடுமுலோபா முத்திரைக்கினிதியம்பினனே

௨௪-வது சிவசன்மா முத்திபெற்றஅத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம் எ௨௨.

---

இருபத்தைந்தாவது

## அகத்தியர் முருகனையடைந்த அத்தியாயம்.

பொருவருந்துயிற்பன்னிரோடின்னடிகன்றசீரருந்தமிழ்முனிவன்
சரிதையாணின்னுமுனைக்குவலென்றுதவுமொருவடிவெடுத்தனைய
ஷிரிதருசேள்விவியாதன்முன்னுரைத்தவண்ணமும்யான்விளம்புவலென்ன
வருமறைக்கிழவனையநன்முனிவர்க்கருளொடுஞ்சூதனுஞ்சுடுரைப்பான்,

துயிலியல்கன்னிக்கற்புடைப்பன்னிதன்னொடுந்தூய்மறைமுனிவன்,
றுயிலினமகவுருயர்திருச்சயிலம்வலங்கொடுமழலையாழ்மிழற்ற

குயில்குடைந்தாட முகைமுறுக்குடைந்துகோங்கவிழ்படப்பையூடேகி
யவிலுலைடக்கடவுளினிதுவீற்றிருக்குமுலோகிதவரை மருங்கடைந்தான்.

அண்ணலங்குடுமிக்கவிழ்தலையருவிகொழித்திடுமறையுரலதனில்
வண்ணவான்முகத்துக்கொடிச்சியர்யானைமருப்பினுலைவனமிடிக்குங்
கண்ணகன்சாரற்காடெறிந்துழுநர்காழகில்சுடுபுகைதவழ
விண்முகிலவெதும்பிவெய்துறைபிலிற்றுமீயுயர்பனிவரையிவர்ந்தான். ()

குரைகடல்வயிறுகிழியவேவெருட்டுக்கோடியர்மாமுதறடிந்து
வரையகடுளையவாட்டியநெடுவேல்வானவர்க்கிறைவனைநோக்கி
யிருகணீர்வாரமெய்ம்மயிர்சிலிர்ப்பவென்புநெக்குருகநெஞ்சுவந்து
முருகுகொப்பளிக்குநறுமலர்தூவிமுழுதுணர்முனிவனேத்துவனால் ()

முருகுவாயமந்துக்கோடிவண்டரற்றுமுளரியந்தவிசுறைகடவுட்
கரியநான்மறையின்பொருடெரிந்துரைத்தோ யாயபிழிக்குறுந்துளிபிலி
ற்றுங், தெரியல்சூழ்கிடந்தபன்னிருதடந்தோட்செம்மலேயெனமவந்த்
தேத்திப், பொருவருமமரர்மணிமுடியுரிஞ்சுபூங்கழல்சென்னிசேர்த்தின
ஞல். (௫)

தொழுதலுமெழுகென்றவன்முகநோக்கித்துகிடீறிதடந்திரைப்புணரி
முழுவதுங்குடங்கைகொண்டினிதருந்துமுனிவரவமரர்வந்திரப்ப
வெழுங்கொளிடபதிநிபோகநற்கவுந்தவுயா வுரையிருநிலத்தடக்கி [பும்
விழைவொடும்போந்ததுணர்ந்தனனிருந்தி விரம்புவதிலனவிவைவிளம்

பாடகத்தொடர்ச்சிப்பழவினைச்சிமிழ்ப்புப் பற்றறவெறிந்துவீட
ளிக்குந், சேடமைகாசியுறையுநர்மேனி திண்டினும்பவக்கடலழுந்தார்,
நீடுயர்தவமாண்டியற்றியிண் டைந்தாய்நின்னிகரியாரொனவியவாத, தா
டொழுமுனிவன்மேனிதைவந்துசரவணமுயிர்த்தசேயுரைப்பான். (ஏ)

திறந்தடைப்பிலாவாயிலோரொன்பான்செறிந்ததோற்றுருத்தியி ஞரு
மறைந்திடும்பிராணவாயுவாதாரவுயிரஃதொருவுதல்வியப்பன்
றறைந்தமற்றதனிற்றங்குதருனேயதிசயமென்பதையுணர்ந்தும்,
கறங்குநீர்க்கங்கைக்காசிமாநகரையொருவுதல்கழிமடமைமால். (அ)

அவிசொரிந்தழலினைம்புலனடக்கியதன்பயன்விழைவுறுதோங்கு,
மிவுளிமாமகங்களளப்பிலவியற்றியெண்வகையோகமாற்றினருங், கவை,
யடிப்பொழிமாலுங்கன்றுகைக்கொண்ட கறைமிடற்றெந்தைவீற்றிருக்கு,
கவையறுகாசிகாசியென்புவர்போலவிலருந்துறக்கவீடடையார். (௯),

என்றினிதுரைத்துக்காசிமாநகரையிதயபங்கயத்தினிலிருத்திக், குன்
றெரிசுடர்வேற்சூரிசில்கண்முகிழ்த்துக் குழையெழுமிருந்தலுமமலன்

மன்றலங்கூந்தலுமையோடுமுரைத்தல்கவான் மிசைவந்துநீகேட்ட,தொ
ன்றறவுரைத்தியெனமுனிகேட்பவருள்பசுந்தாரவனுரைப்பான். (௯௦)

மாயிருஞாலமெறிபுனற்செந்தீவளியுயர்வானகமுதலா
மேயதத்துவங்களனைத்தையுங்கடந்தவிண்ணவனினிதுவீற்றிருக்கும்
பாய்புனற்கங்கையாறுசூழ்கிடந்தபகர்வருங்காசியின்பெருமை
யாயிரமுகத்தாலுரைப்பரிதெனினுமறிதுமுகமெனதுகல்யானுரைக்கேன்.

நளிபுனன்கரின்றேற்றமுமதசூனையுமறமபிமாமபாவம்
வளமலிவாராணசிபுகழுருத்திரவாசமானகதைகாவகமென்
றுளமகிழ்ந்துரைக்கும்பெயர்புணர்ந்தனவுமுயர்மணிகன்னிகைவரவுந்
தெளிவுறவுரைப்பல்கேட்டிநீயென்றுச்சேவலங்கொடியவன்புகல்வான்.

உ௫-வது அகத்தியர்முருகனையடைந்தஅத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௭௯௪.

இருபத்தாறுவது.

மணிகன்னிகையின்சிறப்புரைத்தஅத்தியாயம்.



இருபெருஞ்சுடருமவனதுவியங்கியகோளுநாளும்
விரிதருபுவனமியாவுமவினாயருதத்துவமுமீங்கி
யரியயன்முதலாவுளளவமரருங்குணங்கண்மூன்று
முரைசெயற்கரியவிந்துநாதமுமொடுங்குங்காலை. (௧)

வாக்கொடுமனத்துக்கெட்டாவொருபெரொளியதாகிப்
போக்கொடுவரவுமின்றிப்புனிதமாயேகமாகி
நீக்கருங்வியாபியாகிநித்தமாய்நிறைந்தாய்மைவரு
மேக்குயர்பொருட்கிரண்டாமவிச்சைசிபாவலறிந்ததன்றே. (௨)

அருவமாயேகமாயவரும்பொருளருளினாலோ
ருருவினையமைத்ததிங்கவுருவம்யான்யானோயார்க்குந்
தெரிவருங்வியாபியாகிச்சித்துமாயெவரும்போற்றும்
பொருவருமாதியாகியழிவின்றிப்பொருந்துவோனால் (௩)

ஏகனையிருக்குமேல்வைபென்னினீங்கரியனென்று
மோகமில்பிரதானையென்றுமொழிபிரகிருதியென்றும்
போகமேபுரியும்புத்திதத்துவச்சென்னியென்று
மோகையின்மறைகள்கூறுமுனையினியளித்திட்டேனல். (௪)

பன்னெடும்பூதமெல்லாம்படைக்குமுன்பவளச்செவ்வா
யுன்னெடுமினிதுவைகவொளிதிகழ்மந்சமாக

மன்னுமிக்காசிதன்னைவருத்தனனென்னவெனைத்
யென்னமரன்னேயோடுமினிதெடுத்தியம்பல்செய்தான் (௫)

உடைதிரைப்பரவையேழுமண்டந்துயரண்டகோடி
யுடைவுகெட்டிறந்தஞான்றுமமலனுமுமையுமாக
விடலரிதாகியீங்குவீற்றினிதிருத்தலால்
விடுபெயரிதற்குநாளும்விமுத்தமென்பர்மாதோ. வேறு (௬)

பொருவருமறைகளுங்கும்பனோந்துரையென்றுகூற்
மருளுண்டமாங்கர்க்கிந்தமறைமொழியுரைக்கிற்றீதார்
திருவமர்காசிநாளுஞ்சிவானந்தமளிக்குமாற்றாற்
பெருகுமானந்தகானமெனும்பெயர்பெறறதன்றே. (௭)

பொன்னவிர்கடுக்கைவேய்ந்தபுனிற்றிளந்திங்கட்கண்ணி
முன்னவன்பின்னுமற்றோர்புருடனைமுறைமையினல்க
மன்னியவிச்சையாற்றன்வாமபாகத்தைநோக்க
மின்னருபரிதியேந்தும்விண்ணவனுதித்தானன்றே. (௮)

தண்ணரும்பூவைவண்ணன்றுமரைவதனநோக்கி
கண்ணுநின்பெயரெஞ்ஞான்றுநாரணனாகமற்று
நுண்ணிகழுயிர்ப்புவேதமவற்றினுலெலவையுமோர்கென்
றண்ணலுமுலகமூத்தவணங்கொடுமறைந்துபோனான். (௯)

ஐயனதாணைசென்னிகொண்டலர்கமலக்கண்ணன்
கையுறுநேமியாலோர்கடிமலர்வாவிதொட்டு
மெய்யுறுவெயர்வுதன்னுனிறைத்தவன்கரையின்மேவி
மையிலேந்தயுதமாண்டுவான்றவமாற்றினனே. (௧௦)

சேட்டிளம்பரிதியன்னதிருமணிகிடந்தமார்ப
னீட்டியதவத்தைநோக்கியிளம்பிறைக்கண்ணியெந்த
பாட்டளிக்கந்தற்செவ்வாய்ப்பரையொடுமினிதினெய்தித்
தோட்டலரிதழித்தண்டார்ச்சுடர்முடிதுளக்கிச்சொல்வான். (௧௧)

முருகவிழ்துளவத்தண்டார்துயல்வருமுழவுத்திண்டோட்
டிருமறுமார்பநின்றன்செய்தவமகிழ்ச்சிகூர்ந்தேங்
கருதுவயாவுமின்னேதருகுவங்கழறுகென்ன
வுருகியவுள்ளத்தோடும்பணிந்தவனுரைக்கலுற்றான். (௧௨)

நீற்றொளிபழுத்தமேனிநிமலவோர்சிறுவனுய்யக்
கூற்றுயிருண்டவெற்றிக்குரைகழற்கமலப்போதிற்
போற்றுமென்னிதயத்தும்பிபொருந்தியெஞ்ஞான்றுநீங்கா
மாற்றருமயக்கந்தீர்ந்துவதிந்தினிதிருத்தல்வேண்டும். (௧௩)

என்றலுமுலகம்யாவும்வெருவரவாற்றியெய்துங்
கன்றிளமறிமானேந்துகண்ணுதற்கடவுளேக்கிக்
குன்றினின்மாரிகாத்தகுரிசினீவிழைந்துகேட்ட
டன்றநல்வரங்களியாவுமகிழ்வொடும்வழங்கினேமால். (கச)

களங்கனியனையமேனிக்கண்ணனின்றவத்தெல்சென்னி
துளங்கலுங்குழையிற்றாழ்ந்தசுடர்மணிவிழுந்தவாற்றால்
வளங்கெழுமிந்தவாவிக்கொளிமணிகன்னிகைப்பேர்
விளங்குகவிதனிற்றோய்ந்தோர்பெறலரும்வீடுசேர்வார். (கரு)

நால்வகைத்தோற்றத்துள்ளவுயிரெலாநலங்கொள்வாவிப்
பாலுயிருலப்பின்மீளாப்பதத்தினிறசேருமியாருங்
காலவன்பாசந்தத்தங்கழுத்துறப்பட்டதன்மை
மாலறவுணர்ந்துமென்னேகாசியின்மருவல்செய்யார். (கசா)

யோசனைநூற்றுக்கப்பாலுறைகுனரேனுமிந்தக்
காசியைநினைந்துவீயிற்கற்பகந்தருவினீறாற்
றேசொடுமமரருமுடிந்துமாராசராயப்புவியிடைசேர்ந்து
மாசிலிந்நகரின்மேவிமருவரும்வீடுசேர்வார். (கஎ)

உருவரும்பொருளுமாக்கையிளமையுமொருங்குநோக்கி
யரிவையர்முயக்கினுள்ளமகிழ்ந்துவெவ்வழல்கட்கூற்றி
னெருமையேறணிந்தகண்டையொலிசெவிக்கிசைத்தநென்று
மருவருங்காசிசேராரர்மக்களுட்படிடியாவார். (கஅ)

உசா-வது-மணிகன்னிகையின்சிறப்புரைத்த
அத்தியாயம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-எருஉ.

---

இருபத்தேழாவது.

## கங்கையின்சிறப்புரைத்த அத்தியாயம்.

ஆதியுகத்தில்யோகத்தான்முத்தியடையுமதன்பின்ன
ரோதுமுகத்திலருந்தவத்தான்முத்தியுளதாமோங்கரிய
சோதிஞானத்தான்முத்திமூன்றுமுகத்திற்றுன்னுமுயிர்
காதலோடுங்கலியுகத்திற்கங்கைபடியின்வீடடையும். (க)

அன்பின்மலர்தூய்ச்சிவலிங்கமருச்சித்தோர்களமரரெல்லா
மின்பமெய்தவழிப்பட்டபலனெய்துதல்போலடைந்தவர்க்

துன்பமகற்றும்புனற்கங்கைதோய்ந்தோர்கடவுணதியனைத்து
நன்குபடியும்பேறனைத்துமொழியாதினிநுநண்ணுவரால். (உ)

கடவுட்கங்கைநதிப்படிவான்செல்லவொருவன்கருதுமுன
மிடர்கூர்பாவமவனையொழிந்தியாண்டுசெல்வோமெனக்கருதும்
விடயமதனின்மனம்போகாதடக்கிஞானவெறுவெளியி
லடையுமவருங்காசிநகரடைவார்பெறும்பேறடையாரால். (௩)

கும்பமொருகைதனிலேந்திபொருகைகுளிர்பூம்புனல்சொரிய
வம்பொற்கரமொன்றருள்வரதமபயமொருகையாகவமைத்
தும்பர்மதியமொருகோடியொளிர்வதென்னவொளிபரப்பும்
பம்புதிரைவான்புனற்கங்கைதன்னையுளத்திற்பாவித்தே. (௪)

அருளினோடுமருக்கியமேமுதலவழிபாடினிதாற்றித்
தெருளாலென்னைநான்முகனைத்திருமாறன்னையிமவானை
மருளிறவத்துப் பகீரதனைமலயச்சாந்தால்வாலரியால்
விரகினமைத்துக்கொழுமலர்தூய்விருப்பினோடும்பணிந்தேத்தி. (௫)

கன்னிவாழைக்கவிழ்தாற்றுக்கனியெட்பயறுசெழுந்துவரை
யின்னமறையோர்மகிழ்வெய்தவியைந்தகல்கிமீனுமை
யன்னந்தவளநீர்க்காக்கைகுரண்டமுதலவணிகிளர்செம்
பொன்னின்மாவில்வெள்ளிதனிலமைத்துக்கங்கையிடைப்போக்கி. (௬)

இன்னவாறுமகிழ்சிறப்பப்பூசைபுரிந்தோரெழுபிறப்பு
முன்னவரியகொடும்பாவமனைத்துநீங்கிமுதுக்குறைவாற்
றன்னையுணர்ந்துமுழுதுலகந்தாவுயுறையுந்தவத்தோருந்
துன்னவரியபேரின்பத்துறைவாய்ப்படிந்துதிளைத்திடுவார். (எ)

உஎ-வது கங்கையின்சிறப்புரைத்த அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எ௫௬.

---

இருபத்தெட்டாவது.

## கங்கையில்எலும்புவிழுந்தஅத்தியாயம்.

---

கழிந்தோரென்புதிரைபுரட்டுங்கங்கையாற்றினெத்துணைநான்
றழிந்திடாதுகிடந்திடுமற்றந்நாள்காறுமாங்கவர்கள்
விழைந்தவன்போடரமகளிர்வேய்மென்றடர்ந்தோணலனுகர்ந்து
வழிந்துதேறன்முருகுயிர்க்குந்தருவினீழல்வாழ்குவரால். (க)

வெய்யகொடும்பாதகம்புரிந்துவிளிந்தோரென்புகங்கையிடைப்
பெய்யினவர்தீவினையொருவிப்பெறுதற்கரியவான்கதிசேர்ந்

துய்யுந்தன்மையுரைத்தியெனவுலகம்பூத்ததிருவுந்தி
யையன்றொழுதுகேட்டிடலுமானேறுயர்த்தோனறைகுவனால். (௨)

புயல்வாய்தடவுமடற்கமுகின்புனிற்றுப்பசுங்காய்க்குலைசிதறக்
கயவாய்வாளைக்களிறுகளுங்கலிங்கநாட்டிலொருமறையோன்
மயறீர்கேள்வித்துறையனைத்தும்வழுக்கிமறையோர்நெறிசிறிதும
பயிலானுகிப்படிற்றொழுக்கம்பயின்றுதிரியுமந்நாளில். (௩)

நல்கூர்ந்துழலுங்கைக்கோளன்மனைவியொருத்திநலனுகர்ந்து
செல்லற்கரியகொடுங்கானிற்கரந்துசேட்சென்றடிவருந்தி
யல்லல்கூர்ந்துவிழிதுயிலுமறையோன்றன்னையயிலெயிற்றுக்
கொல்லுஞ்சினத்தகோளுழுவையொன்றுகுறுகிக்கொன்றதுவே. (௪)

எரிகட்பகுவாய்ப்புலிப்போத்தாலிறந்தமறையோனிடக்காலை
விரிமென்சிறையகழுகொன்றுகவ்விவிசும்பினேகுங்காற்
றிருகுசினத்தினெடும்வேலேறூர்திவாய்க்கழுகுபறித்திடலும்
பெருகுதிரைவான்புனற்கங்கைப்பேராறதனில்வீழ்ந்ததுவே. (௫)

இறந்தமறையோன்றனைப்பற்றியெரிசெங்குஞ்சிமறலிதூதர்
பிறங்குசிலவுக்கதிருமிழும்பிறைவாளெயிற்றுக்கூற்றுவன்றான்
கறங்கினிதயஞ்சுழன்றயரக்கடிதிற்கொடுபோயுய்த்திடலு
மறந்தாழ்நெஞ்சிற்சித்திரகுத்திரரைநோக்கியறைந்திடுவான். (௬)

இன்னோனிழைத்தவிருவினையும்வழுவாதுரைத்திரெனலோடு
முன்னோர்மறலிதாள்வணங்கியையமறைதேரந்தணர்க்குச்
சொன்னவொழுக்கநெறியனைத்துந்துறந்துபிறனில்விழைந்தெவரு
முன்னவரியபாவமிவன்புரிந்ததுரைக்கமுடியாதால். (௭)

கற்பின்மகளிர்தமைவலிதிற்கலந்துங்கள்ளுண்மாந்தருட
னற்பினயின்றுங்கொலைகளவுபுரிந்துமறவோர்தமையிகழ்ந்தும்
விற்கலாகாச்செம்பஞ்சுநறவுபகர்ந்தும்வெண்ணணத்திற்
பற்கண்மறையத்தசைநுகர்ந்தும்பன்னாள்களிப்பினிருந்தனனால். (௮)

எரியுங்கொடியரவுரவத்திற்கற்பகாலமிவன்கிடத்தற்
குரியனெனலுஞ்சினங்கதுவியெரிவாய்நரகினுய்த்திரெனத்
திருகுசினவெங்காலபடர்சிக்கயாத்துமறையோனைக்
குருதிவாயிற்கொப்பளிக்கக்குத்திநரகினடுத்தனரால், (௯)

உய்க்குங்காலையவனிடக்காலதனையொழுகுபசுங்குருதி
கக்குந்தீவாய்க்கழுகுபுனற்கங்கையாற்றின்வீழ்த்தியதால்
புக்குமதுகணமவனைப்பொன்செய்விமானத்தினிதேற்றி,
நக்கபசும்பொன்சுடர்பரப்புநாகலோகந்தனில்விடுத்தார். (௧௦),

ஆனையகடவுட்பெயராற்றங்கரையினுனென்றலங்கரித்துப்
புனலினோடுமுளமகிழ்ந்துபுனிதமறையோர்க்கினிதளிப்பின்
வினையினீங்கியபசுவின்மெய்யின்மயிரொவ்வொன்றினுக்குக்
கனைவண்டிமிர்பூந்தருநிழலிற்கற்பகாலமினிதிருப்பார். (கக)

உ௮-வது-கங்கையிலெலும்புவிழுந்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௭௭0.

இருபத்தொன்பதாவது.

## கங்கையின் ஆயிரநாமமுரைத்த அத்தியாயம்.

என்னலோடும்புனற்கங்கைபெய்தியாடவலியில்லார்
பின்னர்தரங்கந்தவழ்கங்கைப்பெயராறுடும்பெரும்பேறு
துன்னும்வண்ணமுரைத்தியெனச்சுடர்செய்திகிரிப்படைசுமந்த
கன்னித்துளபமால்கேட்பமுக்கட்கடவுள்கட்டுரைக்கும். (க)

அமுதோதகையச்சுதையனகையதுலையனந்தையபிராமை
கமலைகவுரிகந்தவதிகங்கைகராங்கைகலியாணி
யுமையாமளையானந்தவல்லியேகையுதாரையோங்காரை
விமலைதாரைபராநந்தைவிபூதிதேசையாசாரை. (உ)

கருணைகோரைபராசத்திகாந்திதுற்கைநிராலம்பை
வரதைகாமரூபைதிரிபதகையபையைவசுதாரை
பரையீசுரைவல்லபைசொரூபைபானுமதிசூலினிவிசையை
யிரதையனுதனுதைதவரூபைமாதாவிபாவரியே. (௩)

சத்திவினைதைசீலவதிதானசாரைகுணநீதை
சித்திரரூபைரதிவாமதேவிமந்தாகினிவாணி
பத்திரைல்லாவதிசாந்தைபவானிபாகீரதிவிமலை
முத்தியருண்மாலினிவேதமுதலாரியைகாயத்திரியே. (௪)

வேகவதியம்பிகையிந்திரத்துதிசந்தியீசானவிவிளங்கு
போகவதிசொற்கலாவதியோகினிமாதவிபுண்ணியைமுதல
வாகவருமாயிரம்பெயருமுள்ளததுணரினரும்பிறவிச்
சோகந்தணிக்கும்புனற்கங்கைதோய்ந்தபலனீங்கடைகுவரால். (௫)

இன்னகடவுண்மங்களியாவுமெழுதிமனையில்வைப்பின்
முன்னைவினைகடீர்ந்துலகமுழுதுமேத்தவரும்புதல்வர்
மன்னுநிதியமுதல்பெருகுந்திருவினோங்கிவாழ்வரென்ன
மின்னுகதிர்ச்செஞ்சடைக்கடவுடிருமாலொடுவிளம்பினனால். (௬)

உ௯-வது-கங்கையினாயிரநாமமுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

திருவிருத்தம்-௭௭௬.

## முப்பதாவது.

## வாரணாசிசிறப்புரைத்தஅத்தியாயம்.

நகர்வீட்டின்பந்துய்ப்பத்தழங்குநீர்க்கங்கையாற்றைப்
பகிரதன்கொணர்ந்துதெண்ணீர்ப்படுகரின்விடுத்தலானு
முகில்புரைகரிபமாயன்றனைத்திறல்முதல்வன்காதிற்
றிகழ்மணிவீழ்தலானுஞ்சிறப்புடைத்தாயதன்றே. (௧)

சார்ந்தவர்பாவநீங்கத்தகைதலான்வரணையென்று
மார்ந்தநீர்படிந்தோர்பாவமறுத்தலாலசியென்றுந்நான்
சேர்ந்தனநாமந்தெற்குவடக்கதாயுண்மைதேர்ந்தோ
ரோர்ந்திடுமுத்திவைப்பின்காவலாயொழுகுமன்றே. (௨)

குடதிசையதனின்முந்நீர்கொடுக்குந்தேகளியென்றோதுங்
கடகரிமுகத்தோன்றன்னைக்காவலாயமைத்தார்பாவத்
தொடருடைமாந்தர்காசிநுழைதராதன்று
ளுடல்செழுங்கணிச்சியெம்மையருளின்றியடையொணாதால். (௩)

முருகுகொப்புளிக்குஞ்சொன்னைமொய்ம்மலர்க்கண்ணியெந்தை
யருள்பெறுகாவட்காசியடைந்திடாதற்குமுன்ன
முறுபெறுகாணமற்றென்றுண்டெனவிசும்பினோர்துங்
குருகுபேர்க்குன்றங்கொன்றகுமரவேளுனைக்குமன்றே. (௪)

கனம்படர்ந்துண்ணுஞ்சேதக்கையினிற்கருணைக்குன்றந்
தனஞ்சயனென்றோர்நாய்கனுளனவன்றந்தைதானய
மனஞ்செயதுவழுத்தல்செய்வோன்வான்பொருளீட்டியோகை
தினஞ்செயும்வெய்யோனூழிசென்றூழிச்செல்லநின்றான் (௫)

பைந்துழாய்ப்படலைமாலைபண்ணவற்கன்புபூண்டோ
னிந்திரதிருவினுவெறுமையொன்றில்லானேனு
மூய்ந்திடவரியபாவவறுமையொன்றுடையன்வேனில்
மைந்துடையழகனேனும்பிறர்மனைவிழைதல்செய்யான். (௬)

மறைகதிர்ப்பரிதியெய்க்கும்பகட்டெழின்மார்பனிவ்வா
றொழுகிநன்கியற்றுநாளிலுவப்பொடுமவனையீன்றாள்
கிழவுவந்தெய்திநீங்காநோய்பலகெழுமியோங்கத்
தழைவுறுமைம்மேலுந்தியாருயிர்சாம்பினளே. (௭)

பொற்பினிற்செம்மாந்தன்னுள்புலன்வழியுள்ளம்போக்கிக்
கற்பிகந்தல்லல்செய்தவாற்றினாற்கற்பகாலு

மெற்பழுந்தியாக்கைவாடநரகிடையெய்துமென்ன
வுற்புடைப்புதல்வனெஞ்சத்தாரஞரெய்தினனே. (௯)

ஈங்கிவனுய்யும்வண்ணமென்கொலென்றுளத்தினெண்ணித்
தீங்கெறிகுமரனன்னையென்பினைச்சேமமாக்கி
வீங்குநீர்க்கங்கையாற்றின்மேதகவிடுப்பலென்று
நீங்கரும்பொருள்களியாவுநீத்தருநெறியிற்போனான். (௲)

போதருநெறியில்வெப்புநோயுறப்பொறுக்கலாற்றா
னேதிலனொருவனெய்தவிதனைநீகொணர்தியென்று
தீதறுசெம்பொனல்கியவனொடுஞ்செல்லுமாற்றிற்
கோதறுவணிகன்றன்றேன்றுமாவணங்குறுகினானே. (௧0)

ஆங்கவன்புகுதுமுன்னருரும்பொருளொன்றுவேடன்
றாங்கருஞ்சுமையைக்கொண்டுகரந்தனன்றூழ்தேகி
யிங்கிதுகாண்டுமென்னநோக்கலுமென்புகாணா
னீங்கருநெறியினோர்பாலுநீத்தனன்பதியிற்போனான். (௧௧)

என்புடைச்சும்மைகாணானேங்கினனுயிர்த்துவிம்மி
யன்புடைவணிகர்கோமானவனடிச்சுவட்டிற்போகி
முன்பெருஞ்சேரிபுக்கோர்வாயிலினடையவன்றேன்
றன்புனையரடையாங்குக்கிடத்தலுங்கண்டுசார்ந்தான். (௧௨)

சார்ந்தவனுறையுள்வைகுந்தையலைநோக்கியின்றுன்
காந்தனெற்பயந்தாளென்னைப்பொருளெனக்கவர்ந்துகொண்டு
போர்ந்தனனளித்தல்வேண்டும்பொருணினக்களிப்பலென்ன
வோர்ந்தவள்கொழுநன்றன்பாலடைந்திதுரைக்குமெல்லை. (௧௩)

நாணொடும்பேரந்துநாய்கன்றன்னொடுங்கானநண்ணித்
தாண்மிகநோவுள்ளந்தளர்வெய்தத்தேடியாண்டுங்
காணலுறுதலாலவ்வணிகனைக்காசிற்போக்கி
மாணகர்தன்னைநோக்கிப்பேர்யினன்கிராதன்மன்றே. (௧௪)

கானெலாந்திரிந்துசின்னாள்கழிதலுங்காண்டல்செல்லான்
றேனுலாங்கொன்றைவேய்ந்ததேவுறைகாசியெய்தி
வானநீர்க்கடவுட்கங்கைமாநதிபடிந்துபோய்த்தன்
கோனகரதனினாய்கன்குறுகிவீற்றிருந்தானன்றே. (௧௫)

புண்ணியத்திருநீர்க்கங்கைக்கணித்தெனப்புகுந்தவென்பு
நண்ணரிதாகிவாளாபோதலானளிர்வெண்டிங்கட்
கண்ணியன்மறிமானேந்துங்கடவுடன்னருளாலன்றி
யுண்ணுலுங்காசிதன்னையுமூர்க்குமடையொணாதால். (௧௬)

ஆதலிற்றீமையோர்கட்கடையொணுதசியினேடு
மேதகுவரணையாறும்விழைதகவொழுகுமாறருல்
மாதவக்கிழமைபூண்டமுனிவரவளங்கொள்காசிக்
கேதமில்நாமம்வாராணசியெனவிசைந்ததாமால் (௧எ)

சிறந்துயர்தெய்வக்கங்கைத்திம்புனலதனிற்செல்று
பிறந்திறந்தாலிக்கின்றபேதையரேனுமூழ்கின்
மறந்திகழ்கணிச்சியேந்துவானவனுருவுகொண்டு
துறந்துளோர்க்கடையலாகாத்துறக்கவீடடைவர்மாதோ. (௧அ)

மலரின்மேலுறைவோன்மேனுள்வைகுந்தமாதியாய
வுலகையுங்கடவுட்காசிநகரையுமொருங்குநோக்கிப்
புலனெடுங்கோலிற்றூக்கவறம்பொருளின்பம்வீடு
நிலவலிற்காசிதாழ்ந்ததவைநெடும்விசும்பிற்போன. (௧௯)

அவிர்மதிவேணந்தவேணியண்ணல்கட்டழலின்வாய்ப்பட்
டுவர்நிலத்திட்டவித்தினுறுவினைதோன்றிடாதாற்
புவியிடைமறஞ்செய்வோருநல்லறம்புரிந்துளோருந்
தவமிகுகாசிதன்னில்விளிவரோன்முத்திசார்வார். (௨0)

வரித்தடங்கண்ணிபாகன்மருவியகாசிதன்னி
லருத்தியிலுறைவோரெல்லாமமலனல்லுருவுதாங்கி
யிருத்தலாற்புவனகோடியாவதுமோசைபோய
வுருத்திரவாசமென்னுமுறுபெயருடைத்துமாதோ. (௨௧)

மரித்திடுமெல்லில்முத்திவழங்குமென்றுணர்ந்தும்வாளா
திருத்தகுகாசிநீங்கிச்செல்கின்றோர்தோன்றுகாலைக்
கருப்பவேதனையுமாவிகவர்யமதூதர்செய்யு
முருப்பவெந்துயருமியாதுமுணர்ந்திலர்போலுமன்றே. (௨௨)

மன்பெரும்பூதமெல்லாமொடுங்கலன்மாமசான
மென்பரவ்வொடுக்கமெவ்வாறென்றிடிற்பூமிநீரி
னென்றிடுமந்நீர்வெய்யகனலிடையொடுங்கும்வெந்தீச்
சென்றிருவளியிற்சேரும்வளியிருவிசும்பிற்சேரும். (௨௩)

உயர்விசும்பாங்காரத்திணெளிக்குமாங்காரந்துய்தா
மயர்வறுபுந்தியென்னுங்கானிடைமருவும்புந்தி
பயில்பிரகிருதிதன்னிலடையுமாங்கதுவும்பார்க்கி
லயர்வறுபுருடன்றன்னையொளியறமறைக்குமன்றே. (௨௪)

மேயகால்கைகள்சேர்த்திப்பழுக்கழிநிணைத்துவீக்கிப்
பாயபுன்மயிர்த்தோல்வேய்ந்துசுவர்த்தசைநிறீஇயபண்பி

ஞயதோராக்கையில்லி னரும்பெறற்சிவஞ்ஞி
யேயவப்புருடன்றனேயினிதுவீற்றிருக்குமாதோ. (௨௫)

முருகவிழ்கமலத்தோனுமுகுந்தனுமொழியத்தோன்றும்
பிரளயமதற்குநாமம்பிராகிருதமென்பராலப்
புருடனதகத்துட்காலமூர்த்தியாம்புனிதன்வைகி
யருளோடிமிருந்தெஞ்ஞான்றுமினிதளித்தருளுமன்றே: (௨௬)

அருள்புரிகாலமூர்த்தியாகுமப்பிரமங்கன்னைத்
திருவளர்காசிவாழுஞ்சிவமனைவுரைப்பர்மேலோர்
பொருவிலப்பரனேதோன்றுபுருடனைத்தொடர்ந்தெஞ்ஞான்று
மருவிநீங்காதமூலமலத்தினைத்துடைப்பனன்றே. (௨௭)

மருவருங்கருணையீசன்வருகையினந்திமேவிப்
பிரளயமதற்குச்சூலநுதியினிற்றாங்கிப்பேராற்
றரவுநீர்க்காசிதன்னையளித்தலாலொருகாலத்து
மொருமையேறுகைத்தோன்றன்னாற்கலியினாற்பயமின்றாமால். (௨௮)

தேசொடும்பொலிந்துமுத்தித்திருமகளுறைதறன்னாற்
காசியென்றுரைப்பரென்னுக்கடனிறவண்ணன்கேட்ப
வீசன்முன்னுரைததெல்லாமென்னமரன்னையோடு
பேசலுங்கேட்டதுன்பாற்பிறழ்ந்திடாதுரைத்திட்டேனால். (௨௯)

இக்கதைபடித்தோர்கேட்டோரியாவருமுத்திசேர்வார்
மிக்கமாதவத்தோயின்னும்வேண்டுவகேட்டியென்னப்
புக்குயர்வயிரவன்றன்காதைநீபுகறியென்னக்
கக்குவெங்குருதிவைவேலறுமுகக்கடவுள்கூறும் (௩0)

௩0-வது வாராணசிசிறப்புரைத்த அத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௮0௬.

---

முப்பத்தோராவது.

## வயிரவன்றோன்றின அத்தியாயம்.

---

தேறலொழுகக்கனிந்தபசுந்தேமாங்கனியைப்பிழிந்துசெழுஞ்
சாறுநுகர்ந்தாலென்னவண்டேகோடிபிழிந்துதனிநுகர்ந்து
நீறுபூசியென்பணிந்துசூலந்திரித்துநின்றாடு
மீறிலொருவனைவனுளனுங்கவனேயுள்ளத்திருக்குமால். (௧)

அன்னகடவுள்மாயைமுழுதுலகமறைப்பவவிர்சுடராய்த்
தன்னையுணராவகையுறைவோனுலகமுழுதுந்தானாக
மன்னியிடினுமனேவாக்குக்காயமிவற்றுக்கெட்டாத
முன்னேனயன்மாற்கவனிலைமைகாண்டல்செல்லமுடியாதால். (௨)

மேனாட்பசும்பொற்றடவரையில்விண்ணேர்குழுமியழிவில்பொருள்
தானாய்நிற்குந்தத்துவமியாதென்னமொழிந்ததத்துவமிங்
கியானுமென்றேசெழுங்கமலப்புத்தேளிசைப்பவிகலோடு
நோனாநிப்பசுந்துளவோன்யானுமென்றேதுவன்றனனால். (௩)

என்னமுனிவுற்றிருவோருமெழுதாமறைகளெவ்வாறு
சொன்னதனுவேபொருளென்றுத்துணிந்துகேட்பமறைநான்கு
மன்னுமுலகம்படைத்தளிக்கவல்லீரியார்க்குமதனில்லை
முன்னவரிதானுமக்கெம்மால்மொழியற்பாறரேவெனமொழியும். (௪)

சாற்றுமுலகமெவற்றினுக்குந்தானேயாகியினிதமைத்தல்
போற்றியளித்தல்துடைத்தலென்னப்புகலுமரியமுத்தொழிலு
மாற்றுமொருவனெவன்சிவனுமவனேமொழிந்ததத்துவமென்
றேற்றமறைகளொருநான்கின்முதலாம்வேதமிசைத்ததுவே. (௫)

புரிதற்கரியவருமகத்தால்யோகமதனாற்புவனமெலாம்
பரவப்படுவானியாவனுளன்யாமுமவனாற்பரிவோடு
முறைபெற்றுலகினிலைபெறுதுமனையகண்மூன்றுடையோனே
தெரிதற்கரியதத்துவமென்றிரண்டாம்வேதஞ்செப்பியதால். (௬)

யாவனுலகமூன்றினையுந்திரிவிப்பவன்மற்றெஞ்ஞான்றும்
யாவன்யோகமுனிவரராலேத்தப்படுவோனினிதோங்க
யாவன்றனதுபேரொளியாலெவையும்விளக்குமவ்விறைவன்
மேவவருந்தத்துவமென்றேமூன்றும்வேதம்விளம்பியதால். (௭)

கண்ணீர்வாரமயிர்பொடிப்பவுள்ளநெகிழக்கசிந்துகசிந்
துண்ணீர்மையினாலெஞ்ஞான்றுந்தன்னையுணருமுணர்வுடையோ
னெண்ணுவழுத்தத்தன்னருளாற்றன்னையறிவிப்பவன்யாரத்
தண்ணார்கடுக்கையோனென்னநான்காம்வேதஞ்சாற்றியதால். (௮)

என்றுவேதமொருநான்குமருளாதினிதியம்பிடலு
மன்றனூறுந்துளவோனுங்கமலப்பொகுட்டின்வானவனு
நன்றுநன்றுமறைநான்குநவின்றதென்னநகைபுரியாக்
கன்றுமுளத்தினிருமேங்கக்கழறுப்புன்சொற்கழறுவரால். (௯)

ஏற்றினேறிச்சடைதாங்கியீமத்தாடிப்பொடிபூசிக்
காற்றுநுகருங்கறைமிடற்றகவைநாவரவக்கச்சசைத்துப்

போற்றுங்கணங்கட்கொருமுதலாய்ப்பூவைபாகம்பிரியாதோன்
றோற்றுதெவர்க்குமுள்ளுயிராய்நின்றவாறென்சொல்வீரால். (௧0)

என்னலோடுமறையினைத்துமீன்றகுடிலைமுன்றோன்றிக்
கொன்னேமொழிந்திருமதுமுதுக்குறைவுமீதோவெனநகைத்து
முன்னோன்பிரியாப்பரையினொடுந்தோய்ந்துந்தோயான்முழுமுதலா
மன்னோனுருவநும்முருப்போலாக்கவமைந்தவுருவன்றே. (௧௧)

ஒன்றாய்ப்பலவாய்முழுமுதலாயுணராப்பொருளாயுணர்வதுவாய்
நின்றானவன்றனனந்தவுருவம்பரையாநீவிரவன்
பொன்றாழ்கமலத்தாள்போற்றியுய்மினெனலுமிவர்ப்பிணித்துத்
தொன்றாய்த்தொடர்ந்தமலமூடத்தோன்றாதாகச்செருக்குற்றார். (௧௨)

அன்னகாலையவர்நாப்பண்மம்மர்க்கிழங்காண்டகழ்ந்தெறிவான்
பொன்னங்கிரியைக்குழைத்தவுணர்புரமூன்றெரித்தபுரிசடையோன்
மின்னுங்கதிர்களொருகோடியெழுந்தாலென்னவெயிலகற்றி
துன்னுஞ்சோதிப்பிழம்பாகிச்சுடர்விட்டெறிப்பத்தோன்றினால்.(௧௩)

உயருமண்டச்சுவரனைத்துமுருவிநின்றசுடர்ப்பிழம்பை
யயர்வினொடுமலர்க்கிழவனஞ்சானதனைநோக்குதலு
முயலூர்புனிற்றுப்பிறைக்கொழுந்துமூரிச்சடையுமெண்டோளுங்
கயல்சேர்கண்ணியொருபங்குங்கண்ணோர்மூன்றுங்கண்டதுவே. (௧௪)

காண்டலோடுமலர்க்கிழவனுள்ளமதனிற்கனல்கொளுந்தித்
தூண்டுமுனிவுபிடித்துந்தவெனதுபுருவத்துணைநாப்ப
ணீண்டசடையினொடுந்தோன்றும்புதல்வனலையோநீயென்ன
மூண்டவெகுளிவயிரவனைமுக்கட்கனியாண்டளித்ததுவே. (௧௫)

இமையார்பரவுமேற்றெகினப்பாகனுள்ளச்செருக்கினையுந்
துமியாத்திரைப்பாற்கடற்சேர்ப்பனுள்ளச்செருக்குந்தொலைத்தியென
வமையாவெகுளிக்கனல்கொளுந்தமலரோனைந்தாந்தலையதனைக்
கமைதீர்காரிதன்னிடக்கையுகிராற்கிள்ளிக்களிப்புற்றான். (௧௬)

அண்டமுகட்டினரசிருக்குமலரோன்சென்னியரிந்திடலுங்
கண்டுவெருவியுலகளிக்குங்காயாவண்ணன்றெழுதேத்தக்
கெண்டைகிடந்துகுழைபுரட்டுமதிவான்முகத்துக்கிள்ளைமொழி
வண்டுபடுபூங்குழல்பாகன்மலர்த்தாளயனும்வாழ்த்தினனால். (௧௭)

இறவாதென்றுந்தானுகியிருக்கும்பவளத்தாழ்சடையோன்
பறவாப்பூவைவண்ணனுந்தண்கமலத்தோனும்பதைத்தாவி
துறவாவண்ணமினிதளித்திதோன்றாலென்னக்குளிர்தூங்கு
பிறைவார்கண்ணிவயிரவனும்பெட்பினொடுமுனிவொழிந்தான். (௧௮)

கங்கைப்பெருக்காறுவட்டெடுக்குங்கமழ்பூங்கொன்றைச்செஞ்சடை யோன், வெங்கட்கூற்றுந்தலைபணிப்பவெகுளுங்காரியயன்றலையோ, டங் கைத்தாங்கிப்பன்னீராண்டையமேற்றுமணிச்சுடிகைச், செங்கட்பாந்த ண்முடிக்கிடந் தவுலகமனைத்துந்திரிதியால். (கக)

கற்றைக்கதிர்கால்வெண்ணிலவுக்கண்ணிவேய்ந்தகாரிதனைப்
பற்றிமாதினுருவொடுமோர்பாதம்விசும்பின்மேற்சிலம்ப
வுற்றோர்பாதம்புவிமிதிப்பவுறைதிபிரமகத்தியென
நெற்றித்தனிக்கண்விடைப்பாகன்றருமமோர்ந்துபுகழ்த்தினனால். (உ0)

அவனிபொதிந்தசிற்றுதரத்தண்ணறனக்குமளப்பரிய
புவனமனைத்துந்தணித்துடைக்கும்புராரிநோக்கிவிடைநல்கிப்
பவனங்களனீர்புவிவெளியாயவற்றுட்டோயாப்பரஞ்சுடராஞ்
சிவனுமன்பரிதயமலர்க்கோயிறேறுஞ்சேர்ந்தனனால். (உக)

வடவைகுமட்டிவெதிரெடுத்துவயங்குஞ்சூலப்படைதாங்கிப்
படியில்விசும்பிற்பாதலத்திற்பலியேற்றெங்குந்தனிப்போகி
யொடிவில்கணங்களடிபோற்றவுலகம்பூத்ததிருவுந்திக்
கடிசேர்பசியதுழாய்மாலைக்கண்ணனுறையுமூலகடைந்தான். (உஉ)

இதுவன்றதுவன்றென்பதல்லான்மறையுமறியாவெம்பெருமா
னெதிர்வந்தெளிதிற்றோன்றுதலுமிதயநெகிழவிழிபனிப்ப
மதுவுண்டறுகால்குடைந்தூதும்வண்டாமரையின்மாதினொடுங்
கதுமென்றெழுந்துமுகின்மேனிக்கண்ணன்காரியடிவீழ்ந்தான். (உங)

வீழ்ந்தானெழுந்தான்மலர்தூவிவிரைசேர்கொன்றைவேணியனைச்
சூழ்ந்தான்றுதித்தான்றுள்ளினன்சுருதிப்பொருள்கள்பலபாடித்
தாழ்ந்தானுவகைபிடித்துந்தத்தழங்குஞானப்பெருங்கடலு
ளாழ்ந்தானுலகமனைத்தினையுமயின்றானரவிற்றுயின்றானே. (உச)

மூப்பாழ்கழிந்துமனமிறந்துமோனமாகுநிலையதனுக்
காப்பாலாகுந்துரியவுருவடைந்துவருதல்கண்டனறற்
செப்பார்முலைப்பொற்றிருவேயான்செய்ததவமென்னெனக்கினியா
ரொப்பார்நீயுந்தனிக்காணவுஞற்றுதவமற்றென்கொல்லோ. (உரு)

இன்னேனுமையின்றேருமுருவமெய்தார்யாங்காண
வன்னேனுருவுதாங்கிவருமிறும்பூதுளத்திலடங்குவதோ
தொன்மாமறைகளொருநான்குந்துதிக்குமவனுமைந்தொழிலுந்
தன்னுலியற்றியத்தொழிலிற்சார்பில்லானுமிவனுமால். (உசு)

பண்ணிற்கனிந்தகுதலைமொழிப்பாவைபங்கன்றனைத்தமது
கண்ணிற்கண்டும்வீடுபெறார்விசும்பினுறையுங்கடவுளர்மற்

றெண்ணிலிவர்தங்கதிநன்றேமனிதர்காணிலிருங்கதியி
னண்ணியிடுவரவர்கதியேமேம்பாடுடைத்தாநன்றுதலே. (உஎ)

நாட்டங்குளிர்ப்பவுண்ணெகிழப்பழிச்சிப்பழிச்சிநாத்தழும்பக்
கூட்டுண்டறுகால்விழைவயரக்குழைக்குங்கண்ணித்துழாய்மார்பன்
மீட்டுஞ்சென்றாங்கெயினர்பதிவிழியுந்தனதுவிழிமலருஞ்
சூட்டுந்தெய்வத்தாமரையிற்றொழுதுவிழைவிற்சொல்கின்றான். (உஅ)

பொன்னஞ்சிகரிவீழுதுவிட்டபோலுங்கொன்றைப்புரிசடையோய்
நின்னைக்கனவினினைந்திடுவோரிடத்தும்பாவநின்றிடா
தென்றேநின்னைக்கொடும்பாவந்தொடர்வதிதுவுமுலகனைத்துங்
கொன்னேமருட்டிநீயிழைத்தவிளையாட்டென்றேகுறிக்கின்றேன். (உகூ)

கிழியவுலகமுழுதிடந்தகேழற்கோடுமழல்காலும்
விழியுமடங்கலீருரியும்விரைமென்கமலப்பொருட்டுறைவோன்
கழியுமுடைவெண்டலைதொடுத்தகண்ணித்தொடையும்புனைந்தாடும்
பழியன்றகலவெவ்விரதம்பயின்றதெந்தாயபகருதியால். (௩0)

ஈறில்புவனமனைத்தினையுநதற்கட்டழலினெரியூட்டி
நீறுபூசிப்புறங்காட்டினிணம்வாயப்பில்கக்கொடியினமும்
பாறுந்தொடருமுத்தலைவேறிரித்துப்பவுரிகொண்டாடு
மாறில்பழியைத்துடைத்ததெவ்வாறடியேற்குணரவழங்குதியால் (௩க)

முட்டாட்கமலத்தயன்றலையொன்றரிந்தபாவமுடியாதேல்
மட்டார்துளவோனுலகீன்றமறையோன்றலைகளமழுப்படையின்
வெட்டாநின்றபுவியனைத்தும்விளியுமுகாந்தமுடிவதனில்
வட்டாட்டயர்ந்தகொடும்பழிகள்யாதுநோற்றுமாற்றினையால். (௩உ)

ஆதறன்றலறம்பிறழாதைதயமேற்குமவர்போலப்
பாதமலர்கள்சிவப்பூரப்போந்ததுனதுபதம்பிழையாத்
தீதிலடியேன்றவப்பயனென்றிறைஞ்சலோடுஞ்செழுங்கமலப்
போதின்மடந்தைமுழுமுதலாம்புராரியேற்பப்பலியளித்தாள். (௩௩)

தண்ணந்துளவோயெப்பொருணீகேட்டியெனினுந்தருகுவனென்
றண்ணலுரைப்பவேதாந்தமனறயுநினதுகழலிணையென்
கண்ணினூடுநீங்காமலுருப்பக்கருணைபுரிதியென
வெண்ணெய்கமழுங்கனிப்பவளமலர்ந்தீங்கிதனைவிளம்பினனல் (௩௪)

மாசின்றிமைக்குமணிவண்ணன்மலர்ந்தகமலமுகநோக்கி
யாசில்வரமற்றவர்க்கருளியள்ளற்பழனக்கருஞ்சேற்றின்
மூசுசுரும்புங்களிவண்டுமுட்டாட்கமலத்தடைகிடக்குங்
காசிநகாஞ்சென்றடைவனடந்தான்கண்மூன்றுடையோனே. (௩௫)

காரோறுழக்கும்வயற்காசிநகரிற்காரியடைந்திடலும்
வேராவெருவிப்பிரமகத்திவியன்பாதலத்தினிடையொளிப்ப
வீராவுழுவையுரிபோர்த்தவெம்மான்கரத்திலெஞ்ஞான்றுந்
தீராக்கபாலந்துயின்றேன்கைப்பொருள்போற்புவியிற்சேர்ந்ததுவே. ()

உலகமனைத்துமுழிதாலுற்றழலவொழியாக்கொடும்பாவ
மிலகுபிறைக்கீற்றணிமவுலியிறைவன்காசியெய்துதலும்
பிலமுற்றதனுற்பெருமான்கைத்துயின்முழக்கமுகிலென்னுக்
கலவமஞ்ஞைநடம்புரியுங்காசிநகருக்கிணையுண்டோ. (௬எ)

கையிலேந்துகபாலம்விழுமிடத்திற்காரியொருதீர்த்தம்
வையம்புகழவினிதமைத்தாண்டிருந்தானவனைவழுத்தாதார்
வெய்யவினையிர்காசிதனின்மேவாரவனைவலம்வருவோர்
பொய்யில்கயிலைநெடுவரையிற்புராரிமருங்குவீற்றிருப்பார். (௬அ)

வழுவிலிந்தக்கதைமுழுதுங்கேட்போரொழுநிலைநதிடுவோர்
பழுதில்பொருள்காராராய்ந்துபயின்றோர்பநிசெய்திடுவோர்
கொழுதியினவண்டிசைமுரலுங்கொன்றைபுனையுஞ்செஞ்சடையோ
னெழுதாமறைதேர்சேவடியினிருப்பாரொன்னவியினிதைநதான். (௬௯)

௬௧-வது வயிரவன்றோன்றின அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அ௪௬.

முப்பத்திரண்டாவது

## தண்டபாணிதோன்றிய அத்தியாயம்.



வள்ளவாய்க்கமலவெள்ளிமண்டபத்துவாணுதற்கொழுநனின்றேத்த
வொள்ளிதின்ஞானப்பொருடெரிந்துரைக்குமுருள்பசுந்தாரிளங்குமரன்
பள்ளநீருவரிகுடங்கையிற்கொண்டபெருகியகுறுமுனிகேட்பத்
தெள்ளிதிற்றண்டபாணிதன்சரிதையனைத்தையுந்தெருளுறவுரைப்பான்

இலகுவெண்பிறைதோய்கந்தமாதனத்தினிரத்நபத்திரனெனுமியக்கன்
புலவுவேற்றடக்கைமுழவுறழ்தடந்தோள்பூரணபத்திரன்றன்னை
யலகிலாத்தவஞ்செய்தளித்தனன்பின்னராயிழிக்குழந்துளியிற்று
மலரவிழ்கொன்றைமவுலியைப்போற்றிமருவருமுயர்கதியடைந்தான். ()

கங்கைநீர்வேணிக்கண்ணுதற்சாமிகழலிணையினிதினிற்போற்றி
பொங்குநீர்த்தரங்கக்கடற்புவிபுரக்கும்பூரணபத்திரன்றனக்குச்
செங்கயல்பொருவுமரிமதர்மழைக்கட்செய்யவாய்க்கனககுண்டலப்பேர்
மங்கைநற்றவஞ்செய்துலகெலாந்தழைப்பவழங்கினிகேசனைப்பயந்தாள் ()

பெறலருந்திறப்பினின்னெழிற்புதல்வன்பிறையெனவளர்தருநாளிற்
கறைமிடற்றெந்தைபெயரலாயபோதுங்கருதலன்வெண்மணல்குவியா
னிறைதிருக்கோயிலமைத்துமற்றதனுளிலிங்கமாண்டியற்றிவண்டூது
நறைமலரொன்னப்பூப்பறித்ததனினொடாறுமருச்சனைபுரியும். (௪)

இன்னுயிர்த்தோழர்வருகெனவியம்புபோழ்தினுமெம்பிரானுமங்
கன்னைமற்றிசைப்பதன்றிமற்றோர்பேர்சாற்றலனவன்மலர்ப்பாத
முன்னவன்கோயிலல்லதுசூழாவாங்கவன்முளரியந்தடக்கை
பன்னகமசைத்தநாவிடைப்பாகன்பதமலாதருச்சனைபுரியா. (௫)

பெண்ணொருபாகன்புகழலாதுளும்பெட்பொடுஞ்செவிப்புலன்கேளா
கண்ணுதலன்றிநோக்கிடாகண்கள்கடவுளேயலதுளங்கருதா
தண்ணறுமமன்றிநாவுரையாதஞ்சிறைத்தும்பிபாட்டயருந்
தண்ணறுங்கமலச்சேவடிக்கன்றியாங்கவன்றலைவணங்கிடாதால். (௬)

எந்நுணையேனுமுயன்றிருநிதிபமீட்டலேயிரவுநண்பகலு
மந்தமுமறாகும்வளர்பிறைக்கொழுந்துமிலேநவனடியினின்மருண்டு
பித்தர்போல்வாளாவன்னவனும்பிதற்றினேபதறுகின்ற
சித்தநீயொழியென்றுதன்நங்கைசீறலுஞ்சேட்செலவயர்ந்தான். (எ)

ஆறுசெல்போதிலெவ்வழிச்சேறுமெனமனமலேத்திடமருளாத்
தேறினனுகியெளியராய்மெய்யிந்தோர்சேரிடங்காசியேயன்றி [மை
வேறுளதாங்கொலெனமனத்தெண்ணி விரைமலர்க்கறித்துமோட்டெரு
தாறுதாழ்கதலிப்படுபழங்குதட்டுந்தண்வயற்காசிசென்றடைந்தான். (அ)

ஐம்புலக்குறும்புமுதலறமுருக்கியணிமலரசோகநன்னிழலிற்
கும்பமற்றிருந்துதவஞ்செயுஞ்சிறுவன்கருத்தினைச்சவுரிகண்டுணர்ந்து
நம்பனைநோக்கியருளெனவீசனைவிடையிழிந்தரிகேசன் [ன்
வெம்புமெய்குளிர்ப்பமுதுகுதைவரலும்விரைவினிலெழுந்தடிபணிந்தா

அணங்கரவுரியினுணங்குநூற்கலிங்கமும்பகட்டிளமுலையசைத்த, கணங்குழைமுகத்துக்கன்னியோர்பங்கிலிருத்தியகறைமிடற்றெந்தை, வணங்கியசிறுவற்களப்பிலாவரங்கண்மனமகிழ்ந்தினிதினிலளியாத், துணங்கையிட்டலகைசூழ்வருங்கதையுமளித்திவையருளொடுஞ்சொல்வான்.

சேட்டிளந்திங்கட்கண்ணியுங்கங்கைத்திரையுமவட்டெடுத்தவார்சடையு
நாட்டமோர்மூன்றுநான்குதிண்டோளுநஞ்சணிகண்டமும்பணைத்த
மோட்டிளங்கொங்கைமங்கையோர்பங்குமுரியேறுயரியகொடியும்
பாட்டளிமுரலுங்கொன்றையுங்காசிப்பதியினிலிறந்தவர்க்களிப்பாய். ( )

அருந்தவக்கிழவமுன்னநீதொட்டவாவிநீராடியாரேனும்
பெருந்தவமிலைழப்போரின்பவீடடைவர்பிழைப்பருஞ்சம்பிரமனையும்

விரிந்தநூற்கேள்வியுற்பிரமனையும்விடா தினிதிருத்தியென் றுரையாக்
குருந்தடநெடுங்கட்கண்ணி யோர்பாகன்கயிலைமால்வரைமருங்கடைந்தான்

இன்னநற்காதைகேட்டவர்துறக்கத் தெய்துவரெனவெடுத்தியம்பிக்
கன்னலிற்பழுத்தகனிமொழித்துவர்வாய்க் கதிர்முலைக்குறக்கொடிகணவ
ன், றென்னவன்மகிழச்செழுந்தமிழ்க்கவிதைபொழிதருநதென்வரைமு
னிவ,மன்னியஞானவாவியின்பெருந்றங்கேளெனவகுத் தினிதுரைப்பான்.

௩௨-வது தண்டபாணிதோன்றியஅத்தியாயம்-முற்றிற்று.
ஆ-திருவிருத்தம்-அ௱௪.

---

முப்பத்துமூன்றாவது
காசிப்படங்கண்டஅத்தியாயம்.

மலர்தலையுலகமம்மர்நோயுழப்பவான்பெயல்வறந்திடுகாலை, யலகில்
சீர்க்காசிப்பதியிலீசானனருந்தவமியற்றவந்தெய்தி, யிலகுவெண்டிங்கட்
கண்ணியம்பரனையீர்ம்புனலாட்டுவான்கருதிக், கொலையழுத்தொழுகுமு
த்தலைப்படையாற்குளிர்புனல்வாவியொன்றகழ்ந்தான். (௧)

ஆயிரந்தாரையொழுகுபொற்குடமோராயிரத்தாயிரமேந்திப்
பாயிருள்பருகிநிலவுகொப்பளிக்கும்பனிமதிக்கண்ணியம்பரனைத்
தூயதண்புனலிலாட்டலுமனையோன்சுடர்விழிகளிப்புறத்தோன்றி [ன்
யேயநின்மனத்தில்விழைந்தனதருவலுரைத்தியென்றெம்பிரானிசைத்தா

மலவிருளிரியநீற்றொளிபழுத்தமாணிக்கமலையினைநோக்கி
நிலவினைத்தெளித்துத்தேக்கியதென்னநீர்மலிதடத்தினுக்குன்பே
ருலகினிற்றழைப்பவழங்குதியெனலுமொழுகொளிமதிதொடுகுடுமிச்
சிலைவலானதற்குச்சிற்சிவதீர்த்தமெனும்பெயர்தெரிந்துரைத்தனனால். ()

மணிதெளித்தனையபுனிதநீரதனின்மகிழ்வொடும்படிந்தவர்விடவா
ய்ப், பணவரவசைத்தோயெமதுதொல்லுலகிற்படர்வரொன்றின்னுனாபு
கலாப், பிணிமுறுக்கவிழவிதழிதேன்றுளிக்கும்பிறைமுடிப்பிஞ்ஞகனை
கன்று, ணிணையறுமுனிவவன்றுதொட்டிதனைஞானநீர்வாவியென்றிசை
ப்பார். (௩

இன்னிளந்தென்றற்குழவியும்வழங்குமிளம்பிறைப்பிள்ளையுந்தவழுந்
தென்வரைநறியசந்தனச்சாரன்மருங்குறைசெந்தமிழ்முனிவ
பொன்னுலகுறையுமமரரும்விரும்புபுனிதநீர்ஞானவாவியினுக் [ன்
குன்னருங்காதையின்னுமொன்றுளது பேசுவன்கேட்டியென்றுரைத்தா

முருந்திளமுறுவற்கடைசியர்குரவைமுழங்கினிலெழுந்தபைங்கயல்
கள், கரும்புறக்குடக்காய்நெட்டிலைப்போர்தைக்கவிழ்நூலைக்கனிபினைச்சி

தாறர், திருந்தாக்வளங்கூர் காசியின்மறைகடெரிதருமருச்சுவாமிப்பே ரருந்தவனமுக்கிணையிலாமுறுவலணங்கினையினிதினிற்பயந்தான். (கூ)

வேறு.

முருகுவாய்மடுத்துண்டளிமூசிய
வரிவைபூங்குழலாயிரஞ்செங்கதிர்ப்
பரிதிவானவர்க்கஞ்சிப்பாரிடை
யிருளெலாங்குடியேறியபோலுமால். (எ)

பொழிநறுமலர்ப்பூங்கணைபூட்டுபைங்
கழைகொல்கூனற்கதிரிளந்திங்கள்கொல்
மழைமதர்க்கண்மடவரல்வாண்முகத்
தெழில்குவித்தநுதற்கிணையென்பவே. (அ)

கொழுதிவண்டினங்கூட்டுணும்பூங்குழல்
பழுதில்வள்ளைப்பசுங்குழைதிட்டினு
மொழுகுநீள்புருவக்கொடியொப்புற
வெழுதுமேகொல்மலரயனின்னுமே. (கூ)

பள்ளநீருலகிற்பயில்வோருயிர்
கொள்ளைகொண்டுணக்கூற்றொளியிட்டொரு
வள்ளத்தாமரைமீதுவதிந்ததே
கள்ளுண்கோதைமுகத்துறைகண்களே. (க0)

முல்லைமெல்லரும்பின்றமுழுநெறி
யல்லிபுல்லியவாம்பலுண்டாமெனில்
வில்லெறிந்துமிளிர்புருவக்கொடி
வல்லிசெங்கனிவாய்க்கிணையாகுமால். (கக)

கணிக்குமூன்றுலகத்துமிக்காரிகை
யணிக்குநல்லெழில்செய்யுமழகினுக்
கிணைக்கொணுதென்றெழுதியரேகைகொல்
மணிக்கழுத்தின்வரையொருமூன்றுமே. (கஉ)

இழுக்குத்தேனினிளங்களிவண்டினம்
வழுக்கிவீழுமலர்க்குழல்தோட்கிணை
கழைக்கரும்பையுரைக்குங்கவிகடம்
பழிக்குத்தீர்ச்சிபகர்ந்திடவொண்ணுமே. (கங)

காளைவண்டினிமிறுங்களித்துணுந்
தாளதாமரைதாட்கிடைந்திட்டதால்
வாளைவென்றமதர்விழிகைக்கிணை
நாளுநாமெடுத்தோதுதனன்றரோ. (கச)

பண்ணெறிந்தபனிமொழிக்கோல்வளை
தண்ணிலாவடமேந்துதடமுலை
வண்ணத்தூசின்மறைத்திலரேனுயி
ருண்ணுமுண்ணுமுலகமனைத்துமே. (௧௫)

அழகுபூத்தவணிமுலையவ்வயிற்
றொழுகுமென்மயிர்க்கோங்கெழில்வேனிலான்
விழைவினுலிலேமீதுமணிகுழைத்
தெழுதுவல்லியலதிணையில்லையால். (௧௬)

தொழுதகுந்திட்டுகைவினைத்தூயவ
ரொழுதநெஞ்சிடையெண்ணவொண்ணுததாற்
பழுதில்ஞானப்பரம்பொருளபோன்றதே
மழைமதர்க்கண்மடந்தைமருங்குலே. (௧௭)

குருமணிப்பொற்கொடிஞ்சியந்தேர்கொலோ
வினைகொள்பூங்கணைவேந்தனத்தாணியோ
வுருவவோடரிக்கண்ணியொளிர்மணிப்
பருமந்தாங்கியபையரவல்குலே. (௧௮)

பொன்னந்தூசுபுனைந்தகுறங்கினை
மன்னுமோடைமதக்களிற்றின்கரம்
வெந்கிடும்படிகண்டுவிரிதலைக்
கன்னிவாழைக்கவின்குடிகொண்டவே. (௧௯)

இன்னபேரெழில்வாய்ந்தவிளங்கொடி
பொன்னம்பூஞ்சிலம்பார்த்திடப்பொங்கர்வா
யன்னமென்னவொதுங்கியணிமலர்
மன்னுஞானநல்வாவியினுடியும். (௨0)

தூமமார்ந்ததுகில்புனைகோல்வளை
காமர்வாவிப்படிகள்கழுவியுந்
தாமநாற்றியுந்தண்மலர்தூவியும்
யாமமும்பகலும்புனைந்தேத்துநாள். (௨௧)

சந்தமூழ்குதடமுலைபுல்குவான்
சிந்தைசெல்லச்செழுமறைதேர்ந்துண
ரந்தணனரிலேங்கணைவேணிகர்
மைந்தர்யாருமணமொழிந்தெய்தினர். (௨௨)

காதளந்தகருந்தடங்கண்ணிதன்
றாதைதன்னுழைப்போந்துதனிமண

மாதரித்தவர்க்காங்குமறுத்தனன்
மேதைநெஞ்சம்விதிவழிச்செல்லவே. (௨௩)

மஞ்சுதோயுமணிக்கொடியோங்குய
ரிஞ்சிமுற்றியகாசியினின்னெழில்
செஞ்சவேதனிநோக்கத்தென்சேடியில்
விஞ்சைமன்னவன்விண்ணிடைதோன்றினன். (௨௪)

மங்குறோயுமணிக்கொடிமாடமுங்
கொங்குலாவுகுளிர்மலர்ச்சோலையு
மெங்குநோக்கியினிதுவந்தெய்தினன்
கங்கைமாநதிசூழ்தருகாசியின். (௨௫)

எய்துவிஞ்சையனின்கனித்தொண்டையு
மையசெங்கழுநீருமலர்ந்ததோர்
செய்யதாமரைபூத்தசெழுங்கொடி
கையின்மென்மலர்கொய்திடக்கண்டனன். (௨௬)

தண்ணந்தாமரைத்தாக்கணங்கோவென
வெண்ணனெஞ்சமின்றெய்தலரிதெனுப்
பெண்ணுருக்கொடுயிர்களைப்பெட்பொடு
முண்ணக்கூற்றமொளியிட்டுறைந்ததே. (௨௭)

என்னுஞ்சீறடியிங்கிலங்தோய்ந்ததாற்
பொன்னெறிந்தபொறிசுணங்கார்முலைக்
கன்னிபார்மகளென்னுங்கலங்குறுந்
தன்னையுமறக்குமுயிர்சாம்புமால். (௨௮)

வள்ளைவார்குழையோவளர்கொங்கையோ
கள்ளம்பூத்தகருநெடுங்கண்களோ
வுள்ளமாழ்கியுலையத்தடங்கையா
லள்ளியள்ளியென்னுருயிருண்டதே. (௨௯)

நள்ளிருட்பிணிவிட்டனநாண்மலர்க்
கள்ளமுதகருங்குழல்கைசெயா
வள்ளவாய்மலர்வாவிபடிந்துயிர்க்
கொள்ளைகொண்டனளென்றுகுழையுமால். (௩௦)

ஆன்றகேள்வியவ்விஞ்சையனுருயிர்
கான்றுமாழ்கக்கடவுட்புனல்படிந்
தீன்றதாதைதன்னில்வயினெய்தினள்
தோன்றுகின்றசுடர்க்கொடிபோலவே. (௩௧)

அஞ்செஞ்சீறடியேக்லுமாற்றல
னெஞ்சமாழ்கியங்கேரிழைவைகிய
பஞ்சணைப்புறத்தெய்திப்படுதுயில்
விஞ்சையோதிமிகவும்பெருக்கினன். (௧௨)

துயில்பெருக்கித்துணைமுலைதாங்கிய
மயிலியற்குயிலைக்கொடுவான்றெடு
மெயில்வளைத்தநகர்க்கடந்தேகினன்
வெயில்செய்பூங்கழல்விஞ்சையர்வேந்தனே. (௧௩)

பொன்னங்கொம்பினைவவ்விப்புயறவழ்
தென்னங்குன்றிடைவிஞ்சையன்சேர்தலு
மின்னலங்கற்பெயரினன்வேலினன்
மன்னுசிற்றந்தரக்கன்வளைந்திட்டான். (௧௪)

உயிரைநல்குதியோநின்னுயிர்நிகர்
குயிலைநல்குதியோகொடியோயெனச்
செயிரினேடும்விழியழல்சிந்திட
வயிரவாட்படைவள்ளுறைநீக்கினன் (௧௫)

எயிறுதின்றெதிரோற்றவரக்கனைத்
துயில்துறந்துசுடர்க்கொடிகாண்டலு
மயினெடுங்கணழிபுனல்கான்றிட
வுயிர்வெதும்பியுயிர்ப்பொடுமாழ்கினள். (௧௬)

பஞ்சியூட்டியபங்கயச்சீறடி
யஞ்சலஞ்சலெதிர்ந்தவரக்கனைத்
துஞ்சுமாறுதொலைக்குவல்யானென
விஞ்சைவேந்தன்வெகுண்டெழுந்தானரோ. (௧௭)

உருவவோடரிக்கண்ணியுளங்கவர்
மருமம்போழ்ந்திடவாளினெறிதலும்
வெருவலின்றிவெகுண்டுயர்விஞ்சைய
னிருதன்சென்னிநெரிதரக்குத்தினன். (௧௮)

ஞானவாவிநளிர்புனலாடிய
மானினேக்கியைமாய்வுழிக்கண்டதாற்
கூனல்விற்கையரக்கன்கொடுஞ்சிலை
வேனில்வேளெனவிண்ணுலகெய்தினன். (௧௯)

ஓவியர்க்குமெழுதவொண்ணதபொற்
பாவைதன்பெயர்பாதிகிளக்கலு

மேவுகாதலின்விஞ்சையர்வேந்தனு
மாவிகூற்றுக்கவித்தனனென்பவே. (௪0)

மலேயின்வீங்கியமல்லலந்தோளிலெண்
முலேதிளேத்துமுயங்கவெடுத்தலாற்
றலேவனீங்கிவனேயெனத்தார்குழ
லலமந்தேங்கினளாருயிர்நீங்கினுள். (௪௧)

சூதமீன்றவினைகமழ்தூய்மலர்த்
தாதளேந்ததளர்நடைத்தென்றலோ
பாதிவெண்மதியோபடர்மாலேயோ
கோதையாருயிர்வாரிக்குடித்ததே. (௪௨)

மலேயும்வல்வில்மலர்க்கணேவேட்டுவர்
[illegible]யுமாலேயினுகிளந்தென்றலம்
புலிவழங்குபொதியப்பொருப்பின்வாய்த்
தலேவற்றீர்ந்ததமியளுமுய்யுமே. (௪௩)

நிலேயிலாவுடனீத்தவவ்விஞ்சையன்
மலேயகேதுவெனும்பெயர்மன்னவற்
கிலகுமாலியகேதுவெனும்பெய
ருலகமேத்தவொருமகவாயினுன். (௪௪)

தென்வளைக்கணிறந்திடுஞ்சேயிழை
கன்னல்வேலிக்கருநாடதேயத்து
மன்னன்மாதவப்பேற்றிற்கலாவதி
யென்னுநாமத்திளங்கொடியாயினுள். (௪௫)

பதலேயார்ப்பப்பணிலமுழங்கிடப்
பிதிர்சுணங்கணிபேரிளமென்முலேக்
கதிர்செய்முத்தமுறுவற்கலாவதி
வதுவையாற்றினன்மாலியகேதுவே. (௪௬)

பனிமதிக்குடைவேந்தொடும்பல்பக
லினியபோகங்களியாவுநுகர்ந்துமென்
கனியினின்சொற்கலாவதியென்னுமவ்
வனிதைமூன்றுமகவினைநல்கினுள். (௪௭)

மழலேமென்சொன்மகாரொடும்வள்ளேயங்
குழைபொருங்கட்குயின்மொழிக்கொம்பொடு
மெழுவெறிந்தவெறுழ்வலித்தோளினுன்
விழைவின்ஞாலம்புரந்திடும்வேலேயின். (௪௮)

வேறு.

கவைத்தாளலவன்கிளைத்தகுழிக்கமஞ்சூன்மந்திகவுளொடுத்துச்
சுவைத்தாங்கெறிந்தநறும்பலவின்சுளைகரேர்க்குங்காசிதனிற்
றவத்தாலெய்திக்கங்கைநதிபடிந்துமீண்டதனிமறையோ
ருவப்பாற்காசிப்படங்கொணர்ந்தாங்குய்த்தாரவனுமுளங்களித்தான். ()

கிடங்கிற்பூத்தகொடிக்குவளைகுதட்டிமேதிகிடந்துயிர்க்குந்
தடஞ்சூழ்காசிப்படமதனைத்தாமவடிவேல்மைறநோக்கி
வடந்தாழ்கொம்மைமுலைக்கெயத்தமருங்குறகளித்திரெனவோடும்
படந்தாழல்குற்சிலதியர்கள்பணிந்தாகொணர்ந்தபடமளித்தார். (௫0)

இருளைவகிர்ந்துமுடித்தகுழலிமையாக்கருங்கண்முலைப்பேதை
குருதிவடிவேலிறையளித்தகோதில்காசிப்படமதனை
முருகுவிரிக்குங்காங்களங்கைமுகிழ்த்துவாங்கிமுகமலர்ந்து
தெருளிறேக்கிவிழிபனிப்பச்சிந்தைகளிப்பத்தெரிந்தனளால். (௫௧)

கூகூ-வது காசிப்படங்கண்டஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் கூ0கூ

முப்பத்நான்காவது.

## கலாவதிபேறுபெற்றஅத்தியாயம்.

கன்னற்குதலைமொழிப்பேதைஞானவாவிகண்ணுறலு
முன்னைப்பிறப்பினுணர்வனைத்துந்தோன்றத்தோன்றாறுநுகர்ந்தவற்
பொன்னஞ்சிகரிநெடுஞ்சிலையெம்புனிதனுறையாலயமுநல
வின்னதின்னதெனச்சுட்டிப்புத்திமதியோடுரைத்தனளால். (௧)

மங்கைமீரிப்படத்தெழுதுஞானவாவிமுற்பவத்திற்
றங்குமருடீர்பேருணர்வுஞ்செய்தியாவுந்தணவாம
லங்கைநெல்லிக்கனிபோலவனைத்துந்தோன்றவளித்ததெனிற்
பொங்குகடவுட்புனல்படிந்தோர்பெறும்பேறெவர்க்கும்புகலரிதால். ()

என்றுகூறிக்காசிநகர்க்கேகுமருத்திபிடித்துந்தப்
பொன்றூழ்மணிமேகலையரற்றப்பொன்னஞ்சிலம்புகிடந்தார்ப்ப
மின்றூழ்மருங்குறுவண்டேங்கவிரைமென்கூந்தல்சுவறபுரளச்
சென்றூன்வேந்தன்பூங்கழல்கள்பணிந்தளிதனைச்செப்புவாள். (௩)

இமைதீர்ந்தொழியவடவையனலெரிகட்பாந்தண்முடிக்கிடந்த
மைதீர்ந்தொழியத்தனிதாங்குந்தோளாயுனதுகருணையு
மைவார்தடந்தோள்மடவியரிலளியன்விழைந்தவனைத்தினையுங்
மையோடளித்தாய்பெரும்போகந்துய்த்துநெடுநாள்களிப்புற்றேன். ()

இன்னும்விழைந்ததொன்றுளதிண்டளிப்பினுரைப்பலெனலோடு
மன்னன்மகிழ்வுற்றெனதுயிரும்வளரும்பொருளுமிவ்வரசு
மின்னதாகுநீவேண்டினிலவுக்கதிர்கான்முத்தநகைப்
பொன்னேயளிப்பப்பொருளுளதோபுகறியெனலும்புகலுவாள். (௫)

தமரநெடுநீர்ச்சாழனிதொறும்வாளைப்பகடுதாவியுயர்
குமரிக்கூடக்காயமுடத்தெங்கின்குலைகள்சிதறுங்காசிதனி
லமருந்திங்கள்வேணியனைப்போற்றற்கேகவருளுகெனக்
கமலமலரினெழில்கவருங்கைகள்கூப்பியுரைசெய்தாள் (௬)

அரசுவிழுங்குஞ்சுடரிலைவேலண்ணலணங்கினுரைகேளாப்
பரிவினொடுமனைக்கிழத்தியில்லாவாழ்க்கைபழுதாகு
மெரிசெய்பூணாய்நின்னொடுமியான்வருவலென்னவினிதியம்பித்
தரையாள்வதற்குத்தன்மகவைத்தனிமாமவுலிசூட்டினனால். (௭)

உயிர்மெய்த்துதிரத்தேக்கெறியுமொளிரும்வடிவேல்வயவேந்தன்
செயிர்தீர்புதல்வனினிதளிப்பச்செம்பொன்கோடிபலவாங்கி
மயிலேர்சாயலணங்கினொடுமடற்பூங்கமுகமிடறொடியக்
கயவாய்வாளைப்பகடுழக்குங்காசிநகரிற்சென்றடைந்தான். (௮)

குடச்சூற்கமுகின்மிடறொடிந்ததுளிர்பூம்பசுங்காய்க்குலைபொதிந்த
மடற்பூந்தேறல்வழிந்தொழுகும்வயல்சூழ்காசிவளநகரிற்
றொடிப்பூங்கோதைகணவனொடுஞானவாவிதொழுதாடிக்
கடிப்பூங்கொன்றைவேணியன்பொற்கமலமலர்த்தாளினிதேத்தி. (௯)

ஞானவாவிப்படிமணிபானன்கினியற்றிச்சோடசமா
தானமறையோர்நமக்களித்துத்தலைவற்பேணித்தவமாற்றி
யூனமின்றிக்காசிதனிலுறைநாட்காலத்துமைபாகன்
மோனமுனிவனுருக்கொடவர்முன்னரெய்தியிதுபுகல்வான். (௧௦)

அடைந்தவுனையருகிருத்தியருட்கண்பரப்பிமெய்தடவி
மடந்தைபாகன்றாரகமாமறையாங்கவர்க்குவழங்குதலும்
படர்ந்தசடையுநுதற்கண்ணும்பால்வெண்ணீற்றுமெய்யொளியுந்
தடந்தோளெட்டுந்தமதாங்கித்தளராமுத்திவீடடைந்தார். (௧௧)

பெருகுதிரைநீர்ச்சிவதீர்த்தப்பெருமையுரைத்தேமிதன்பெருமை
யுருகிக்கேட்போர்நவின்றிடுவோருலவாக்கதியினடைவரெனத்
திருகுசினத்தவில்வலனைச்செற்றகடவுண்முனிகேட்பக்
குருகுபெயர்க்குன்றமெறிந்தசுடர்வேற்குமரன்கூறினனால். (௧௨)

௧௪-வது கலாவதிபேறுபெற்றஅத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௬௨௧.

முப்பத்தைந்தாவது

## இல்லொழுக்கங்கூறிய அத்தியாயம்,



விரிந்தபுவனகோடிகளின்விழையுந்தருமம்பொருளின்பம்
பொருந்தவரியதுயர்துறக்கம்பொருந்துநகரம்யாதென்னக்
குரும்பைதூங்குமுடத்தெங்கின்குலைகள்சிதறியிளங்கமுகின்
கருங்கட்டேறல்முசுவருந்துங்காசியலதுபிறிதுண்டோ. (௧)

அரியவிரதந்தவஞானமடங்காப்புலன்களுள்ளடக்கிப்
புரியும்யோகமியற்றியல்லாற்காசிநகரிற்பொருந்தவரி
துரியவினைகள்கலியுகத்திலுஞற்றலெவர்க்குமொன்றாகால்
விரியும்புகழோயங்ஙகரையடையுமாறுவிளம்புதியால். (௨)

இழுக்கல்செல்லாவருந்தவமுமிழைக்குநோன்புங்கலியுகத்தி
லொழுக்கமென்பவொழுக்கத்துநின்றார்பெருமையுரைப்பரிதாற்
பழுத்ததடவுச்சினைப்பலவின்பைம்பொற்சுளைவிண்டழிநறவின்
வழுக்கிமேதிக்கன்றுகளும்வயல்சூழ்காசியடைகுவரால். (௩)

கானத்துளவினரும்படலைக்கண்ணிவேய்ந்தவுயர்பன்றிக்
கூனற்கோட்டினேந்துலகிலொழுக்கம்விழுமிதெனக்குறித்த
ஞானப்பொருளேயவ்வொழுக்கமவழுவாதெனக்குநவிறியெனப்
பானற்கருங்கட்குறக்கொம்பின்கொழுநனதனைப்பகருமால். (௪)

வேறு.

ஒழுக்கமேநியமமெனவுஞற்றும்வேதியரதனி
னிழுக்கினொன்னவனாயிகழ்ச்சிகூறுவரொவரும்
விழுப்பமாமறைநெறியைவிடுத்துளார்தமதுயிரும்
வழுக்குநீணரகினிடைமடுப்பரால்யமபடர்கள். (௫)

உயிர்க்குநன்குணர்வதலதுடற்குநன்குணர்நெறியில்
பயிற்சியந்தணர்கள்பதைபதைப்பர்வெங்கொடுநரகின்
வியப்புறும்படியொழுகுமொழுக்கமென்பதுவிதியி
னியற்றருந்தருமநெறியெவற்றினுந்தலைமையதே. (௬)

இயமமன்புறநியமமெனுமிரண்டினுள்ளியம
முயிர்புரந்திடல்பொறைபொய்யொழிதலின்புறுமொழிமெய்
பயில்புலன்றகைதல்மேன்மனனம்வெம்படுகொலைகள்
செயலொழிந்திடல்செவ்விதினிவைசிறந்தனதெரியில். (௭)

நீதிசாநியமமகமோனநீள்புனல்படித
லோதன்மாதவவிரதமோவருதுணவொழிதல்

தீதிலாரொடெபினிதுசேர்தல் மேவியசவுசம்
யாதுமீகுதலிவைகளியாவுமாமெனுமறைகள். (௯)

தாதைமெய்ப்புதல்வருறுதாயர்மற்றெவருமுட
லேதமுற்றுயிரகலிலீமமட்டலதொருவர்
போதரக்கடவதிலர்போம்வழிக்குரியதுணை
யோதின்மற்றிலேவரும்விடாதுநற்றிருவினைகள். (௰)

பிறக்குமன்றினுமொருவர்பிரிந்துடம்பொழியவுயி
ரிறக்குமன்றினுமொருவரொனிற்றெளிந்தினிதெவையு
மறக்கைதிண்பொருளதெனமனத்துணர்ந்த டைவரிய
துறக்கமிங்குறுநிலைமைசொலத்தகுந்துணிவுடைமை. (௰)

தீவினைகள்புரிகொடியபாவமுதல்சினவுபகை
யாவுநிலைதிரியவெழுதாமறைகள்புகலுநெறி
மேவியினிதொழுகுமறைவேதியர்கள்முகிறடவு
காவுசெறிவளமருவுகாசிநகரடைகுவர்கள். (௧௧)

வேறு.

வைகறையிற்றுயினீங்கியைங்கரனைமணிமிடற்றுவரதனோடு
மெய்கனிந்தகருங்கூந்தன்மலைமகளைத்திருவினொடுநெடியோன்றன்னைப்
பைகலந்தபாம்பணையான்றிருவுந்திபூத்தவனைப்பனுவன்மானை
மொய்கலந்தகொடுங்குலிசப்படையேந்துபுரந்தரனைமுதலினோரை. ()

கங்கைமுதற்பெயராற்றைக்கனைதிரைப்பாற்கடன்முதலாங்கடலைவா
ன்றோய் மங்குறவழ்திருச்சயில முதலானமால்வரையைவசிட்டனுதி,
பொங்குபுகழ்மாதவரையருந்ததியேமுதலாயபுரைதீர்கற்பின், மங்கை
யரைக்கவினெழுகுமுருப்பசியேமுதலாயமடநல்லாரை. (௧௨)

காசிமுதன்மாநகரைக்கவுத்துவமாமணிமுதலாமணியைக்காமர்
வாசமலிமந்தாரமுதலானசெழுந்தருவைவரிவண்டார்த்து
மூசுநனைக்கவுளயிராவதமுதலாங்கடகளிற்றைமுறைவழாது
தேசுதிகழ்சனகன்முதல்யோகிகளைச்சேடன்முதல்வாளரானை. (௧௩)

இருக்குமுதற்பழமறையைப்பிரணவமேமுதலாயவெழுத்தைநீங்காத்
திருக்கிளர்நாரதன்முதலாந்தெய்வமறைமுனிவரரைத்தேனுவாதி
யுரைக்குமுயர்பசுவையரிச்சந்திரனேமுதலாயவுண்மைவேந்தைக் [ரை
குரைக்குநெடுங்கடல்வரைப்பிற்றதிசி முதல்வரையாதுகொடுத்துளோ
நவிற்றருங்காயத்திரியேமுதலாயமந்திரத்தைநறுந்தண்போது
துவைத்துவரிவண்டுழலுநந்தனமேமுதலாயசோலைதன்னை
யுவப்புடனிந்திரனுகைக்கும்பரிமுதலாம்வாம்பரியையுலகிற்றீர்த்த
மெவற்றினுக்குமேலாயதங்கைதாய்மலரடியையிதயத்தெண்ணி. (௧௪)

நீணகரின்புறத்தகன்றுநானூறுவிற்கடைபோய்நிருதிதிக்கின்
வாணிலவுகதிரொழுகுமுப்புரிநூல்வலச்செவியின்வயங்கவேற்றித் [க்
தோண்மிசையுத்தரியமுயர்சென்னிசுற்றிநிலத்தினொருதுரும்புசேர்த்தி
காண்வருநற்பகல்வடக்குங்கங்குலிடைத்தென்றிசையுங்கருதிநோக்கி. ()

எறிவளிமுச்சுடர்கரைகொன்றிரங்குபுனற்செழுந்தரங்கமெண்டிக்காமான், மறையவர்மறறிவர்தம்மைநோக்காமலுவர்நிலத்தின்மறுகின்மன்றி, னெறியதனினிராமலுரைநிகழ்த்தாம லிருமலமுநீக்கிப்பின்னர்க், குறியதனையிடக்கைகொடுபிடித்தெழுந்துமண்கவர்வான்குறித்துச்சென்றே. (கஅ)

புழுவுரைதலெலியகழ்தல் புனலிலிடைப்படுதலிவைபோக்கிக்கற்றீர், பழுதறுமண்ணெடுத்திலிங்கத்தொருகாலைங்காற்குதத்திற்பதின்காலாங்குக், கழுவுகரத்தினிலிரண்டுகரத்துமெழுகாலொருகாலொருகாற்காலின், மொழியுமிருகரத்தின்முக்கான்மண்ணில்வேதியர்சவுசமுடித்தல்வேண்டும். (க௯)

மண்ணுறுமண்ணளவைநெல்லிக்கடுத்தான்றிற்பாதியெனவகுப்பர்தெண்ணீர்ப், பண்ணுறுபாத்திரமிலதேலுறுபுனற்கோர்முழமாகப்பயிலுமெல்லை, நண்ணியிருந்தேசவுசமுடித்திடுகசென்னிதனினலங்கொள்கண்டத், தொண்ணிறவுத்தரியமணிந்தாசமனத்தொழின்முடிக்கவெண்ணுதன்றே. (உ0)

ஈங்கிவர்மண்ணுறுதொழிலினிரட்டித்தல்பிரமசாரியற்கெஞ்ஞான்று
மோங்கியவானப்பிரத்தற்கதனிரட்டியதனிரட்டியுயர்சந்நியாசிக் [குங்
காங்கிவைகள்பகற்பொழுதிற்கிருட்பொழுதுக் கதிற்பாதியதருற்றோர்க்
திங்குறுநோயாளர்க்குமடவியர்க்குநான்கினொன்றாய்ச்செப்புநூலே. ()

வெண்ணிறவென்புமியிருந்தை சாம்பரொழியிடமதனின்மேவிச்சூடி, நுண்ணுரையில்புனல்வாங்கிக்குணக்கேனும்வடக்கேனுநோக்கிமுத்தீ, மண்ணுமறையவர்க்கிதையம்வாள்வேந்தர்க்கணிமிடறவ்வணிகரானோர்க், கண்ணமடவியரொடுபின்னவர்க்குவாயளவுசெலவருந்தல்வேண்டும். (உஉ)

இன்னணமுக்காற்புனலுண்டிருவிசும்புதனிபார்த்தங்குட்டமூலந்
தன்னிலிருமுறையிதழ்கடைவந்துநடுவிரன்மூன்றுதம்மான்
மன்னியிடவாய்தொட்டுத்தற்சனியங்குட்டத்தால்வலப்பான்மூக்கிற்
பின்னரிடமூக்கதனில்மறைபுகலூழ்முறையதனிற்பிறழாதொற்றி. (உக.)

அங்குட்டமனுமிகைசேர்த்தணிவிழியிலஞ்செவியிலடைவிற்றொட்டுத், தங்குற்றசிறுவிரலோடங்குட்டங்கூட்டியுந்திதன்னிலொற்றிக், கொங்குற்றமலர்த்தடக்கை யுரத்தமைத்துவிரலனைத்துங் கூட்டிச்சென்னி

துங்கப்பொற்ருேளிணைகள்முறைதொட்டின் னணைமீட்டுந்தொடுதல்வேண்டும். (உச)

தெருவினிடைப்போய்வரினுந்தும்மினுநீர்ப் படிந்திடினுந்தெண்ணீராதி, பருகினுந்தூசணிந்திடினும்விதிமுறைநற்கருமங்கள்பண்ணும்போதும், புரிதுயினீத்தெழுபோதும்யாதேனுந்தூய்மையில்லாப்பொருடொட்டாலு, மரிவையர்தோள்புணர்ந்திடினுமாசமனத்துறைமுடிக்கிற்புனிதராவார். (உரு)

நவமியுவாநந்தைையொடுஞாயிற்றிற்பல்விளக்கினனையுற்ருேர்களெவருமெழுகுலத்தோடுங்கெடுகுவர்பன்மாசெறியுஞ்சருகின்றேனுந்தவறுபடுமெனவுரைத்தநாள்களினும்புனிதநறுந்தண்ணீர்வாங்கித்துவரொறிவாயிடைப்பெய்துபன்முறிருகாற்கொப்பளிக்கிற்றூய்மையாமால்

தடவுநிலேமாவிருப்பையழிஞ்சில்வன்னி நாயுருவிதண்பூங்கொன்றை, கடுநரந்தைகுமிழ்வாகைபீந்துநறுவிலிதுவர்ப்பாய்க்கடுவாய்ப்பாலாய்க, கொடுமுளுடைத்தாந்தருவிற்சிறு விரலின்பருமைத்தாய்க்கோடலின்றி, வடுவிலதாந்தருமுறித்துவயங்கொளிவெண்பற்கறைகள்மாற்றல்வேண்டும். (உஎ)

மதிக்கடவுணினதிடத்துவைகினன்கோடியர்மானேவாணுள்சீர்த்தி, நிதிக்கிழமைபுதல்வரெழிலாற்றல்மனத்தூய்மையருணீதிஞான, முதுக்குறைவோடளித்தெனதுமுகநோக்கென்றருமறைகள்மொழியுந்தீநில் விதிப்படியிலுரைத்துநறுந்தருவொடித்து மணிமுறுவல்விளக்கல்வேண்டும். (உஅ)

குற்றமில்பன்னிருவிரலினளவையரு மறையோர்க்குக்கோடல்வேண்டு, மற்றையொருமூவருக்குமோரொருமெல்விரல்குறைதல்வகுத்ததாகுஞ், சொற்றநறுந்தருவினேவிற்போல்வளைத்துநாவழித்துத்தூயனுகிற், கற்றைநிலாக்கதிரெறிக்குங்கடவுண்மதிச்செல்வனுளங்கருணைகூரும். (உகூ)

தருப்பையெட்கோமயத்தொடுமண்தனிகொணர்ந்துபுனிதமுறுந்தலத்திற்சேர்த்திப், பொருப்புறழ்தோளுத்தரியமருங்கசைத்துச்சிகைமுடித்துப்புனலிற்சேரா, விருக்குநவின்றெரிபுனல்தொட்டணிசிரத்தொன்றுந்தியின்மேலிரண்டுமூன்றுங், குசைக்குமுந்திக்கீழிருதாட்கிருமூன்றுவிதிமுறைமண்ணுரைத்தல்வேண்டும். (௩0)

தழங்குபுனலெதிராடியெழுந்துடலங்கோமயத்தாற்றைவந்தாங்கு, முழங்குதிரைநீராடமொழிந்தமறையினைத்தினையுமொழிந்துமூழ்கிச்,செழுங்கரத்தாலிமையவர்கள்முனிவரார்தென் புலத்தவர்க்குத்தெண்ணீராங்குவழங்கியகன்கரையேறியுத்தரியந்தனைமறித்துப்பிழிந்துபின்னர் (௩க)

தூசுமருங்கினிலசைத்துத்தோளின்மேலுத்தரியந்துலங்கச்சேர்த்தி
மாசறுவெண்பூதியினை மார்பினணிந்துயர் தருப்பைவலக்கைசுற்றிக்
காசறுகாலைகடவகடன்கழிக்கவிவ்வண்ணங்கழித்திடானேற்
றேசழிந்துபின்னவனும்மறுமையில்நாயாய்ப்பிறந்துதிரிவன்மாதோ. ()

இன்னணநீர்க்கடன்கழித்துக்குணக்கேனுமவடக்கேனுமினிதுநோக்கி
மன்னியமூச்சவித்துமுக்காற்பிரமகாயத்திரியைமனத்திலோதிச்
சொன்னபிராணுயாமமொருகாற்செய்திடிற்பாவந்தொலைந்துநீங்கும்
பன்னிருகாலஃதியற்றிலளப்பிலநாள்தவம்புரிந்தபலனுண்டாமால் (௧௧)

அரந்தபிறந்துகிலசைத்துக்கண்டிகைமாலிகைசூடியன்னமூர்ந்தாங்
குறைத்தநறுஞ்செஞ்சாந்துஞ்செய்யபொலன்கலனுமணிந்துறையுமாதை
விரித்தமறைதொழுகாயதிரியணங்கைப்பருவமிருநான்குமேய
திருத்தருநல்லுருவாகநினைந்திரவியெழுமளவுஞ்செபித்தல்வேண்டும்.()

இன்னணஞ்செபித்துயிரதெட்டோதியுவத்தானமுறையினிதினுற்றிப்
பண்ணுசிவசங்கற்பமுதலானபழமறைகள்பகர்தல்வேண்டும்' தென்வரை
யினறுஞ்சாந்தத்தேய்வையும் வாலரியினொடுசெய்யபூவும், மன்னுபுன
லொடுங்கூட்டியருக்கியந்சேட்டுளங்கதிர்க்குவழங்கல்வேண்டும். (௧௫)

ஓரிரண்டுமூன்றொன்றுய்வனர்தருப்பைதனைநீக்கியொன்பானேழை
ந், தேருடையதருப்பைநுநிமுகலுளதாய்க் கொண்டகில்சந்தெறிநீர்
சேர்த்திச், சீர்கெழுதேவர்க்கொருகால்முனிவரருக் கிருகால்நற்றிலமுங்
கூட்டி, யார்வமொடுதென்புலத்தோர்தமக்குமுக்கால்பகர்நாளிலளித்தல்
வேண்டும். (௧௬)

அலங்குகதிர்வரகுழுந்துதிரள்சுணைக்காயெண்ணெயொடுமார்ந்தமூர
ல்லங்கொளியவெள்ளுப்புமுன்னைநாளடிசிலெழிலவரைப்பைங்காய்
நலங்கெழுநாற்றுறைபடிந்தோரிவைநீக்கியினிதருந்தநன்கினட்ட
பொலன்கொள்மூல்லைமுகையடிசில்தன்னில்வயிச்சுவதேவம்புரிகுவாரே

கடவுளர்பூசனையாற்றிவெண்ணிலவுக்கதிரெறிக்குங்கலன்கடாங்கி
விடையிவர்ந்துபானிறமென்றுகிலசைத்துநறியமுகைவிரிக்கும்வெள்ளை
மடலவிழ்தாரணிந்தபயவரதமொடுமினிதிருக்குமடந்தைதன்னை
யொடிவறுகாயத்திரியையுள்ளுபுநண்பகற்கடன்றீர்த்துவப்பினேடும். ()

ஆதுலர்நல்விஞ்சைகற்பானடைந்துளோரறம்புரிதற்கைமேற்போ
ர், வேதமுறையினிதுணர்வோர்பிரம சாரியர்துறந்தோர்விருத்தராகப்,
போதருவோர்க்குணவளித்துக்கொடிப திதரிழிந்தோர்நாய்புலம்புநோய
ர்க், கோதியமந்திரமுரைத்துக்கொடிமறுகி னிடைப்போதந்துய்த்தல்
வேண்டும். (௧௭).

மணிமறுகிற்போதந்தோரான்கறக்கும்போதளவும்வறியோர்த்தே டித், தணிவருநற்கேளிரொடுந்தையலொடு மக்களொடுந்தனதில்லைகிக், குணதிசையாயினும்வடபாலாயினும் பார்த்திருந்துபிடிமூன்ருற்கோதி, லணிபெறுநற்பலியாற்றித்தருப்பையினையனுமிகையிலகலாதார்த்து. ()

அருமறையானீர்வலஞ்செய்தடிசில்தொட்டாபோசனங்கொண்டன் பினேடு, முரியபிராணுகுதிசெய்தினியன நெய்யோடுமுதலுண்டுபின்னர்க், கருணையொடுமெரிப்பனகளுடனருந்தி யான்பால்முக்கனிகளகூட்டி, வினைவினெடுபின்னருந்தியுத்தராபோசனமும்விதியிற்கொண்டு. (௯௪)

மிகுந்தபுனல்பெருவிரலின்வழிவிடுத்துரவுரவத்தின்மேவினோர்கள்
மகிழ்ந்திடுகவெனப்புகன்றுகைபூசியாசமனமரபினுற்றிப்
புகன்றபரத்தினைநினைந்துகால்கழீஇச்சனிவடவைபுணரிவெய்யோ [மு.
னகந்தனிலோர்ந்தயின்றவைகளற்றிடுகவெனச்செபித்தங்கடைக்காய்தின்

பொருவரியவிதிகாசபுராணமிவைபயின்றுபகற்பொழுதுபோக்கிப்
பரிதியுயரத்தவரைபடுபொழுதிற்கடனதனைப்பயிலுமில்லி
னிரைபயிலுந்தொழுவினதிதனிலிரண்டாறடைவுழியினீறுபூசி
மருவுசினகரத்தாற்றிலொன்றினுக்கொன்றனந்தபலன்வழங்குமாதோ.()

நீணிறமென்றுகிலசைத்துநீலநிறப்பொற்கலன்கணிலவத்தாங்கிக்
காணெழுகுகரியமலர்த்தொடை சூடியெறும்வலியகருடனூர்ந்து
ஞானமிகுஞ்சாமமறைவடிவாகுமணிநிறத்தநங்கைதன்னை
வானிடைமீனெழுந்துணையுநினைந்துகாயத்திரியைவழுத்தல்வேண்டும்.()

முளிசினையசமிதைகஎரிற்றீக்கருமமுறைமுடித்துமுகமன்கூறி
யளிபெருகவிருந்தினெடுமடிசினுகர்ந்தாசமனமினிதினுற்றித்
துளவமுகில்குறுமுனிவன்முசுகுந்தன்கபிலனடிதொழுதுசண்ட
வளியெறியுமிருஞ்சிறையகலுழன்மறைசெபித்தரனை வணங்கியேத்தி.()

இருண்மேய்ந்தமணிவிளக்குநிறைகுடமுந்தலைமாட்டினினிதுவை த்து, முருகார்ந்தநறுந்தூமந்தவழுமலரணையதனின்முடிவில்கற்பி, னுரு வாய்ந்தவோடரிக்கண்மகளிரிருமுலையகலத்தொளிப்பச்செம்பொற், றரு வாய்ந்தபணைப்புயத்திற்றழீஇக்கொண்டுதுயில்புரிதறகைமைத்தாமால்.

தானுறையுமுவளகத்திற்கீழ்த்திசையிற்றலைவைக்கக்காதன்மாமன், வானுயர்பொன்மணிமாடத்துறைந்திடிற்றென்றிசையதனில்வைக்கச்செ ன்னி, யூனமில்வேற்றூருறையிற்குடபாலிற்றலைவைக்கவுதக்கிலென்றுந் தேனமருநறுங்குஞ்சித்தலைவைத்துத்துயில்புரிதல்செவ்விதன்றே. ()

௧௫-வது இல்லொழுக்கங்கூறியஅத்தியாயம்-முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம்-௧௬௮.



## முப்பத்தாறாவது

# பிரமசரியங்கூறிய அத்தியாயம்.

தாளத்துவலையரத்தச்செறுத்தங்குநாடொட்
டுருவுற்றுநீங்கிச்சுடலைக்கண்ணுறைதல்காறுந்
தெருளுற்றதெய்வமறையோர்முதறசெப்புமொன்று
வருணத்தவர்க்குமகருமங்களவகுத்துரைப்பாம். (௧)

போராடுவேற்கண்மடமங்கையர்பூத்துவீங்கு
நீராடியநாள்முதலாகநெறியினேது
மீராறுநாளிற்கருவவ்வயிறமெய்தினன்காந்
சீரார்மதியிற்செயத்தக்கனசெய்துபின்னர். (௨)

ஆறுமதியிலுயர்சீமந்தமாற்றியெய்தாப்
பேறுமகப்பெற்றிடுங்காலையிறபெட்பினோடு
மாறுதகாதன்மகவின்முகநோக்கினனச்
சேறுடியேற்போர்க்குயர்நீணிதிமாரிசிந்தி. (௩)

தோளாமணியன்னவத்தோன்றலுக்கன்பினோடு
நாளோர்பதினொன்றுபுகுந்துழிநாமநல்கித்
தாளான்மதிநான்கினிற்சந்திமிதித்தபின்னர்க்
கேளோடுமாறுமதியிற்கிளரன்னமூட்டி. (௪)

தத்தம்மறையின்வழியேசிகைதாங்கவைத்து
முத்தம்மெறிந்தமுங்குமென்னகைமாதரார்க்கு
மித்தன்மையாயகருமம்மறையினெறியினாற்றி
மைத்தங்குகோதைமணமாமறையோடுசெய்க. (௫)

ஆண்டேழிலெட்டின்மறையந்தணர்க்காகுமுந்நூ
லாண்டோர்பதினொன்றினின்மன்னவர்க்காகுமென்ப
வேண்டீர்பருவமிருநான்கொடுநான்குசேரிற்
பூண்டாங்குதிண்டோள்வணிகர்க்குப்புனைதல்வேண்டும். (௬)

ஐந்தாம்பருவத்தினுமாமறையோர்க்கொராறில்
லைந்தாரரசர்க்குரைப்பார்நற்பருவமெட்டி
னந்தாதசெல்வமலிநாய்கருக்காகுமென்ன
முந்தாரணங்களொருநான்குமொழிந்தவன்றே. (௭)

விழுப்பஞ்செய்காயத்திரிநன்கின்விளம்பிவேதம்
பழிப்பின்றிநாளும்பயிற்றித்தம்பண்பினுய

வொழுக்கம்புணர்வித்ததன்பின்னவ்வொழுக்கமாக
வழுக்கின்றிசிற்றறலேமைப்படுமாண்பதாமால். (அ)

சொன்னமறையினுயர்ந்தோர்மனைதோறுமேற்ற
வன்னங்குரவனருள்பெற்றலதார்தலாகா
தென்னலமைததசெழுஞ்சோறுபைந்தேனுநீப்பர்
கொன்னேயிரவிதனைநோக்குதல்கொள்கையன்றே. (கூ)

ஆள்வேட்டமாடுநெடுங்கண்மடமாதரம்பொற்
றோள்வேட்டலாகாதமர்கேளொடுந்துய்த்தலாகா
கோளேற்றபுல்லர்குழுவுற்றுழிக்கூடலாகா
தாள்போற்றிநாளுங்குரவன்றனைத்தாழ்தல்வேண்டும். (க0)

காழ்கொண்டசந்தங்கமழ்தாரடைக்காயொடாகா
வாழ்கின்றவாவியெவையேனும்வதைத்தலாகா
ஆழ்கொண்டதண்டமுரிமுஞ்சியொழித்தலாகா
வீழ்கின்றநெஞ்சம்விடயத்தின்விடுத்தலாகா. (கக)

மறையோர்கட்காண்டுபதினாறுமறங்கிடக்கு
மெறிவேலரசர்க்கியலாண்டிருபத்திரண்டு
நெறிசேர்வணிகர்க்கறுநான்கிவைநீங்குமென்னின்
முறையன்றுசாந்திபுரிந்தன்றிமுந்நூல்கள்சேர்த்தல். (கஉ)

மறையோர்க்குத்தூயகலைநீடுரிபுள்ளிமான்றோ
லறைவார்கழற்கால்வயவேந்தர்கட்காட்டுமென்றோல்
முறைசேர்வணிகர்க்கிவைமுப்புரிநூலிற்றேடும்
பொறிதுஞ்சுமந்தாரகலத்திற்புனைதல்வேண்டும். (கங)

ஒளிர்முஞ்சிமென்புற்சண்ம்போடுபெருத்திருண்ணூல்
வளர்நான்மறையோர்முதல்மூவர்மருங்கினுர்ப்ப
நளிசேர்தருப்பையுயர்தாதகிவில்லநார்மற்
றளியோடிவையுமணிந்தாலுமணியலாமால். (கச)

ஒன்பானமைந்தவொருமூன்றுபுரியவாய
நன்பாலவெண்ணூல்சணம்பாட்டின்மயிருநன்கி
தென்பார்முறையின்னவர்கட்குயர்தண்டமோதி
னன்பாமருமாமறையோர்க்குப்பலாசமாகும். (கரு)

வேந்தர்க்குமேனேவணிகர்க்கும்பலாசம்வில்ல
மேந்தப்பணித்தவிவைநீளமம்மூவருக்கு
மாய்ந்திட்டசென்னிநுதல்மூக்கினளவயென்ப
தோய்ந்துற்றகேள்விமறையின்றுறைபோயதொல்லோர். (கசு)

ஈன்ருளவளேயனேயார்மனேயையமேற்றுண்
டான்ரேர்புகழுவொருவேதமமைந்தபின்னர்ச்
சான்ரேர்மதிப்பசமாவர்த்தனமாற்றிமிக்க
வான்ரேய்பிறைவாணுதல்மன்றல்முடித்தல்வேண்டும். (௧௭)

விதியார்சமாவர்த்தனமாறறினாவேட்டிலாரேல்
மதியோரிகழ்வர்வளர்கன்மமியற்றலாகா
முதியோர்சொன்னுன்காச்சிரமத்தின்முறைவழாது
வதியாதவரேதுறக்கத்தின்வதிந்திடாதார். (௧௮)

முன்னுச்சிரமிக்குயர்தண்டொடுமுந்நிமாய்ரேல்
மன்மாமகமில்லுறைவார்க்குவனத்திஞேர்க்குத்
தொன்மாமயிர்வாணகந்தாங்கல்துறந்துளோர்க்குக்
கன்மேயவாடைகழைதண்டடையாளமாமால். (௧௯)

நல்வேதம்வேதப்பொருள்யாவுநவின்றுளோர்கள்
தொல்லாசிரியர்பொருள்கொண்டவைசொல்லுகிற்பா
ரொல்லாததீங்குதபநூறுமுபாத்தியாய
ரெல்லாவினேயுமுடிப்போர்குருவென்பரன்றே. (௨௦)

அருண்மேவுந்தந்தைதனிலன்னேயதிகமாகுந்
தெருள்சேர்குரவற்பழிப்போரிடைசேர்த்தலாகா
மருளோடுமன்னேர்ப்புறங்கூறுநர்வைமுள்ளேற்ற
விருண்மாநிரயந்தனிற்பற்பகலெய்துவாரே. (௨௧)

நற்ருய்புதல்வியுடன்ரேன்றியநங்கையேனு
முற்ரேருழியிற்றனியெய்தியுறைதலாகா
விற்ருனேவேந்தன்குருமுன்னவன்மாமன்மேய
வற்பார்மகளிர்பயந்தாளொடுந்தாயரைவர். (௨௨)

ஓராழிவெய்யோனுதயக்குவட்டுற்றகாறும்
பேராதுயிலுற்றுணராதபிரமசாரி
யாரார்மலற்றைத்தினநோற்றலமைத்ததாகுஞ்
சீரார்மனே வாழ்குநர்செய்தியுரைத்துமன்றே. (௨௩)

நன்மாண்புடையமனேயாள்மனேதன்னில்நண்ணிற்
சொன்மாண்பனேந்துந்தொகுமாங்கவளெய்திலாளே
லின்மாண்புறுதென்றுயர்வேதமிசைத்தவாற்ரு
லன்னூர்வடிவங்குணஞ்செய்தியறையலுற்றேன். (௨௪)

௩௯-வது பிரமசரியங்கூறிய அத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௬௬௨.



முப்பத்தேழாவது

## மகளிரிலக்கணங்கூறிய அத்தியாயம்.



நண்ணுகோத்திரமொன்றினிலுதித்துளோர்நலிதருபிணியுற்றோர்
பெண்ணலாதுயர்நன்மகப்பெறுகிலாப்பேதைபர்வழிவந்தோர்
மண்ணினின்றவான்பழிபடுமரபினில்வந்துளோர்வரைபாந்தள்
விண்ணின்மீனதிபறவையின்பேருளோர்வேட்டிடல்விதியன்றே. (க)

இனியமென்மொழியுடையளாய்த்தன்னினுமிளையளாயெவரோடு
முனிவிகந்திடுகுணத்தளாய்ப்பொருந்தியமுயற்கறையொழிந்தோங்கு
பனிசெய்வெண்மதிமுகத்தளாய்மைந்தர்கள்பலரொடும்பிறந்தாளாய்த்
துனியிலாதநற்கன்னியைவேட்டிடல்தொன்மறைவழக்காமால். (உ)

இழிந்தபுன்குலத்தாதல்தன்குலத்தினுமியல்புறமேம்பட்டுக்
கழிந்தநற்குலத்தாதல்பொன்னனையவர்கவினுடைவடிவெல்லா
மொழிந்தநூல்வழிபிறந்தமெல்லுருவினர்முகிண்முலைமுயக்குற்று
லழிந்துபோகுநல்லுணர்வழனிரயமுமாங்கவர்க்கணித்தாமால். (ங)

அரக்கெறிந்தசெந்தாமரையெனச்சிவந்தரும்பியவியர்வின்றிப்
பெருத்தலங்குதலின்றிமெல்லனிச்சமேற்பெயர்ப்பினுங்குழைவாகி
யுருத்தவைம்மையுடுள்ளடியமைந்ததினுறுவரைகொடிமீனங்
தரித்தசக்கரம்வளைகுடைபோன்மெனிரறக்கமன்னவர்க்காமால். (ச)

நடுவுமெல்விரலளவுமேனோக்கியோர்வரைநனிகிடந்துற்று
லடையுநற்றிருப்பாந்தள்வெம்பேரெயியாய்மயிர்க்கழுகேபோ
லுடையரீள்வரைகிடந்திடினல்குரவொழிவுறுந்துயர்மேவும்
வடிவமைந்தநற்பெருவிரல்திரண்டெழில்வாய்ந்திடிற்றிருவெய்தும். (ரு)

அன்னமெல்விரலகன்றிடிற்கைம்மையாநீண்டிடிற்றிருவஞ்குஞ்
சொன்னதன்மையினன்றிமற்றேனையதொகுவிரலறநேர்கின்
மன்னுறுத்திருநீளுமேற்பிறனலமகிழ்ந்திடுநெருக்குற்று
வின்னலுற்றிடுந்தாசியாங்குறுகிடிலிறந்திடுஞ்சின்னாளில். (சு)

விரல்களொன்றின்மேலொன்றுறிற்காதலன்வீந்திடுமகன்றனற்
பொருளகன்றிடுங்கடைவிரனிலத்திடைபொருந்திடாதெனிற்காதல்
பெருகுகேள்வரையொறுத்திடும்பெருவிரற்கடுத்தமெல்விரனீளி
னரியநன்மணமாற்றுமுன்பலரொடுமன்புறப்புணர்கிற்பாள். (எ)

அறவுமென்மையாயளவினிற்பருத்துவேர்வரும்பொடுநரம்பின்றிச்
சிறிதுயர்ந்திடினன்றுயர்நரம்பொடுசேர்ந்திடிற்சேட்செல்லு
முறவளைந்திடினிரப்புறுங்கோலெனவுயர்ந்திடிற்சிறப்பின்றாம்
வெறியபன்மயிர்திளைத்திடிற்சில்தியாயளப்பிணுள்மெலிகிற்பாள். (௮)

ஒளியுமிழ்ந்தநல்வட்டமாய்ச்சிறிதுசேப்புண்டிடுநகமென்னிற்
களிவிளைத்திடுந்துகளெழநடந்திடுங்கன்னிதன்குலமூன்றும்
விளிவுகண்டுமற்றயலவர்ப்புணர்ந்திடுமென்பரட்டியல்கூறி
னளியுறத்தசைந்துயர்நரம்பெழாதுருண்டமுகுறினிதாமால். (௯)

நரம்பெழுந்துமென்பரடுயர்ந்திடிற்றிருநண்ணுறுகுதிபந்தி
னிரம்புபேரெழில்வாய்ந்திடில்விழுமியநீண்டிடிற்றுயரெய்தும்
வரம்பிகந்தறவுயர்ந்திடினேதிலார்மணந்தனில்மனம்போக்கும்
திருந்தலின்றியேபருத்திடிலளப்பருஞ்செல்வமஃகிடுமன்றே. (௧௦)

மயிரிகந்துமேல்வரவரப்பருத்திணைவாய்ந்தொளியுடைத்தாகி
யுயர்நரம்பெழாதுறுகணைக்காலெழிலோங்கின்மன்னவர்க்காகுஞ்
செயிரிலாமுழந்தாளுயர்பாண்டிலாய்த்திரண்டிடிலழகாகும்
பயிலுமென்றசையொழிந்திடின்முலைவிலைபகருமாதரிற்சேரும். (௧௧)

குறங்குநீணரம்பொடுமயிரின்றிமற்றொன்றொடொன்றுறக்கூடி [ற்
மறங்கொள்யானையின்றடக்கைபோற்றிரண்டுமேல்வரவரப்பருத்தோங்கி
சிறந்தவாமயிர்பொருந்திடிற்கைம்மையாநீங்கிடிற்றுயர்சேரும்
பிறங்கிடாதெனிற்சீர்கெடும்வன்மையாய்ப்பெருத்திடினிரப்பாமால். ()

எண்ணுமங்குலமோராறுநான்கதாயெழில்பெறுங்கடிநன்றாம்
வண்ணம்வாய்ந்துறவுயர்நிதம்பத்தொடுஞ்சதுரமாய்வனப்பேறி
நண்ணுறுதறநீண்டுதாழ்ந்துயர்ந்திடினனிமயிரிடைசேரிற்
கண்ணும்வெந்துயர்ப்பிணிபிடித்தலைப்புறக்கைம்மையாய்விடுமன்றே. ()

பருத்துயர்ந்தறமென்மையாய்த்திரண்டிடுஞ்சகனமேற்பரிவோடும்
பொருத்துறுங்கலவிக்குநல்லின்பமேபூத்திடுமாறுகி
லருத்திசெய்திடாதாரனூர்பயக்குறுமம்பகட்டகலல்குற்
பெருத்தவாமையின்முதுகுயர்யானையின்பிடரிவாய்ந்திடினன்றே. (௧௪)

வலமுயர்ந்திடினழகுடைப்பெண்சிறூர்வயிறுவாய்த்திடுமென்ப
வலதிடப்புறமுயர்ந்திடின்மைந்தனையளித்திடுங்கமலம்போ
லுலவுமெல்லரசிலையெனமான்குளப்படியெனப்பருத்தோங்கி
யெலியின்மென்மயிர்போன்மயிரணிந்திளமணியமைந்திடினன்றே. (௧௫)

சங்கின்மென்றுளைபோன்றிடின்மகப்பெறூடடம்புழைவிரிவாகித்
துங்கமாய்மணிசெறிமயிர்பருத்திடிற்றுயருறுமடிப்பாமேற்

பங்கமுற்றிடுசெல்தியாமிடப்புறம்பள்ளமாய்ச்சுழியெய்தின்
மங்கலத்தபேரணியிழந்தயர்வொடுமம்மர்நோயுழல்கிற்பாள். (௧௬)

இடுகுறுண்ணிடைவறுமையெய்திடிற்றிருவெய்திடும்பெரிதாகிற்
படருழந்திடுமுந்தியாழ்ந்தகன்றெழிற்பயில்வலஞ்சுழியாகி
லடையுநற்றிருநரம்பொடுமயிரணிந்துயர்ந்திடஞ்சுழியாகி
லுடலம்வன்றுயர்மென்மையாம்வயிறெனின்மகப்பலவுயிர்க்கிற்பாள். ()

அவ்வயிற்றெழில்தவளைமெல்வயிறெனவமைந்திடிற்புவிகாக்குஞ்
செவ்விவேந்திளங்குமரரையுயிர்க்குமாலிலையெனச்சிறப்பெய்தி
யெவ்விடத்திலுமயிருருதிருந்திடிலிகழருஞ்சிறப்பெய்தும்
நவ்விநோக்கியர்வயிற்றினிலணிவரைமூன்றுறினலனுமால். (௧அ)

வயிற்றின்மென்மடிப்புயர்ந்துநீள்சுழிபலவதிந்திடின்மலடாகிச்
செயிர்ப்பினேடுதன்பதியகன்றெங்கணுந்திரிந்துகாமமுமின்றிப்
பயிர்ப்பில்தாசியாங்குடமெனமுழவெனப்பருத்திடுமெனினுளு
முயிர்ப்பவிந்துயிருலந்திடுமனநிரப்புற்றுவெந்துயர்கூரும். (௧௯)

நீறுபூத்துயர்பூசணிக்காயெனநெல்லெனவயிறெய்திற்
சோறளப்பிலதுய்த்திடுமகன்றிடிற்றுயருறுமிகநாலிற்
கூறுமாமனைக்கொழுநனைக்கொன்றிடும்விலாப்புடைதசைமேவி
யூறின்மென்மையாய்நரம்பெழாதழகுறினுலப்பறுதிருமேவும். (௨௦)

நரம்பெழுந்துறுமயிரொடும்விலாப்புடைநண்ணுமேலவணூலி
னிரம்பிலக்கணமுடையளாயினுந்திருநீங்குமவ்வயிற்றின்கட்
பொருந்துநன்மயிரொழுக்கறமென்மையாய்ப்பொழிகதிருமிழ்நீலத்
திருந்துகோலெனக்கிடந்திடின்மலருறைதிருவினுஞ்சிறப்பெய்தும். (௨௧)

மயிரொழுக்கமுள்வளைந்திடிற்கைம்மையாமம்மயிர்சிவப்பேறிற்
செயிருறுங்குணமெய்திடுமிடையிடைசிதைந்திடிற்றிருநீங்கு
மியல்பொடுஞ்சமமாய்மயிரின்றிநல்லிதயமாழ்ந்திடாதாகி
னுயிரினுஞ்சிறந்தினனுயிர்க்காதலனுவப்புறச்சிறப்பாமால். (௨௨)

இதயமென்மயிரணிந்திடிற்காதலனிறந்திடுமகலுற்றால்
மதனைனங்கணைவருத்திடப்பலரையுமணந்தளியிலளாகுஞ்
சிதைவிலங்குலமோர்பதினெட்டதாய்ச்சிறிதுயர்ந்திடினன்றூந்
ததையுமென்மயிரணிந்தறப்பருத்திடிற்சார்வருந்துயராகும். (௨௩)

வடங்கொள்வெம்முலைபணைத்தடிகனத்திணைவாய்ந்திடைவெளியின்றிக்
கடைந்தசெப்பினிற்புடைபரந்தெழிறவழ்கண்கறுத்திடினன்றூந்
தடங்கண்மங்கைதன்வலமுலையுயர்ந்திடிலாண்பெறுந்தளராது
குடம்பழித்துயரிடமுலையுயர்ந்திடிற்பெண்பெறுங்குறிப்பாமால். (௨௪)

அடிகனத்துமேல்வரவரநேர்ந்திடிற்சிறிதுநாளழுங்கெயதும
வடிவமின்றியேதிரிகைபோற்பதிந்திடில்வசைபடுகுணனுரு
மொடிவில்கண்ணிணை பருத்திடினீண்டிடிலுயர்ந்திடினுதியாழிற்
கடினமாயறநீங்கிடுமுலேயெனிற்கனவினுந்தொடலாகா. (உ௫)

கழுத்தடிப்புறத்தென்பெழாதமைந்திடிற்றிருவுறுங்கவின்யாது
மொழித்துமேலெழுந்துயர்ந்துதாழ்ந்திடிற்றிருவொழிந்திடுமழகார்ந்த
பழிப்பில்தோளிணைகுறுகுகனீடல்மற்றின்றிமென்பணைபோல
விழுப்பமெய்துறினன்றுதோண்மயிருறிற்கைம்மையாய்விடுமன்றே. ()

தோளிலென்புமேலெழுந்திடிற்கைம்மையாமுலர்ந்திடிற்றுயரெய்துங்
கோளில்சந்துகடைசத்துதோன்றுவெனிற்குற்றமொன்றிலதாகு
நீள்கைமூலமென்மயிரொடுமுயர்ந்திடப்பருத்திடனெறியாகும்
வாள்கொள்செம்மயிராழ்தனீணரம்பொடுவழியும்வேருறிற்றீதாம். (உஎ)

உலறுபன்மயிரின்றிநீணரம்பொடென்புயர்ந்திடாக்கரநன்றுங்
குலவுபன்மயிரென்பொடுநரம்பெழிற்கொடியவெந்துயரெய்து
மிலகுதாமரைநனையெனப்பெருவிரலியைந்திடிற்சிறப்பெய்து
மலகில்பேரெழிலங்கைமென்முயல்வயிறுமெனக்குழைவுற்றே. (உஅ)

அரத்தமூட்டியசெய்யபொற்றுமரையகவிதழெனச்சேந்து
பொருத்துமெல்விரலிடைவெளியின்றியேபொருந்தியவளைத்தாகி
யிருத்தனன்றுயர்புறங்கையினரம்பொடென்பெழாதுமென்றசைமூடிப்
பெருத்துநீண்மயிரொழிந்தெழில்வாய்ந்திடிற்பெட்பொடுந்திருவெய்தும்

அங்கைநீள்வளைபலவுறிற்கைம்மையாமகன்றிடிற்றிருவஃகுந்
தங்குநீணரம்புயர்ந்திடிலிரக்குநீள்புறங்கையிற்றலைப்பெய்து
துங்கமாமயிர்செறிந்திடிற்காதலன்றுலைவனீணரம்பெய்திற்
பங்கமுற்றுயர்சிரப்புறநாடொறும்படுதுபரிவு௨வீழும். (௩௦)

இடையறுதுறச்சேர்ந்திடத்தோன்றிடாதெழிறிகழ்வளையாவு
மிடையுறுதுசெங்கபலெனக்கிடந்திடின்விழுமிதுகமலம்போல்
வடிவம்வாய்ந்திடிலரசரிற்கிழத்தியாய்மகப்பெறும்வளையாமை
குடைநிகர்த்திடில்விண்ணவர்க்கன்னையாய்க்குறைவில்சீர்பெறுமாதோ.()

கற்புவாய்ந்திடுஞ்சோத்திகநிகர்த்திடிற்கமழ்வலம்புரிநேரி
னெற்றைவெண்குடைமன்னவர்க்குரியளாமுறுதுலையெனச்சேரின்
மற்றைநாய்கர்தம்மனைவியாநுகத்தொடுசகடமாம்வடிவெய்தி
லற்பினேருடுநல்லுழவர்தம்மனைவியாயறம்வளர்த்திடுமன்றே. (௩௨)

வேழம்வாம்பரிவெள்விடைவச்சிரம்வீசுசாமரந்தோட்டி
யாழியொப்புறினரசரிற்கிழத்தியாமாடல்வேல்கதைசூலஞ்

சூழ்சுடர்க்கொலைவாளிவைபோன்றிடிற்றெருகுபொருட்குவையாவும்
விழுனர்க்கெலாமகிழ்வுறநாடொறும்வேண்டுவநனிநல்கும். (௧௩)

அரவமொட்டகந்தவளைசெந்நாய்கழுகரற்றுவெங்கரம்பூனை
நரியுடற்றுதேணிகர்த்திடிலருந்துயர்நண்ணுமங்குட்டத்தில்
வளைகளிட்டிகையளவுறிற்காதலன்மரித்திடுமெழில்வாய்ந்த
விரல்களுழ்முறைநேர்ந்துறுசந்துகண்மிகுந்திடாவெனினன்றும். (௧௪)

மயிர்நரம்பெழூந்துயர்ந்தறவன்மையாய்வளைந்துநேர்ந்திடைநீங்கிற்
செயிர்விளைந்திடுங்கூருகிர்நீண்டிடிற்சிவந்திடிற்சிறப்பாகும்
பயிலுநல்லொளியின்றியேபொன்மையாய்ப்பள்ளமாய்விளர்ப்புற்றாற்
றுயருழந்திடும்புள்ளியாய்விளர்ப்புறிற்றேய்ந்திடும்பலரோடும் (௧௫)

முதுகுசேர்ந்திடுமென்புமென்றசையினின்மூடிநீண்மயிரின்றி
விதியினல்லெழில்வாய்ந்திடினன்றுகூன்மேவிவன்மயிர்வேய்ந்து
தசையுமென்பொடுநரம்பெழூந்துயர்ந்தறத்தாழ்ந்திடிற்றீதாகும்
பொதிநரம்புகோணின்றிமென்றசையினிற்பொருந்திடிற்சுவனன்றும். ()

சிறுபுறத்தினினரம்பெழில்வன்மயிர்சேரினீண்டிடிற்கோணி
லறவும்வற்றிடிற்றீதுமென்கழுத்துநாலங்குலத்தளவாகி
யுறுவனப்பொடுங்கன்னியங்கழுகெனத்திரண்டொளிர்வரைமூன்று
பெறுதனன்றதுகுறுகிடிற்றுசியாம்பெருத்திடிற்கலன்போக்கும். (௧௭)

உலர்ந்துநீண்டிடிற்குறுகிடின்மயிரொழிலுலப்பறுதிருநீங்குங்
கலந்துநீண்மடிப்பெய்திடின்மலடியாநாளன்கவினெய்தி
நலஞ்சிறந்திரண்டங்குலத்தளவையாய்த்திரண்டிடினய்றுகு
மலிந்துநீண்டிருகூறதாய்ப்பருத்துவன்மயிருறிற்றீதாமல். (௧௮)

அணுநரம்புறுமயிரிவைபொழிந்திடலழகுறும்வளைந்தோங்கி
நனியிளைத்தறக்குறுகிமென்மயிருறினவையதாங்கபோலங்க
ளினியவாய்த்தசைந்தாடியினெழில்கவர்ந்தியைதனன்றெழிலுறுங்
கனிவுறுதறப்பள்ளமாய்மயிரொடுங்கடினமாயுறிற்றீதாம். (௧௯)

ஒளியுமிழ்ந்துநல்வட்டமாயெழிறிகழுவாமதியெனத்தோன்றி
நளினமென்மணம்வீசுவாண்முகமெனினன்றுகீழ்தழ்சேந்து
வளர்செழூந்துகிர்க்கடிகைபோற்றிரண்டதினடுவணோர்வரைசேரிற்
களைகணுயுலகளித்திடுமரசரிற்கிழத்தியாய்க்களிகூரும். (௨0)

பருத்துநாணெனச்சிறுத்திரண்டிதழெனப்பகர்ந்திடும்வரைமேவிற்
றிருத்தணப்புறுங்கறுத்தறப்பருத்திடிற்கைம்மையாய்த்துயர்சேரும்
பொருத்துமேலிதழ்நடுச்சிறிதுயர்ந்தெழில்பொருந்திடினன்றாகும்
விரித்துலர்ந்துநீண்மயிரொடும்பொருந்திடின்மிக்கவெந்துயர்கூரும். ()

முருந்தெறிந்துவெண்ணிலாக்கதிர்விரித்தொளிர்முத்தினேநிரைத்தென் னத், திருந்துவெண்பலெண்ணான்கெனுந்தொகையவாய்ச்செறிந்திடினன் றுகும், பரந்துயர்ந்துநீண்டகன்றுபொன்னிறத்தவாய்ப்பசுமையாய்த்தெ ற்றித்துக்,கரிந்துசிப்பிபோன்றிருந்திடிற்றுயரொடுங்கையறவுறுமாதோ()

அணரிமேயபல்லுயர்ந்திடிற்றுயிரழிந்திடுந்தெற்றுகிற்
கணவன்வீந்திடுநீங்கிடிற்பலரொடுங்கலந்திடுநாச்சேந்து
தணிவின்மென்மையாயிருந்திடினினியனநுகர்ந்திடுந்தழல்வெங்கட்
பணியிணுவெனநுனிகவர்ந்தகன்றிடிற்படுதுயருறுமாதோ. (௪௩)

நாவிளர்த்திடிற்புனலின்வீழ்ந்திறந்திடுநனிகறுத்திடிற்சீறு
மோவறப்பெருத்திடினிரப்பெய்திடுமுயர்ந்துநீண்டிடினும்
யாவதாயினும்வளைவிகந்திருந்திடுமகன்றிடலிகல்செய்யு
மேவுகின்றவுண்ணுச்சிவந்திழுதெனமென்மையாமெனினன்றே. (௪௪)

இன்னதன்மையினன்றியுண்ணுவறத்தூற்றிநீண்டெழுந்தோங்கிப்
பொன்மையாமெனிற்புறநகரெங்கணும்போக்கயர்ந்திடுமன்றி
வன்மையாமெனிற்கள்வர்தம்மனேவியாம்விளர்ப்பின்மங்கலநீங்குந்
துன்னருங்கறுப்பெய்திடிற்கொழுநனேப்பிரிந்துவெந்துயர்கூரும். (௪௫)

இலகுபொற்கொடிமூக்கினென்புட்சிறிதுயர்ந்துசேர்ந்தியலெள்ளின்
மலரின்வண்ணமாய்நீண்டுதாழ்ந்திராதுமேல்வரவரவுறநேர்ந்து
நிலவுமென்றுளேசிறுத்திருபுறங்களுநேர்பெறச்சமனுகி
லுலகமியாவையுங்கைதொழுதேத்திடுமொண்மலர்த்திருவொப்பாள். ()

கருமையாய்நுனிவளேந்திடைபள்ளமாய்க்கவிழ்ந்தறப்பருத்தோங்கி
யருணமாய்நுனிபருத்திடிற்கைம்மையாஞ்சிலதியாமடிப்புற்று
லுருவுதேய்ந்தறக்குறுகிடிற்கலதியாமுறுகவுள்சுரித்தொண்பற்
றெரிவுறுதுகண்ணிடுக்குறுநிளநகைசெய்திடலினிதாமால். (௪௭)

சொல்லுமாறலதுறுநகைபுரிந்திடிற்றேமுறுந்தும்முங்கால்
மெல்லமெல்லென விருமுறைமும்முறைதும்முதல்விதியாகு
மல்லதீதுகண்மணிகறுத்திமைகறுத்தயலிடம்விளர்ப்பாகிச்
சில்லரிக்கடைசிவந்துபைங்குவளேயின்செவ்விவாய்ந்திடினன்றும். (௪௮)

கண்ணுயர்ந்திடலாயுள்போம்வட்டமேற்கலந்திடும்பலரோடு
மண்ணல்யானேயின்கண்ணிகரமைந்திடலகற்றுதல்குணனுகும்
வண்ணமென்புறுநிறமெனினற்குணம்வாய்ந்திடாதறச்சேப்பி
னுண்ணுங்காதலனுயிரினேயாழுமேற்சிலதியாயுழல்கிற்பாள். (௪௯)

ஆன்கணெப்புறிற்கலவியில்விழைவுறுமாடுமேதியின்கண்ணே
போன்றுமாறுகண்ணுகியுமிருந்திடிற்பொலிவிலளிடப்பாலி

னேன்றுநோக்குறிற்சிலதியாம்வலப்புறத்தியைந்திடின்மலடாகு
நான்றதேனிறமமைந்திடிற்றுநீதிநண்ணிவான்சிறப்பெய்தும். (௫௦)

இமையின்மென்மயிர்பருத்தறநேர்ந்திடாதெழிலொடுங்குறப்பெய்தி
னமையுநற்றிருப்பொன்மையாய்ப்பருத்திடையிடைவெளியுறிலாகா
சமர்முகத்துவிற்போன்றறமென்மையாய்க்கருமைசார்ந்தெழிலாகி [ம்
யுமிழ்கதிர்க்கொடிப்புருவமற்றென்றொடொன் றுறுதெனின்மிகநன்று

புருவமென்மயிர்பருத்துநீண்டிடையிடையகன்றுபொன்னிறமாகி
விரவியொன்றொடொன் றுற்றிடலருந்துயர்மேவுமஞ்செவிநாப்ப
ணுருவநன்சுழியிருந்திடினன்மகவுயிர்த்திடமுதிப்பின்றி
மருவுபன்மயிர்நரம்பெழுந்துயர்ந்துமேல்வளைந்திடிற்றீதாமால். (௫௨)

நெற்றிமூவிரலகலமாய்ச்சின்மயிர்நெறித்திநரம்பின்றிக்
குற்றமின்றிவெண்பிறையெனவிருந்திடிற்குலவியதிருவெய்து
முற்றசோத்திகரேகைசேர்ந்திடிலவனூரியன்மன்னவர்க்கென்ப
நெற்றிநீணரம்பொடுமயிரணிந்திடிற்சேர்குவள்பலரோடும். (௫௩)

ஒழுகிவார்ந்தொளிர்சீமந்தரேகைநன்குற்றிடிற்சிறப்பெய்தும்
பழுதில்சென்னிமேலுயர்ந்தணிவட்டமாயழகுறிற்பலனெய்துங்
கழியவீங்கிடின்விதவையாநீளுமேற்காமுறும்பலர்பாலு
மெழிலகன்றறவிருந்திடில்யாவருமிகழ்தரவிரப்பாமால். (௫௪)

கரியமையினைநூற்றெனவளர்ந்துமென்கடைகுழன்றறநேர்கின்
முருகுவாய்மடுத்தளிசிறம்பூத்துறமுறைமுறைநெறிப்பாகிப்
பெருகனீளுதல்குறுகுதல்வளர்கடைபிளந்திடலிவையன்றிப்
பொருவில்மேன்மையாய்நெறித்திடலளிமலர்ப்பூங்குழலினிதாமால். ()

கடைபிளந்திடைவெளிவெளியாயறக்கடினமாய்க்குழைவின்றி
வடிவமின்றிமற்றலறுசெந்நிறத்ததாய்வயங்குபொன்னிறமாகிற்
கொடியவெந்துயர்சிரப்புறுநெறியிற்கொடிநெடும்புருவத்தி
னிடையின்வாய்ந்தசெம்மறுவுளதாமெனிலெழுகடற்புவிகாக்கும். (௫௬)

இடப்புறத்தினற்றழும்புமென்புள்ளிசேப்பெய்தியமறுவுண்டே
லடுக்குநற்றிருவலமுலைதனிற்றழும்பணிமறுவுளதாகிற்
கடற்புவிக்கொருதிலகமாம்புதல்வன்வேற்கண்ணியரொருநால்வர்
வடத்தின்மெல்லிலைநல்லெழில்கவற்றியவயிறுவாய்த்திடுமன்றே. (௫௭)

சேந்தநன்மறுமூக்கினுண்ணுதியிடைச்சேர்ந்திடிலுலகாளும்
வேந்தர்நன்மனைக்கிழத்தியர்க்கல்லதுமேவுறுமுன்சொன்ன
காந்துநன்மறுக்கறுப்பெனிற்றுயரொடுங்கைம்மையாமலதென்னிற்
றேய்ந்தகேள்வனைப்பிழைத்தலர்தூற்றிடவேதிலாரொடுந்தோயும். ()

றிடப்புறத்தவாங்கைதனிற்கழுத்திலிலிருந்துசெவிதனிலேற்ற
கொடிற்றினன்மறுவுடைத்தெனின்முன்னவர்கற்குமரனைப்பெறுகிற்பா
ளடிப்புறத்தின்மேலெழிறிகழுந்தியினளவுமெட்கொசுகேய்ப்ப
வடுத்தயங்கிடினல்குரவுழந்துபின்வான்றுயர்க்கடல்வீழும். (ருகூ)

நுதலின்முத்தலைப்படைகர்வரையுறினுழைநுசுப்பகலல்குன்
மதர்வைநோக்கியராயிரர்வழிபடமலர்மகளெனவைகு
மதுமலர்க்கையின்மார்பினிலுந்தியில்வலஞ்சுழியுறினன்று
முதுகினல்வலஞ்சுழிவலப்புறத்துறின்மொழிவர்நன்கெனமாதோ. (சூ0)

பிற்புறத்தினில்வலஞ்சுழியிரண்டுறிற்பெருகுமாயுளுநாளு
மற்பின்மீக்குயர்மக்களுங்கோடியரல்குலினடிப்பாட்டிற்
பொற்பினல்வலஞ்சுழியுறினரசரிற்சிறத்தியாம்புகலாங்க
ணுற்றபாண்டிலஞ்சுழியுறினுபுளுமைந்தருமுளவாமால். (சூக)

கடிதொடங்கியேந்தல்குன்மட்டொருசுழிகிடந்திடிற்கணவன்சேய்
முடிவர்மென்கடிமுதல்வயிற்றளவினுமொழிந்தகீள்சுழிமேவி
னுடையகாதலனிறந்திடுமாயிடைச்சுழியிரண்டுறுமாயின்
வடுவில்கன்னியங்கற்பழிந்தலர்புனைவம்பலர்க்கிடனாகும். (சூஉ)

கண்ணின்மென்சுழியுடைத்தெனிற்கைம்மையாமன்றெனிற்கற்பேகு
நண்ணுமூக்கினிற்சுழியுறிற்கற்புறுநலங்கெழுசெவிமீதில்
வண்ணவார்குழல்வகிர்ச்சியில்வலஞ்சுழிவதியினுயகனுவி
யுண்ணுமுச்சியிலொருசுழியிருசுழியுற்றிடிற்கலன்போக்கும். (சூங)

நெற்றிமேல்வலஞ்சுழியுறினவடனைநீக்குதல்குணனுகு
முற்றுமென்சுழிவலமிடமாய்ப்பிடரெய்திடினோராண்டிற்
பெற்றவின்னுயிர்க்கேள்வனையிழந்திடும்பெட்பொடுந்துயில்போது
பற்கறித்திடிற்பலபலவிலக்கணம்பயிலினுங்கொளலாகா. (சூச)

அரையின்மென்சுழியுடையளேற்கன்னியங்கற்பினுக்கயலாவா, ளுரை
செய்நூன்முறையிலக்கணமனைத்தையுமொருங்குவாய்ந்தனளேனும்,பொ
ருவினற்குணம்பொருந்துதல்வேண்டுமென்பூங்குழல்படைவாட்கண், டி
ருவனார்கடமிலக்கணமுரைத்தனமணவினைதெரிகிற்பாம். (சூரு)

**௧எ-வது-மகளீரிலக்கணமுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.**

**ஆக திருவிருத்தம்-க0ருஎ.**



முப்பத்தெட்டாவது.

## ஆசாரங்கூறிய அத்தியாயம்.



பிரமநற்றெய்வமாரிடம்பிரசாபத்தியமாசுரம்பெட்பின்
மருவுகாந்தருவமிராக்கதம்பசாசமெனமணமெட்டுளவவற்றுட்
கருதுமுற்பிரமமொருவனையழைத்துக்கலனொடுங்கன்னியையளித்த
லருளுமத்தெரிவைபயந்தசேய்மூவேழ்குலமுநற்கதியுறவளிக்கும். (க)

மகவினைவிதியினாற்றுவித்தோர்க்குமகட்கொடுத்தருளுதல்தெய்வம்
புகலுமாங்கவள்சேயிரெழுமரபும்பொருவருங்கதியிடைப்புகுத்துந்
தகைவினாளிரண்டுபகர்பொருள்கவர்ந்துதன்மகட்கொடுத்தலாரிடமா
முகிண்முலைப்புதல்வன்மூவிருகுலனுமுறையினிற்கதியிலுய்த்திடுமால்.

அற்பொடுபிரசாபத்தியங்கேட்போர்க் கரிவையைப்பொருள்கொளாத
ளித்தல்,கற்புடையவள்சேய்மூவிருகுலனுங்கருதுநற்கதியிடைப்போக்கு
ஞ்,சொற்றவிந்நான்குமறையவர்க்குரியதொகுபொருள்விழைவொடுங்கவ
ர்ந்து,பொற்றொடிநெடுங்கட்கன்னியையளித்தலாசுரமாமெனப்புகல்வார்.

கன்னியுங்காதற்குமரனுந்தம்மிற்கலத்தல்காந்தருவம்ராக்கதந்தான்
வன்மையிற்பற்றிக்கன்னியைக்கோடல்வகுத்தவிம்மூன்றுமன்னவர்க்கா
முன்னருங்களவிற்களிப்பினிற்றுயிலில்முகிண்முலைக்கன்னிகைக்கலத்த
லின்னல்கூர்பசாசமணமிஃதுலகிலிகழ்ந்திடுமணமெனவிசைப்பார் (ச)

மறையவர்முதலநால்வருந்தத்தமரபினிற்கன்னியைமணப்பி
னிறைமதுதுளிக்குங்காந்தளஞ்செங்கைபற்றுதனெறியதாமறையோ
ரறைகழலரசர்கன்னியைவேட்பினம்புகைபிடிக்கவேதியரு
மிறைவரும்வணிகர்மகளிரைமணப்பினுழவுகோல்பிடித்திடலியல்பாம்()

வேதியர்முதலமூவர்வேளாளர்கன்னியைவிதிமுறைவேட்பின்
மாதர்மென்றுகிலின்மென்றலைபிடித்தல்மறைநெறிவழக்கெனவுரைப்பர்
நீதியின்வழாதமணத்தினில்வேட்டநேரிழைசன்மகவுயிர்க்குந்
தீதுறுமணத்தின்வேட்டவடதுபயக்குறுசிறுவனையுயிர்ப்பாள். (சு)

பூத்துநீராடுநாள்முதனாலோர்புகன்றநாள்புணர்வதுவிதியாம்
வாய்த்தநற்கருப்பமெய்தியஞான்றும்புரந்தரன்மகளிருக்களித்த
வேற்றரும்வரத்தாற்புணர்தலாமிறந்தோர்க்கிருங்கடன்கழிப்பிய ஞான்று
நீத்தநற்பகலும்பருவமோரைந்தும்புணர்ந்திடினிரயமெய்துவரால். (எ)

விதித்தநாட்களினுந்தம்மனையலதுபிறர்நலம்விழைந்திடலாகா
மதுக்குழன்மகளிர்பூத்தநாள்கழிப்பின்மற்றவிராறுநாட்களினு

ழீத்திடும்புதல்வனிரட்டையாநாளினெற்றைநாளிவைகளின்மணப்பிற்
புதுத்தளிரழ்குகவற்றடாமேனிப்புதல்விடையினிதினிற்பெறுவார். (௮)

மூலமுமகமுமுயங்குதலாகாமொய்கதிர்த்திங்களங்கடவுள், சாலநன்கு
றுநாள்புருடனுண்மணப்பிற்றகைமைசானன்மகவுயிர்க்கும், வேல்புனை
தடங்கட்கன்னியைப்பொருள்கொண்டளித்தவன்மலப்புழுவிழுங்கி,யோ
லொடும்வெருவமறலி,தன்றூதருரப்பவெங்நரகிடையுழப்பான். (௯)

வேட்டகந்தன்னிற்பொருள்கவர்ந்துண்டோர்வீழ்கலாநரகிடைவீழ்வர்
கோட்டமில்குணத்துக்கொழுநனுமுவளக்குறிப்புணர்ந்தினியனசெய்யும்
வாட்டமின்முல்லைமனைவியுமுறையுமில்லினுமினிதுகொல்மகிழ்ந்து
பாட்டளிதுணைதயும்பசுந்துழாயலங்கறபங்கயச்செங்கணுனலகே. (௧0)

வாணிகம்புரியின்வாட்படைதாங்கிமன்னர்பாம்பிருநிதிகவரின்
கேணவாவோடும்விதித்திடாமணத்தில்வருமுலைக்கன்னியைவேட்பி
னுணினற்பொருள்சேரருமறைபயிலாநல்லசெய்தொழுகுநற்கருமங்
காணவாய்ப்புரியாதொழிந்திடிற்பதிதராகுவாகலைமறையவரே. (௧௧)

அரைப்பதாலழலினிந்தனங்கொளுவிடுவதாற்றூர்ப்பதாற்குடத்திற்
குணப்புனனுளுங்கொணர்வதாற்கூன்வாயிரும்பினுற்கறிகுறைப்பதனு
லிரைத்திடும்பாவமனைத்தையுநீக்கும் பஞ்சமாவெச்சமென்பதனு
லுரைத்தவவ்வேள்விநாடொறும்விதியினெழிவுறுதாற்றுதலியல்பே. ()

சதுர்மறைபகர்தல்பிரமான்மகமாந்தருப்பணம்பிதிர்மகமாகும்
விதிமுறையோமமியற்றுதறெய்வவெச்சமாம்விளம்புநற்பலிக
ளுதவுதல்பூதவெச்சமாமுள்ளமுவந்துதன்பாலினிதடைந்த
வதிதியர்க்களித்தன்மானுடவெச்சமாகவைந்தெச்சமென்றறைவார். (௧௩)

பாலினிற்சோற்றிற்கிழங்கின்மென்புனலிற்பழத்தினிற்பண்ணலாஞ்சி
ரார்த்தஞ், சாலுநன்மனையிலதிதிவந்தெய்திற்றயாவினுல்முகமனேடெதி
ரி, யேலநற்பூசையவற்களித்திலனேனுடொறுமவனியற்றியதோர், சீலந
றறருமம்யாவையுங்கவர்ந்துசெல்குவனெனமறைதெரிக்கும். (௧௪)

பலியிடையதிதிவரினவற்கடிசிலளித்தலாற்பலியிடலாகா
மெல்வுறுநோயர்சிறுவர்சூன்மகளிர்வேட்டுளான்மனையினின்றெய்து
மலைவறுகுணத்துத்தம்மகளிவர்கட்கடிசில்முன்வழங்கியபின்னுங்
கலைவலார்போந்தவதிதியர்க்கடிசிலளிப்பதுவிதியெனக்கரைந்தார். (௧௫)

தேவர்தென்புலத்தோர்துறந்தவர்க்களித்தசேடநல்லமுதினுமினிதாம்
யாவரோயெனினுமதிதியரிறந்தோரிமையவரிங்கிவர்க்கன்றிக்
கூவல்போலாழ்ந்தபாழ்வயிறதனிற்கொட்டுதற்கமைத்தவெண்சோறு
நாவுறைபுழுவாமெனமறையனைத்துநவின்றிடுமென்பர்நன்குணர்ந்தோர்.

அந்தணரரசர்வணிகர்நண்பகலுமந்தியும்வயிச்சுவதேவஞ்
சிந்தைசெய்தியற்றுமொவ்விலவரொழுக்கந்திறம்பலாற்பின்னவரர்கி
வெந்துயருழந்துவரும்பிறப்பதனிற்காக்கையாய்மெலிகுவர்விதித்த
விந்தநற்கருமம்வழுவுறுதியற்றினிமையவருலகில்வீற்றிருப்பார். (௧௭)

அட்டமியாறுந்திதிபதினுன்கேர்டள்ளிருள்பரப்பியவுவாவின்
விட்டிடவேண்டுமெண்ணெயும்விதித்தமென்றசைப்புழுக்கலும்இவற்றின்
மட்டவிழ்குஞ்சிமுதலடியீறுய்மயிர்வினைமுடித்திடலாகா
தொட்டுமறமொன்றைக்கிள்ளினுநாலோர்தோமுறுமெனப்புகன்றனரால்

காலையின்மாலைப்போதின்வாளரவங்கவ்வியபொழுதினீரிடையின்
ஞாலநீடிருள்சீத்தெழுகதிர்பார்க்கினவையுறுந்தன்னிழல்புனலுட்
சால்புறநோக்கல்துகில்புனையாதுதண்புனல்படிதலான்கன்றை
மாலுறக்கடத்தல்பொய்ம்மொழிபகர்தல்மனத்திடைநினைப்பினுந்தீதாம்.

இலங்குநற்கோயிலந்தணர்துறந்தோரிருநிலவேந்தர்சொற்கவிஞ
ரலங்குநீர்க்கும்பமையவிதயிர்நெய்யடிசிலாய்மரபினிலுயர்ந்தோர்
நலங்கெழுசதுக்கத்துயரமானரசுநன்னெறியெதிர்ப்படினவற்றை
வலங்கொடுபோதனெறியெனமறைநூல்வல்லவர்வகுத்துரைத்தனரால் ()

மனைவியோடடிசிறுய்த்திடலாகாமற்றவளயில்வுழிநோக்கிற்
புனையிழையறனில்லைமைந்தரையுயிர்க்கும்பூத்தவட்ணைத்தொடலாகா
கனவினுமாகாவூன்றினல்மகத்தினல்லதையருந்துபொற்கலத்தி
னனியுயர்தவிசின்வதிந்தினிதுண்டனன்கலவெனமறைநவின்ற. (௨௧)

கொந்தழல்வாயினூதுதல்சிறிமன்னுயிர்குறைத்திடல்புனைந்த
வந்துகிலகன்றமகளினைநோக்கலந்தியுங்காலையுந்துயிறல்
சிந்தையுற்றருந்தறனிவழிச்சேறல்செங்கையாற்புனல்முகந்துண்ட
லிந்திரவில்லைக்காட்டுதல்தனிபோய்மடிமையாலிருந்துயில்புரிதல். (௨௨)

துயிலிடையெழுப்பல்புன்னுகரானையோட்டுதறாங்கிருட்காலை
தயிர்நறுவெண்ணெயெடுத்தமோர்பருகல்சாலவுந்துய்த்திடல்யாழிற்
பயிலுநாடகத்தின்மிகமனஞ்செலுத்தல்பகற்பொழுதுறங்குதல்காலை
வெயிலேடையிருத்தனகமயிர்கடித்தல்விரிகுழனடப்புழியுளர்தல். (௨௩)

அயலவனயின்றகலத்தினிலயிலல்பிறர்புனைமென்றுகிலணிதன்
மயர்வுறவேற்றிற்பசுவினில்வர்தன்மயானவெம்புகைபடச்சேறல் [ட
பயில்புனல்படிந்தபின்னர்மெய்கையாற் றுடைத்தல்பண்பிகழ்ந்தவற்கூ
றுயில்வுழியறுவையொழிந்திடல்கழகந்துன்னிவெஞ்சூதெறிந்தாடல். ()

உடைந்திடுகலத்திலுண்டல்கைசென்னிகாரணமின்றியேயுதற
லுடைந்தவாசனத்தைக்காலினலகற்றனகத்தினைநகத்தினுரிஞ்சல்

குடங்கையிலடிசில்கொண்டினிதருந்தல்குலவியபள்ளிமீதிருந்து
தடம்புனல்பருகறுய்த்திடல்செவித்தனின்றுதண்ணீர்குடித்திடுதல். ()

வாயிலல்லாதவழியிடைச்சேறல்வாண்முகமங்கைமென்மலர்த்தாள்
தோய்புனல்புலராதறங்கருளிணையிற்றொடுகழல்கிடப்பவாசமனை
மேய்வுறப்புரிதன்மிச்சிலோடேகலிரவினிற்பாசடகருந்தல்
சேயதன்கைகால்முகத்தினிற்றெண்ணீரசேர்த்துறுதின்னமுதருந்தல். ()

வைதிகமறையைப்பின்னவர்க்குரைத்தலிருகையால்வன்றலைசொரிதல்
கையினால்மெய்யிலடிக்கடிபுடைத்தல்கண்மயிர்பறித்திடன்மலநீ [தல்
ரெய்திமுன்னோக்கல்பிறர்மனைவிழைதல் பகைவர்பாற்சேவைசெய்திருத்
பொய்தவறுரைத்தல்மடமையினெழுகதீதெனப்புகன்றனர்புலவோர். ()

உருவினிற்குலத்திற்கல்வியிற்றிருவிலிழிந்துளார்தமையிகழ்ந்துரைத்தல்,
பெருகுவெம்பசியாலருந்திடாரிடத்திலருந்தல்பெட்பெவற்றினுமுறுந
திருகுவெஞ்சினத்தாறகுறளைகூறுதலைம்பொறியையுமடிக்கடிதீண்டல்
பரிவொடுதன்னைப்புகழ்தல்மானுடரைப்பாடுதறீவினைபயக்கும். (௨௮);

அருமறைமறையோர்கடவுளரரசருந்தவர்கற்புடைமகளிர்
பொருவருமிவரையென்னுதலொருவன்போகுழித்தாள்பணிந்திறைஞ்ச
லொருவர்தங்குற்றமுரைத்திடலாகாவூருணிகுளங்கிணற்றுடி
னிருகைமண்வாரியெறிந்திடாதொழியினிவன்றவமகழ்ந்தவர்க்கெய்தும்()

இணங்குறுவாய்மைமெய்ம்மையேயெனினு மியம்பொருவிணங்குவ
தெனினு, மணங்குநோய்செய்யும்பொய்சொலாதொழிகவறிஞரோடிணங்
குகநாளுங், குணங்களேமொழிகவுளத்திலெஞ்ஞான்றுநன்மையேகுறிக்
கொளல்வேண்டும், பிணங்குசெற்றத்திற்குறளையிற்றூதிற்பெறுபொருள்
கோடறீங்குறுமால். (௧௦),

அழலையந்தணரைப்பசுவினைமிச்சிலடைந்துளோர்தீண்டிடலாகா, வி
ழைவொடுஞ்சிராத்தம்புரிந்திடுந்தினத்தில்வேற்றவன்சிராத்தத்தினரு
ந்திற், பழிபடுமிவனும்புரிந்தவன்றனக்குந்தீவினைபயக்குறுங்கைகால், க
ழுவுதலுண்ணுங்கலத்தினிலாகாதென்றனர்கலைபுலந்தெரிந்தோர். (௧௧),

காலமுமிடனுங்கொள்பவன்மாண்புங்கருதிநற்றானமங்களிப்பிற்
சால்வுறுமளித்தபலனிலையளித்தோன்றராதலமுழுவதும்புரக்குஞ்
சீலமோடன்னமளிப்பவனளப்பில்செல்வமுற்றிருக்குநீரளிப்போர்
மாலுறுவிடாயினெய்துறூர்வெள்ளிவழங்கினோர்வடிவநன்குறுவார். (௧௨);

நறுநெய்பெய்தகளிதன்னொடுந்தீபநல்கினோர்சுடர்விழியென்றும்
குறைபடாதொளிருமாவினையளிப்போர்குறுகிடார்மறலியூர்நாளு

மூறுபொருளளிப்போரிரந்திடாரெள்ளேயுதவினோர்நன்மகப்பெறுவர்
மூறுவறுமில்லங்கோல்நன்களிப்போர்மதிதவழ்மாட மீதுறைவார். (கக)

கொய்யுளைப்புரவியளித்துளோர்தெய்வ விமானமூர்குவர்செழுங்கோ
ட்ட, மெய்யவேறளிக்கோர்திருநெடும்டொல்வர்மெல்லணைசிவிகைநன்
களிப்போர், மையரிநெடுங்கண்மகளிரோடுறைவர்வைகலுநெற்குவையளி
ப்போர், பையரவுச்சிச்சுடிகையிற்கிடந்தபாரவளமனைத்தையும்பெறுவார்.

அஞ்சலென்றளிப்போருலகெலாமளிப்பாரு மறைப்பொருள்பயிற்றி
டுவோ, ரெஞ்சலில்பிரமனுலகில்வீற்றிருப்பரிரும்பொருள்கொடுத்துநால்
வேத, விஞ்சையைப்பயிலவின்னிதளிததோரும்விரிஞ்சனொடுறைகுவர்நி
தியம், நெஞ்சுவந்தீவோர்கொடுத்ததையுவப்போர்சிரப்பெறிசெல்வமெய்
துவரால். (கரு)

தான்புரிதவத்தைக்கொடையினைப்புகழிற்றழைவுறுசுகஞ்குமந்தணரை
வான்படருநரைக்கில்வாழுநாளுலக்குமாலைசெஞ்சாந்தம்வெண்டயிர்பா
லூன்படுதசைநெல்வீடிவைவாளாவுறுமெனிற்கொள்ளுநதலுரித்தாந்
தேன்பழங்கிழங்குவிறகிவையிழிந்தோர்கல்கினும்வாங்குதறிமனே (கசு)

அடைக்கலம்புகுந்தோன்மயிர்வினையாளன்வழிவழியடிமைபுக்கிடுவோன்
குடத்தனசெருத்தலானிரைமேய்ப்போன்கூடியநட்புளானிவர்கள்
விடுக்கருமன்பினளித்தவாலரிசிகோடலாம்விளம்பியவனைத்தும்
வடுப்படாமறையோர்முதலமூவர்க்குநெறியெனமறைமொழிந்திடுமால். ()

உருமுமண்மாரியுற்கைவீழ்ந்திடுநாள்சுழல்வளியுற்றநாளோர்பா
லெரிபடுநாளிலுறையிருட்போதிற்பின்னவரிருந்திடுமிடத்தி
லரசருக்கிடையூறுற்றுழியவர்கட்கசுபம்வந்துற்றிடுநாளின்
மருவியபதினான்கிருவநங்கையுட்டமியோதல்மாண்பன்றே. (கஅ)

பூசைநாய்தவளைபேரொலிகிரிபுயங்கமற்றிடைபுகினோதார்
வேசரியிகலனொட்டகமரற்றின்விளம்பிடார்விரிதிரைப்புனலிற்
பாசிலைத்தருவிலூர்தியிலிருந்தும்பயின்றிடாருவர்கருமத்துந்
தேசுநடக்கும்பொழுதினும்வேதம்புகன்றிடார்நான்மறைதெரிந்தோர்.

இன்னணமொழுக்கம்வழுவுறுதியுற்றியின்றதம்புதல்வர்பானுளு
மன்னியகருமமனைத்தையுமிருத்திவளர்பிறைக்கொழுந்தினைப்பவளச்
சென்னியின்மிலைந்தகடவுளைநினைந்துகானிடைச்செய்தவம்புரிக
வுன்னதுகூடாதெனிலுயர்காசியடைதனன்முத்தியாமன்றே. (சும)

௩அ-வது-ஆசாரங்கூறியஅத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுமகஎ.

——⟩:⟨——



முப்பத்தொன்பதாவது.

## இல்லொழுக்கங் கூறிய அத்தியாயம்.

---

என்றாலுமுலவுந்துபொன்னிணர்க்கடுக்கையீர்ஞ்சடையிறைவன்வாழ்காசி
துன்னினரொழுக்கநெறியினின்றோர்கடியவீடடைகுவரென்னா
முன்னநீயுரைத்தாயுரைத்தவவ்வொழுக்கமுழுவதுமுரைத்தருளென்று
தென்வரைமுனிவன்கேட்கவுஞ்சிறையசேவலங்கொடியவனுரைப்பான். ()

கரியனவிளர்த்தசெய்யவாமுள்ளிகார்மயிர்ப்பன்றியூர்க்குருவி
விரிசிறையன்னங்குரண்டநேமியம்புட்கிளிகரிக்குருவிமென்றலை
குணாகடற்படுமீனினைகவர்பறவைதோலடிப்புள்ளனங்கோழி
மருவியபூவைமீனினமனைத்தும்வாய்மடுத்தருந்துதலாகா. (உ)

கரும்பினைத்தெற்றகட்டியினமைத்தவைகவெலாங்கறந்தபாலாடு
பொருந்துமொட்டகமறமேற்றோர்குளம்பாயவிலங்கிவைபொழிந்தபாலிரவிற்
றிருந்துவெண்டயிர்நண்பகலிடைவெண்ணெய்நீக்குதமெய்வானமசத்தி
னருந்துதலன்றியொழிகளூன்பொறிமான்றேவர்தென்புலத்தவர்க்காமால்.

குறுமுயலுடும்புகமடமுட்பன்றிகோதிலாவங்கருந்திணுமாம்
பெறலருந்துறக்கமாயுள்வேட்டவர்கள்பிழைபடுமென்றினலாகா
நறியனவேனும்பழையனவருந்தனன்கலமகத்தினின்மருந்தி
லுறுமுயிருய்யுமிடத்தினிப்பருந்தோர்கூட்டுழியூன்றினல்லியல்பாம். (௩).

அருமகத்தன்றியூன்சுவைத்துடலம்வீக்குவோனதற்குடன்படுவோன்,
கருவியிற்குறைத்தோன்பகர்ந்துளோன்கொணர்ந்தோன் வியந்துளோன்க
டுகெனவேழுவுந், திருவில்யதனையட்டவனிவர்களெண்மருந்திநரகடைவார்,
புரிவினூன்விடுத்தோர்நாடொறும்பரிமகம்புரிபலன்பெறுகுவரால். ()

பிறரிடையின்னுவியற்றிடிற்றமக்குப்பிழைப்பற வெய்துமென்பதனை,
யறிகுநரறிஞராதலாலுயிர்களனைத்தையுந்தம்முயிர்போல, நெறியினிற்
கருதலினியவாமைந்துபுலனையுநெறியலாவழியிற், பொறியினிற்செலுத்
தாதடக்கலுன்குணர்ந்தபுலமையோ ரொழுக்கெனப்புகல்வார். (௬).

முயன்றுமெய்வருந்தாதரும்பொருளடையாமொழிந்தவப்பொருளினு
லன்றி, பயின்றநற்கருமம்பொருந்துறுகருமமல்லது பயக்குறுதருமம்,
மியன்றநற்றருமத்தல்லதையின்பமெய்துறு தின்பமுமடியிற், றுயின்றி
டாதறஞ்செய்தல்லதுகூடாதாதலாறொடங்குககருமம் (௭)

வருமுலையெழுந்தபின்மகட்கொடுப்பின்மரபழிந்திடுமயிர்தோன்றுங் [ளை
தெரிவையையளிப்பின்மணந்தவனிறக்குந் தெருண்டபின்னளிப்பினுங்கவு

யருளியதந்தையிறந்திடுமதனலாய்பிழிக்குறுந்துளிபிலிற்று
முருகவிழ்கூந்தலனையவர்முயக்கமுறையலவெனமறைமொழியும் (௮),

கன்னியிற்பூத்ததன்மகட்கொடுப்பின்யாவருமறியவிக்கன்னி, முன்ன
ரோபூத்தாளெனவுரைத்தளிப்பிற்றந்தைபாற்பாவமுற்றிடுது, வன்னிபூப்
புழியிறபொருந்தறுஞ்சோமன்மயிரரும்புழியுறமணக்கும், கின்னரன்
முலைதோன்றுழியுறுமதன்முன்மகட்கொடைநன்றெனக்கிளர்ப்பார். (௯),

வெந்தழறகடவுள்கின்னரன்சோமன்மேவலால்மதிதொறும்பூப்பு
வந்தடைதலாலுமகளிரென்ஞான்றும்புனிதமாகுவர்மலர்மஞ்சஞ்
சுந்தரமகளிர்வாண்முகஞ்சிவிகையாசனந்தருப்பைதொன்மகத்திற்
றந்தபாத்திரங்கள்குதபாகலம்புனிதமென்றுரைத்தனர்சான்றோர். (),

கன்றினிதூட்டிக்கறந்ததீம்பாலுங்கலவியின்மகளிரும்பறவை
தின்றதீம்பழனும்வேட்டையின்ஞமலிகறித்திடுசெய்பமென்றசையு [டு
மொன்றியமிசசி லெனவிகழ்நதுணையாருணர்ந்துளோருறுகடன்பொருட்
நன்றுணர்வேளவிவேட்டிடறபொருட்டுநனிபொருள்வழங்கனன்ஞமால்.

பொங்குளைப்புரவியாடிவற்றினுக்குப்புனிதமாமுகம்பசுவினுக்குத், த
க்குபிறபுறமேபுனிதமந்தணர்க்குத்தாளிணைபுனிதம்வேனெடுங்கண்,மங்
கையர்க்குடலமுழுவதும்புனிதம்வாநதிவெண்கலஞ்செம்பு, துங்கமாம்
பெருக்காற்சாம்பராற்புளியாற்றூய்மைபாமெனபர்தூய்துணர்ந்தோர். (),

கொழுநரேதெய்வமெனத்தொழுமகளிர்பணையொடுங்கூடிவீற்றிருப்பார்,
பழுதறுதந்தைதாய்தமர்துணைவரில்லெனிற்கன்னியர்பரிவால்
விழைமொடுந்தமதுமரபினுக்கேற்றவொருவனைவரித்திடல்விதியாம்
வழுவுறக்கருப்பமழித்தவர்கணவற்செகுத்தவர்த்தணப்பதுமரபே (௧௩),

வலிதினிலொருவன்கன்னிபற்றின்மகளிரைப்புணர்ந்திடினவட்குப்
பொலிவறுமாசுபூத்தவெற்றிழைகணுழைதுகில்புனைகெனவழங்கி
நலிவொடும்வருந்தவடிசிலோர்பிண்டநல்கிநாள்கழித்துழிபூப்பிற்
குலனுமவளைக்கூட்டுககருப்பங்கொண்டிடினீக்குதல்குணனே, (௧௪),

பின்னவர்தமது மரபில்வேட்டிடலாம்வணிகர்பின்னவருழைத்தமது,
நன்மாபதனிற்கோடலாமரசர்தம்முறைமுநாய்கர்தம்மரபின், மன்னும்வே
ளாளர்மரபினிற்கொளலாமறையவர் வருணநான்கிடத்தும், கன்னியைக்
கொளலாம்பின்னவழ்மறையோர்க்கருமதப்பெறிற்கதியடையான். (௧௫)

குரவனைத்தாயைத்தந்தையைமனையைக்கூற்றுழிப்புதல்வனைவிருந்தை
யிரவுநணபகலும்வழிபடுவோனையறிஞ்ஞைபெரியினையீங்குக், கருதுமொ,
ன்பதின்மர்தம்மைபுமாளுங்கருணைகூர்ந்தினி தளிதிடாது, மருவுமில்
வாழ்க்கைபூண்டுளோனன்னமக்களுட்பகடிபென்றுரைப்பார். (௧௬),

விருந்தினர்களொருவன் வந்தெதிரின் வியத்தல் நன்மொழியினிதுரைத்த
றிருந்துற நோக்கல் வருகெனவுவகை தலைஎழுதல் முன் மகிழ்வன செப்பல்
பொருந்துமற்றவன்றனருகுற விருத்தல் போமெனிற் பின்செல்வதாதல்
பரிந்து நன்முகமன் வழங்கலிவ்வொன்பானொழுக்கமும் வழிபடும் பண்பே.

தவிசுதாள் விளக்கப் புனறமக்கியன்றவடிசில் பூந்தண்மலர்ப்பாய, லுவ
கையினுறை புமிட னுகர்தெண்ணீரொண்சுடரொண்ணெய் வெள்ளிலைகா,
யிவைகளொன்பதுந் தன்மனைவயினடைந்தோர் மகிழ்வுறவினிதினி லளிக்
தல், நன்வயறவில்வாழ்வடைந்துளோன் பூண்ட கடனெனநான்மறைநவி
ன்ற. (௧௮)

பிறர்மனை விழைதல் நிலைகுழைக்கொழுகல் பொய்ம் மொழிபகர்ந்து நல்
சிற்ற, மறமிகுவயிரங்குறளையேலாதமொழியினைநவிலுதல் மாயை, நிறி
கர்ந்தொழுகலாயவொன்பானுங் கீழ்மையோரொழுக்கமில்வாழ்வி, னுறை
குனரிவற்றைவிடுகவென்றினிதினுரைத்தனர் நூல்முறையுணர்ந்தோர். ()

அலைபுனல்படிதல் சந்திவந்தனை நல்லருமறைசெபித்தல் தீக்கரும
மலர்தருசாகைமறையினைநவிறல் மலர்கடவிறைவனை வணங்க
லிலகொளியழலில் வயிச்சுவதேவமதிதி பூசனையிறந்தோருக்
குலவுநீர்வழங்கலில்லுறைவோரிவ்வொன்பதுந்தினஞ்செயலுரித்தாம். ()

மந்திரந்தன்னைப் பிறரவமதித்தல் மகளிரைச்சேர்தல் வஞ்சனை தன்
னந்தவிலாயுள் பிறந்தநாளில்லினண்ணியகுற்றநீணிதிய
முந்தியகற்பின்மனைவிதன்குணங்கள் மொழிந்தவிவ்வொன்பதுமாவி
சிந்துறவரினும் பிறரொடுமொழிதல் தீதெனவுரைத்தனர் தெளிந்தோர். ()

தகுதிகொள்கடனக்கடன்றனைத்தீர்த்தல் தான்பொருள்கோடல் பின்பக
ர்தல், மகளிரைக்கொடுத்தல் தன்னுடையொழுக்கமரபினிற்புரிந்த நன்பா
வம், புகலருமயலோர்நற்குணமென்னப் புகன்றவிவ்வொன்பதுமெவர்க்
கு, மிகலறமறையாதுரைத்திடலொழுக்கத்தியல்பெனமொழிவர் நன்குணா
ர்ந்தோர். (௨௨)

மெய்ம்மைநற்பொறைவெங்கொலைசெயாதொழுகல் மேவுமெக்கரணமு
மடக்கல், செம்மைசேர் தூய்மைவளாவுறுதளிக்தல் சிற்றநீங்குதல்காவி
ன்மை, யம்மவென்றெவருமாற்றுதல்பரியா வருள்செயலாயவொன்பானு
ம், வம்மெனவமரரொதிர்புகுங்கழைப்பவானிடைவிடுத்ததுதாமால். ௨௩)

முகனெதிரொன்றும்பிரியின்மற்றொன்றுமொழிபவர்விழைவுறுதூத
ர்கன்றகேள்வியிலாரருமருத்துவர்கள்ளும்பொருள்கவருநர்தூர்த்தர்
புகலருந்தீமைபுரிபவர்மல்லர்செருக்கினர்புன்றொழிற்றீயோ
ரிகழ்தருமினையோரொன்பதுமெயர்க்குமீந்திடப்படுமெனவிசைப்பார்.()

மாண்புடையாளர்கேண்மையர்தத்தம் வழிமுறையொழுக்கினி லமர்ந்
தோர், சேண்படுகிரப்பினெய்தினோர்புரப்போர்தீர்ந்தவர் தந்தைதாய்குர
வர், காண்டகுமுதவிபுரிந்துளோரினையோரொன்பதின்மருமுளங்களிப்ப
வேண்டுறுநிதியமளிப்பின்மற்றென்றேகோடியாமெனமறைவிளம்பும்.(

தன்மனையவளையடைக்கலப்பொருளைத் தன்னுழைப்படைந்துளோன்றி
ன்னை, மன்னுதன்மரபினொழுக்கினைவைப்பைமனையவள் கொணர்ந்தவொ
ன்பொருளை, நன்மகவுதனையம்மகவிருக்கநண்ணியபொருளனைத்தினையு,
மின்னுயிர்விடுக்குமெனக்கொடுந்துயரமெய்தினுமீந்திடலாகா. (௨௬)

முன்னவனிருப்பப்பின்பிறந்தோர்கள்வேட்பினில்வருமகமுடிப்பி, னி
ன்னல்கூர்நரகினெய்துவர்முன்னோன்மூங்கையாய்ச்செவிடனாயிருப்பின்,
மன்னியதுறவுபூண்டிடிற்சேட்சென்றறிவுறுதுறையில்மற்றவன்றன், பி
ன்னவனினையபுரிவதற்குரியனென்பர்நூன்முறைதெரிபெரியோர். (௨௭)

துறந்துளோர்மகளிர்புணர்முலைப்போகந்துய்த்திடினளப்பருங்காலமி
றந்துழிமலத்திற்புழுவதாய்நரகினெய்துவர்பின்னவரிடத்தி, னறம்பயில்
விஞ்சைகற்றுளோரவர்பாலரும்பொருளேற்றுளோரவர்பாற், பெறும்
பொருளதனல்வேள்வியாற்றுனர்கள்பிழைப்பருநரகிடைச்சேர்வார். ()

தெறுவியாலன்றிக்கையினலடிசிலிடுதலேற்றருந்துதறீதா, முறைபிற
ழ்ந்திருப்புத்தெறுவியாலிடுவோர்மூழ்குவார்கொடியபாழ்நரகி,னறியவெ
ன்றயின்றோர்மலநுகர்ந்தோர்கள்நகையினைவிரலினற்றேய்த்தோர், வறி
தின்வெள்ளுப்போடயின்றவராவின்றசைவாய்மடுத்தவர்போல்வார்()

கையினலளிததவுப்புநெய்தெண்ணீர்கன்னலிற்கனிந்தபாலடிசி
லையமேற்றிவற்றையருந்திலான்றசையையருந்தியபாவம்வந்தடையும்
மையில்வெண்சோறுநுகர்ந்தவர்வாயிற்பெய்தநீருமிழ்கலார்பருகிற
செய்யதமமுயிரைத்தென்புலத்தோராத்தேவுணாச்செகுத்தவராார். (௩௦)

உண்டவரங்கைவிளக்கியபின்னருத்தராபோசனங்கொண்டால், மண்டு
றீநரகினெய்துவர்பலராய்வழங்கியபோனகநுகரிற், றூண்டையங்கனிவா
ய்மகளிர்சீமந்த விழைவினிற்றுய்ப்பினற்பசும்பொன், கொண்டுநூல்பயி
றறுமவர்மனையருந்திறசாந்திராயணங்கொளல்வேண்டும். (௩௧)

தீதுறுகனவுகாணில்வெங்கலரைத்தீண்டிலுண்டவையெதிரெடுப்பின்,
மாதரைமுயங்கிலபானவாயுவினைவிடுக்கில்வண்புனலின டப்படிக,யாதினு
ந்துறந்தோராருமகம்புரிந்தோர்பிரமசாரியரெனுமிவர்க்குச், சூதகமில்லை
பகவர்பாற்றென்பானோக்கியேதுய்த்திடல்வேண்டும். (௩௨)

சந்தியில்மரனும்பொருள்கவர்ந்தோதுவித்தவன்றன்னையுந்தூய
செந்தழல்வேள்வியூபமுமீமத்தடுக்கியகட்டையுந்தீண்டி

னுந்துதண்புனலிற்றோய்கவான்றொழுவில்யாகசாலையிலுயர்முத்தீ
யந்தணரிடத்திற்றேவராலயத்திலிருந்துழிக்கழறொடலாகா.          (௧௩)

மண்டலங்கோட்டியுண்கலனதன்மேல்வைத்தினிதயில்கமண்டலமு
மொண்டழல்மறையோர்க்குரித்துநாற்கோணமரசருக்குரித்துமுக்கோண
மெண்டருநாய்கர்க்குரித்துயர்வட்டம்பின்னவர்க்கிரும்புனறெளித்தல்
கொண்டுதன்கையில்மடியினிற்கலம்வைத்துண்டறீதெனமறைகூறும்.(௧

கட்டிலீற்பீடந்தனிலிருந்தருந்தல்கப்பரைதனிலுணலாகா
வுட்டெளிமறையோரளித்தசோரமிர்தம்வேந்தர்சோறுவந்தபாலடிசி
லெட்டியரளித்தவடிசில்நல்லடிசில்பின்னவரினிதிடுமூரல்
கொட்டியகுருதியாதலாற்பின்னோரிடத்துணல்குறிப்பினுமாகா.      (௧௫)

பொய்யுரைபுகலிற் றீமையாமென்னப் புகன்றனர்புலமைநன்குணர்ந்
தோர், ஐயதுண்மருங்குற்செய்யவாய்மகளிர்புலவியிலந்தணராவி, யுய்யு
மென்புழியிலாவினையளிக்குமிடத்தினிலோடரிநெடுங்கட், டையலார்மண
த்திற்பொய்ம்மையுமெய்ம்மைதன்னினும்விழுமிதாமன்றே.          (௧௬)

பெருகுதண்புனலி னீந்துவோன்றீயில் வெருவுறுதடைபவன்பெட்பி
ன்,மரனிடையுயர்ந்தகன்மிசையிவர்வோன்மைந்தனேமனைவியைவிற்போ
னுரைபெறுமிவர்களறுவருந்தமக்குத்தாமுயர்கதையினைச்சுழற்றி, வெரு
வரவெதிரும்பிறையெயிற்றழல்வாய்வெந்திறற்கூற்றெனலாவார். (௧௭)

சூளுறவுரைப்பின்மறையவர்தமதுசத்தியமினிதுசூளுறுக
வாளினைத்தோளைமன்னர்சூளுறுகபொன்னினைவணிகர்சூளுறுக         [ற்
வாளுநற்சூளுக்குரைத்தவையெல்லாஞ்சதுர்த்தர்சூளுறுகவான்றொழுவி
கோளுறத்துயிறல்மறையினைவெளியிற்கூறுதறீமையாமன்றே.    (௧௮)

மன்னவர்மன்னர்குமரரெந்நூலும்வழுவறவுணர்ந்தவேதியர்க
டுன்னியகுஞ்சிகுறைப்பதற்கியைந்தவிடத்தினிற்கருமத்திற்றொகுத்த
பொன்னினிதளித்துமயிர்வினைபுரியாதொழிதலாம்பூண்கழிந்திடாத
கன்னியர்தமக்குமயிர்வினைவேண்டிலிருவிரன்மயிர்க்கடைகளைக. (௧௯)

தன்னுடையொழுக்கந்திறம்பினேன்றன்னைத் தடிந்திடுங்கூற்றெனத்த
குவான்,பன்னியசத்தம்பயின்றிடான்முத்திப்பரவையிற்படிந்திடானுளு,
மன்னியபுலன்களடக்கினேருண்மைவழுவுறுதவர்தமையுணர்ந்தோர்,நன்
னெறியறிந்தோர்மனையறம்பூண்டோரொனுமிவர்வீடுநண்ணுவரால்.   (௨0)

இல்லொழுக்கங்கூறியஅத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௩௩௭.

---



நாற்பதாவது.

## யோகநிலையுரைத்த அத்தியாயம்.



நரைதிரைபுகுதலைமைந்தருமினிதினன்மகவுயிர்த்தபின்னுரு
மருவியமனைவாழ்வொருவியிற்கிழத்திதன்னொடும்வளர்த்ததீயோடு
மரின்மிடைகானம்புகுதறன்மனையைமைந்தர்பாலிருத்தியாண்டேக
லுரியமெல்லடகுமூலமார்ந்தைந்தாமெச்சமுமொழிந்திடாதாற்றல். (க)

வீழெனக்கிடந்தபுரிசடைமயிர்நீண்மெல்லுகிர்குறைத்திடாதொழுகல்
கேழ்கிளரிரவிபடுந்துணைவனத்திற்றிரிந்துபின்கெழுமிருட்போதிற் [ச்
சூழ்மனைபோந்துதுறந்துளோர்பிரமத்தொழுகுவோர்தமக்குணவளித்து
சூழ்வரைச்சாரலைவனமாவினமுலினைத்துகளறவியற்றி. (உ)

இனியநுண்டேறல்மென்றசைமுருங்கைக்காய்முதலீகழ்வனவிகழ்ந்து
முனமினிதமைத்தவைப்பொடுநாட்டில்விளைந்தவைமுழுவதுநீக்கித்
தனிகொணர்சாலிபல்லுரலாகத்தடிந்துணலல்லதுகல்லா [டும்
னளிபடக்குறைத்துமிசைகநெற்கோடனு டொறுங்கொணர்ந்திடல்வேண்

அன்றெனிற்றிங்களொன்றினுக்கேனுமறுமதிக்கேனுமற்றியலாண்
டொன்றினுக்கேனுமைவனமீட்டிக்கங்குலினருந்துதலொழுக்கா
மின்றெனிலோர்நாளிடைவிடுத்தேனும்பக்கமொன்றிடையொழித்தேனு
மன்றலோர்திங்கட்கொருபொழுதேனுமருந்துதலருமறைவழக்கே. (ச)

அல்லதுசாந்திராயணநுகர்கவலதடகருந்துகவன்றே
லெல்லியும்பகலுநோற்றுடல்வாட்டியிமையவர்தென்புலத்தோர்கள்
நல்லனபுரிதற்கியற்றுககருமத்தழலைநல்லுயிரொடுஞ்சேர்த்திக்
கல்லியல்கானிற்றிரிவதேவானப்பிரத்தர்தங்கடனெனத்தகுமால். (ரு)

மேயமுக்கடனுந்தீர்த்தலாற்றுறத்தனீதியன்றெனமறைவிளம்பு
மாயுளினுன்காங்கூற்றினினுன்காமாச்சிரமந்தனிலொழுக
லேய்வனவாகுமோரிடத்துறையாதெங்கணுந்திரிந்திடல்வேண்டு
மோய்வறுதியானந்தூய்மையேற்றுண்டறமியனுயுறைதலேயுரித்தாம். ()

யானெனதென்னுஞ்செருக்கெறிந்தியாண்டுமுயர்மரநீழலிலிருக்க, வா
னுறைபிலீற்றுமதியொருநான்குமருவுமோர்நகர்வயின்வதிக, வூனுடை
ப்புழுமென்முளையிவைமிதியாதொதுங்கல்மென்னகமயிரொழித்தல், கா
ன்வளைத்தண்டுகைவிடாதிருத்தல்முனிதல்செய்யாமைகொள்கடனே. ()

மண்ணினிற்றருவில்வளர்சுரையோட்டிற்பாத்திரங்கொள்ளுதல்வயங்கு
மொண்ணிறக்கற்றோய்துகிலினைப்புனைதலோர்பகலருந்தலில்வாழ்க்கை

கண்ணினர்யாதுவழங்கினுங்கோடலன்னவர்நன்மனைக்கருமம்
பண்ணியபின்னர்பபலிகொளன்மிகவுமருந்திடாதொழிதல்பண்பாமால்()

கருவிடையெய்துதுன்பமுநிலத்தின்கண்ணுறிற்கொடியவெந்நோயின்
மருவுவெந்துயருநரைதிரையெய்திவருந்தியதுன்பமுங்கூற்று
றுருவினையொருவுந்துன்பமுமீட்டுங்கருக்குழியொன்றுறுதுயரும்
வெருவரவெண்ணியின்பவீடதனின்மேவநன்குணர்வதேவேண்டும்.(௯)

அழிவதிவ்வுடம்புமுதலியவனைத்துமழிவுறாதிருப்பதெஞ்ஞான்றும்
வழுவறுமான்மாவென்பதையுணர்ந்துமுத்தியின்மருவுதற்கியைந்த
விழுமியகருமமியற்றுதல்வேண்டுமாங்கவைவேதமேமுதலாம்
பழுதறுகலைகளனைத்தையுமுணர்தலதன்வழிநின்றிடும்பான்மை. (௰)

மன்பெருஞானப்பொருணிலையுணரவேண்டுநர்வழுவறவினிதி
னின்பவீடளிக்குநூல்பலகேட்டலாங்கவைசிந்தைசெய்திருத்த
லன்பொடுமதனைத்தெளிதலட்டாங்கயோகமும்பயிறலவ்வியோக
மென்புநெக்குருகப்பலபகற்பயிலினல்லதையெய்துறுதன்றே (௧௧)

இந்தியவிடயந்தன்னொடுசிவணல்யோகமென்பார்சிலர்சிலர் தஞ்
சிந்தனையுயிரோடடைதல்நல்யோகமென்பரீதன்றியுஞ்சிலர்தா
முந்தியபிராணனபானனோடடைதலென்பரிம்மொழிந்தவையனைத்து
மந்தமில்யோகமல்லநற்சீவன்பரத்துடனடைவதேயோகம். (௧௨)

பயில்புறக்கரணமனைத்தையும்விளங்குமுட்கரணத்திடைப்படுத்தி
மயலுறுமனனைப்புற்கலனிடத்திலொடுக்கிமேல்வயங்குசட்பாவ
மியறருசடுரம்கோசமோராறுமியைந்திடாப்புற்கலன்றன்னை
யுயர்வுறவுயர்ந்தபரம்பொருளதனிற்கூட்டுதல்யோகமென்றுரைப்பார்.()

கருதருமியோகம்பயின்றுகைவந்தோரல்லவர்பரத்தினைக்காணார்
திரிதருவளியையடக்கினல்லாதுசெவ்வனேமனநிலைபெறாதா
லொருவருஞ்சடங்கயோகுணர்ந்தல்லாலுண்மையையுணர்வரிததனால்
விரிதருசடங்கயோகமும்விளங்கவிளம்புவன்கேட்டியென்றுரைக்கும். ()

ஆசனம்பிராணயாமமெஞ்ஞான்றுமழிவறுபிரத்தியாகார
மாசில்தாரணைமெய்த்தியானநற்சமாதிவகுத்தநல்யோகமாறவற்றுட்
பேசுமாசனங்களுரைத்திடிற்பெருகும்பிழைப்பில்சித்திராசனம்விளங்குந்
தேசுறுமியோகசாதனமென்னவிளம்புவர்யோகநூல்தெளிந்தோர். (௧௫)

வலக்குறங்கதனிலிடப்பதமேற்றிவலப்பதமிடக்குறங்கேற்றல்
சொலத்தகுங்கமலவாசனமதனிற்பின்னதாய்த்துணைக்கரமாற்றி
நலத்தகுதாளிற்பெருவிரல்பிடித்தல்பெற்றபத்மாசனநவிலி
னுலப்பிலாசனங்களுளவவற்றியைந்தவாசனத்திருத்தலேயுரித்தாம். (

எறிபுனல்சாம்பர்கரியுமிகொசுகியென்புதியெய்திடமன்றங்
குறுகருங்கானந்தொழுவிவற்றிருந்துயோகினேக்குறித்தலுமாகா
நறுமணங்கமழும்புனிதமாமிடத்திலமர்ந்திடனன்கெனவுரைப்பார்
சிறிதயின்றுாக்கந்திரிதால்குறைதல்பெருகுதலொழிந்துளோர்செயலாம்

வேறு.

செவ்வானிருந்துகளங்கோட்டிச்செவ்வாய்மூடிக்கண்கள்முகிழ்த்
தொவ்வாப்புலன்களுள்ளடக்கியுண்ணுப்புணாநாநுனியேற்றி
வைவாளெயிற்றுடெயிறென்று தினிதின்வகுத்தவாசனத்தி
னிவ்வாறிருந்துமூவகையபிராணயாமமியற்றுகவே. (கஅ)

புருவத்திடைநோக்கெத்துணையகாலமிருக்கும்பொருந்துடலின்
மருவும்வாயுவெத்துணைப்போதடங்கியிருக்குமட்பகைஞர்
திரிகைபோலெவ்வளவுமனந்திரியாதிருக்குமத்துணையும்
விரியுங்காலடயமவனைமேவாதென்றுமறைகூறும். (கக)

'இமைத்தலொருமாத்திரையதனையீராறளவைகொண்டனவே
யமைத்தவசபைச்செபகாலமாங்கவ்வளவுமூச்சடக்கிச்
சமைத்தபிராணயாமமறத்தாழ்ந்ததிடையதிரட்டித்தல்
கமைக்கணுறைந்தோர்மூன்றுகொண்டதுயர்ந்ததென்னக்கழறினரால். ()

முந்துபிராணயாமத்தின்வேர்வுதோன்றுமொழிந்ததற்பின்
வந்தபிராணயாமத்தினடுக்கமெய்துமற்றதன்பின்
சிந்தைதெளிந்தோரினிதியற்றும்பிராணயாமந்துயர்செய்யு
மந்திலதனைப்பயிலின்வேர்வரும்புந்துயரமடையாவால். (உக)

இனையவாறுமேன்மேலும்பயின்றேன்பனிதோயிருவிசும்பின்
மனனில்விரைந்துகாயமொடுமேகுமிதனைவலிதாற்று
மனையோன்வெங்நோய்பிடித்துழலுநாடிதூய்மையுறினல்லாற்
றனைவிலேகும்வளியடக்கல்கூடாதென்பர்தொன்னூலோர். (உஉ)

மதியிலிருநான்கிரேசித்துவகுத்தவீரெட்டினிதேற்றி
விதியின்வழுவாதெண்ணான்குகும்பித்திலகுவெய்யோனிற்
பதினறளவைவிடல்வலத்துமிவ்வாறியற்றிப்பகர்முறையிற்
கதிர்சான்மதியின்விடுதலொருபிராணயாமங்கருதுகவே. (உங)

இடையில்விதியாலிரேசித்துப்பூரித்தியல்பிற்கும்பித்து
வடிவில்மதியந்தனையெண்ணிவலத்தால்விடுகவலப்பாலி
னடையினியல்பாலிரேசித்துப்பூரித்ததனிற்கும்பித்துச்
சுடரோற்கருதிமதியின்விடிற்றூய்தாநாடிமும்மதியில். (உச)

இன்னவாற்றுனடிதனைத்தூய்மைசெய்யினெறிவளியைத்
தன்னைச்சிறிதுநீங்காமனிறுத்தலாகுமதுதரிப்பின்
வெங்நோயடையாவயின்றவைகள்விரைவினறுநான்மறைபுகலு
மன்னுனாதந்தெளிவெய்தமருளாதென்றுந்தோன்றுமால். (௨௫)

தெளிந்தவிதியிற்பன்னிரண்டுபிராணயாமஞ்செய்போது
விளம்புபிரத்தியாகாரமதுபன்னிரண்டுசெயும்வேலை
துளங்கல்செய்யாத்தாரணைமற்றதுபன்னிரண்டுசூழ்கால
மளந்ததியானமஃதீராறளவைசமாதிசெய்காலம். (௨௬)

இவ்வாறுணர்ந்தோருயிர்க்குயிராயெங்குமாகியொன்றாகிச்
செவ்வாய்நின்றபரம்பொருளைக்காண்பர்செந்நீர்த்தொளிபழுத்த
வெவ்வாய்க்கருவின்வந்தடையார்வினையோரிரண்டுமொருவியுயர்
மைவார்கொடியமாயைகெடச்சுடர்போனின்றுவயங்குவரால். (௨௭)

ஆமைபோலவிந்தியங்களடக்கல்பிரத்தியாகாரஞ்
சோமனண்ணத்தகோமுகமாய்த்துளிக்குமமுதையுந்தியிடைக்
காமர்முகமேனோக்கியமிரவியருந்துங்கரைந்ததனை
யேமமுறவேமாறியிடுகரணம்பயிலாதியையாதால். (௨௮)

சென்னிகீழாத்தாண்மேலாநின்றுசெவ்வாயினைக்காக்கை
மன்னுமூக்கிற்குவித்தூநறுஞ்சீதவளியையுறமாந்திற்
கொன்னேவருத்துநரைதிரைகள்கூடாவுண்ணுத்துவாரத்தி
னன்னுவேற்றியறுதிங்களமுதமருந்தினரைவாரா. (௨௯)

சொன்னவறுதிங்களின்மேலுந்தொடர்ந்தைம்மூன்றுநாளினிந்தி
னன்னவமுதமருந்தில்வெலற்கரியமிருத்துவினைக்கடப்பார்
மன்னுநாவாலுண்ணாக்கின்றுளையைநெருக்கிமதியாறு
தன்னேரில்லாப்பரையைநினைந்திருப்பிற்கவிதைசார்ந்திடுமால். (௩0)

பருவமொருமூன்றிவ்வாறுபயிலினமுதவுருவாகு
மெரிவெம்பகுவாய்க்கறைமிடற்றகார்க்கோடகன்றன்னெயிறனைத்து
முருவியழுந்தக்கடித்திடினுமொழுகுங்கொடியவிடமேறு
மருவுஞ்சித்தியீங்கிதுகைவந்தாற்பயில்கதாரணையே. (௩௧)

பூதமைந்தும்வெவ்வேறாய்ப்புகன்றவாற்றினுளத்தமைத்த
லேதமறுதாரணையிவற்றிற்பூதாரணைபொன்னிறமாகத்
தீதில்கோணநான்காகி லகரவெழுத்தினொடுஞ்சிவணி
வேதனதிதெய்வதமாகப்புவியையிதயமிசைதரித்தல். (௩௨)

பிறையின்வடிவாய்வெண்ணிறமாய்ப்பேசும்வகரவெழுத்துடைத்தாய்
நறியபடலைத்துழாய்மார்பன்கடவுளாகவையின்றி

யுறையுமிடத்திலிங்கிதனையமைத்தல்சலதாரணையென்ன
மறைதேர்முனிவர்மன்னுயிரின்மம்மர்தீரவகுத்தனரால். (௩௩)

கோணமூன்றாயுறச்சேர்ந்தாகரவெழுத்தினொடுங்கூடப்
பேணுந்தெய்வமுருத்திரனாய்ப்பிறங்குமுண்ணாவதினிடையின்
மாணவினிதிற்றரித்திடுதல்வழங்குமழற்றாரணையென்ன
யாணர்மறைகளொருநான்குமுணர்ந்தமேலோரிசைத்தனரால். (௩௪)

ஆறுகோணமாய்க்கரிதாய்யகரவெழுத்தினொடுமைந்தாங்
கீறில்மகேசன்றெய்வதமாயிருக்குந்தூயவெறுவளியைக்
கூறுபுருவத்திடைதரித்தல்குலவும்வாயுதாரணையென்
றாறுஞானக்கடற்படிந்தவுரவோரினிதினுரைத்தனரால். (௩௫)

மானமாவின்வாலதியினிறமாய்வட்டவடிவாகி
யூனமில்லாவகரவெழுத்துடைத்தாய்த்தெய்வஞ்சதாசிவனா
யானபிரமரந்திரத்திற்றரித்தோரஞ்சுநாழிகையு
மோனமாகவுயிர்சேர்த்தின்முத்திக்கபாடந்திறக்குமால். (௩௬)

பூதாரணையாற்றிரமெய்தும்புனற்றாரணையானவெய்து
மோதுமழற்றாரணையதனாற்றகனமெய்துமுறுவளியின்
றீதிலுயர்தாரணையதனாற்சீவனழியாதாகாய
மாதாரணையாலவையுஞ்சமனப்படுத்துமென்றேவகுத்தனரால். (௩௭)

பொருந்துதியானமெனவுரைத்தல்சிந்தையாகும்புகல்சிந்தை
யருந்தத்துவத்தையுளத்தெண்ணியலையாதிருத்தல்தியானமிகத்
திருந்துசகுணநிற்குணமென்றிரண்டாஞ்சகுணந்திகழுருவோ
டிருந்தவரனைமந்திரத்தாலேத்தியிதயத்திருத்துவதே. (௩௮)

பிரமந்தன்னைமந்திரங்கள்பேசாதுளத்தினினிதமைத்தன்
மருவவரியநிற்குணமாந்தியானந்தன்மாத்திரையைநதும்
பொருவில்செவியாதியவைந்திற்பொருந்துமளவும்புகாறுமற்
றரியதியானமவைநீங்கிற்சமாதிகாலமெனவறைவார். (௩௯)

கடிகையஞ்சுதாரணையின்காலந்தியானமறுகடிகை
யொடிவில்காளோர்பன்னிரண்டுசமாதிகாலமுப்பொடுநீ
ரடைதல்போலமனத்தினொடுமான்மாச்சேர்த்தல்சமாதியென்ப
வுடையபிராணன்மனத்தொடுகூடுதலுஞ்சமாதியெனவுரைப்பார். (௪0)

சீவபரத்தின்சமத்துவமுஞ்சமாதிதண்மைதெறுவெம்மை
மேவவரியசுகதுக்கநீங்கியான்மாவல்லதைவே
றியாவுமிலதென்றுயர்பரத்தினெய்திச்சமாதியிருப்போனை
நோவுதமனீர்படைவினைகள்வருத்தாவென்னநுவன்றனரால். (௪௧)

இனையவாறு சமாதியினிலிருக்கும்யோகிதத்துவத்தைத்
துனைவிற்காணுமாங்கதுவுமனேவாக்கிவற்ருற்ருெடர்வரிதாய்த்
தனியோர்பொருளாயிருக்குமதிற்சடங்கயோகங்கைவந்தோர்
கனிசேர்பாலிற்பால்சேர்ந்தபான்மைபோலக்கலந்துறைவார். (௪௨)

ஏற்றமாமுத்திரையோடுநபோமுத்திரையுட்டியானமெனச்
சாற்றுமுத்திரையரியசலந்தரமுத்திரைநன்மூலபெந்த
மாற்றலுடையிம்முத்திரைகளறிந்தோன்யோகியாங்கவற்றிற்
போற்றுமாமுத்திரையின்விதியாருந்தெளியப்புகலுவாம். (௪௩)

கூடுமாமுத்திரைவலக்காலீட்டியிடக்கால்குதத்கழுத்தி
நீடுதாளேயிருகையாற்பிடித்துநாடிவளைத்துநிறைந்
தோடுபிராணன்றனைமாறிமாறிவிடுதனுவுலர்த்தல்
நாடிசோதித்திடல்மதிடமிரவிகூட்டலெனநவில்வார். (௪௪)

நாவைக்கபாலத்தாடேற்றிபபுருவநடுவினேக்கமைத்து
மேவல்நபோமுத்திரைவயிற்றினுதனுபிமேலாதல்
தாவில்வெரிநிற்றுனுதல்பிராணவாயுதனைநிறுத்த
லோவிலுட்டியானமிதுபயின்ருேர்வானத்துலாவுவார். (௪௫)

வாயுவதனுல்நரம்புகளால்மலத்தையிறுக்கிற்கீழ்வதிந்த
தீயின்மதியத்தமுதொழுகாபிராணவளியுஞ்செல்லாது
மேயவிதனைச்சலந்தரமுத்திரையாமென்னவிளம்பினரா
லாயுமறையின்பொருளனைத்துந்தமதாமென்னுமறிவுடையோர். (௪௬)

குதியோரிரண்டால்யோனிதனையிறுக்கிக்குதத்தையுள்வாங்கி
விதியினபானவாயுவினைமேலேயேற்றிப்பிராணனுக்கு
மெதிருமபானன்றனக்குமியைபெய்துமலநீரொய்தாது
முதிருங்கிழவற்கிளமைவருமூலபெநதமிஃதாமால். (௪௭)

மருவுபிராணன்மேலிழுக்கவபானவாயுகீழிழுக்கப்
பெருகுதுயரின்வருந்தாதுகூடுமவன்பேசரும்யோகி
பொருவிலகரத்தாற்போந்துசகரத்துட்போமசபைதனை
யிருபத்தோராயிரத்தறுநூறுருவேற்றிடுநல்லுயர்சீவன். (௪௮)

கலைகளனைத்துந்தெளிதலாமகளிர்விழைதல்கணமொன்றி
லுலகமியாவுந்திரிந்திடுதல்சிறுத்தல்பருத்தலுடலதனி
லிலகுமொளிகண்மனந்தோன்றலெவற்றின்பாடைகளுமறித
லலகில்புவனந்தனித்தாங்கலாகாயத்தினடைந்திடுதல். (௪௯)

சேணிற்பொருள்யாவையுங்காண்டல்செகத்துளொளிகளொளிதுணர்தல்
மாணுற்றுயர்யோகியர்க்கிவைகளிடையூறிவற்றின்மனஞ்செலுத்தா

தியாணர்க்கோங்கின்முகின்முலேயவேழைபாகனிணேயடியைக்
காணுற்றுள்ளங்கசிந்துருகியிருப்போர்முத்திக்கடற்படிவார். (ருO)

இனையவாற்ருலியோகங்களியற்றியுடலமிகவருத்தி
நினேதற்கரியதனிமுத்திநெறியினடைகவிதுவன்றித்
துனேவிலுடலம்வருந்தாதுமுத்தியடையத்துணிந்தோர்கள்
கனேநீர்க்கங்கைசூழ்காசியடையவேண்டுமெனக்கரைந்தான். (ருக)

சO-வது-யோகநிலேயுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ககஅஅ.

நாற்பத்தோராவது.

## காலமறியுமத்தியாயம்.

கறங்குதிரைப்புனற்கங்கைசூழ்கிடந்தகாசிதனி
லிறந்துபடுநாளணித்தாயெய்துழியாயினுஞ்செல்கென்
றறைந்தனேமற்றிவைதெளியுமாறினிதினறைகென்னுச்
சிறந்தமுனிவரன்கேட்பச்சூர்தடிந்தோன்செப்புமால். (க)

ஒழியாதுபிங்கலேயினுயிர்ப்பொருநாள்முழுதொழுகி
னழிவாகுமூவாண்டிலாங்கதனிலிரண்டுநாள்
வழுவாமல்நடந்திடுமேன்மரிந்திடுவானீராண்டிற்
கழிவாநுண்டொன்றிலதில்நாள்மூன்றுகடிதோடில். (உ)

ஐயிருநாளுபயத்திற்சரமோடிலறுமதியி
னுய்வதிலன்மூக்கொழியவாயினிடைவளியோடின்
மெய்யினுயிர்நாள்மூன்றின்விட்டகலுமெனவுரைத்தார்
மையறுநூற்கடல்கடந்தமாண்புடையமதிவல்லோர். (ங)

தென்றிசையிலிரவிதடந்தேர்நடப்பிற்சென்மத்து
மன்றவுயர்திங்களுமேழாமிடத்தில்வான்கதிரு
மொன்றிடினுட்டினகாலத்தொளிகறுத்தும்பொற்கென்று
நின்றதோருருக்காணில்நீங்குமுயிர்மூவாண்டில். (ச)

மும்மலமுமியல்புதிரிந்தறக்குறையின்முடியுமுயி
ரம்மவொருபருவத்திலாகாயந்தனிற்கரிய
மைம்மதவாரணந்தோன்றின்மரிந்திடுவன்மதியாறிற்
றம்முடலமலேயாமல்நிழலிலேயிற்சாவணித்தாம். (ரு)

வாயினிடைநீர்ப்பெய்துவான்றுளிசிந்திடவுமிழின்
மேயதனுத்தோன்ருதேல்வீந்திடுவன்மதியாறி

லாயுளழிந்திடுங்காலமாறுமதியளவையெனிற்
றூயநிறமோரைந்துஞ்சுவையாறுமுறைபிறழும். (௬)

அருந்ததிநாறுதிதுருவனணிமூக்கினுதிமற்றைப்
பொருந்துமுயர்விண்டுபதம்புருவநடுக்கட்கடைகள்
திருந்தியிடுமோதுருமண்டலமாகுமிவைதெரியா
திருந்திடுமேற்சின்னளில்மறலிநகர்க்கெய்துவரால். (௭)

இதழ்நாக்குமிடறிவைகளீரமறப்புலர்ந்திடுமேல்
மதியாறினமன்பகட்டின்மணியோசைகேட்பரா
லுதடுநாப்பல்லண்ணமொழுகுதாதுறக்கறுப்பின்
சிதைவருயிர்மதியாறிற்றென்புலத்தோர்விருந்தாய். (௮)

ஈர்வாளினுயிர்புறத்தவோந்திதலையிடைவீழ்ற்
றீர்வருயிர்சின்னளிற்றிகழுரங்கைகாலிவற்றி
னீராடிற்றுயாதுநீங்குமேன்மும்மதியிற்
காரார்வெம்பகடுகைக்குமறலியூர்கடிதடைவார். (௯)

சேற்றிடையின்மிதித்தவடிச்சுவடுசிதைவுறத்தோன்றி
னேற்றெருமைக்கடும்பாகனெய்துமூரணித்தாகு
மாற்றுநீர்கண்ணடிநெய்நோக்கிற்றலையவற்றிற்
றோற்றிடாதெனிலாவியொருமதியிற்றோற்பரால். (௧௦)

இயற்கைமதிபிறழினிரவிந்திரவிற்காணினுயர்
முயற்களங்கமதியிரவியோரிரண்டாய்முன்றோன்றிற்
புயக்குறுநண்பகலினுடுத்தெரிந்திரவுதெரியாதேல்
மயக்குநமன்றமரெதிரேவருவிருந்தாய்ச்செல்குவரால். (௧௧)

நாற்றிசையுமிந்திரவிற்றோன்றிடினன்பகலிடையிற்
றோற்றுறவெம்பேயாடிற்றுறுகல்லினுயர்மரனி
லேற்றுயர்கந்தருவர்நகரெதிர்ந்திடிலோர்திங்கடனிற்
கூற்றமவனுவிதனைக்குடியாமலொழியுமோ. (௧௨)

குடங்கையாற்செவிபுதைப்பிற்குமிறுமொலிகேளாதேற்
றடம்புயமுமுடல்முழுதுந்தடித்துள்ளோர்சாம்புவரோ
லொடுங்கியமெய்யினர்மிகவும்பருப்பரோல்மதியொன்றிற்
கடந்திடுவர்வைதரணிநதியினைத்தன்காற்புணையால். (௧௩)

தனதுநிழறென்றிசையிற்றனித்தோன்றிலுருமெறியுங்
கனைகுரலவெஞ்சினத்தகதழெரிகாற்செங்கண்ண
பனைவகிர்ந்ததெனப்பணைத்தபடர்கோட்டப்பகடேர்ந்து
துனைவில்வருகொடுமறலியெறிவலையிற்றுவக்குண்பார். (௧௪)

பேய்பூதம்நரிகழுதையவுணரிராக்கதர்பிறங்கு
மாய்தூவிக்கருங்காக்கைபருந்துகுரங்கடுபுலிசெந்
நாயேறவவைதமைத்தின்னக்கனவுநனிகாணின்
மாய்வரோர்பருவத்தின்மறலிகதைக்கிரையாக. (௧௫)

செய்யமலர்செய்யவரிசெஞ்சாந்தமிவைதமது
மெய்யிலணிந்திடக்காணில்விளம்புமதியிருநான்கி
லுய்வதிலர்புற்றதனில்யூபத்திலுயர்துகளிற்
கையறவோடுயிர்துறப்பரவையேற்கக்கணுக்காணில். (௧௬)

எண்ணெய்தலைமுழுகமயிரொறிந்திடவெங்கரமிவர
நண்ணருந்தென்புலத்தொருவர்கொடுபோகவுயிர்நடந்தோர்
மண்ணியதம்மேலேறமுளிதருபுற்சுமக்கமற்றைக்
கண்ணருந்தீக்கணுக்காணிலோர்மதியிற்கழிவரால். (௧௭)

கரியகுறள்மடந்தைதனைப்புல்லவுயர்கருந்தாதி
லுருவமைந்தகதைதாங்கியொழுகுகருந்துகில்வீக்கி
மருவுகருநிறத்தொருவன்றனைக்காணவருகனவு
தெரிவுறக்கண்டவணுவிதிங்களொன்றிற்கழிந்திடுமால். (௧௮)

குரங்கிவர்ந்துகுணபாலிற்செலவயரக்கொடுங்கனவு
தெரிந்திடக்கண்டிடிலாவிசிதைவர்நாள்மூவைந்தில்
விரும்பியளிக்குநரளியாவிடில்மிகவுமளியாதோர்
பொருந்தவளித்திடிலாவிபொன்றிடுவர்சின்னாளில். (௧௯)

இன்னுமளப்பிலவாயவிறந்துபடுகுறியவற்றில்
மன்னியிடுகுறியோர்ந்துவானதிசூழ்கிடந்தோங்கிப்
பொன்விழுதுவிட்டனையபுரிசடையோனினிதுறையுங்
கன்னியெயில்புனைகாசிகடிதினடைந்திடல்வேண்டும். (௨௦)

வேறு.

என்றுமலையத்தமிழ்முனிவனினிதுகேட்பக்குருகுபெயர்க்
குன்றமெரிந்தசுடரிலைவேற்குமரனுரைத்தானெனத்தெரிந்து
மன்றமறைகளொருநான்காய்வகுத்தமுனிவற்பணிந்துபுலன்
வென்றசூதன்முனிவருளங்தெருளுமாறுவிளம்பினனால். (௨௧)

௪௧ - வது காலமறியுமத்தியாயம் - முற்றிற்று.

பூர்வகாண்டம்முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம்-௧௨௦௬.

---



# உத்தரகாண்டம்.

நாற்பத்திரண்டாவது.

## அவிமுத்தேசன்கதையுரைத்தஅத்தியாயம்.



சீர்கொண்டமலரயனுந்திருமாலுங்காண்பரிய
வேர்கொண்டபேரொளியையெளியேன்றன்னுள்ளத்து
நீர்கொண்டகாசியினுநிலவுபழமறைக்கொழுந்தைக்
கார்கொண்டமணிமிடற்றெங்கண்ணுதலைவழுத்துவாம். (௧)

வேறு

தேசுறுஞானமளப்பினுள்யோகஞ்செய்திடினலதுசேர்வரிதாற்
காசியினடையிற்கணத்தினில்முத்தியெய்தலாமெனக்கரைந்தனையான்
மாசிலந்நகரின்விடாதுறைபரமன்கதையினைவழங்கெனமுனிவன் [ன்
பேசலுமவுணரிரத்தமுண்டொளிரும்பிறங்குவேற்குமரனுண் டுரைப்பா

மற்றையதலங்களெவற்றினுந்தவத்தால்யோகினால்மருவருமுத்தி
பெற்றிடல்வேண்டுங்காசியில்வாளாவுறைந்திடில்முத்தியாம்பெட்பி
னுற்றவணீங்காவுறைதலேயோகமொண்மலரிடுவதேதானங்
கற்றையங்கதிர்கால்முத்திமண்டபத்திலிருப்பதேகருதருந்தியானம். (௩)

அளப்பருங்காலமைந்தழல்நாப்பணருந்தவம்புரிந்தவர்பெறும்பே
றுளத்திலின்புற்றுச்சிவநிசியேகாதசியினிலுண்டிநீத்துறையிற்
களிச்சுரும்பரற்றுங்கடுக்கையந்தெரியற்கண்ணுதலளிக்குநின்போல
வளத்தநற்காசிபிரிந்திறைவருந்துங்கதையினைக்கேளெனவழங்கும். (௪)

அருமறைக்கிழவன்முன்னமோர்பிரமகற்பத்திற்சுவாயம்புமனுவா
மொருபெருந்திகிரிமன்னவனிறப்பவறுபதாண்டுறைபெயலின்றிப்
பருவரலுழந்தாங்குலகெலாங்கடாய்ப்பயின்மகமின்றிநன்னிலைமை
திரிதலுங்கமலப்பொகுட்டினிதிருக்குமறையவன்சிந்தையினினைந்தான். (

ஆழியொன்றுருட்டியுலகெலாம்புரக்குமரசனாயின்றியிவ்வுலகந்
தாழ்துயருழந்ததெனமனத்தெண்ணித்தவறில்சீர்மனுகுலத்துதித்த
பூழிவெம்பருதியனையவேற்றடக்கைரிபுஞ்சயனென்றுலகேத்தும்
யாழியந்தடந்தோள்மன்னவன்காசிப்பதியினிற்றவஞ்செயக்கண்டான். ()

காண்டலுமரசன்றவத்தினைவியந்துகதிர்முடிதுளக்கிநான்முகத்தோன்
மாண்டவிவ்வுலகமனைத்தையுநீயேபுரந்திடல்வேண்டுமற்றுனக்குத்
தூண்டுதல்செய்யாமணிவிளக்கன்னசுடரிழையனங்கமோகினியைச்
சேண்படர்பரிதிநிகர்மணிச்சூட்டுப்பஃறலைச்சேடன்வந்தளிப்பான். (௭)

மாயிருஞாலமனுநெறிவழாதுமன்னநீகாத்தலானினக்காங்
காய்மணிக்குப்பைதெய்வமென்சாந்தமைந்தருநறுமலரனைத்துஞ்
சேயுயர்விசும்பினமரர்நல்குதலாலுயர்திவோதானனும்பெயரு
மேய்வுறுங்கலைகள்முழுவதுமளித்தேமேம்பலோடிருத்தியென்றிடலும்.

தாமரைத்தவிசிலரசுவீற்றிருக்குஞ்சதுமுகற்றொழுதியான்கேட்ட
காமுறுவரமொன்றளித்தியேலுலககங்காக்குவலெனவுளமகிழ்ந்து
யாமதுதருதுமென்னலுமமரர்விஞ்சையர்கின்னரரியக்கர்
தூமவெந்தழற்கண்ணுரகரிங்கரந்துறந்துதம்பதிபுகவேண்டும் (௬)

என்றலும்வழங்கிச்சேட்டிளங்கதிரினெரிகதிர்மணிமுடிசூட்டிக்
குன்றுறழ்திணிதோள்மன்னவனமரர்குழுவினைத்தனித்தனிநோக்கிச்
சென்றுநும்பதியிற்சேர்கெனமுரசமறைதலுஞ்செழுமறைக்கிழவன்
பொன்றிகழ்கடுக்கைப்புரிசடைப்பரமனினிதுறைசினகரம்புகுந்தான். ()

அடிதொழுதேத்தும்விரிஞ்சன்முன்றோன்றியலங்குநீர்க்காசியங்கடவுள்
குடிமிவான்றோயுமந்தரமிழைத்ததருந்தவமாங்கதுகுறுகி
யொடிவில்சீர்வரங்களுதவுதல்வேண்டுமொல்லையிலெழுகநீயொன்ன
விடையிவர்ந்தயன்மால்நந்தியேமுதலவிண்ணவர்சூழ்வரவெழுந்தான் ()

கண்களுமனனுங்காசியிற்கிடப்பக்கறைமிடற்றெந்தையாண்டேக
விண்புகுகுடுமிமந்தரந்தாழ்ந்துமென்மலர்தூய்மகிழ்ந்தேத்தப்
பண்கனிந்தொழுகுமென்மொழிபாகன்விழைந்தனபகர்தியென்றிடலு
மொண்சுடராகியாவதுமுணருமுனககியானுரைப்பதொன்றுண்டோ. ()

கங்கையம்புனல்சூழ்காசியம்பதியிலுறைவதுபோற்குசத்தீவிற்
றங்குமென்னிடத்துமுறைந்திடல்வேண்டும்யானுமத்தனிநகர்போலப்
பொங்குசீரோடும்பொலிந்திடல்வேண்டுமென்றலும்பொழிகதிர்நிலவு
திங்களங்கண்ணிப்புரிசடைமறையோன்சிந்தைகூர்ந்திருந்திடுமேல்வை()

மலரயன்வணங்கிமதிவகிர்புனைந்தவரதநின்னருளினலளிய
னுலகெலாமமைத்தேன்காக்குநரின்றியுறைபெயல்வறந்தனவதனு
விலகுவேற்றடக்கைரிபுஞ்சயன்காக்கப்பணித்தனனுங்கவனிமையோ
ரலேபுனற்காசியொரீஇத்தமபதியிலடைந்திடிலளிப்பனென்றறைந்தான்.

அவ்வரமளித்தல்வேண்டுமென்றிறைஞ்சமந்தரவரையினுக்களிப்பா
னிவ்விடத்துறைந்தேம்யாமுமாங்குறையுமிமையவர்தத்தமபதியிற்
செவ்வனேயேகப்பணித்தனமென்னச்செங்கனிப்பவளவாய்மலர்ந்து
நவ்விமென்னோக்கிபங்கன்மால்வரைக்குநல்வரமளித்தவணிருந்தான். ()

அன்றுதொட்டோங்குமந்தரவரையுமுத்திமால்வரையெனவமர்ந்த
தின்றளிர்கவற்றுமேந்தெழின்மேனியேழையோர்பாகனுங்காசி

யொன்றிநீங்குறுமலியாவருமுமைராதிலிங்கமொன்றமைத்தவனுறலாற்
பொன்றவழ்குடுமிப்புரிசைசூழ்காசிக்கவிமுத்தமெனப்பெயர்புனைந்தார்.

விளங்குமவ்விலிங்கமமைந்ததன்பின்னர்விரிஞ்சனேமுதலியோரியாருந், துளங்கொளியிலிங்கம்பற்பலவமைத்தார்சொன்னவவ்விலிங்கத்தினுமை, முளங்குழைந்துணைத்தோர்கருதிஞேரியாண்டு சென்றுதம்முயிரிறந்திடினுங், களங்கனியனையகண்டன்வாழ்காசியிறந்தவர்பெறுங்கதியடைவார். ()

சஉ-வது-அவிமுத்தேசன்கதையுரைத்தஅத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஉஉசு.

---

நாற்பத்துமூன்றுவது.

## திவோதானனுட்டிற்படுத்தஅத்தியாயம்.

விண்ணவரகன்றுதம்பதியுறையவிரிபுனற்கங்கைசூழ்கிடந்த
வண்ணலங்காசிதனிற்றிவோதானனரசுபூண்டளிக்குநாளதனிற்
கண்ணுதல்முதலோரவனரசுரிமைகடிந்துவான்றெடுமதிற்காசி
நண்ணியதுணைத்துமெனமுனிகேட்பநாமவேற்பண்ணவனுரைப்பான். ()

நாகிளந்திங்கணைகிலாமுகிழ்க்குநளிர்சடைவானவன்முதலோர்
போகியபின்னரிருநிலமுழுதும்பொதுவறவொருகுடைநிழற்றி
வேகவெஞ்சிலைக்கைமருவலர்க்கடந்துவினைவளந்தருமலர்ச்சோலை
மாகமூடறுக்குங்கொடிநெடுவீதிமாநகர்க்காசியினிருந்தான். (உ)

செயிரிடைச்சீற்றப்பகைதரும்விழிக்குந்தீமைகூரிதயமென்மலர்க்கும், வெயில்பொழிந்திமைக்கும்வெங்கதிர்ப்பரிதி வேந்தனேபோன்றுமெஞ்ஞான்று, முயிரெனவியந்துதன்னுழையடைந்தோர்க்குயர்விசும்பகடுகீண்டெழுந்த, முயலடைகிடக்குமுழுநிலாத்திங்கள் முதல்வனேபோன்றும் வீற்றிருந்தான். (ங)

குனிசிலைக்குடுமிகுழையநாண்பிணித்துக்குருதிநீராட்டுவெம்பகழி, முனிவினிற்றூங்கிக்கவைநெடுங்கோட்டுமூரிவெங்கடாக்களிறுகைத்துத், தனிவிசும்பளிக்கும்வானவனென்பர்தரியலருயிர்செகுப்பதனுற், கனைகுரற்புரிகோட்டெருமையேறுகைக்குங்கதழ்சினமறலியென்றுரைப்பார். (ச)

ஏற்றெதிர்கொடியபகைநெடுங்கானிற்கெரிசுடர்வழங்குதீக்கடவு
ளாற்றல்வெம்பாசத்தொன்னலர்க்கடந்தவென்றியாலாழ்கடற்கிறைவன்
போற்றுமிவ்வுலகிலுயிரொலாமுயிரிற்புரப்பவனரும்பொருளவையு
மாற்றிடாதெவர்க்குமுதவலாலளகைமன்னவனென்னவீற்றிருந்தான். ()

வாட்படையுழவர்கூற்றெனத்தெழிக்குஞாட்பினுட்பார்க்கரும்பலத்தாற்
கோட்புலிப்போத்தினீருரிபுனைந்தகூன்பிறைக்கண்ணியஞ்செல்வன்
சேட்டிமைப்பரிதியோட்டறநிவந்ததிரள்வரைப்புயவலியதனாற்
பாட்டளிதுதையும்பசுந்துழாய்ப்படலைப் பங்கயச்செங்கண்மாலனையான்.

எண்ணிருகலையாலுள்ளமேமாப்பவிருவிசும்பியங்கியமதிபோல்
நண்ணருமெண்ணெண்கலையொடுநிறைந்தவிவர்க்கிணைநாகர்காந்தருவர்
பண்ணவருருவுகரந்துவந்தன்னோன்பணித்தனபுரிகுவனொன்று
லண்ணலஞ்சீர்த்தியாயிரம்பகுவாய்ச்சேடனையன்றியாரறைவார். (எ)

நனந்தலையுலகமொருகுடைநிழற்றுநாளின் மென்கிள்ளையந்தீஞ்சொற்,
கனிந்தழகொழுகும்பச்சிளங்கழைத்தோட் கருங்கயல்மருட்டுவாட்டடங்
கண், மனங்கவருருவச்செழுங்கொடிப்புருவவாளரக்கூட்டிதழ்க்கனிவா,
யனங்கமோகினியைப் பஃறலைச்செஞ்சூட்டணிகெழு சேடன்வந்தளித்
தான். (அ)

ஆங்கவடனைவேட்டிளமுலைப்போகமருந்திமற்றவணிகர்வனப்பிற்,பூங்
குழல்மாதர்பலரொடுமுயங்கிப்பொற்பொடுபுதல்வரைப்பயந்து,வாங்கிரு
ஞ்சிலைத்தோட்புரவலன்புரப்பமறைவளஞ்சுரக்குநன்னாட்டி, னீங்கரும்
பெருமைதன்னையீங்கெவர்க்குமிறறெனநிகழ்த்துமாறரிதே. (௯)

கிள்ளையங்குதலை மொழியினுங்கனிந்த கேழ்கிளரமுதுறழ்தீஞ்சொ,
லொள்ளிழையவரிலருந்ததிக்கற்பின்வழுவினரொருவருமில்லை, வெள்ளி
வெண்புரிநூல்விளங்குபொற்றடந்தோள் வேதியர்தம்மிலெஞ்ஞான்றுந்,
தெள்ளிதினுணர்ந்துமறைவழியொழுகுஞ்செய்தியிற்றிறம்பினோரில்லை()

அழன்முகம்பழுத்தவாடகப்பசும்பொனாரம்வீற்றிருந்துவெங்கதிர்கா,
லொழுகொளித்தடந்தோள்வேந்தரிற்பணைத்தபுயவலியொழிந்துளோரில்
லை, முழுதுணர்கேள்வியுடைப்பெருங்கேண்மைவணிகரில்மூதுலகனைத்
தும், விழைதகவுடையபொருணனியீட்டும்வினையம்விட்டுறைகுநரில்லை.()

கண்ணழற்சீற்றத்துளையெயிற்றகல்வாய்க்கட்செவிப்பணமுடிக்கிடந்த
மண்மகள்பயந்தபின்னவர்தம்மிற்றமநிலைவழுவினரில்லை
யெண்ணுநால்வருணத்தவருமற்றவரினிழிந்துளோர்களுந்தமதியல்பி
ன்ண்ணுநரன்றியல்லனபுரிந்துதீநெறிநடக்குநரில்லை. (௧௨)

கொடைக்கடனிறுக்குந்தடக்கைவேலுழவனளிக்குநாடெவற்றினுங்கு
றையா, வுடைப்பெருஞ்செல்வரல்லதுவறுமையுழந்துளோரொருவருமி
ல்லை, விடற்கருங்கற்பின்றம்மனையலதுபிறர்மனைவிழைகுநரில்லை, யிடர்
க்கடற்புணையாப்பிறவிவேரறுக்குமகவிலாதுறைகுநரில்லை. (௧௩)

குழைமுகந்தூங்குசெம்மணிப்பசும்பொற்குண்டலவேதியர்நாளு
மழல்முகத்தாற்றுமருமகத்தன்றிச்செந்தசையருந்துநரில்லை

விழைவொடுபயங்கோர்ப்பழிச்சிடாரில்லைவெங்கவலைடுநரில்லை
கழிபெருங்குணத்துக்குரவரைப்பிழைப்போரரும்பொருள்கவருநரில்லை
மழைமுகில்வறப்பநிலமினசப்பைங்கூழ்வாடுநரில்லையெஞ்ஞான்றுங்
கழிபெருநோயின்வருந்துநரில்லைகனியினுமினியமென்மழலைக்
குழவியம்பருவத்திறக்குநரில்லைகுற்றமிலொழுக்கமேயன்றிப்
பழிபடுகருமமென்பதுமறந்தும்பயில்குநரில்லையப்பதியின். (௧௫)

ஆறறிபுலவர்தவத்துறைபோயவந்தணர்த்தொழுவர்மற்றவரு
மூறொளியோசைநாற்றமென்சுவையினொழுகிடார்த்தொழுவர்மற்றவரு
மீறிலாஞானப்பெருங்கடற்படிந்தோர்ப்பணிகுவரிசைத்தவத்தவரு
நீறுபூத்தலர்ந்தநெடுநிலாநெற்றிநிகரெறிமுனிவரைத்தொழுவார். (௧௬)

விழுதுவிட்டொழுகும்வெண்ணிலாமுத்தம்விளிம்பெறிந்தெரிமணிகு
யின்ற, மழகதிர்ப்பசும்பொனெடுமுடிபுனைந்தவலம்படுதிகிரியொன்றுரு
ட்டி, யெழுகடல்வரைப்புமின்னணம்வழாமலெண்பதிறுயிரம்பருவங்,
கழிபெருங்காதல்நிலமகளுவப்பக்கலைகளுயினிதளித்தனனால். (௧௭)

தீவிடங்கடைவாய்மடையுடைத்தொழுகுசெம்மணிச்சூட்டராமுடியின்
மேவரக்கிடந்தகனைகடலாடைவியனிலமுழுவதுமுவப்பக்
கோவியல்வழாதுபகைபுறங்கண்டகுருதிவேன்மன்னவன்காப்பப்
பூவியல்பொதும்பர்க்கற்பகநீழல்விண்ணவர்புந்தியினோர்ந்தார். (௧௮)

பூம்பொறிச்செங்கட்சுரும்புவாய்நெகிழ்ந்தபுதுமலர்த்தாறுமேய்ந்துற
ங்குந், தேம்படுநறியதருமலர்ச்சோலைப்பனியிருவிசும்புறைதேவர்,மேம்
படுமிவன்றனிருநிலக்கிழமைவிலக்குவமெனக்கரகமலங், கூம்பநாத்தழு
ம்புபடமறைவடித்ததங்குலக்குரவனுக்குரைத்தார் (௧௯)

விரிதலைத்தெங்கினெட்டிலைபோந்தைகுடக்கனிவீழ்முப்புடைக்கா
யருவிவீழ்ந்தென்னப்புனலருதொழுகுமகன்பணைக்காசியினுறையுந்
திருவநீண்மார்பனறத்துறைசிறிதுந்திறம்பலனவனுலகளிக்கும்
பொருவருஞ்செங்கோலிழுக்குறவியற்றலென்னெனப்புந்தியினோர்ந்தான்

பண்ணவர்மவுலிவெயிற்கதிருரிஞ்சப்பழந்தழும்பிருந்சேவடிய
வண்ணலங்குரவனுரைமுற்கடவுளின்றெனிலருமகமுதல
வெண்ணருங்கருமமியற்றுமாறரியவெரிக்குழாமுழுவதுமீண்டு
நண்ணுமாறியற்றிலனவன்புரியுநல்லறனிழுக்குமென்றுரைத்தான். ()

ஆயிரஞ்சுடிகைமணிவிளக்கேந்துமழல்விழிப்பாந்தண்மேற்கிடந்த
மாயிருஞாலத்தெரியெலாமழைத்தியென்றுவண்டேறல்கொப்பளிக்கு
மீயுயர்பசும்பொற்கற்பகநீழல்வேந்தெடுத்துரைத்தலும்விரைவிற்
காயெரிக்கடவுளிருநிலத்தெரிகள்யாவையுந்தன்னுழைக்கரந்தான். (௨௨)

கடற்பெரும்புவியிலெரியெலாஞ்செந்தீக்கடவுடன் னுழைக்கரந்ததனாற்
கொடைக்கடன்பூண்டதாழிருந்தடக்கைக்கொற்றவேன்மன்னவற்குறுகி
மடைத்தொழில்வல்லோரழலிலாமையினல்வான்படர்வெய்யவன்கதிரி
லடப்படுவனகளமைத்தனமென்னவரசனுஞ்சிந்தையுற்றிருந்தான். ()

நம்முடைநகரினரழலன் றுநளிகடற்பாரழலெவையு
மம்மவோவமரர்புணர்ப்பினுற்கரந்தவாமெனவெண்ணு றுமேல்வை
சும்மைநீர்வேலியுலகினிலமர்ந்தயாவருந்தொழுதகையினராய்த்
தெம்முனைகடந்தசினவுவேற்றனைச்செழுமணிவாயிலினடைந்தார்.(உ௬)

சுடுபொறிசிதறுமெரிமுகக்கடவுளின்மையாற்றெடுகடல்வளாகத்
தடையுநற்கருமமுதலவேள்விகளுமாற்றுதலொழிந்தனவென்றுக்
கடையளந்தறியாவிடுதிறைகிடக்குங்கற்றையஞ்சுடர்மணிப்பருஉத்தாட்
கொடிநெடுவாயில்காவலர்க்குரைத்துக்கொற்றவன்றன்னுழைவிடுத்தார ()

நாக்கடைபுரட்டித்தீப்படவளைக்குநகுமணிச்சுடிகைவாளரவின்
மேக்குறக்கிடந்தவுலகமோரேழும்விரிகதிராழியொன் றுருட்டி
காக்குநின்கோயிற்கடைப்புறத்திறுத்ததுலகெனவாயிலோர்கழறத் [தான்
தீக்கடையொழுகுசிறுகண்மாலியானைச்செம்மலுங்கொணர்கெனவிசைத்

வெயிலுடன்றுளைத்துக்கிளைத்தபொற்கழற்கால்வேந்தர்கோன் பணித்தனன்வருகென்,றுயர்மணிக்கொடிதோய்வாயிலோருரைப்ப வொல்லையின்வேத்தவைபுகுந்து,செயிர றுகமலமலரடிதொழலுஞ் சிந்தையுற்றவர்முகநோக்கி, வயிரவாட்டடக்கைபுடைத்துவெண்டரளவாணகைகோட்டியீதுரைப்பான். (உ௭)

ஈங்குநீர்போந்ததடுதழலின்றியென்பதையுணர்ந்தனன்செந்தீ
நீங்கிலென்வருணன்வளியகன்றிடிலென்னீள்கதிர்மதிமறைந்திடிலெ
ஞங்கவருருவமனைத்தும்யானகியளிக்குவல்வெருவனீரென்ன
வீங்குநீர்வேலியுலகெலாம்புரக்கும்வேந்தர்கோன்விடைகொடுத்தனனல்

வெண்ணிலாக்கற்றைவிளிம்புவிட்டெறிந்துவிளங்குபூண்டியல்வருதடந்தோ, ளண்ணலாங்ககன்றவமரர்தம்முருவமனைத்துமாயருந் தவப்பயத்தாற்,கண்ணகன்ஞாலமுழுவதுந்தானேகளைகணயளித்தனனென்னி,லெண்ணருந்தவத்தினின் றுளோர் பெருமையியாவரோ யிசைப்பரென்றறைந்தான். (உ௯)

சஅ-வது-திவோதாஸனாட்டிற்படுத்தவத்தியாயமுற்றிற் று.

ஆக திருவிருத்தம்- கஉ௫௫.

---



நாற்பத்துநான்காவது.

## காசியின்சிறப்புரைத்தஅத்தியாயம்.



கொண்டல்தவழுமுகம்புலராமதிதோய்குடுமிமந்தரத்தி
லண்டர்பெருமானடைந்ததற்பினுற்றவாறுமவ்வரையின்
றண்டாவளனுமுரைத்தியெனத்தமிழ்தேர்முனிவன்சாற்றிடலும்
புண்டோய்குருதிநெட்டிலைவேற்புத்தேள்முறுவல்பூத்துரைப்பான். (க)

குன்றிச்செங்கட்கருங்கேழல்கோட்டினகழ்ந்தசிறுகுழியை
மன்றற்பொலம்பூஞ்சினைவேங்கைத்தாதுதூர்க்கும்வாலுளைய
கன்றுசினவெங்கொலைமடங்கல்களிற்றின்மருப்பின்குருத்துடைத்து
மென்றுகமஞ்சூற்பிணவினொடும்பெருவான்முழையின்விழிதுயிலும். ()

அறைவாய்குழித்தகவிழ்தலையவருவிதூங்குதடஞ்சாரற்
கறவாமுலைப்பால்கன்றருத்திக்கயவாய்மேதிகண்படுக்கும்
பிறைவார்கோட்டினிருவிழிந்துபெய்யுநறவப்பேராற்றின்
றுறைவாய்ப்படிந்துபிடியினொடுங்களிநல்யானைதுதைந்தாடும். (௩)

சேந்ததழல்கட்டெழிலுளையவரிமான்கொன்றசினக்களிற்றி
னேந்துபிறைக்கோட்டுகுமுத்தமலங்குகுலையவெரிபுரைசெங்
காந்தண்மலர்மேற்கிடந்திமைத்தல்காமர்குலமால்வரைமடந்தை
வாய்ந்தசெழுமென்மலர்க்கரத்தால்கழங்காட்டயரும்வனப்பாமால் (௪)

அங்கண்வானத்தினிதுறையுமமரர்குழுவுமரம்பையரு
மங்குறவழ்பொற்குவட்டிழிந்துமன்றற்சாரற்பளிக்கறையிற்
றங்கிவிளையாட்டயர்தோறும்பரிந்துநீத்ததண்மலர்ப்பூங்
கொங்குகமழுமந்தாரமாலைநறவங்கொழித்திடுமால். (௫)

குறுங்காற்குரம்பைக்கொடிச்சியர்பொன்னொழுகுகுவட்டின்முகட்டேறி
நறுந்தேன்பிலிற்றுங்கற்பகத்தினறவுகமழுமலர்கொய்வார்
புறந்தாழ்கூந்தலரமகளிர்பொன்னந்தருவினறியமலர்
துறந்தாங்கிழிந்துபசுந்தேறல்தூற்றுஞ்செழுந்தண்மலர்கொய்வார். (௬)

வேட்டம்படருமுடங்குளைமான்புனிற்றுக்குருளைவிழிதுயில
மோட்டுமுதுநீர்ப்பஃறலையவருவிதூங்குமுகிறவழ்பொற்
கோட்டிற்றொடுத்தவிழுலுமொளிர்குளிர்மாமதியுமினிதுணர்வான்
காட்டுகென்னக்குறமகளிர்தத்தங்கணவர்க்கைதொழுவார். (எ)

சோலைக்கழைக்கண்டிறந்துகுத்தசுடர்நித்திலமுநெடுஞ்சுடிகை
யாலக்கொடுந்தீயொழுகுதுளையெயிற்றவரவின்பணுமணியுங்

கோலச்செங்கட்கரும்போத்தின்கோட்டுமுத்தும்வரன்றிறுனா
மாலைப்பெருக்காயிரமுகத்தவருவிகொழிக்குமருங்கெல்லாம். (அ)

சினைப்பூவேங்கைதொடுத்தவிருல்சிதையப்புனிற்றுப்பிறைக்கொழுந்
தின், பனிக்கோடுழக்கவிழிந்தருவிப்பசுந்தேன்குதிப்பவெருக்கொண்டு,
கனற்கண்சுழற்றும்பகட்டாளிப்பிணவுகுருளைவாய்கவ்விச், சுனைக்கட்குவ
ளைகண்பரப்புந்துறுகன்முழையினொளித்திடுமால். (கூ)

கலைவெண்டிங்களிருநிதியங்கணைக்காற்கமலத்திருமடந்தை
மலர்மென்சினைப்பூங்கற்பகமான்வயங்குங்கடவுண்மணியமிர்த
மிலவச்செவ்வாயரமகளிர்யாவுமெறிநீர்திரைசுருட்டும்
புலவுக்கடலைமதித்தளித்ததென்றலிதன்சீர்புகலவற்றே. (க0)

வேறு.

திருந்துபைங்கொடிக்கவண்முத்தஞ்சேர்த்திமென்
கருந்தினைப்பசுங்கிளிகடியுமங்கையர்
முருந்துறழ்நகைமுழுநிலவென்றும்பல்மெல்
லரும்பினஞ்சுனைதொறுமலர்ந்துகாட்டுமால். (கக)

மடிசெவிநெட்டுடற்றறுகண்வாரணம்
படர்சினைக்கற்பகத்தொடித்தபைந்தழை
துடியடிக்கயமுனியோடுஞ்சூலிளம்
பிடியினமருந்துறப்பெட்பினல்குமால். (கஉ)

மைத்திருமேக்குவான்முழையின்வாளராப்
பைத்தலைக்கிடந்தொளிர்மணியைப்பையத்தன்
கைத்தலத்தெடுத்தலுங்கனலென்றஞ்சியே
துய்த்தலைச்செம்முகமந்திசோருமால். (கந)

களிக்கயல்மருட்டியகருங்கண்மங்கையர்
பளிக்கறைமுன்றிலினுணக்கும்பைந்தினைக்
கிளிக்கவராதுளைகிளக்குமோதையாற்
றளிர்த்திடுமுளிசினைத்தருக்கள்யாவுமே. (கச)

அகின்முருடுருட்டிவீழருவிச்சாரலின்
முகிலினந்தவழ்தலுமூரிவேழமென்
றிகலொடுந்தொடர்ந்துசென்றேந்துகோட்டுவெம்
புகர்முகக்களிற்றினம்போரினேற்குமால், (கரு)

குளகரைச்சுற்றியகுறமடந்தைய
ரிளமுலைச்சாந்திடையிழுகியேறிய

தளர்நடைக்குழவியங்தென்றல்தாழ்சினைத்
துளிமதுக்கற்பகக்காவிற்றுஞ்சுமால். (௧௬)

பூங்கழைமிடறுகாய்ந்தரற்றல்பொற்புடை
யோங்குயர்சாரலினுறையுங்கின்னரர்
நீங்கருங்காதலினீணரம்புளர்
தூங்கிசைவீணையஞ்சுருதிபோன்றதே. (௧௭)

ஒருபுடைவெண்முகிலுறையவான்றுளிக்
கருமுகிலொருபுடைகிடக்குங்காட்சியால்
மரகதக்கொடியினைவாமம்வைத்தொளிர்
புரிசடைவானவன்போலும்பொற்பிற்றே. (௧௮)

நீனிறமுகிறவழ்சாரனெற்றியின்
மானிளம்புனிற்றுமென்மறிகள்வைகிய
பானிறக்கதிர்விரிபளிக்குப்பாறைகள்
தூநிலாமதிபலதோன்றல்போலுமால். (௧௯)

முகிறவழ்சாரலின்முத்தந்தெள்ளிநீ
டகில்சுமந்ததிரிசையருவிபாய்வன
விகலுடையிராவணற்கிடைந்ததென்னெனத்
திகழொளிக்கயிலையைச்சிரித்தல்போலுமால். (௨०)

தாழ்வரைக்கிடந்தொளிதயங்குபன்மணி
சூழ்சுடர்விண்ணின்மேற்றோன்றுபொற்பினல்
வீழ்கதிரோவியம்விசும்பிற்பூத்ததென்
றியாழ்மொழியரம்பையர்வியந்திசைப்பரால். (௨௧)

இரவிகாந்தத்தழலிடையினண்பகல்
மருவியுமொளிர்மதிகாந்தவான்றிரைக்
குரைபுனல்கங்குலிற்குளித்துநிற்றலாற்
பொருவருமருந்தவம்புரிதல்போன்றதே. (௨௨)

பாய்திரையருவிகண்படுக்குஞ்சாரலிற்
சேயொளிவிரிகதிர்ச்செல்வன்சேறலால்
மீயுயர்குடச்சுனைமலர்கள்மேற்புறக்
காய்கதிர்க்கரங்களாலலர்ந்துகாட்டுமால். (௨௩)

குடவரைநெற்றியிற்குருதிவெய்யவன்
படுதலுமுதயமால்வரையிற்பாயொளிச்
சுடர்மதிவாயிடைத்தோன்றுபொற்பினாற்
புடைமணிவிசித்தமால்களிறுபோலுமால். (௨௪)

சினைமலர்க்கோட்டிடைத்தொடுத்ததேனிருல்
வினைபுரிவயிரவாட்புனிதன்மேற்செலக்
கனைதிரையருவிசூழ்விலங்கல்காவலன்
புனைதருகேடகமிருத்தல்போன்றவே. (உ௫)

இனையமால்வரைதனிலிருவிசும்புறை
கனைகதிர்ப்பூங்கழலமரர்கைதொழ
தனிமுதலுறைந்துநீர்த்தடங்கொள்காசியை
நினைதலுமுறுதுயர்நிகழ்த்தலாவதே. (உசு)

காசியைப்பிரிதலிற்கனற்றும்வெம்மையாற்
பூசியசாந்தமேற்பொரிந்ததன்றுகொல்
மாசறுமிளமதிக்கண்ணிவார்சடை
யீசன்மேல்நீறெனவின்னுஞ்சொல்வதே. (உஎ)

கரைபொருகங்கைசூழ்காசிமாநகர்ப்
பிரிவெனுமழல்சுடப்பெய்தசேயிதழ்
மருமலர்த்தாமரைவலையமெம்பிரா
னரவெனநினைதலாலரவமாயதே. (உஅ)

நீற்றெளிமேனியன்காசிநீங்கிய
மாற்றருந்துயர்க்கனல்மாற்றற்கன்றுகொல்
கீற்றிளந்திங்களைக்கிளருந்தெண்டிரை
யாற்றினைச்சடையிலின்றளவும்வைத்ததே. (உகூ)

எரியுருவாகியவெந்தைமேனியு
முருகிநெஞ்சழிவுறவுடன்றுசுட்டதால்
விரிபுனற்காசியைவிடுப்பின்யாவரோ
பிரிவெனுந்தழலிடைப்பிழைக்கவல்லரோ, (௩0)

ஊழிவெங்கனலினையொளித்திடுந்திரை
யாழ்கடல்விடத்தினைத்தரித்தவண்ணலும்
வீழ்புனற்காசியைவிடுத்தவாற்றினாற்
றாழ்துயர்க்கனலையென்றரித்திடாததே. (௩௧)

மலர்தலையுலகுளோர்மருட்சிநீக்கிய
தலைவனுங்காசியைத்தணந்தவாற்றினால்
நிலைபெறுநெஞ்சகமருண்டுநின்றன
னலர்பசுந்தெரியலையரவமென்னவே (௩௨)

மறைபயில்தக்கனன்மகளைத்தீர்துயர்
பெறலரும்வரைமகட்பெற்றுநீங்கினேன்

அறைபுனற்காசியையகன்றவெந்துய
ருறையுமந்நகரலதொழிக்குமோவெனும். (௰௩)
இன்னலுற்றயர்வுறுங்காசிகாசியென்
றுன்னுமக்காசியினுலவுதென்றல்வந்
தென்னுடைமேனியிலிழுகியேகுமேல்
மன்னுயிர்தழைத்திடுமென்றுமாழ்குமால். (௰௪)
விருப்பொடும்வெறுப்பிலாவிமலர்சிந்தையுற்
றிருப்பதிங்கென்னேயென்றிமயப்பூங்கொடி
திருப்பவளக்கனிமலரச்சேண்டொடு
பொருப்புவிலந்தணன்புகறல்மேயினன். (௰௫)
காசியைப்பிரிந்தவெந்துயரங்காழ்கொள
மாசறுமதிநுதல்வருந்தினேனெனு
வீசனுங்குரைத்தலுங்காசிகாசியென்
றாசலாடினள்வரைமகளுமுள்ளமே. (௰௬)
கவிழ்குலைநெட்டிலைக்கதலிக்காட்டிடைத்
தவழ்குடவயிற்றசூற்சங்கமீன்றமுத்
தவிரொளிபரப்பிடுமந்தண்காசியி
னுவகையினுறைவதற்குளற்றெறன்றேறுதினள். (௰௭)
தாரணிதொழுந்திவோதானன்தண்கடற்
பார்முழுதளிக்கெனப்பணித்தனன்றவன்
சீர்கெழுமமரர்பாற்சேரொணுதென
வோர்வரங்கேட்டனனுவந்தூல்கினேம். (௰௮)
அன்றுதொட்டின்றளவவனியாளவயு
மன்றநல்லறநெறிவழாமலோம்பினன்
பொன்றுறுதவறவன்புரியினல்லதை
யொன்றுமேயரசியலொழிக்கும்வண்ணமே. (௰௯)
என்றுயர்மால்வரையினிதினீன்றருள்
பொன்றவழிளமுலைக்கோதிப்பூங்குழ
லொன்றியயோகினிச்சக்கரத்துடன்
கொன்றையம்புரிசடைக்குழகன்கூறுவான். (௨0)
அறந்திறம்பாதுலகளிக்குமன்னவன்
சிறந்தநன்மனுநெறிதிறம்பிக்காசியைத்
துறந்திடவியற்றுமினென்னத்தொக்கவர்
கறங்குநீர்க்கங்கைசூழ்காசியெய்தினர். (௨௧)

**௪௪-வது காசியின்சிறப்புரைத்தவத்தியாயம்-முற்றிற்று.**

**ஆ திருவிருத்தம்-௧௨௩௬.**

---



நாற்பத்தைந்தாவது.

## யோகினிகள்காசியையடைந்தஅத்தியாயம்.

கன்னியெயில்சூழும்வளர்காசியைவியப்புற்
றுன்னலருமாயைபுரியோகினிகள்யாரு
முன்னையுருமாறியுயிர்மோகம்விளைவிக்கும்
மன்னுபலநல்லுருவுகொண்டினிதுவந்தார். (க)

விண்ணவர்தமாருயிரும்வேரொடுபிடுங்குங்
கண்வலையெறிந்திளைஞர்மேயகடைதோறும்
பண்ணொடுகொழுங்கனிபழுத்தனையவின்சொல்
வண்ணமகளாகியொருவாணுதனடந்தாள். (உ)

காலனையமர்க்குவருகென்றுகடன்ஞாலத்
தோலைவிழிமைக்கணுயிரோவியநிகர்ப்பாள்
கூலமறுகிற்குமரர்கொள்கெனநறுந்தண்
மாலைபகர்மாதரினொருத்திதனிவந்தாள். (௩)

முறத்திடுகநெற்குறிமொழிந்திடுவனின்னே
பெறற்கருமகப்பெறுவைபெட்பினுடன்முற்றுஞ்
சிறப்புடைமயிற்றொகைசிலிர்த்ததெனவோதிக்
குறக்கொடியெனத்தனியொருத்திகுறுகுற்றாள். (௪)

வேதியர்தமுன்னணுகிமெல்லெனநடந்தே
யேதமறுகற்புடையரோனுமவர்நும்மேற்
காதலுறமென்மொழிகணாந்திடுவனென்போற்
றாதியரிலென்றொருசுடர்த்தொடிபுகுந்தாள். (௫)

அந்தமறுவிஞ்சையறவோரொடுபயின்றேன்
வந்தியர்மகப்பெறுமருந்துளதுமக்குத்
தந்திடுவலென்றுரைகள்சாற்றிமனைதோறும்
பைந்தொடிபொருத்திவிழைவோடுபடர்குற்றாள். (௬)

தையலொருபாகனுறையுங்கயிலைதன்னை
ஐயமறவெள்ளிவரையாக்கினன்முனென்று
வையகமனைத்தையுமருட்டிரதவாதஞ்
செய்யுமவளென்னவொருசேயிழைபுகுந்தாள். (எ)

அங்கிபுனல்மாருதமடக்குவன்விசும்பிற்
றங்கிடுவன்மீள்வனொரிமைப்பொழுதுதன்னிற்

கங்குல்பகல்செய்துகதிர்மாறிவருவிப்பன்
பைங்கொடியன்னீரெனவோர்பாசிழைநடந்தாள். (அ)

விண்ணவர்மணத்தினைவிழைந்திடுதிரோனு
மண்ணுலகின்வந்தவர்மணந்திடவருத்த
மெண்ணரியவிஞ்சைகளியற்றிடுவனென்னக்
கண்மலர்குளிர்ப்பவொருகாரிகைபுகுந்தாள். (௯)

பாறுதொடர்வேலரசர்வந்துபடைவிட்டான்
மாறழியும்வண்ணகவில்விஞ்சைடலவல்லேன்
றேறுனரல்லாலிவைதெளிந்திலர்தமக்குக்
கூறுகிலனென்றொருகுலக்கொடிபுகுந்தாள். (௧௦)

கட்புலனுறாதுடல்கரப்பனெறிமைப்பின்
விட்புலமடந்தையனைமண்ணிடைவிடுப்ப
னுட்பவனுவாவன்மலையாவனெனநொய்திற்
பெட்புறைபயிற்றியொருபெண்கொடிநடந்தாள். (௧௧)

எஞ்சலினிலத்திடைபுதைத்தபொருள்யாவுங்
கஞ்சமலரங்கையினமைத்தகனிபோல
வஞ்சனம்வனைந்துதெரிவிப்பனஃதொன்றோ
விஞ்சையெனவோதியொருமெல்லியலணைந்தாள். (௧௨)

வள்ளைபொருகாதிடைமலர்ந்தகுவளைக்க
ணள்ளியுமதாருயிரையுண்ணுமகல்வீசென்
றுள்ளிழையுநூபுரமுமொல்லெனவொலிப்பத்
தெள்ளமிர்தமென்னவொருசேயிழைநடந்தாள். (௧௩)

கண்டவர்வியப்பவணிநீற்றொளிகனிந்த
புண்டரநுதற்கிடைபுனைந்தினியகற்றோய்
நுண்டுகிலசைத்துமிகநோற்றுடலம்வாட்டு
மொண்டொடிகொலாமெனவொருத்திபுகுகின்றாள். (௧௪)

இறந்தனநிகழ்ந்தனவெதிர்ந்திடுவதெல்லா
மறிந்திடுவன்யானெனவொருத்தியகன்மாடஞ்
செறிந்திடுமடந்தையர்குழற்றெரியநீந்தேன்
குறுந்துளிபிலிற்றுமுயர்கோமறுகடைந்தாள். (௧௫)

மாதர்களில்மைந்தர்களில்வல்லவர்களுண்டேற்
சூதுபொரவம்மினெனமெல்லுரைகள்சொல்லிக்
கோதையொடுவண்டினமலம்புகுழருழ
வீதியிடைமின்னெனவொர்மெல்லியல்புகுந்தாள். (௧௬)

மல்லன்மறுகிற்குலமறைக்கிழவர்பாலிற்
கல்லுமுருகும்படிகனிந்தமுதுகுக்கு
நல்லிசையமென்புரிநரம்புளரவல்ல
மெல்லியலெனவொருவிளங்கிழைபுகுந்தாள். (௧௭)

நீடுயர்மதிற்குடுமிநீண்மறுகுதோறு
மாடகமுறுக்கிமணிவீணைகையினேந்தி
யோடரியமைக்குவளைபோலுமலருண்கட்
பாடன்மகளென்னவொருபைந்தொடிபுகுந்தாள். (௧௮)

வேறு.

உருவமின்னனகொண்டுடன்
பருவமொன்றுபடுக்கவு
மருவுகாசியின்வைகினோர்
தருமநீதிதணந்திலார். (௧௯)

வடுக்கண்மங்கையொர்பங்கினன்
விடுத்தவேவல்வியப்பினால்
முடித்திலேமவன்முன்னர்யா
மடுப்பதென்னெனவஞ்சினார். (௨௰)

அங்கண்யோகினியன்னலார்
மங்கைபாகனைவாழ்த்துரு
கங்கைசூழ்தருகாசியிற்
றங்கிமிக்கதவஞ்செய்தார். (௨௧)

இனையரிங்ஙனமெய்தலு
மனையர்நாமமருந்தவன்
வினவலோடும்விளக்கவெஞ்
சினவுவேலிறைசெப்பினான். (௨௨)

இன்னர்நாமமியம்பினோ
ரன்னபூசனையாற்றினோர்
நன்மகாரொடுநாடொறு
மன்னிவாழ்வுறவைகுவார். (௨௩)

அரசரித்தவமாற்றிடிற்
செருவில்வெற்றிதிறம்பிலா
ருருவமைந்தரோடொன்றியே
பொருவில்வாழ்வுபொருந்துவார். (௨௪)

௪௯-வது-யோகினிகள்காசியடைந்தவத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௯௨௰.

நாற்பத்தாறுவது.

## லோலாதித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

மன்னுதீம்புனல்வளங்கெழுகாசியின்வேந்தன்
றன்றெழுக்கினைத்தவிர்க்கெனவிடுத்தயோகினிக
ளின்னும்வந்திலரொன்கொலென்றிறையுளத்தெண்ணி
மின்னுசெங்கதிர்க்கடவுளைநோக்கினன்விளம்பும். (க)

காசிமாநகர்க்கெய்தியக்கடிநகர்புரக்கு
மாசில்மன்னவனறநெறிவழுக்குறப்புரிகென்
றீசனேவலுமடிமலர்க்கைதொழுதேத்தித்
தேசுலாய்கதிர்ப்பரிதியங்கடவுளுஞ்சென்றான். (உ)

அறனிழுக்குறுமன்னவன்காசியிலடைந்து
பெறலரும்பொருள்யாதெனப்பெட்பொடுமோர்ந்து
வறியரிற்றுயருழந்துயர்மணிக்கடைதோறும்
குறையிரக்குமாங்கதுபெறினுநெடுங்குழையும். (ங)

ஈட்டுவண்பொருள்யாவையும்யாவருமுவந்து
கூட்டுணும்படியளிக்குவமென்பதுகுறித்து
வேட்டகொள்கெனவிடுக்குமவ்விழைபொருளவருங்
கேட்டுவாங்குநரின்மையாற்சென்னிகீழ்ப்படுக்கும். (ச)

தூம்புடைப்பிறையெயிற்றவெம்பணுமுடிச்சுடிகைப்
பாம்பெடுத்ததன்விஞ்சைவல்லேனெனப்பகருந்
தேம்புவாரினின்றலமருஞ்செஞ்சடைதாங்கி
மேம்படுந்தவப்பள்ளிசேர்முனிவரின்மேவும். (ரு)

அருள்சுரந்துயர்தருமநூன்முறைபுகன்றதனுல்
வருபயன்றனைத்தெருளுறக்காட்டுநான்மறையின்
பொருடெரிந்தமெய்ஞ்ஞானியிற்புகுதரும்பொருவி
லிரதவாதியென்றியாரையும்வெருட்டுவானெய்தும். (சு)

மறைவடித்துநாத்தழும்புறுமுனிவரின்மருவும்
பிறையெயிற்றிளநிலவுகொப்பளித்திடும்பேழ்வாய்ப்
பொறியனற்பெரும்பாந்தள்மேற்கிடந்தபார்புரக்கு
மறைகழற்கொழுங்குருதிவேலரசரினுறையும் (எ)

அரும்பெறற்குலவணிகரினுவந்தினிதமரும்
விரும்புவேட்கையின்மண்மகள்புதல்வரின்மேவுந்
திருந்துநான்மறைபயின்மறைச்சிறுவரிற்சேரும்
பொருந்துமில்லறந்திறம்பிலா மாந்தர்போன்றிருக்கும். (அ)

பைங்கறிக்கொடிபடர்நெடுஞ்சாரல்சூழ்கானிற்
றங்கிநற்றவம்புரிகுநர்போன்மௌனச்சாரும்
பொங்கிருட்பிழம்பெறிசுடர்விரிபகற்போதுங்
கங்குலுந்திரிந்தாற்றுநற்றவருருக்காட்டும். (௯)

வேண்டுநல்லுருவின்னனவெய்யவனெடுத்துச்
சேண்டொடுங்கொடிப்புரிசைசூழ்காசியிற்றிரிந்து
மாண்டுமூன்றளவறநெறிதிறம்புதல்சிறிதுங்
காண்டல்செய்கிலனுதலிற்கருதினனிருந்தான். (௧௦)

மூவிலைச்சுடர்முரட்படையேந்தியமுதல்வ
னேவல்மற்றதுமுடித்திலன்காசிவிட்டினியான்
போவதெங்ஙனம்புரிசடைவானவன்முனியின்
வேவதல்லதையாவரோகாக்குநர்விளம்பின். (௧௧)

ஒருவனேவலிற்றிரிகுநர்க்கரும்புகழுறுதாற்
றிருகுசீற்றவெம்புல்யதளாடையஞ்செல்வ
னருள்பெறுக்கொடும்பாவமிக்காசியினமரின்
வெருவியேகுமென்றிருந்தனன்கனைகதிர்வேந்தன். (௧௨)

சேட்டிளங்கதிரிருள்படச்செங்கதிர்பரப்பு
மோட்டுநன்மணிமுன்னுறல்விடுத்தறச்சிதைந்த
வோட்டையங்கையிற்கோடலேபோலுமொண்முத்தி
வேட்டுளோருயர்காசிவிட்டயலிடம்விரும்பல். (௧௩)

நல்லுலோலனுத்தரனியற்சாம்பனற்றுருப
னெல்லொளிக்கதிர்க்கடோற்கனேடருணனோர்விருத்தன்
புல்லுகேசவன்விமலன்வானதிநமனென்னச்
சொல்லுநாமமோர்பன்னிரண்டாயினன்சுடரோன். (௧௪)

மதிவடிம்பிடறுங்கொடிமாடநீண்மறுகிற்
கதிர்மணிக்குலஞ்சேட்டிளம்பரிதியிற்காட்டு
மதிர்தடம்புனற்காசியினடைவனென்றூசை
யிதயமெய்தலால்விளங்குலோலாதவனென்பார். (௧௫)

௩௬-வது லோலாதித்தன்கதையுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௨௨௫.



நாற்பத்தேழாவது.

## உத்தராநித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

மிடறுவீக்குடைபங்காய்க்குலைவிரிதலைக்கமுகின்
மடலுடைத்திடவாளைபாய்காசியின்வடபால்
கடவுணன்மணிதெளித்தன வாவியங்கரையி
னடையுமுத்தராநித்தனன்கதையினையறைவாம் (க)

உலகெலாமகிழ்விரதனென்றுளனொருமறையோன்
கலவமாமயினிகர்சுபவிரதையைக்கலந்து
நிலவுமூலத்தினுள்முதற்காறனினிகரி
லிலகுபேரெழிற்சுலக்கணைதனையினிதீன்றான். (உ)

குங்குமச்செழுங்கனிமெழுக்கெறிந்தமென்கோங்கிற்
றங்குபூண்முலைபிறைபெனவளருநாடன்னில்
வெங்கொடும்பிணிநலிதலிற்றந்தைவிண்புகுத
வங்கவன்றிருமனைவியுமழலின்வீழ்ந்தவிந்தாள். (ஙு)

மழலைமென்மொழிமைந்தரின்மையின்மறிந்தோர்க்கு
விழுமநற்கடன்யாவையும்விதிமுறையாற்றித்
தழுவுதற்கடங்காதுயர்தடமுலைக்கோதை
யொழுகொளிக்கதிருத்தராதபனுழையெய்தி. (ச)

அலங்குதெண்டிரையாமையின்கூன்புறத்தமர்ந்த
நிலங்களேழினுநிகரில்சீரருந்தவமாற்றுங்
கலன்சுமந்தபூங்கற்பகக்கொம்பனுடன்னை
வலஞ்செயுந்தினம்பார்க்குமோர்தகரிளமறியே. (ரு)

கற்றையங்குளிர்வெண்ணிலாக்கதிர்பரந்தெறிக்கு
மொற்றையங்குழையந்தணனுமையொடும்போந்து
பொற்றசும்புறழ்முலையினுள்விழைவொடும்புரியு
நற்றவத்தினைநோக்கினனன்றெனவியந்தான். (சு)

அலங்குபேரொளியிளவெயில்வயிறுவாய்த்தன்ன
கலங்கிடந்தொளிர்கதிரிளவனமுலைக்கவுரி
துலங்குபேரெழிற்கன்னியைத்தோழியாயெனக்கின்
றிலங்குசாமரையிரட்டுவான்றருகெனவிசைத்தாள். (எ)

புரியுநற்றவமொழிதிநீபுகன்றநல்வரங்கள்
வினைவினல்குவனெனவிடைப்பாகனுண்டுரைப்பத்
தகுதிநல்வரமென்னிலித்தகரிளமறிக்கு
மரியயற்கரியாய்வரந்தருகெனவறைந்தாள். (அ)

மாசில்பூண்முலைக்கவுரிதன்றேழியாய்வருகென்
றூசில்கற்றவப்பூங்கொடிக்கவ்வரமளித்துக்
காசிமன்னவன்புதல்வியாய்க்கயிலையில்வருகென்
றீசனம்மறிக்கெய்துறுநல்வரமீந்தான். (௯)

இனையநல்வரமளித்துமாலயன்றெழுதேத்துங்
கனைபொலங்கழற்கடவுளுங்கயிலையினகன்றான்
வினையொழிக்குமிக்காதையைவிழைவொடுங்கேட்டோர்
துனையில்யாவரும்பெறலருந்துறக்கவீட்டடைவார். (௧௦)

௪எ-வது-உத்தராதித்தன்கதையுரைத்தவத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௬௪௫.

---

நாற்பத்தெட்டாவது.

## சாம்பாதித்தன்கதையுரைத்த அத்தியாயம்.

மண்மகடன்பொறையாற்றித்திரைக்கடலினறிதுயில்கூர்நெடியமாயன்
கண்ணனெனமுழுதுலகுந்தேவகிதன்வயிற்றுதித்துக்காக்குநாளி
லண்ணலந்தாமரைத்தவிசினரசிருக்குமறைக்கிழவனருளினீன்ற
பண்ணமையாழிசைபயிலுமுனிவனுயர்துவாரகையிற்பரிவிற்போந்தான்

இருள்பருகிவெயில்கான்ற கடவுண்மணிகிடந்திமைக்கு மிலங்குதிண்
டோட், டிருமறுமார்பினன்புதல்வர்யாவருமம்முனிவனடி சென்னிசேர்
ப்ப,வுருவின்மிகவேமாந்துசாம்பன்முனிவனைப்பணியாதுறைதலோடும்,
புரிநரம்பினிசைபயிலுமுனிவன்மணிவண்ணனுழைப்போயினனே. (௨)

போந்தமுனிவரனுவப்பவருக்கியபாத்தியமுதலபூசைநல்கி
யேந்தெழிலாசனமளிப்பவாங்கதனின்மலரோனிலினிதுவைகிக்
காந்துமணிச்சூட்டரவின்கண்பிதுங்கநடம்பயிலுங்கண்ணனோடு
மாய்ந்தசெழுமறைக்கிழவன்வேறிருந்தாங்கொருமாற்றமறைதலுற்றான்.

தந்தையாயினும்விழைவிற்றன்னுடனேயொருவயிற்றிற்சார்ந்தாரோனு
மைந்தராயினுமிகவும்வனப்புடையரெனிலவர்மேல்மடநல்லார்தஞ்
சிந்தைநடந்திடுமதனாற்சாம்பன்மலர்க்கணைவேளிற்செவ்விவாய்ந்தோன்.
பைந்தொடியாரினிதமருமுவளகத்திற்றணிவருதல்பான்மையன்றே. (௪)

என்றுமொழிந்தனனேகிச்சின்னாளின்மீட்டுமவணெய்திமாயக்
கன்றுகொடுகனியெறிந்தகாயாம்பூமலர்வண்ணன்கமலவாழ்க்கைப்
பொன்றவழுமுலைமாதர்பலரோடுந்தனித்துறையும்போதுநோக்கிச்
சென்றெம்வரவுரைத்தியெனச்சாம்பனொடும்யாழ்முனிவன்செப்பினானே

சேறலருமமையத்திற்சென்றிடினம்மிறைமுனியுஞ்சென்றிலேமேற்
கூறலரும்வெகுளியொடுங்குலமனைத்துமவைதுமுனிகொல்லுமென்னப்
பாறுதொடர்நெட்டிலைவேற்சாம்பன்மணிவண்ணனுறைபள்ளிமுன்ன
ராறுவில்லினளவையெனச்சேறலுமம்முனிவனுமாண்டடைந்தானன்றே

பாண்கிடந்துதேன்பிலிற்றுமகதியாழ்முனிவரவுபார்த்தலோடு
நாண்சுமக்கலாகாதவளைந்ததெனமுகங்கோட்டிநகைவெண்டிங்கட்
பூண்கிடந்தமுலைமீதிற்போர்வையசைத்தலரமளிப்புறத்தினீங்கிச்
சேண்படருநுழைமின்னின்மடநல்லார்பொற்றாணஞ்சேர்ந்துநின்றார்.()

அண்டமுகட்டரசிருக்குமயனொடுபோர்திருவுந்தியலர்ந்தமாயன்
பண்டருந்தீந்தொடைமகதியாழ்முனிவவருகவெனப்பரிந்துவெண்மை
யுண்டகனிவாய்மலரவினிதளித்தவாசனத்திலுறைதலோடும்
வண்டுபடுகடாயானைச்சாம்பனுந்தன்றாதையடிவழுத்திப்போனான். (அ)

எழிலுடையோர்முகநோக்கினழன்முகத்தினிழுதென்ன மாதருள்ளங், குழையுமெனயானுரைத்தல் குறிக்கொண்டாயிலைபோலுங் குவவுத்திண்டோள், மழவிடையினீங்கடைந்தசாம்பனைக்காண்டலுமினையமடவார்நெஞ்சின், விழைவுகனிந்தொழுகியபோல்வேர்வொழுகல்காண்டியென விளம்பிப்போனான். (௯)

மட்டலவுபசுந்துளவோன்றனித்துறையுமமைதிதனில் வந்தவாற்றாற், குட்டநோய்க்கடலகத்துக்குளித்தியெனச்சாம்பனுடன் கூறவன்னோ,னிட்டதழற்கொடுஞ்சாபமகன்றிடுமாறினிதருள்வுற்றிடுதியென்ன,விட்டொளிர்பொற்கனைகழற்றாள்பணிதலுந்தன்னுளத்திதனைவிரைவினோர்ந்தான். (

இழைத்திடுதீங்கனைத்துமிசையாழ் முனிவன்புணர்ப்பென்னவுளத்தினெண்ணிக், கழைக்கரும்புகண்ணுடைக்குந்தேறல்வழிந் தொழுகுவயற்காசிநண்ணித்,தொழத்தகுசெங்கதிரோனைவழிபடிலிந்நோயனைத்துந்தொலையுமென்று, தழைத்தகருணையினுரைப்பவாங்கவனுமுத்திநகர்சென்றுசார்ந்தான். (கக)

மருவலாருயிர்மாந்திப்பச்சிரத்தங்கொப்பளிக்கும்வைவேற்காளை
யிருள்விழுங்கிவெயிலுமிழுமிரவிபதமலர்க்கமலமிறைஞ்சலோடும்
பெருகியநோயகன்றதவன்வழிபடலாலன்றுமுதல்பிறங்கும்வெய்யோற்
கருள்புரியுங்கனைகதிர்ச்சாம்பாதித்தனெனும்பெயர்வந்தடைந்ததன்றே.()

பொருவருமிக்கதையனைத்தும் விழைவினொடுகேட்போரும் புகன்றுளோருந், திருமருவுபெருஞ்செல்வத்தளகேசனெனவுலகிற் சிறந்துவாழ்வர், விரிதருகூரிருட்பருகுபயிற்சியாலன்பருளமேவுகின்ற, விருள்பருகுதுருவவாதித்தனியற்சரிதைதனையியம்பல்செய்வாம் (கரு)

சஅ-வது-சாம்பாதித்தன்கதையுரைத்தஅத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசுருஅ.

---

நாற்பத்தொன்பதாவது

## துருபாதித்தன்கதையுரைத்தஅத்தியாயம்.



ஈறுக்குழவிப்பிறையலங்கலெம்மானருளாற்குந்திவயிற்
றூனுச்செல்வந்தழைத்தோங்கவைவர்பிறந்தாராங்கவர்க்குத்
தானேர்மனையாய்ப்பாஞ்சாலன்புதல்வியாகித்தழன்மகத்தின்
மீனேர்தடங்கட்டுரோபதையுமின்னுக்கொடிபோல்வந்துதித்தாள் (க)

கமலாசனத்திலரசிருக்குங்கடவுளோடுமுலகீன்ற
விமையாப்பதுவைக்கரும்பாகனுலகநலியுமிகலரசர்
தமதாருயிர்வெங்களேகடியத்தருமன்முதலோர்க்குறுதுணையா
வமையார்தடந்தோட்டேவகிதன்வயிற்றிலினிதினவதரித்தான். (உ)

சுடுபொன்பழுக்குஞ்சுளைப்பலவின்கனிவாய்குதட்டித்துய்த்தலையக்
கடுவன்முதுகூலிளமந்திக்கருத்துங்கழனிசூழ்கிடந்த
வொடிவில்வளங்கூர்பாஞ்சாலத்திறைவனீன்றவொண்ணுதலைக்
கொடுவெஞ்சினத்தசுழல்பன்றியைவர்விழைவிற்கொண்டனரால். (ந)

நிலவுபொழிதண்மதிக்கவிகைநிழற்றியரசர்திறையளப்ப
வுலகம்முழுதும்புகழ்தருமனொருகோலோச்சிவருநாளி
லலகில்புணர்ப்பாற்சுயோதனன்சூதாடியவனிகவர்ந்திடலு
மிலகுமவுலிதுறந்துசடைதாங்கிக்கானத்தெய்தினரால். (ச)

உடுப்புமுகத்தகூன்கொழுவினுழுதசாலினிடைத்தவழ்ந்து
குடக்கூன்சங்கமுத்துயிர்க்கும்வளங்கூர்காசிக்கோநகரில்
வடிக்கட்குவளைகுழைதடவுமயிலஞ்சாயற்கரும்பெறிந்த
தொடித்தோட்கனிவாய்ப்பாஞ்சாலியைவரோடுந்துன்னினளால். (ரு)

வடிவேல்நெடுங்கட்பாஞ்சாலிவயங்குகதிரோன்றனைநோக்கி
யொடியாத்தவமாண்டியற்றுதலுமுவந்தாங்கவள்துய்த்திடுமளவுங்
கடல்சூழ்கிடந்தவுலகனைத்துங்கனற்றும்பசியால்வருந்திடினு
மடிசிலுலவாப்பொற்குழிசிமகிழ்வினோடுமளித்தனனால். (சு)

அதனுற்றருபவாதித்தனெனும்பேர்கதிரோற்காகியதிக்
கதையாற்றினமுநவில்வாரவர்கனற்றும்பசியினுடல்வருந்தார்
மதிநூற்கடலின்றுறைபடிந்தோய்மயூகாதித்தன்கதையதனைப்
புதிதாயமிழ்திங்காவதுபோற்கேட்டியென்னப்புகன்றிடுவான். (எ)

சசு-வது-தருபாதித்தன்கதையுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௧௩௬௫.

---

ஐம்பதாவது.

## மயூகாதித்தன்கதையுரைத்தஅத்தியாயம்.

---

இருள்சீத்தொளிரேழ்பரிவெங்கதிரோன்
பரிவாலுயர்பஞ்சநதக்கரைவா
யருளாலொரிலிங்கமமைத்திதயத்
தெருளாலுயர்பூசனைசெய்தனனால். (௧)

ஆறேறியசெஞ்சடையந்தணனை
நாறுயிரம்யாண்டொர்நொடிப்பொழுதாய்
மாறுதுயர்வான்றவமாற்றுதலும்
வீறுர்கதிரொங்கும்விரிந்தனவே (௨)

அரிதாயதவம்புரியாதவன்மேல்
விரிவெங்கதிரண்டம்விழுங்குதலாற்
றருநீழலில்வானவர்தானவர்வான்
றிரியாதுடல்வெந்துதிகைத்தனரால். (௩)

மதிதாழ்தருசெஞ்சடைவானவன்வெங்
கதிரோன்முனடைந்துறுகாதலினு
லெதுநீதருகென்னவிசைப்பினுமுற்
றதுநல்குவனென்னவறைந்திடலும் (௪)

விடயங்களில்நெஞ்சம்விடாமையின்யான்
கொடிகின்றதறிந்திலனேன்மையனென்
றடைகின்றபரம்பொருளாதபனைத்
தடவந்தனன்மேனிதளிர்ப்புறவே. (௫)

செய்யுந்தவம்விட்டிருள்சீத்தொளிரு
மொய்வெங்கதிர்வானவன்முன்னணுகி
மெய்யங்கையினீவவிழித்தருளால்
மையுண்டொளிர்கண்டனைவாழ்த்தினனால். (௬)

விண்ணோருமகிழ்ந்துவியப்பவெனைப்
பண்ணார்மொழியோடுபழிச்சலினென்
கண்ணாகவிருத்தியெனக்கழறு
வெண்ணார்புரமட்டவனேகினனால். (எ)

வேறு.

இலகுபேரொளிகிளைத்தலாலெரிபுனலுடுத்த
உலகின்மேல்மயூகாதபனெனும்பெயருற்ற
தலகில்கேள்வியோய்நற்கடோற்காதபன்கதையை
நிலவுமாறுரைக்குவனதுகேளெனநிகழ்த்தும். (அ)

ருo-வது-மயூகாதித்தன்கதையுரைத்த அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஙஎங.

---

ஐம்பத்தோராவது.

## கடோற்காதித்தன்கதையும்·

## கருடேசன்கதையுமுரைத்தஅத்தியாயம்.

அருமகம்புரிந்தாற்றல்சால்தக்கனுக்கருளால்
பொருவில்பேரெழில்வினதைகத்துருவெனப்புகலு
மிருவர்நற்குலப்புதல்வியருளரியைந்தவரை
விரியுநான்மறைப்பொருடெரிகாசிபன்வேட்டான் (க)

உலைமுகம்பழுத்துடைந்தறவொழுகியபசும்பொற்
கலனணிந்தபூங்கொம்பனாரிருவருங்காவி
னிலகுநாண்மலர்கொய்தலுங்கத்துருவென்பாள்
விலகிவில்லுமிழ்பூண்முலைவினதையோடுரைப்பாள். (உ)

தேவர்கோனிவர்புரவியின்நிறமெனத்தெரிப்பி
னேவனின்னுழைச்செய்குவன்யானஃதியம்பிற்
காவியுங்குழையுங்கடந்தெறியும்வாட்டடங்கட்
பூவையென்னுழையேவல்நீசெய்கெனப்புகன்றாள். (ஙு)

அண்ணல்வானவர்க்கிறைவனூரடுதிறற்புரவி
வெண்ணிறத்ததென்றணிநுதல்வினதைதேர்ந்துரைப்பப்
பண்ணுலாங்கனிமென்மொழிக்கதிர்முலைப்பாவா
யெண்ணின்மற்றதுகரிதெனக்கத்துருவிசைத்தாள் (ச)

* ஈதுகாண்டுமென்றற்றைநாளில்வயினேகி
மாதர்வானுதற்கத்துருவானவர்க்கிறைவன்

## கடோற்காதித்தன் கதையும்-கருடேசன் கதையு-ாளள முரைத்த அத்தியாயம்.

காதல்கூர்தருபுரவியைக்கருமைசெய்திவணீர்
போதுகென்றுதானுயிர்த்தவாளரவொடும்புகன்றாள். (ரு)

மரகதப்பருமணிச்சுடருடுத்தொளிர்வளைத்தோட்
டெரிவைசாற்றியவெம்மொழிசெவிப்படலோடும்
வெருவுகின்றதெம்முள்ளநீவிளம்பியதெம்மாற்
புரிவதன்றெனப்புகன்றனகறையெயிற்புயங்கம் ணை (சு)

ஆயகாலையிற்கத்துருவழலெழநோக்கிப்
பாயசெம்மணிச்சூட்டுவெம்பஃறலைத்துத்திக்
காய்சினத்தவாளரவெலாங்கலுழனுக்கிரையாய்ப்
போய்மறிந்திடுகென்னவெந்தீமொழிபுகன்றாள். (எ)

வைதபின்சிலவாளெயிற்றரவுபாதலத்தி
னெய்தலுற்றனசிலகறுவொடும்விரைந்தேகிக்
கைதவத்தினாலொழுகுதீவிடத்தினாற்கருமை
செய்தவிண்ணவர்தலைவனூர்புரவியைச்சினவி. (அ)

மன்றல்வார்குழலிருவரும்வைகறைகழிந்த
பின்றைவானிடைச்சேறலுங்கத்துருபிறங்கித்
துன்றுவெங்கதிர்க்குளம்வெரீஇத்துனிவொடுங்கடோற்க
மென்றதாற்கடோற்காதபனென்னவீற்றிருந்தான். (கூ)

ஆண்டுநின்றுபோமளவையினமரர்கோல்செருவிற்
றாண்டுவெம்பரியெதிர்தலுநீணிறந்தோன்றக்
காண்டலோடுநீவென்றனைகத்துருநினக்கு
வேண்டுமேவல்செய்குவலெனவினதைசெப்பினளால். (க0)

நெய்கனிந்திருள்விழுங்குசெங்குருதிவேனெடுங்கட்
டையலின்னுயிர்ச்சிலதியாயுறையுநாடன்னி
லையநுண்ணிடைத்தேமொழிவினதைபாலடைந்து
வெய்யவண்ணலம்புள்ளரசினையனவிளம்பும். (கக)

வயிறலைத்தெறிவிரிசிறைச்சூட்டுவாரணங்கூய்த்
துயிலெழுப்பியகாலையிற்பெயர்திவெஞ்சுடர்கால்
வெயிலவன்றிணாக்குடகடற்குளித்திடின்மீள்தி
யயர்தியேற்பயந்துறுதுயரொன்னெனவறைவாள். (கஉ)

மாதர்யாழிசைமருட்டுமென்மழலையந்தீஞ்சொற்
பேதைகத்துருவென்றனளென்னுளைபிழைத்த
தாதலாலவட்கடிமைபூண்டழுங்கினனென்னுக்
காதல்கூர்ந்தினிதுயிர்த்தவெங்கலுழனுக்குரைத்தாள். (கங)

பூவையன்னவளினிதருள்புதல்வர்பாலடைந்து
தேவரும்பெறற்கரும்பொருளாயினுந்தெரிந்தே
யேவல்யான்செயாதொழித்திடிற்றருகுவலென்ன
வாவியன்னவென்னன்னைபோயுரைத்தியென்றறைந்தான். (கச)

கலுழனல்லுரைகேட்டலுங்கதுமெனப்போகி
யிலகுவாளெயிற்றரவுகட்கியம்பலுமிமையோ
ருலகிலின்னமிர்தளித்திடில்விடுதுமென்றுரைப்ப
மலர்பெய்வார்குழல்வினதைதன்மைந்தனுக்குரைத்தாள். (கரு)

அகல்விசும்புறையமிழ்துகொல்கொணர்வதற்கரிய
திகலும்வெம்பசிதணிப்பதற்கருளுதியென்னத்
தகர்மருப்பினிற்றிருந்துவீழ்தாடிவில்வேடர்
துகிர்படுந்திரைத்தொடுகடற்கரையினிற்றெருக்கார். (கசா)

அனையராருயிரருந்திவெங்கனற்பசியாற்றித்
துனைவிலேகுதியவருழைச்சுருதிநூல்முனிவன்
றனைவிழுங்கலைவிழுங்கினின்மிடற்றிடைத்தழல்போற்
கனலுமற்றவன்றனையுமிழ்ந்தேகுதிகடிதின். (கஎ)

என்றுகூறியவன்னைதனிணையடிவணங்கிக்
குன்றம்யாவையுஞ்சிறைதருவளியிடைக்கொட்ப
மன்றநீடுயர்பொன்வரைவான்சிறைபரப்பிச்
சென்றதாமெனச்சென்றனனெறுழ்வலிக்கலுழன் (கஅ)

விரித்தவாயினைவிண்டொடர்வரைமுழையென்ன
வுருத்தவெஞ்சினவேடராங்கொருங்கடைந்திடலுங்
கருத்தினுன்மறைகிடந்தவன்புகுதலுங்கனற்ற
வருத்தியோடவன்றனையுமிழ்ந்தெயினரையயின்றான். (ககூ)

ஏழ்தடங்கிரியேழ்கடலேழ்நிலவரைப்பும்
பாழியஞ்சிறைக்காற்றினுற்பருவரலெய்த
வூழிவெங்கனல்சிறையொடுபுகுந்ததென்றும்பர்
மாழ்கிநெஞ்சழிந்தலம்வரவானகத்தடைந்தான். (உ0)

அடைந்தவான்சிறைக்கலுழனையடர்த்துமென்றெண்ணி
மிடைந்துவானவர்சூழ்வரவிண்ணவர்க்கிறைவன்
றொடர்ந்துவண்டினம்படுகவுட்சூழிமாமுகத்த
கடங்கொள்சீற்றவெங்கனல்விழிக்களிற்றின்மேற்போந்தான். (உக)

விண்ணவர்க்கிறைநடவியவெஞ்சினக்கடாத்த
வண்ணலங்கரிமுதலியவூர்திகளனைத்து

# கடோற்காதித்தன்கதையும்-கருடேசன்கதையு-ாளகூ முரைத்தஅத்தியாயம்.

முண்ணடுங்கிமெய்பதைபதைத்தொழிந்திடக்கலுழன்
கண்ணகன்சிறைக்காற்றினாற்களத்திடைக்கவிழ்ந்த (௨௨)

ஈறில்வானவர்நடவியவூர்திகள்யாவுஞ்
சூறைநீள்வளிப்பட்டமென்சருகெனச்சுழன்று
வேறுவேறுபோய்வீழ்தலும்விரிசிறைக்கலுழ
னாறுதீஞ்சுவைத்தெள்ளமிர்துறையுளினுற்றான். (௨௩)

தணிவருஞ்சினத்தழல்விழித்தாழ்சிறைக்கலுழ
னுணுகுமெல்லணுப்புகுதினுநூறுநூறாகத்
துணிசெயும்படிசுழல்வரமயன்முனமமைத்த
மணிநெடுஞ்சுடராழியைநோக்கினன்மருண்டான். (௨௪)

அருந்துமாறமிர்தெடுத்திடற்கடைந்தனனல்லன்
பொருந்துகற்புடைமகளிரைப்பொருவில்தந்தையினை
வருந்தியீன்றநல்லன்னையைமகிழ்ந்தினிதளிப்பான்
புரிந்தபாவமும்பூத்திடாதீதெனவெண்ணி. (௨௫)

புனிற்றுவெண்பிறைக்கண்ணியன்பூங்கழலன்றி
மனத்தின்மற்றொருகடவுளைவழிபடேனாயி
னினைப்பதற்கருமுருவொடுநிகழ்ந்திடல்வேண்டு
மெனக்கருத்திடையெண்ணலுமவ்வுருவியைந்தான். (௨௬)

அணுவுமால்வரைபோன்மெனுநண்ணுருவதனாற்
பணிசெய்நேமியுட்புகுந்தியந்திரப்பொறிபறித்துத்
தணிவருஞ்சுவைத்தெள்ளமுதட்டியதசும்பைத்
துணிவொடுங்கவர்ந்தேகினன்வானவர்துயர. (௨௭)

அவிரொளிப்பசும்பொன்னிலத்தமரர்கள்யாருந்
துவர்படுந்திரைப்பாற்கடலமளியிற்றுயில்வோன்
குவலையம்பொதிகுரைகழற்செய்யதாமரையை
யுவகையிற்றொழுதடிகள்கேட்டருள்கவென்றுரைப்பார். (௨௮)

இமிழ்தடங்கடல்கடைந்துநீயெமக்குமுன்னீந்த
வமிழ்தம்யாவையுங்கவர்ந்தனனெம்மையுமடர்த்தான்
கமலைகேள்வவென்றுரைத்தலுங்கைம்மலர்கவியா
வுமிழ்செழுங்கதிராழியோனஞ்சலென்றுரைத்தான். (௨௯)

அலகில்சூழ்ச்சியால்வெல்குவதன்றிமற்றவனை
விலகிவில்லுமிழ்படையினால்வெலற்கரிதென்ன
வுலகெலாம்வயிற்றொருபுடைகிடத்தியவரவோன்
கலுழன்முன்னர்வந்தெய்திமற்றினையனகழறும் (௩0)

வயிரவாட்படையுழவனே வென்றுவாளமரிற்
செயிரிலின்னமுதெடுத்தனை போகியதிறலாற்
பயில்கொடுஞ்சிறைக்கலுழயாமுவந்தனம்பகர்தி
யியையுமோர்வரந்தருதுமென்றிசைத்தனனெடியோன். (௬௧)

மருவுயிர்த்தபூந்துளவினேய்வரமிரண்டுனக்குத்
தருவனீதரல்வேண்டுவதென்னெனச்சாற்றுந்
திருகுசீற்றவெங்கலுழனேச்செங்கண்மாலேநோக்கி
வினாவினவ்வரந்தருகெனவியப்பொடுமுரைத்தான். (௬௨)

கேட்டநல்வரமளிப்பல்யான்கிளத்தெனவென்னைத்
தோட்டடத்தினிற்சுமப்பதோர்வரமமிழ்தரவிற்
கூட்டிடாதவைவொழிப்பதோர்வரமெனமுகுந்தன்
வேட்டிரத்தலுமளித்தனன்வெஞ்சினக்கலுழன். (௬௩)

மாயவன்கொளவரமிரண்டினிதினின்வழங்கிக்
காய்சினத்தவாளரவொடுங்கத்துருவுவப்பத்
தூயதீஞ்சுவையமிழ்தினைத்துனேவினிற்கொடுபோய்த்
தாயின்வெஞ்சிறைவிடுத்தனன்றடஞ்சிறைக்கலுழன். (௬௪)

இனியதெள்ளமுதரவினமுணத்தருகெனலும்
புனிதமுள்ளவர்க்கல்லதுபொருந்துறுதென்னத்
துனேவின்வாளராத்தூயநீராடுவானகல
வனேயபொற்குடந்தருப்பைமேல்வைத்தனனகன்றான். (௬௫)

அண்ணலஞ்சிறைப்புள்ளரசேகலுமமுதைத்
தண்ணந்தாமரைத்தாக்கணங்கிளமுலேச்சாந்த
மண்ணுநீள்புயத்தண்ணறன்கையினுல்வவ்வி
விண்ணவர்க்கிறைமகிழ்ந்திடவினாவினிலளித்தான். (௬௬)

கரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
வினாவினின்னமிர்தெடுத்துவிண்போகியதுணரா
தரவம்யாவையுமவ்வுழியடைந்துதெள்ளமிர்தம்
பருகநேடலுங்காண்கலாதாருயிர்பதைத்த (௬௭)

உருத்துநெஞ்சழன்றுண்ணுமின்சுவையமுதிருந்த
தருப்பைபன்முறைநக்கலாற்றழல்விழிப்பாம்பின்
விரித்தநாக்கடைபிளந்திரண்டாயினவினதை
யருத்திகூர்ந்துபுள்ளரசொடுங்காசியினடைந்தாள். (௬௮)

அடைந்துநற்கடோற்காதபன்றனைவழிப்படலால்
மடந்தைநாமம்வெங்கதிரவற்காயதுவலத்தாற்

படங்கொள்சேடனைப்பறித்துமேலணிந்தவெங்கலுழன்
தொடர்ந்தவன்பினுலிலிங்கமொன்றமைத்தடிதொழுதான்.(கக)

கலுழனாற்றியகாமருதவத்தினைவியந்து
நிலவுதூங்கிளம்பிறையணிநீள்சடைக்கடவு
ளலகில்நல்வரமளித்துநம்மடியரிற்சிறந்தோ
னுலகுபூத்தசெந்தாமரையுந்தியங்கடவுள். (௫0)

ஆங்கவற்குநீயூர்தியாயடைதுமென்றறைந்த
தீங்கினல்வரமுவந்தனனுஞ்செல்கெனக்கலுழன்
வீங்கினன்றடம்புயமுளங்குளிர்ப்புறவிழிநீர்
தூங்கமெய்ம்மயிர்சிலிர்ப்புறத்தொழுதிவைசொல்வான். (௫க)

ஐயநின்னுடையடியர்தம்மடியர்பூங்கமலச்
செய்யசேவடிசென்னியிற்சூட்டுதலடியற்
கெய்திநின்றதோர்கடனெனவிருகரங்கூப்பி
மையில்பாற்கடற்றுயின்றவன்மருங்குசென்றடைந்தான். (௫உ)

ருக-வது-கடோற்காதித்தன்கதையுங்கருடேசன்கதையுமுரைத்த
வத்தியாயம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கசகரு.

---

ஐம்பத்திரண்டாவது.

## அருணாதித்தன்முதலாதித்தர்கதையுரைத்தஅத்தியாயம்

கல்லெனார்ப்புடைக்கருங்கடல்குடங்கையிற்கவரா
வில்வலன்றனைச்சினவியவிருந்தவமுனிவ
மல்குசீரருணாதபன்கதையினைவகுத்துச்
சொல்வல்கேளெனக்குருதிவேற்பண்ணவன்சொல்லும். (க)

காமர்பேரொழிற்கத்துருகாசிபனருளால்
நாமமைந்தரோர்நூற்றுவர்ப்பயந்தனணலங்கொள்
வாமமேகலைவினதையுமம்முனிவரத்தா
லேமநல்லெழிற்புதல்வரோர்மூவரையீன்றாள். (உ)

அறையுமக்களோர்மூவரிற்கூகைமூத்ததனாற்
பறவைவேந்தெனவைத்தலும்பறவைகள்குழுமி
யுறவரற்றலாலுறுபகற்கண்டெரிவிலதா
லிறைமைபூண்பதுதகாதிதற்கெனவிலக்கினவே. (௩)

முன்னளித்ததன்கூகையையிகழ்ந்திடுமுனிவால்
மன்னுமாயிரம்வருடமுஞ்செல்லுமுன்வலிதிற்
பின்னளித்ததன்முட்டையையுடைத்தனள்பிறங்கித்
துன்னுமென்குறங்கொழிந்திடத்தோன்றினனருணன். (௪)

சீற்றமிக்குளவருணனுங்கன்னையைச்சினவி
மாற்றவட்குநீசிலதியாய்வைகெனச்சாப
மேற்றல்தீர்குவதென்றெனமற்றையிம்முட்டை
தோற்றுமைந்தனின்றுயரொழிதகிடுமெனச்சொன்னான். (௫)

இனையகூறிநற்காசியிங்விரைவினிலெய்திக்
கனைகதிர்ச்சுடர்ப்பழிச்சலுங்கதிரவன்றோன்றி
யெனதுதேர்விடும்பாகனீயாகுதியென்ன
வனையவாற்றினாலாதவற்கவன்பெயரறைந்தார். (௬)

அருணவெங்கதிர்க்கதையினைத்தெருளுறவறைந்தேங்
கருணையால்விருத்தாதபன்கதையினைக்கேளொன்
றுருவவாணகைக்குறமகள்முலைமுகடுழக்குந்
தெரியல்தாழ்புயன்குறுமுனிக்கினையனசெப்பும். (௭)

கன்னியம்பெடைவண்டொடுஞ்சிறுகண்படுக்கும்
புன்னையம்பொழில்சூழ்தருகாசியிற்பொருவில்
பன்னுகேள்வியனான்மறைக்கடலிடைப்படிந்தோன்
மன்னுநாமமும்விருத்தனென்றுளனொருமறையோன். (௮)

தமரவெண்டிரைக்கங்கையந்தடங்கரைதன்னிற்
குமரிவண்டினங்கூட்டுணுங்கமலநாயகனை
யமரநெஞ்சகத்திருத்திமெய்த்தவம்புரிந்ததனாற்
றிமிரமேய்ந்தொளிர்செங்கதிர்ச்செல்வன்வந்தடைந்தான். (௯)

தாளதாமரைநாயகன்றாளிணைவணங்கிக்
காளையம்பருவந்தருகென்றலுங்கடிதின்
வேளினல்லுருவளித்தனன்வியந்தவன்றொழலால்
நாளுநல்விருத்தாதபனெனும்பெயர்நவின்றார். (௧௦)

ஆசில்நல்விருத்தாதபன்கதையினிதறைந்தேங்
கேசவாதபன்கதையினைக்கிளக்குவனென்னத்
தேசுபூத்தொளிர்செந்தமிழ்முனிவரன்கேட்ப
வாசவன்சிறைவிடுத்தவேற்பண்ணவன்வழங்கும். (௧௧)

காம்பினானிரைகுவித்தசெந்தாமரைக்கண்ணன்
பூம்புனற்றிரைக்கங்கைசூழ்காசியிற்போந்து

# அருணாநித்தன் முதலாநித்தர் கதையுரைத்த-ராஅரு. அத்தியாயம்.

கூடம்புகையினன் குழைந்திடுமனத்தினனாகி
யேம்பல்மீக்கொளப்பழிச்சிமெய்த்தவம்புரிந்திருந்தான். (கஉ)

சேவுயர்த்தவன்சேவடிசிந்தைசெய்திருந்த
பூவைமேனியனருந்தவம்பொலிவொடுநோக்கி
வாவுமேழ்பரிபிறுவிவான்செல்லுயர்பரிதி
யோவிலன்பொடுமிருநிலத்தவனுழையுற்றான். (கங)

ஆலமுண்டமைக்கண்டனையகத்தினுளிருத்திச்
சாலமெய்த்தவம்புரிந்திடுதாமரைக்கண்ண
னேல்வைநோக்கிவந்திறைஞ்சியவிரவியைக்காணு
ஞாலநீடிருள்சீப்பவநடந்ததென்னென்றான். (கச)

அலகிலாமுதுமறைபயிலந்தணனோடு
முலகம்யாவையும்பூத்தருளுந்தியங்கடவு
ளிலகுபேரொளிப்பிரமநீயெனக்கெவரிறைவர்
புலனவித்தருந்தவமெவன்புரிகுவதென்றான். (கரு)

உலகினீடிருள்யாவையுமொழிக்குநின்மேனி
யலகில்பேரொளியகத்திருளகன்றிலைபோலு
மலர்செழுங்கதிர்வானவமாய்ந்துமாய்ந்துநிக்கு
நிலையில்யாக்கையேம்பிரமமென்றெங்ஙனநினைந்தாய். (கசா)

அண்டம்யாவையும்படைத்தளித்தாங்கவைதுடைக்கும்
பண்டைநான்மறைமுடியுறைபசுபதியவன்றன்
றொண்டர்நாமெலாமவனடிதொழுதவரன்றே
வுண்டபேதமையொழிந்துயர்பவக்கடலுறுதார். (கஎ)

பொருவருஞ்சிவபூசனைபுரிந்துளோர்தாளில்
மருவுதுண்டுகள்வளியினுல்வந்துமேற்படினும்
வெருவும்வெவ்வினையவன்பெயர்விளம்பினரன்றே
கருவடைந்துபோந்தன்னையர்கதிர்முலையுணுதார். (கஅ)

ஆதலாலிவணிலிங்கமொன்றமைத்துயரன்பாற்
போதுதூய்வழிபடுகெனமாதவன்புகலக்
காதல்கூர்ந்துவெங்கதிரவனிலிங்கமொன்றமைத்துத்
தாதுலாநறுந்தண்மலர்தூய்வணங்கினனால். (ககூ)

கேசவன்புகன்றிடுதலாற்கேசவாதபனென்
றாசில்நாமமொன்றடைந்ததக்கதிரவன்றன்னை

வாசநாண்மதுமலர்கடுய்த்தினம்வழுத்திடுவோர்
பேசருங்கொடுவினையொழிந்துயர்கதிபெறுவார். (உ0)

இன்னவாறுயர்கேசவாதபன்கதையிசைத்தேம்
பன்னுசீர்விமலாதபன்கதையினிப்பகர்வே
முன்னருந்தவமாற்றியமுனிவகேளென்ன
மின்னுநக்கவேற்புங்கவன்றெருளுறவிளம்பும். (உக)

விமலனென்றுளனொருவன்மற்றவன்முனம்விழைந்து
தமனியச்சுளைபழுத்தமென்குடக்கனிதகர்ந்தாங் 174 - பக்; 3 -
குமிழ்நறைப்பசுந்தேறல்வான்றிரையலைத்தொழுகு
கமழுறுந்துறைக்கங்கைசூழ்காசியினடைந்தான். (உஉ)

கொய்யுளைப்பசும்புரவியூரிரவிமெய்குளிர்ப்பச்
செய்யநாண்மலர்தூய்வழிபடுதலுஞ்செங்கேழ்
வெய்யவன்றெழுதேத்தியவிமலன்முன்றோன்றி
யுய்யுமாறுநீவேண்டியகேளெனவுரைத்தான். (உ௩)

விட்டிலங்கொளிவெங்கதிர்ச்செல்வவெம்மரபிற்
குட்டநோயுறுதருளெனவிரத்தலுங்குழைந்து
மட்டுலாஞ்செழுந்தாமரைநாயகன்வழங்க
முட்டில்செல்வமோடேகினன்முழுதுணர்விமலன். (உ௪)

விமலனேத்தலினுயர்விமலாதபனெனும்பேர்
திமிரமேய்கதிர்ச்செல்வனுக்கியைந்ததென்றுரைப்பக்
கமலமேயகங்காதபன்கதையறைகெனவேற்
குமரன்மாதவக்கிழமைசால்முனியொடுங்கூறும். (உ௫)

நெய்யுறைத்துவாய்காய்ந்தவெங்குடுமிநெட்டிலைய
செய்யவேலுடைப்பகீரதன்சிறந்தவானதியை
வையகத்திடைக்கொணர்ந்தஞான்றேத்துவான்வந்த
வெய்யவன்றனக்கப்பெயர்மிகவிளம்பினரால். (உ௬)

ஈதுசொற்றனம்யமாதபன்கதையினிதிசைப்பே
மாதவத்துறைபோகியபழமறைக்கிழவ
காதன்மீக்கொளக்கேண்மதியென்றுபூங்கடப்பந்
தாதுமொய்த்தபைந்தெரியல்சூழ்தடம்புயன்சாற்றும். (உஎ)

தெறுசினத்தவெங்கூற்றமோர்செஞ்சுடர்க்கதிரை
யறைபுனற்றிரைக்கங்கைசூழ்காசியினமைத்துப்
பெறலருந்தவம்புரிந்துவேண்டியவரம்பெறலான்
மறைதுதித்திடும்யமாதபனெனப்பெயர்வகுத்தார். (உஅ)

இன்னவாறுபன்னிருசுடர்க்காதையுமிசைத்தே
மன்னுமிக்கதையுரைத்துளோர்மகிழ்வுறக்கேட்டோர்
பன்னகத்தின்வெம்பஃறலைப்பணாடவிகவிப்பப்
பொன்னிணர்ப்பசுங்கற்பகநீழலிற்பொலிவார். (உக)

இக-வது-அருணாதித்தன் முதலாதித்தர்கதையுரைத்த
அத்தியாயம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கஎ௲௪௪.

---

ஐம்பத்திரண்டாவது
பிரமன்வேள்விசெய்த அத்தியாயம்.

பவளத்தாற்றுக்குலைக்கமுகம்படப்பைதோறுமீற்றுளைந்து
தவளமுதுகுரூற்குடவயிற்றுப்பணிலமுழங்குங்காசிதனிற்
குவளைநெடுங்கட்செங்கனிவாய்மகளிர்பலரைக்கூரிருள்சீத்
தவிர்செங்கதிரைவிடுத்தனமீங்கன்னோரின்னுமடைந்திலரால். (க)

இன்னுமெவரைவிடுப்பதெனவெண்ணியெண்ணிவெந்நோக்கு
பொன்னங்குடுமிவரைகுழைத்துப்புரமூன்றெரித்தபுரிசடையோன்
கன்னித்துளவோன்றிருவுந்திக்கடவுட்கமலமினிதுயிர்த்த
பன்னுமறைநான்முகத்தொருவன்றன்னைநோக்கிப்பகர்ந்திடுவான். (உ)

புள்ளுஞ்சுரும்புங்கலித்தமலர்ப்பொதும்பர்தோறும்பூங்கமுகின்
வெள்ளிப்பாளைமடல்பொதிந்தமிடறுதிறந்துதேன்குதிப்பத்
துள்ளிக்கயல்பாய்ந்துழக்குமகன்பணைசூழ்காசித்தொன்னகர்விட்
டுள்ளத்துயரமீதூரவெவ்வாறிங்கனுறைகுவமால். (௩)

வேந்துவிழுங்கிவாய்சிவந்தவெள்வேலோடுமுழுதுலகு
மேந்துதடந்தோட்டிவோதாசன்செங்கோல்கோடவியற்றுகென
வாய்ந்தவுவகைமீதூரமங்கைபாகன்கழல்பணிந்து
பூந்தண்கமலப்பொகுட்டுறையும்புத்தேள்காசிநகரடைந்தான். (௪)

அரியமறைதேர்நரைக்குடுமியந்தணாளனிவனெனுமோ
ருருவுதாங்கியுலைமுகத்தினெழுகுபசும்பொற்கலன்கிடந்து
பரிதிகோடியெழுந்தபெரும்பான்மைபோலக்கதிரொழிக்கும்
வரைகொண்மார்பிற்றிவோதாசனென்போனிருக்கைமருங்கடைந்தான். ()

முரசுமுழங்குங்கடைத்தலைவாய்முன்றிற்புறத்திலிடுதிறைகொண்
டரசுகிடந்துழூச்செறியுமம்பொற்கோயின்மருங்கெய்திப்
புரசையானைமன்னவன்பாற்போகியுலகமுழுதீன்ற
விரைசெய்கமலப்பொகுட்டுறையும்புத்தேளாசிவிளம்பினனால். (௬)

கழிந்தழுப்பினைக்குழுமிமறையோன்றன்னைக்கண்ணுற லு
மெழுந்துதொழுதாசனம்வழங்கியெங்காடெவ்லூறெப்பேறென்
றழுந்துமன்பினுடனரசனினிதுவினவுமனைத்தினையு
மொழிந்துவிதியிற்புரவிமகமுடிப்பான்புகுந்தேனெனவுரைத்தான். (எ)

புலவுசிவாப்புதுப்போர்வையந்தணாளன்மகிழ்பூப்பக்
கலினவயவெம்புரவிமகங்கடிதினீரைந்தாற்றுவித்தா
னலகினிதியமிடுதிறைகொண்டரசுவழங்குநெடுமுன்றி
லுலகமேத்துந்தனித்திகிரியுரவோனரசர்பெருமானே. (அ)

கடவுட்கமலவட்டவணைக்கடவுள்புரவிமகமீரைந்
தடைவினாற்றியுருத்திரப்போமடுவினுடியகங்கரையி
லொடிவில்பிரமேச்சுரமெனுமோரிலிங்கமமைத்தாங்கொண்மலர்தூய்
சுடர்வேலரசன்முறைதிறம்பல்நோக்கியானைத்தொழுதிருந்தான். (௯)

கொழுதிவரிவண்டிசைமுரலுங்குமரிக்கமலத்துறையுமறைக்
கிழவனரசின்கோல்கோடவியற்றுதழல்கட்கிளர்பொறிய
வுழுவையசைத்தோன்முனமெவ்வாறுறுவதென்னவுளம்வெருவி
வழுவில்காசிவளநகரின்றென்பாலினிதுவதிந்தனனால். (௧௦)

௫௨-வது-பிரமாவேள்விசெய்தவத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௭௫௪.

---

ஐம்பத்துமூன்றாவது.

## சிவகணங்கள் காசியையடைந்த அத்தியாயம்.

---

அன்னமூர்ந்தமறைக்கிழவன்வாராதொழிந்தானுதலினு
மின்னுமறிதுமெனக்கடவுளேற்றையுயர்த்தவெம்பெருமான்
மின்னினகுவேற்பிரசங்குகன்னனந்திசோமன்விறற்
கன்னனந்திசேனன்மகோதரன்பிங்கலன்குக்குடன்காளன். (௧)

குண்டோதரன்பஞ்சாக்கனியல்வாணன்மயூரன்கோகன்னன்
தண்டாவிழுச்சீர்த்திலகன்னன்றாலகன்னன்சுகன்சாகன்
புண்டோய்கதிர்வேல்வீரபத்திரன்வீராதன்பார்பூதிவரி
வண்டார்தெரியற்கவத்திசதுமுகனுசாடிவளர்சுமுகன். (௨)

கேமமாலிகாலசிங்கன்றுருமன்கிராதனெனவுரைக்கு
நாமவடிவேற்கணநாதர்தம்மைவிடுப்பநறுங்கூந்தற்
றேமென்கிளவியொருபாகன்மலர்த்தாள்போற்றிச்சிறந்தே ாங்கு
காமர்கடவுட்புனற்கங்கைசூழுங்காசிகடிதடைந்தார். (௩)

மாயவுருவிற்புகுந்தரசர்மகுடகோடியுழுதுதழும்
பாயகழற்கால்வேந்தன்முறைதிறம்பல்காறுராதலினுற்
காயுஞ்சினவெவ்விடங்கனிந்தகரியமிடற்றெங்கண்ணுதன்முன்
போயென்னுமைப்பதெனமாழ்கிமெலிந்தார்புந்திதனிலோர்ந்தார். (ரு)

உடலும்வேண்டுமுருவெடுத்துமடிகள்பணித்தவோர்வினைய
முடியேமடைந்தகொடும்பாவம்யாதில்நீங்குமெனமுன்னிப்
படவாளரவகங்கணத்தோன்படிவமமைத்துப்பரிவினெடுங்
கடிமாமலர்தூய்வணங்கிலுறுகொடியவினையுங்கட்டறுமால். (௬)

யாவரோனுஞ்சிவபூசைசெய்வாராகிலவரிழைத்த
மேவவரியகொடுவினைகளனைத்துநீங்கிவீடடைவா
ரோவில்விரதந்தவம்வேள்வியாற்றுமோரிலொண்மலர்தூய்ப்
பூவைபாகன்றனைப்பணியுமவர்மேலன்புபுரிந்திடுமால். (௭)

பனிவெண்டிங்கட்கண்ணிபுனைபரனையாட்டும்புனலுகர்ந்தோன்
வினையினீங்குமப்புனலிற்படிந்தோன்வீங்குதிரைக்கங்கைப்
புனலினுடும்பலன்கடிதினடையுமெனத்தம்பெயர்புனைந்து
தனிவேறிலிங்கமுறையமைத்துப்பூசைபுரிந்துதாமிருந்தார். (௮)

கருணைகூர்ந்துசிவகணத்தின்காதையுரைத்தேமாங்கவரி
லருளின்விளங்குகவத்தீசன்பெருமைவிளங்கவறைந்திடுதும்
பெருமாதவத்தின்றுறைபோயமுனிவகேட்டியெனப்பிறங்கு
குருதிநெடுவேற்கருந்தடங்கட்குறமான்கொழுநன்கூறிடுமால். (௯)

ருங-வது-சிவகணங்கள்காசியையடைந்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசசுஉ.

---

ஐம்பத்துநான்காவது.

## அலகைதேவனுகிய அத்தியாயம்.

கவத்தியென்னுங்கணாதனெருவனுளனுங்கவனரிய
தவத்தின்மிக்கோன்பத்திரேசன்றனக்குவடபாலொழிவரிய
பவத்தின்றுயர்வேரறுத்திடுமோரிலிங்கமமைத்துப்பசுந்தேனிற்
சுவைத்தண்புனல்வாவியுமகழ்ந்துதொடங்கற்கரியதவம்புரிந்தான். (க)

அன்னவிமலோதகவாவிக்கரையிலிரண்டாம்யுகமதனிற்
பன்னுமறைதேர்கவத்தீசன்பாதம்வணங்கிவான்மீகி
யென்னுமறையோனுற்றரியதவங்களாற்றியிருந்திடலு
முன்னமழல்கட்பிறையெயிற்றமுரட்பேயொன்றுதோன்றியதால். (உ)

ஒட்டியுலர்ந்தகொடிறுமடிப்புற்றமூக்குநீள்கழுத்தும்
விட்டுநெறித்தகுஞ்சியுமேல்விரிந்தவுதடுங்குழிந்துபுழை
பட்டசெவியுமென்பொடுதோல்பயின்றவுடலும்பசுங்குருதி
கொட்டுபகுவாய்முழங்குமிடிக்குரலுமாகக்குறுகியதால். (௫)

அலகைநின்றநிலைநோக்கியாரைநீயிங்கடைந்ததெவன்
மெலிவுசெயுமிவ்வுருவினையந்தவெவ்வாறிவைநீவிளம்புகெனக்
குலநான்மறையோன்வினவுதலுங்கோதாவிரியின்றீரத்தி
னுலவுபிரதிட்டானமெனுந்தொல்லைநகரின்மான்றுளதால். (௬)

அன்னநகரிலுவந்துறையுமந்தணளன்புண்ணியநீர்
மன்னியாடுமவருழைச்சென்றில்லென்றிரந்தவாறதனு
லின்னவுருவமெய்தியதுநெடுநாளுநமைவுற்றுடற்றுபசி
வெங்நோய்வருத்தநீர்வறந்தநிலத்திலிருந்ததுழிந்தேனல். (௭)

தெறுவெங்கதிராற்பொழிபுயலாற்றேம்பியாறுப்சிறிதுமின்றி
யுறையுநாளிற்புனிதமில்லானுறுநீர்ப்பருகியானுகடன்கழியான்
மறையோனெருவன்வரநோக்கியிவன்மானுலுறையின்மகிழ்ந்துணவு
பெறலாமென்னும்வேட்கையுளம்பிணிப்பவனுட்புகுந்தனனல். (௮)

என்னையொழித்தோர்வணிகனொடுமீட்டும்பொருட்குக்காசிநகர்
தன்னில்மறையோன்செலவயரச்சார்தற்செல்லாதவனிழைத்த
முன்னைவினையினெடும்புறத்துநின்றேன்னின்முதலாகப்
பன்னுமறையோன்வரும்வருமென்றுறறுவழிபார்த்துறைந்தேனல். (௯)

முளிபுற்களுலும்வெங்கானில்முதிர்வெம்பசித்தீமிக்கன
லளியன்றுயராலஞெய்தியிருக்குமேல்வைவயருங்கைத்
தெளிதண்புனற்காவடிகொணர்ந்தோர்த்தின்மறையோனெதிர்ப்படலுங்
களிதூங்குள்ளத்தொடுமவனைத்தின்பான்கடிதினருகடைந்தேன் (௧௦)

அடைந்தபோழ்திற்சிவசிவவென்றந்தணளனறைந்திடலுந்
தொடர்ந்தகொடியவினையனைத்துந்துறந்தேன்றூயனைதற்பின்
மடந்தைபாகன்காசிதனில்வந்தேனின்னைக்கண்ணுற்றேன்
படர்ந்தமறையோயிவ்வுருவமொழித்தியென்னப்பணிந்ததுவே. (௧௧)

எரிகால்சுழல்கட்பேயிதனையியம்பலோடும்வான்மீகி
யருள்கூர்ந்திந்தவுருவகல்வான்விமலோதகத்திறுடுகெனத்
தெருள்சேர்முனிவபுனல்முதலதீண்டிற்பேயினுடல்நடுங்க
வொருவாதுடற்றும்வயிரவன்றனுணையெனத்தாழ்ந்துரைத்ததுவே. (௧௨)

கூறுமலகையுரைகேட்டமுனிவன்கூற்றுமுளம்வெருவு
நீறுநல்கவடிதொழுதுநிலவவுடலெங்கணும்பூசித்

தேறுபுனலினுடுதலுந்தெய்வவுருவாய்விமானத்தின்
ஏறிமுனிவன்றனைப்பழிச்சியிமையோருலகத்தெய்தியதே. (கக)

அலகையுருவமொழித்ததனுலதன்பேர்வாவிக்கடைந்ததிந்த
நிலவுகதையைநவின்றோர்கள்கேட்டோர்நெஞ்சம்வெருக்கொள்ள
வுலகிலலகைநலியாதுவிடுத்தோர்மீளாதுறைந்ததனு
லிலகுகணிச்சியைங்கரனைவிடுத்தகாதையியம்புவாம். (கஉ)

ருச-வது-அலகைதேவனுகிய-அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசஎச.

---

ஐம்பத்தைந்தாவது.

## கணபதிகாசியையடைந்தஅத்தியாயம்.

விடுத்தகருமமுடியாதேமெவ்வாறடைதுமெனவெருவி
யடுத்துமுனம்யாம்விடுத்தோர்கள்மீளாதுறைந்தாரவ்வழிபோய்த்
தொடுத்தகருமம்வழுவாதுமுடித்தியென்னவிருநேங்கு
கடுத்தாழ்கண்டனைங்கரனையினிதினேக்கிக்கட்டுரைத்தான். (க)

கதிர்காலொற்றைப்பிறைக்கிழவன்கழறுமாற்றந்தலைக்கொண்டு
மதநீர்க்கலுழிப்பேரியாறுவழங்குகோட்டுவனையெழுந்து
பொதிவாடவிழ்க்கும்பசும்பாளைபொழிந்ததேறல்வழிந்தொழுக
முதுநீர்க்கங்கைப்பெருக்கெடுத்துமுழங்குகாசியடைந்ததுவே. (உ)

எண்ணமுறைக்குமறையோனிற்பகற்போதெல்லாமெவர்கடையு
நண்ணியுரைக்குமிரவெல்லாங்கனவுகாட்டுநனிகதிராற்
றண்ணங்கமலமலர்போதிற்றனிவந்திரவுகண்டகனு
வண்ணமீதென்றவரவர்தமுள்ளம்வியப்பவகுத்துரைக்கும். (ங)

கோழிகூவித்துயிலெழுப்புங்காலைச்சேற்றிற்குளித்தெழவு
மாழ்தண்புனலின்மூழ்கிடவுங்கனவுகண்டோராங்கதனுற்
பாழிநெடுங்தோண்மன்னவராலிடியாற்பயம்வந்தெய்துமெனக்
காழ்கொண்டிளகாமனத்தினருங்குழையச்சிலர்பாற்கட்டுரைக்கும். (ச)

கற்றேய்கலிங்கமசைத்துமயிர்குறைத்தோனெருவன்கங்குலின்வா
யுற்றுங்கெதிரக்கனவுகண்டவாற்றூற்றுன்பமுறுதியென
மற்றுங்கொருவன்பாற்போகிவழங்குஞ்சிலர்பாற்போயிரவு
பொற்பார்கதிரைக்கண்டதனுற்றுயர்வந்தடையுமெனப்புகலும். (ரு)

கடவுண்மதியைச்சுடர்வெய்யோன்விழ்த்தகனவுகண்டதனு
லடையுந்துயரமிங்கவொன்றறையுஞ்சிலர்பாற்பல்விழவுங்

கொடியோனொருவன்மயிர்பற்றிக்கொடுபோகவுநீர்கண்டதனு
லொடிவில்கிளைஞரொடுமுடிவீரென்றுசிலரோடுரைத்திடுமால். (௬)
கொண்டல்விளையாட்டயர்மாடக்குடுமிதொடுத்தகொடிவீழக்
கண்டகனவாலிந்நகரந்துறந்துபோதல்கடனென்னு
மண்டுதிரைநீர்க்கடலிவ்வூர்வளையக்கண்டவாற்றுலொன்
றுண்டோர்மதியிலிந்நகரமுறைவோர்துன்பமுழப்பரெனும். (௭)
அன்னுண்கலிங்கமருங்கசையாவறன்மென்கூந்தற்சுவற்புரளக்
கன்னற்குதலையந்தீஞ்சொலொருத்திகலுழக்கனுக்கண்ட
தென்னேகடவுட்காசியைவிட்டகறுமென்னவிருந்தேங்கிப்
பொன்னங்கமலமயிலழுதனென்றுசிலர்பாற்புகுந்துரைக்கும். (௮)
செக்கர்மாலைப்பிறைக்குழவிநிலவுதூங்குசெஞ்சடையெம்
முக்கட்பெருமான்சினகரத்தின்முடியொன்றுடையக்கங்குலின்வாய்ப்
புக்ககனவுகண்டனிராற்சின்னுளையிலிப்புனைநகர்வாழ்
மக்கள்யார்க்கும்வெருவெய்துமென்றுசிலர்பால்வகுத்துரைக்கும். (௯)
என்றுகொடுந்தீவினைக்கனவுகாட்டிப்பின்னுமியன்றிடுகோ
ணின்றநிலைகூறுவலென்னுச்சிலரைநோக்கிநிகழ்பாவ
மொன்றுகிரகமனைத்துமொருராசியதனிலுறைந்தவற்றுற்
சென்றுபடுமிந்நகரிலுயிர்யாவுமென்னச்செப்பிடுமால். (௧௰)
ஓடியாத்தவஞ்செயிருடிகளோரெழுவருறைமண்டலம்போழ்ந்து
குடபாற்போகியொழுகொளியதூமகேதுகுறுகியதாற்
கடல்சூழுலகங்கொளக்குறையாவளங்கூர்காசிநகர்புரக்கு
மடல்வேன்மன்னற்குறுதுயருண்டென்றுசிலரோடறைந்திடுமால். (௧௧)
நெடுநீர்ப்பரவையுடுத்தவகன்ஞாலநடுக்கநிகழ்ந்ததனுற்
கடைதூங்கொளிர்பொற்கதிர்மணிநாக்கறங்காதுறங்குமணிக்கோயிற்
சுடர்கால்பசும்பொன்மணிமுகடுவேய்ந்ததொடித்தோட்புரவலற்கிங்
கடையாத்துயர்வந்தடையுமெனச்சிலர்பாற்போகியினிதறையும். (௧௨)
கடல்வாய்மடுத்துநிமிர்ந்தெழுந்தகமஞ்சூற்கொண்டல்துளிதூங்கு
நெடுவான்பூத்தவுற்கமொன்றுமன்றித்தடவுநிலைத்தருவின்
வடபானின்றுந்தென்பாலாய்வீழ்ந்தவாற்றுல்மன்பதைகள்
படர்கூர்ந்திடுமோர்புதுமையிஃதென்றுசிலர்பாற்பரிந்துரைக்கும். (௧௩)
இரவுக்குறும்புதலைபெயரவிருண்மேய்ந்தெழுவெங்கதிர்ப்பரிதி
யுரவுத்திரைநீர்க்கடன்முகட்டினுதித்தபின்னர்முளிசினைவான்
றருவிற்சுழல்கட்கொடுங்கூகைசார்ந்துகுணபால்நோக்கியுளம்
வெருவக்குளறிற்றிஃதென்னேவிளைக்குமென்னுச்சிலர்க்குரைக்கும். ()

ருடு-வது-கணபதிகாசியையடைந்த-அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௪௮௮.



ஐம்பத்தாறுவது.

## கணபதிநிவேதானனைக்கண்ட அத்தியாயம்.

இன்னவாறுமன்பதைகளுள்ளம்வெருவவெடுத்தியம்பா
வன்னநகரந்துறந்துசிலர்போகவியற்றியவர்போய
பின்னர்முதுமூப்புடையமறைக்கிழவனாகிப்பிறங்குகதிர்ப்
பொன்னங்கழற்கால்வயவேந்தனுறையுமனையிற்புகுந்துரைக்கும். (க)

கதிர்முத்துரிஞ்சுமுலைக்கருங்கட்காமர்கன்னிகீபயந்த
புதல்வரொருநூற்றுவருளராங்கவரில்மூத்தோன்போரினிலேற்
றெதிருமுரவோன்கலினவயப்புரவியிவர்ந்துவீழ்ந்தனனென்
மதியினுரைத்தேனுளதோவென்றொருத்தியோடுமகிழ்ந்துரைக்கும். (உ)

வள்ளற்பசுந்தார்மதிக்கவிகைச்செங்கோல்வேந்தன்மார்பணிந்த
வெள்ளிக்கதிர்காலிப்பியின்வாய்வெடித்தபருமுத்தணிதொடையுன்
னுள்ளத்துவகைமீதூரநெருனலளித்தானுளதுகொலென்
றள்ளிக்கொளலாமிருட்கூந்தலொருத்திபாற்சென்றறைந்தேகும். (ங)

தழுவவடங்காத்தடங்கொங்கைக்கமஞ்சூற்கொண்டகுழ்குழலாய்
மழலைத்தீஞ்சொன்மகப்பெறுவையென்னவொருத்தியுடன்வழங்குங்
கழுமமுடித்தகருங்கூந்தலொருத்தியோடுகாவலன்றன்
விழைவுநோக்கிலெஞ்ஞான்றுநின்மேலாகுமெனவிளம்பும் (ச)

என்றிவ்வாறுதனிக்கவிகைவேந்தற்குரியவேழையர்பாற்
சென்றுபிழையாதுண்மையினிதுரைப்பமகிழ்ந்துசின்னாளிற்
பொன்றாழ்திதலைப்பொம்மன்முலைலீலாவதியென்றுலகுபுகழ்
மன்றற்கோதைவேல்வேந்தற்கந்தணாளன்வரவுரைத்தாள். (ரு)

பீர்பூத்தலர்ந்தபொம்மன்முலைப்பேதைமறையோற்கொணர்தியெனப்
போர்வேட்டுறங்காக்களிற்றுழவன்புகலமறையோன்புகுந்திடலுங்
கார்வாய்துளிவேட்டினிதுவளர்பைங்கூழென்னக்களைகண்ணு
யார்மாட்டினுமங்கவரவர்தம்முயிர்போலென்றுமளித்தேனல். (சா)

பன்னுமறைகள்விளையாடுஞ்செந்நாமுனிவர்பதமலரோ
யின்னும்வழிபாடியற்றுவதேயல்லாற்பிறிதொன்றுற்றுகிலே
னன்னவெனக்கிங்கிலகிழமையகல்வானுள்ளமமைந்ததிது
முன்னியுணர்த்துகெனமறையின்பொருடேர்வாழ்க்கைமுனிகூறும். (எ)

மதியினமரர்குலக்குரவனருளால்வானின்மதுக்கடவு
ளுதவுகொடையிலளகையர்கோனொளியாற்செங்கேழ்ச்சுடர்ப்பரிதி

யெதிருமமரிற்கொடுங்கூற்றம்பொறையில்ஞாலமிரங்குதிரை
முதுநீராடைப்புவிபுரக்குமுறையிற்சிறந்தமனுவாமால். (அ)

மும்மைத்தொழிலுமியற்றுதலான்மூவரொன்பமுழுதுலகு
மம்மதாகமகற்றுதலாற்புயலென்றிசைப்பவார்வமொடுங்
கைட்மாமலரிற்றிருவுறைந்தாள்முகத்திற்கலைமாமகளிருந்தாள்
வெம்மைவிடநின்முனிவுமொழியமிர்தநினைப்போல்வேறுளரார். (௯)

ஆதலாலிவ்வுலகமுழுதாளுந்திகிரியுரவோய்நின்
நீதிலுளத்தினிடைக்கிடந்தசெய்தியுணர்ந்தேனின்றுமுத
லோதுநாளோரிருநான்கிற்குணபானின்றுமொருமறையோன்
போதுமவனுன்றிறமெல்லாம்விளங்கவருளாற்புகன்றிடுமால். (௧0)

எள்ளல்செய்யாதவன்மாற்றங்கோடியென்னவினிதியம்பி
யள்ளற்பழனவயற்காசிநகரிலுறைவோரடல்வேந்தி
னுள்ளத்துயிரிற்பிரியாதமகளிருவப்பமுனமுறைந்த
வள்ளற்குனத்தான்மானவவேண்டும்வண்ணமமைத்திருந்தார். (௧௧)

இ-சு-வது-கணபதிதிவோதானனைக்கண்டஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௪௯௯.

---

ஐம்பத்தேழாவது.

## விஷ்ணுகாசியையடைந்த அத்தியாயம்.

கரையெறிந்தொழுகிக்கருந்திரைபுரட்டுங்காளிந்தியெனக்கடாங்கவிழ்க்கும், பொருசினத்தறுகட்கரிமுகனின்னும்போந்திலனெனமனந்திகையாமருதிடைத்தவழ்ந்துகோவியராடைகவர்ந்துவான் குருந்தின்மேலிவர்ந்த, திருமறுமார்பன்வாண்முகநோக்கித்திங்களங்கண்ணியோனுரைக்கும். (௧)

முன்னர்யாம்விடுத்தகணங்கள்போனீயுமுளரியந்தவிசின்மென்பெடையோ, டன்னம்வீற்றிருக்கும்வளவயற்காசிநகர்வயினமர்ந்திடாதாங்கு,மன்னியவேந்தின்மனுமுறைதிறம்பும்வண்ணநீபுரிதியேற்போதி,யென்னலும்வணங்கியிருகரங்கூப்பியெந்தையைப்போற்றியீதுரைப்பான். (௨)

அண்ணனின்கமலச்சேவடிப்போதிலன்புபூண்டொழுகுநருளத்தி
னெண்ணியகருமமுடிவதுசரதமெம்பிரான்முகமலர்ந்தேவ
நண்ணுசீறடியனியாற்றுதற்கரிதொன்றுளதுகொலெனவுணாவின்று
புண்ணியத்துளவந்துயல்வருதடந்தோட்புங்கவன்யோகுதற்கெழுந்தான்

வள்ளிதழ்க்கமலப் பொருட்டில்வீற்றிருக்கு மணங்கொடுவடவரை டொருவும், புள்ளரசோடும்பூவைபோல்மேனிப்புங்கவனருளொடும்போகி, யள்ளலஞ்சேற்றிலாமைகண்படுப்ப வருஞ்சிறைத்தும்பிதாலாட்டும், வெள்ளநீர்ப்பழனம் விளிம்புடுத்தோங்கு காசியில்விரைவின்வந்தடைந்தான். (௪)

மணிதெளித்தனையவான்புனற்றடத்தின்மாதவன்ருள்விளக்குதலா
லணிகிளர்வாவிக்கன்றுதொட்டுயர்பாதோதகமென்பவெவ்வழற்கட்
பணியரவுச்சிநடித்தவன்றனதுபடிவமொன்றமைத்தனன்கரையிற்
றணிவருமாதிகேசவனெனும்பேர்சாற்றினன்பூசனைப்புரிந்தான். (௫)

தண்மலர்களுலும்பாற்கடல்நேமித்தாமரையணங்குசெங்கமலப்
புண்ணியநரநாராயணநாரசிங்கமாம்பெயரொடும்புணர்த்த
வண்ணலந்தீர்த்தமளப்பருங்காசியணிநகரெங்கணுநோக்கி
லெண்ணிடுமளவில்வேற்றிடமின்றியெங்கணுந்தீர்த்தமாயியையும். (௬)

ஆதிகேசவனென்றமைத்தவவ்வுருவிலமர்ந்திருந்தவற்றிலோர்கூற்று
லேதமில்புத்தவுருவொடுநாமம்புண்ணியகீர்த்தியென்றிசைப்பக்
காதல்மீதூரக்கலுழனும்வினையகீர்த்தியாம்பெயரொடுங்கடிதிற்
போதரக்கமலமயிலும்விஞ்ஞானகௌமதிப்பெயரொடும்போத. (௭)

காசியம்பதியினெய்தியங்நகரிற்கண்ணிலார்க்கிழந்தகண்கொடுத்துந்
தேசுடைப்புதல்வரில்லவர்தமக்குத்தேமொழிமைந்தனையளித்து
மாசுடைமூப்பின்வருந்தினர்க்கிளமைவழங்கியுமாழ்கடல்வளைப்பி
ஞசறுகுரவர்திலதமென்றெவருமறைந்திடமதிமருட்டினனால். (௮)

ஆக்குனரில்லைசகமெலாமனுதியரும்பெறற்பூதமோர்நான்கு
நீக்கமற்றியையினுருவமாமடைக்காய்நீறதொடுபொருந்திலாங்கவற்றுற்
சேக்குமாபோலவறிவுறுமலதுசீவனென்றுரைப்பதொன்றில்லை
தாக்கணங்கனையார்பூந்துகில்நெகிழ்த்துத்தழுவலேதவறில்பேரின்பம். ()

கலைவலீரொருவற்களித்தவின்னடிசில்மறுமையில்வருமெனக்கரைந்தீர்
மலமதாய்க்கழிந்ததெவ்வணநுமக்குவருங்கொல்மற்றுதலாலளித்தல்
நிலவியதருமமன்றதுவிடுத்தல்நெறியதாநுமதுடல்வருந்த
வலகிலேனென்பியற்றல்கொலைத்தொழில்போலுமாதலினவைவிடுத்திடுமின்

துன்புழந்துடலம்வருந்தல்பாழ்நரகந்தோகையரொடுமருஞ்செல்வத்
தின்புறல்துறக்கமென்பர்நன்குணர்ந்தோர்மாலயன்முதலெறும்பீறாய்
நன்குறுமுயிர்கள்தோன்றுதலொழிதல்நடந்ததோராருயிர்செகுத்துப்
புன்புலாலருந்தியருமகம்புரியும்புலவிர்காள்பூத்திடாதருமம் (௧௧)

உயிரெலாந்தனதுள்ளுயிரெனவோம்பாதொன்றினதுயிரினைக்குறைத்துச், செயிராறுவேள்வியாற்றுதல்தீதாமென்றிவைபோல்வனசெப்பிப், புயரொடுகுடுமிப்புரிசைசூழ்காசியுறைகுனர்புந்தியைமருட்டி, மயர்வுறுபுத்தரிழிதருமொழுக்கின்மனஞ்செலவயர்ந்திடப்புணர்த்தான். (கஉ)

அற்புடன்கவுந்தியுருவொடுமலர்மேலரசுவீற்றிருக்குமாரணங்குங் கற்புடைமகளிர்மனைதொறுநுழைந்துகாதலன்வரும்வருமென்ன [ற் வெற்பெழுந்தியங்கநோற்பதென்னென்றுமிளமைநில்லாது வேட்டவர்பா பொற்புறுநலத்தையளித்திடாரன்றேபுவிக்கொருபாரமாய்ப்புகுந்தார்.)

நறைமலர்ப்புத்தேளருளொடுமீன்றோரிருவரில்மரீசிநன்குயிர்த்த பெறலருந்தவத்துக்காசிபன்றக்கன்பெற்றகன்னியர்முலைப்போக நெறியினிலருந்தியமாரையளித்தானென்றிடினீவிர்தோய்வுறாத [தீர் முறைபலபிதற்றிமுதுக்குறைவிலாதுமுகிண்முலைமுயக்கம் விட்டொழிந்

முருகுவாய்மடுத்துமூசிவண்டாற்றுமுளரியந்தவிசினிலுறைந்தோன்[று திருமுகந்தடந்தோள்குறங்குதாளிவற்றிற்செனித்தவர்தம்மைவெவ்வே வருணமென்றுரைப்பதென்னையாரிடத்துமருவுதலாமெனமருட்டிக் கருநெடுந்தடங்கண்மடந்தையர்கன்னிக்கற்பினைத்துடைத்தனள்கமலை. ()

மன்னவன்காக்குமுலகநற்றருமம்வழுவலான்மன்னவன்றவமுந், துன்னரும்போகத்தொகுதியுமன்னோன்றொலைவருமாயுளுந்தொலைந்த, முன்னமோர்மறையோனுலிருநாளின்முதுமறையவன்வருமென்னச், சொன்னவையுளத்தினினைத்தலுமவன்முன்றோன்றினன்சுருதிநூல்மறையோன்.)

இஅ-வது-விஷ்ணுகாசியையடைந்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்·கஙகங.

---

ஐம்பத்தொன்பதாவது.

## திவோதாஸன்முத்தியடைந்த அத்தியாயம்.

தோன்றியமறையோன்சேவடிக்கமலந்தொழுதுமூத்தொழில் புரிவதற்குச், சான்றுமாயுயிர்களனைத்துமாயிருந்ததாமனைக்கண்ணனீயென்ன,வான்றவென்னறிவாலுணர்ந்தனனமார்ப்புணர்த்ததுமறிந்தனனுலங், கான்றவாளரவிற்கிடந்தபாரனைத்துங்களைகணுயின்றளவளித்தேன். (க)

அட்டமாயோகம்பயின்றவையனைத்துமாணவப்பயிரினைவளர்ப்ப,விட்டதோரெருவினியைந்தனவிமையோர்யாரையுமிகந்திவெம்பாவம், விட்டகன்றிடவுன்சேவடிக்கமலம்வெளித்தறிவுடையவென்றலைமேல்,மட்டவிழ்பட்டலைப்பசுந்துழாய்முகுந்தவைத்திடல்வேண்டுமென்றிரந்தான். (உ)

மாவலிததிசிவாணன்முப்புரத்தோர்தக்கன்மாதவம்பலவிழைத்துந்
தேவரையிகழ்ந்தவாற்றிஞற்றுயரஞ்சேர்ந்தனர்யானுமங்கதுபோல்
தாவரும்விசும்பினமரரையிகழ்ந்தபிழையிஞலென்னுழைச்சார்ந்த
பாவம்விட்டகற்றுந்தத்துவமெனக்குப்பணித்தியென்றடிமலர்ப்பரவி. ()

இலகொளிமணிச்சூட்டரவின்மேலுலகத்தெண்பதிஞயிரம்வருடந்
தொலேவில்பேரின்பந்துய்த்தனன்மீட்டுந்துய்த்ததேதுய்ப்பதையல்லாற்
கலேவலாயொன்றுங்காண்கிலன்பிறவிக்கருங்கடல்கடப்பதற்கின்னே
மலர்தலேஞானப்பெரும்புணேயருளால்வழங்குகவெனவழுத்திடலும்.(௪)

அறநெறிபிழையாதிருநிலம்புரந்தவலங்கல்வேலரசனுக்கின்று
மறைநெறிபிறழ்ந்தநெறியினேயுரைத்தல்தகாதெனவண்டுழாய்முகுந்த
னிறைபரஞ்சுடராயசலமாயொன்ருய்நிமலமாயுயிர்க்குயிராகி [ஞல்
யுறைதரும்பொருளினுண்மையைவேந்த னுளங்கொளவிரித்துரைத்தன

கங்கையங்கரையினிலிங்கமொன்றமைத்துவழிபடிற்கறைமிடற்றணிந்த
மங்கையோர்பங்கனருளிஞலின்றுமுதலவேழ்நாளினில்வயங்கு [ன்று
பொங்கொளிவிமானங்கணங்கள்கொண்டுன்பாற்போந்திடு மெனவுரைபுக
கொங்கலர்துளவத்தெரியன்மால்பஞ்சநதக்கரைக்குறுகினனிருந்தான். ()

கலேபயில்கேள்வியமைச்சரைக்கூவிக்கனேகடற்கருந்துகிலசைத்த
மலர்தலேயுலகமனேத்தையும்விழைவால்வளர்சயமாஞ்சயன்காக்க
விலகொளிமவுலிகவித்துமென்றெண்ணியீர்ம்புனற்கங்கைநீராட்டி
விலேவரம்பறியாவெயில்மணியிமைக்கும்விழுத்தகுகதிர்முடிபுனேந்தான்

மைந்தனேமவுலிசூட்டியபின்னர்வளர்புனற்கங்கையின்வடபா
லிந்திரதிருவினிளம்பிறைக்கண்ணியிறைவனுக்காலயமியற்றிச்
சிந்தையினுவந்துதன்பெயராலோர்சிவலிங்கமாயிடையமைத்துக்
கொந்துலாமலர்தூயொன்னலர்க்கடந்தகொற்றவன்வழிபடுமேல்வை. (அ)

ஆழிவெண்டிரையினறிதுயிலமருமைம்படைக் கடவுள்முன்னுரைத்த,
வேழுநற்றினமுங்கழிந்தபின்முக்கண்ணிறையவன்றன்னருளதஞற், பாழிய
ந்தடந்தோட்கணங்கள்செங்கதிர்கால்பரிதியோர்கோடிசேர்ந்தென்னச், சூ
ழ்சுடரின்மைக்கு மொழுகொளிவிமானந் துங்கவேல்மன்னன்முன்கொண
ர்ந்த. (௯)

நெற்றியங்கண்ணு நிலவுவெண்பிறைதாழ் வேணியுநீலமென்மிடறு,
மொற்றைவெண்குழையும்புனிற்றிளமறிமானேந்தியவொண்மலர்க்கரமு
ம், கற்றையங்கதிர்கால்மழுப்படைதாங்குகரமுமாய்ச்சிவனுருவமைந்து,
வெற்றிவேல்மன்னன்கதிர்மணியிமைக்கும்விமானமேல்மகிழ்ச்சியோடிவ
ர்ந்தான். (௰)

அரம்பையர்கவரிக்குழாம்புடையிரட்டவயனெடுமுனிவர்வாழ்த்தெடு ப்பப், புரந்தரன்முதலோர்பூமழைபொழியப்பொறிவரிவண்டினமுரலு, நரம்புதநாரைம்பாற்றிலோத்தமைமுதலகூத்தியர்தனித்தனிநடிப்பக், கருந்தடங்கண்ணிபங்கன்வீற்றிருக்குங்கைலேயினடைந்தினிதிருந்தான். ()

இன்னநற்காதையுரைத்தவர்கேட்டோரினிதெனவுவந்தவர்யாரு
மொன்னலர்க்கடந்துகடல்விளிம்புடுத்தவுலகெலாமொருகுடைநிழற்றிப்
பொன்னெடுந்திகிரிதிசைதிசையுருட்டிப்புவியதளசைத்தவனுறையு
மின்னவிர்குடுமிக்கயிலேமால்வரையில்விண்ணவரோத்தவீற்றிருப்பார். ()

ருகூ-வது-திவோதானன்முத்தியடைந்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கருஉள.

---

அறுபதாவது.

## பஞ்சநதத்தின்வரலாறுரைத்தஅத்தியாயம்.



அரிமதர்நெடுங்கணவிர்குழைதடவுமாய்ச்சியர்பிணித்ததாம்போடு
மருதிடைத்தவழ்ந்தமாயவன்பஞ்சநதத்திடைவைகியவாறும்
பெருகுநீர்வாவிக்கப்பெயர்புணர்ந்தபெற்றியுமினிதுகேளென்னக்
குருகுபொற்குன்றமெறிந்தவேலுழவன்குறுமுனிமகிழ்வுறவுரைப்பான்.

அருமறைதெளிந்தபிருகுவின்மருமானருமறைச்சிரசெனும்பெயரோ
னுருவமூன்றேசைநாற்றமோடிரதமுற்றிடாதுளத்தினேயடக்கி
வெருவரநோற்குமமைதியில்மதியில்வேல்கிடந்தனையவோடரிக்கட் [ள்
டெரிவைவிண்ணகத்திற்சுசியெனவுரைக்குஞ்சேயிழையவ்வுழியடைந்தா

முத்தரிச்சிலம்புதவளேவாய்ச்சதங்கைமுறைமுறைபூசலிட்டேங்கப்
பைத்தபாம்பல்குல்மேகலேயிரங்கப்பாணிகர்வண்டினந்துதைந்து
மைத்தவழ்குழலில்முரலமுன்போந்தவாணுதல்மதிமுகநோக்கிப்
பித்தரின்மயங்கியருமறைமுனிவன்பேதுறலுற்றுமாழ்கினனால். (௩)

வடுவகிர்நெடுங்கட்பேதையம்முனிவன்மயங்குதல்நோக்கியுள்வெருவிக்
கொடிநடுக்குற்றதெனவுடனடுங்கக்கோடில்மென்மலர்க்கரங்கூப்பி
யடியனேனடிகள்தவம்புரியிடத்தினடைந்த விப்பிழைபொறுக்கெனலும்
விடயமோராந்துமடக்கியமுனிவன்விளங்கிழைமகிழ்வுறவுரைப்பான். ()

தண்ணறுங்கமலத் தரசுவீற்றிருக்குந் தாக்கணங்கனையபூங்குழலாய், வெண்ணெய்செந்தழல்வாய்ப்பெய்திடினுருகும் விழைவொடுமாந்தர்தம் முள்ள, மொண்ணுதல்மகளீர்மதிமுகஞ்சிறிதுகாணினுமொள்ளிழையவ ணா, யெண்ணினுமவர்சொற்கேட்பினுமுருகுமென்றிடிலுரைக்குமாறெ வனே. (௫)

ஆதலாலுள்ளம்வெருவலைநீயீண்டடைதலானிலையினின்றிழிந்த
தாதுவைத்தரித்தியென்றலுமதனைத்தரித்தெழில்முழுவதுமமைந்த
போதரிநெடுங்கட்புதல்வியையின்றுமுனிவரன்பொருந்துசாலையினிற்
றீதறவிருத்திமின்னிவர்ந்தென்னச்சேணுயர்விசும்பிடைச்சென்றாள். (சு)

ஆங்கவளேகத்தனிக்கிடந்தழுதபுதல்வியையங்கையினெடுத்துத்
தீங்கெறிமுனிவன்மான்முலையூட்டித்தீதறவளர்த்தலுமவட்கு
நீங்கரும்பருவமெட்டிறந்ததனல்நிறைவளைமுன்னிவாட்டடங்கட்
பூங்கொடிவதுவையாற்றிடுகாலம்போந்ததுபுகல்தியென்றிடலும். (எ)

அளப்பருங்குணங்கட்கொருவனுய்த்தருமனைத்தையுமுணர்ந்தவனு
ளனேற், றுளக்கறவளித்தியென்றவனுரைப்பத்தூயநற்றவம்புரிந்தல்லா,
லுளத்திடைநினைத்தகொழுநனைப்பெறுதலரிதெனமுனிவரனுரைப்ப,வி
ளக்கொளியென்னச்சுடர்விடுமேனிவிளங்கிழைதவம்புரிந்தனளால். (அ)

கனிபடுகிளவியருந்தவநோக்கிக்கமலமென்பொகுட்டில்வீற்றிருக்கு
முனிவரனெய்தியாதுநீவேட்டதளிக்குவல்மொழிகெனச்சிறந்து
புனிதமாம்பொருள்களெவற்றினும்யானேபுனிதமாம்படியருள்கென்ன
வனையநல்வரங்களளித்துயர்விசும்பினருமறைவானவனகன்றான். (கூ)

எரிமணிப்பசும்பொற்கலன்கிடந்திமைக்குமிளமுலையருந்தவமாற்றி
முருகுவாய்மடுத்துமூசிவண்டரற்றுமொய்மலர்க்காவினெய்துதலு
முருவவாணுதலுமொளிர்மதிமுகமுமோடரிநெடுங்கணுந்தாங்க [னே
மருவுமோர்கொடியென்றடைந்துநற்றருமன் மம்மர்நோயுழந்துமாழ்கின

அனிச்சமென்மலரின்மிதிப்பினுஞ்சேக்குமந்தளிர்ச்சீறடிநோவக்
கனிப்பொறைசுமந்தகற்பகக்கொடியிக்காவிடைப்புகுந்ததென்றவத்தின்
றனிப்பலனுகுமிருதடந்தோளிற்றழுவுதியெனவிரந்தெய்த
முனிக்குரைத்தவன்றன்றருளினலன்றிமுயங்குதல்புரிகிலனென்றாள். (கக)

மாழையுண்கண்ணிமறுத்தனளாகமதிமருண்டணங்கினைநோக்கி
யாழினோர்புணர்ப்பின்மேவுதல்தருமத்திழுக்குறாதெனவினிதிசைப்பத்
தாழ்குழலதற்குமறுத்தலுமோங்கித்தழுவுதற்கடங்குறாதெழுந்த
கேழ்கிளர்பொம்மலிளமுலைவலிதிற்புல்லினன்கெடலருந்தருமன். (கஉ)

வலிதினீயென்னைத்தழுவியவாற்றால்வால்வளைநித்திலங்கொழிக்கு
மொலிதிரைநதியாயொழுகெனச்சாபமுரைத்தலுந்தருமன்மெய்புழுங்கி
யலர்முலைநின்னையிரக்கவுநெஞ்சங்குழைந்திடாவாற்றினுலகன்ற
சிலையெனக்கிடத்தியெனவுளம்வெருவிச்சேயிழைதந்தைபாலடைந்தாள்.

வந்தவையனைத்துந்தவத்தினுலுணர்ந்துமறைமுனிமகள்முகநோக்கிச்
சந்திரகாந்தச்சிலையதாய்மதியின்கதிர்களாற்றண்புனல்பெருகி

யுந்துதெண்டிரைநீரொழுகியதூதபாவையென்றுரைக்குமாநதியாச்
சிந்துநீர்த்தரங்கத்தருமமாநதத்திற்சிறப்பொடுஞ்சென்றுசேர்குதியால் ()

நின்னுடைமுனிவாலந்தமெய்யொழுகுதருமனுநீயும்வேண்டுழியி
னென்னுடைத்தவத்தால்முன்னுருவெய்தியிவைகவென்றினிதருள்புரியக்
கன்னலிற்கனிந்தகுதலையந்தீஞ்சொற்கன்னியுநதியுருவெடுத்து
மன்னியதருமநதத்தொடுமுள்ளமகிழ்வுறவந்துகூடினளால். (கஜ)

பரிதியஞ்செல்வன்றவம்புரிந்திடலும்பாய்கதிரொடும்வெயர்வெழுந்து
கிரணைமாநதியாயொழுகியதுயர்ந்ததருமமாநதங்கிளர்கங்கை
யருள்புரிதூதபாவைவான்கிரணையமுனையென்றைந்துமாநதியு
மொருவழிப்படலாற்பஞ்சமாநதமென்றுறுபெயராயதிவ்வுலகில். (கரு)

விரிபுனற்றருமந்தவமுயர்தூதபாவைசொல்விந்துநற்றீர்த்த
மருவியபஞ்சநதமெனமுன்னையுகமுதல்வரன்முறைவழங்கும்
பொருவறுநாமமிந்நதமதனிற்படிந்துளோர்பூதமோரைந்தி
னுருவுடையாக்கையெடுத்திடாரெய்தாமுத்திவீட்டுறைந்தினிதிருப்பார். ()

கூ0-வது-பஞ்சநதத்தின்வரலாறுரைத்த அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கடு௪௪.

---

அறுபத்தோராவது.

## விந்துமாதவன்றோன்றிய அத்தியாயம்.

தாற்றிளங்கமுகின்வாளைபாய்ந்துழக்கத்தமனியப்பாளைவாய்க்கீறி
யூற்றிருந்தொழுகும்பசிளந்தேறலுயர்வரையருவியிற்றூங்கு
மாற்றெறிகாசிவளநகர்பஞ்சமாநதக்கரையில்தெண்டிரைய
பாற்கடலதனிலுளமகிழ்சிறப்பப்பசுந்துழாய்முகுந்தன்வீற்றிருந்தான்.

மூக்குறும்பதனைவேரொடும்பிடுங்கிமூச்சவித்தருந்தவம்புரியு
மக்கினிவிந்துவெனும்பெயர்மறையோனுயிரகோடியாதபரிற்
கக்குசெங்கதிர்கால்கவுத்துவமணிந்தகண்ணனைநோக்கிமண்பொதிந்த
செக்கர்மென்கமலச்சேவடிப்போதுசென்னியிற்சூட்டினன்றெழுதான்.

இளங்கனிச்சுரும்புஞிமிறுமுண்டாரற்றுமீர்ந்துழாய்நறுமலர்தூவி
யுளங்கசிந்துருகவிருகணீர்வாரவொழிவறுமுவகைமீதூரக்
களங்கனியனையகண்ணகோவிந்தவென்றுகைகூப்பினரன்றோ
வளங்கனிந்தொழுகும்பொன்னுலகளிக்கும்வானவராவனென்றிசைத்தான்

இனையநாற்றுதிகள்பலவெடுத்தோதியிதயநெக்குருகிநின்றேத்து
முனிவனைநோக்கிவிண்டுந்தன்றருவலென்றலுமுனிவரனுவந்து

புனையுநின்னுமம்விந்துமாதவனென்றிவ்வுழிப்பொருந்துதியென்ன
வனையநல்வரமாங்களித்திருந்தவத்தோனகமகிழ்ந்திட விவையுரைப்பான்

கார்த்திகைமதியிலிருட்குறும்பெறியுங்கடவுடோர்தோன்றியதென்னப்
பூத்தலைச்சேவல்கூய்த்துயிலெழுப்புபுலரியிற்பஞ்சமாநதத்தை
யேத்தினர்படிந்தோர்கொடியவெஞ்சினத்தவெருமையேறுகைத்திடுமறலி
யார்த்திடும்பாசத்திடைச்சிக்கிட்டெய்தியதுறுதொனமறையறைந்த. (ரு)

உரைத்தகார்த்திகையில்யாவையுமுண்ணு தொழிந்திடலுறுதெனிற்க
னிவா, யருத்தியினருந்தலன்றெனிலொருபோதருந்திடலாகும் வெண்கல
த்திற், றிருத்தியவடிசிலுகர்ந்திடல்தீதாமெண்ணெய்பைந்தே னிவையரு
ந்தா,திருத்தல்நன்காகுமம்மதிமுழுதுமிலைதனிலருந்துதலியல்பாம்.(சு)

அன்னதோர்திங்களளவையும்புலால்நீத்தருளொடுமெவுனமாயருந்திற்
பன்னிருமதியுமருந்திடாதொழிந்தபலனுறுமாங்கவையருந்தின்
மன்னியமீனுப்மலத்துறுபுழுவாய்வருபிறப்பதனில்வந்துதிப்பர்
கொன்னுனைவைவேலரசருமந்தமதியிலூன்குறைத்துணல்விரும்பார். ()

வெண்கலமதனில்நறுநெய்பெய்தளிப்பின்வேதியர்க்கின்னமுதூட்டி
னெண்பதக்கோடுபொன்னினிதருளினெழிறிகழ்நீறுபூத்தொளிருங்
கண்கவர்வனப்பிற்பூசணிக்காய்நல்லுழுந்திவைகருணையின்வழங்கின்
வண்சிலைப்புருவவரம்பையர்கொம்மைவனமுலைதிளைப்பவீற்றிருப்பார்()

கடவுளாலயத்துணறுநெய்பெய்தகளிக்கணைசுடர்விளக்கமாட்டினரச்
சுடர்புனைவிளக்கமனத்திருள்கடிந்ததூமறைவேதியர்க்களித்தோர்
உடல்சினத்தறுகட்படர்மருப்பெருமையூர்ந்தவெம்மறலியூரடையார்
விடுசுடர்பரப்புஞானமெய்ச்சுடர்சேர்வெறுவெளியதனில்வீற்றிருப்பார்.

சிறந்தவிம்மதியிற்பொருந்தியவேகாதசியினிற்கண்படையுறுமல்
நிறைந்தநெய்விளக்கமேற்றியைம்புலனுநெறிபிறழாதுளத்தடக்கிக் [ர்
கறந்ததீம்பால்கொண்டுளமகிழ்ந்தாட்டிக்கடிமலர் தூயனைத்தொழுவோ
நறுந்திரைபுரட்டும்பாற்கடலதனினுன்முகனுயுள்வீற்றிருப்பார். (கஐ)

பொருவருமாதியுகமுதல்நான்குமாதிமாதவன்புகலனந்தன்
மருவியதிருமாதவனுயர்விந்துமாதவனெனும்பெயர்வழங்கு
மருமறைமுனிவவெம்முடையடியவொனுமனச்செருக்கினுலரனைப்
பரவிடாதிகழ்ந்தோருலப்பிலாக்கொடியபாழ்நரகிடைக்குடியிருப்பார். ()

கூக-வது-விந்துமாதவன்றோன்றியஅத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கஙஙஙு.



## அறுபத்திரண்டாவது.

## விந்துமாதவன் அக்கினிவிந்துவுக்குத்தீர்த்தமகிமை யுரைத்த அத்தியாயம்.



பொருதிரைப்பாதோதகக்கரையதனிற்பொருந்தியசங்கமேச்சுரனை
யருளொடும்வழிபட்டாதிகேசவனென்றமர்ந்தனமவ்வுருமுதலாய்
பெரிதுணர்வுடையோர்வழிபடுபிரயாகைமாதவனீறதாய்ப்பிறங்கு
மிருபதின்மேலுமூன்றுமாதவனுயெய்திநல்லுருவெடுத்திருப்பேம். (க)

வளமலிகங்காகேசவன்முதலாய்வயங்கரிச்சந்திரகம்ப
மளவையும்மணிகன்னிகையெனவுரைப்பரவ்வழியான்றவம்புரிய
வுளமகிழ்ந்தீசனளப்பருஞ்செல்வமுதவினனந்தநற்றடமே
தளவவெண்மூரற்பேதையாய்ப்போந்தவுருவுசாற்றுவலெனச்சாற்றும்.()

மாதுளங்கனியொன்றிடக்கையிற்றுங்கிவலக்கையினுற்பலந்தரித்துத்
தீதறவிளங்குமிருகரங்கூப்பித்திருநுதற்கண்ணொடும்வெள்ளைப்
போதுலாங்கமலமுத்துவெண்சேபுனைந்தியற்பன்னிருபருவப்
பேதையாமணங்கைவழுத்தினரன்றேபிறவிவேரறுத்திடும்பெரியோர்().

அன்னநல்லுருவம்பொன்னினுலியற்றியருச்சனைபண்ணுநரணங்கி
னின்னருள்பூத்தமூலமந்திரமூன்றிலக்கமோதினர்மலமொருவித்
தன்னிலையுணர்ந்துபெறலருமுத்திசார்குவர்சக்கரத்தடத்தில் [வார்
முன்னர்யானமைத்த விலிங்கபூசனைசெய்துறைந்துளோர் முத்தியிற்சேர்

மடல்வயிறுடையவண்டினந்துவைக்கும்வளமணிகன்னிகைத்தடத்தின்
குடபுலமதனிலுளதுபாசுபதக்குண்டுநீர்த்தடமதிலாடிப்
படவரவணியிலசைத்துநின்றுடும்பசுபதீசனைப்பணிந்திடுவோ
ரடைவதற்கரிதாய்விளங்குபாசுபதயோகத்தையெளிதினிலடைவார். (ரு)

உரைத்ததன்வடபாலுருத்திரவாசமெனுந்தடமுளததிற்படிந்தோர்
திருத்தகவுலகில்விளங்குவர்முத்தித்தீர்த்தமொன்றுங்குளததனி
லருத்தியினுடிமுத்திவானவனைப்பணிந்திடிலரும்பெறல்வீட்டி
னிருத்திடுமதன்மேற்குள்ளதோர்தீர்த்தமதன்பெயரவிமுத்தமென்பார்().

ஆங்கதன்புனலிற்படிந்தவிமுத்தவாதியைமலர்கடேய்த்தொழுவோர்
நீங்கருமின்பந்துய்ப்பரத்தலையினீடொளித்தாரகப்பெயரி
னேங்குயர்தீர்த்தமுளததின்மூழ்கியுவப்பொடுந்தாரகைக்கடவுள்
பூங்கழல்வணங்கிற்றாரகப்பிரமமறையினைப்புங்கவன்புகலும். (எ)

# விந்துமாதவன் அக்கினிவிந்துவுக்குத்தீர்த்தமகிமைஉரைக யுரைத்த அத்தியாயம்.

அவ்வுழிக்கந்தவாவியொன்றுளதாலதன்புனலாடிவாட்டடங்கட், கொவ்வையங்கனிவாய்க்குறமகள்கொழுநற் ரெழுதவர்கொடுந்துயர்ப்பிறவிப் பவ்வம்விட்டொழிவர் துண்டிவாவியினிற்படிந்துயர் துண்டியைங் கரன்றன், றெய்வமென்கமலச்சேவடிபணிவோர்சிந்தையின்விழைந்தன பெறுவார். (அ)

அன்னதன்றென்பால்விளங்குறுபவானிதீர்த்தமொன்றுளததின்மூழ்கிப், பொன்விழுதொட்டிக்கிடந்தெனப்படர்ந்தபுரிசடைப்பவானியைவணங்கின், முன்னருங்பிறவிதொலையுமோர்ஞானவாவியொன்றுளததின்மூழ்கி, மன்னுஞானேசற்பணிந்திடில்மரணகாலையில்ஞானம்வந்தடையும். ()

பொருகடல்குடித்தும் குடித்தெதிரெடுத்தும் புயல்கிடந்துறங்குதண்சோலை, விரைவளந்தருநீர்க்கங்கைசூழ்காசிவிண்ணவனுறையுளின்றென்பால், மருவியதெறிநீர்மாதவதீர்த்தமதுபடிந்தென்னையும்வணங்கி, னருளின்வைகுண்டத்தினிதுவீற்றிருப்பரதன்பலனுரைக்குமாறரிதால். (கo)

அத்தலைச்சிறந்தபிதாமகதீர்த்தமொன்றுளதலங்குநீராடிப்
பைத்தலைத்துத்திவாளரவணிந்தபிதாமகேசனைவழிபடுவோர்
முத்தியினடைவர்பகீரததீர்த்தமொன்றுளதாங்கதின்மூழ்கி
மைத்தவழ்மிடற்றுப்பகீரதக்கடவுட்பணிந்தவர்வானவராவார். (கக)

மறைமுழுதுணர்ந்தோர் பரவுமார்க்கண்ட தீர்த்தமொன்ருங்குளதத னி, னிறைபுனலாடிக்கறைமிடற்றணிந்தமார்க்கண்டநிருமலன்ருளில், நறுமலர் தூவிவிழைவுடன்ரெழுவோர்நாகிளவெருமையேறுகைக்கும்,தெறுசினத்தறுகண்மறலிவெவ்வலையிற்சிமிழ்ப்புருதுலகில்வீற்றிருப்பார் ()

இன்னனகடவுட்டீர்த்தமுற்றுளைப்பிறபலவுளவிவையெலாமோங்கி [ங்
மன்னியமணிகன்னிகைதனைத்தினமும் வணங்கும்வைகுண்டமாதவன்பூ
கன்னியம்படலைப்பசுந்துழாய்வீரமாதவன்காலமாதவன்மற்
றுன்னருந்தசாவதாரமூர்த்திகளுங்காசியெங்கணுமினிதுறைவார். (கஉ)

நாரணனைஞ்நூற்றுவர்கள்முப்பதின்மராமையினுருவுநண்ணினர்க
ளோரிருபதின்மர்மீனுருவமைந்தோருயர்ந்தகோபாலர்நூற்றெண்ம
ராருயிர்குறையாவருந்தவத்தமணராயினர்சிறந்தமுப்பதின்மர்
ஏர்பெறுபரசிராமர்நூற்றொருவரிராமரோர்துளவணிபெருமான். (கஙு)

தீயுமிழ்குருதிநெட்டிலைச்சூலமேந்தியசிவகணமறுநூ
ருயிரமிவர்கள்காசிமாநகரமளிக்குனரைம்படைக்கடவுள்
மாயவன்காவற்கணங்களுமறுநூறுயிரம்வான்பெருங்கதையும்
பாயிருட்பிழம்புபருகுவெஞ்சுடர்கால்நேமியுந்தாங்குபுபரிக்கும். (கஇ)

கனைகதிர்த்திகிரிக்கேசவன்முதலாய்க்கண்ணனீருவறுநான்கு, புனை து
மூாயலங்கல்மாதவருளராங்கவர்திறம்யாவரோபுகல்வார், எனவெடுத்தியம்பு
ங்காலேயிலிறைவன்வரவுபார்த்திடமுனம்விடுத்த, தனிநெடும்பனைத்தொ
ட்கொடுஞ்சிறைக்கலுழன்போந்தடிபணிந்திவைசாற்றும். (கசு)

ஆயிரங்கோடிபரிதிவான்பூத்ததாமெனவலர்கதிர்பரப்பி
மீயுயரேற்றுக்கொடிமணிச்சுடரவிளங்கொளிவிமானமேற்பொலிந்து
பாயிருவிசும்பினமரரேத்தெடுப்பப்பல்லியந்துவைத்திடவாதி
நாயகன்வருதல்காண்டியென்றுரைப்பநோக்கினனுகணைத்துயின்றோன். (

சுஉ-வது-விந்துமாதவன் அக்கினிவிந்துவுக்குத்தீர்த்தமகிமையுரைத்த
அத்தியாயம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கஙஎஉ.

---

அறுபத்துமூன்றாவது.

## விஸ்வநாதர்காசியையடைந்தஅத்தியாயம்.

நெய்ம்முகங்கமழுஞ்செம்முகத்திகிரிநீனிறவண்ணனின்றேத்த
மைம்முகிலகடுகிழித்தெழுந்தோங்குமணிமதிற்காசிமாநகரிற்
செம்மணிச்சுடிகைவாளராவசைத்ததெய்வநாயகனடைந்திடலு
மம்மவாங்குற்றசெய்திகளனைத்துமறைகெனமுருகவேளறையும். (க)

இருநிலங்கடந்தவொருதனிமுளரியீர்ந்துழாய்முகுந்தனுமொருகோட்
டருவிவீழ்ந்தென்னநிறைகடாங்கவிழ்க்குமைங்கரக்கடவுளுமுவந்து
பரிதியஞ்செல்வனருமறைக்கிழவன்கணங்கள்யோகினியிவர்பலரும்
விரவினர்சூழமுரட்படைச்சூலவிண்ணவன்றன்னுழையெதிர்ந்தார். (உ)

களிற்றுரிபோர்வையந்தணன்வருதல்காண்டொறுங்காண்டொறுந்தத்
த, முளத்திடையுவகைமீக்கொளவணங்கிநிற்றலுமொருதனிக்கடவுள், த
ளிர்த்தபேரன்பினைங்கரன்றன்னைத்தழீஇயினனுச்சிமோந்திருப்பத், தெ
ளித்தநான்மறையோன்வலத்துமாலிடத்துஞ்செம்மலேயேத்தினரிருந்தார்

மற்றுமாங்கிருந்தசிவகணமுதலவானவரியாரும்வெங்கதிர்கா, லொற்
றையங்குழையோனினிதருட்கடைக்கணேக்கமுற்றுவந்தனரிருப்ப, முற்
றுணர்கேள்விமறைகொணுன்முகத்துமுப்புரிநூலணிமுனிவன், கற்றை
யஞ்சடிலத்தண்ணல்மென்மலர்ப்பூங்கழலிணைபணிந்திவைகழறும். (ச)

நெஞ்சகம்வெருவக்கரமலர்கூம்பவிருமலனருண்முகநோக்கிக்
கஞ்சமாமலரினரசுவீற்றிருக்குமுனிவரன்கருணையங்கடலே

வெஞ்சுடர்வடிவேல்விறற்றிவோதாஸன்விழுமியன்றவறிழைத்திலனு
லஞ்சினனவன்றனரசுகோல்கோடவியற்றுறுதாங்கிருந்தனனுல். (௫)

அடிகளும்மேவல்முடித்திடாத்தீமையகன்றிடப்பாம்பின்மேற்கிடந்த,
படிமுழுதேத்துமிலிங்கமொன்றமைத்துப்பழிச்சினனெனவுரைபகர்ந்து,
கடிகமழ்செய்யாறுமலர்தூவிவணங்கலுங்கறைமிடற்றெந்தை, யொடிவி
னின்பூசையுவந்தனம்வெருவாதுறைதியென்றருளொடுமுரைத்தான். (௬)

எண்ணருங்கணங்களாதபன்முதலயாரையுந்தனித்தனிநோக்கிப் [மா
புண்ணெடுபழகிவெண்ணிணந்தோய்ந்த பொருதிறற்கணிச்சியெம்பெரு
னண்ணலங்காசிநகரினிலிலிங்கமமைத்தினிதிருத்தலினுவந்தே
முண்ணடுக்கெய்திவெருவலென்றருளாலுரைத்துமாதவனையுமுவந்தான்

இன்னணமிருக்குமமைதியிலெவருமேத்துகோலோகம்விட்டிழிந்து
மன்னியசுனந்தைசுமனைசைசுசீலைசுரபிபத்திரையெனவயங்கும்
பன்னருஞ்சீர்த்தித்தேனுவோரைந்தும்புகுந்துதீம்பால் மழைபொழியா
பொன்மலர்களுலும்வாவிகளனைத்தும்பொலிவுறப்பெருக்கியவன்றே. ()

ஆங்கதுநோக்கிதன்பெயர்கபிலதீர்த்தமென்றழல்மழுப்படையோன்
நீங்கறவுரைப்பவிண்ணவராடித்தற்பணஞ்செய்தலுஞ்சிறப்பி
னோங்கியகருணையக்கினிச்சுவத்தர்பஞ்சதரொழிவிலாச்சியபர்
பாங்குறுமரபிற்சோமிபரென்னும்பண்ணவர்பிதிர்க்கள்வந்தடைந்தார்.

பண்ணவர்பிதிர்க்கள்திங்களங்கண்ணிப்பரமனைநோக்கியிப்புனலின்ம
ண்ணியாடினர்தந்தொடருறுபிதிர்க்கள் வான்கதியதனிலெஞ்ஞான்றும் ந
ண்ணுதல்வேண்டுமெனவரங்கேட்பவளித்திடுமேல்வையினந்தி,விண்ணு
யர்குமிக்கொடுஞ்சியந்தடந்தேர்விரைவினிற்புகுந்ததென்றுரைத்தான்()

உலகெலாம்பூத்தவுந்தியங்கடவுளொளிர்மணிமலர்க்கரந்தாங்க
மலர்செழுங்கமலப்பொகுட்டுறைபிரமன்வாசவன்சாமரையிரட்ட
வலகில்பல்கணங்கள்வணங்கியேத்தெடுப்பவந்தாதுந்துமிமுழங்க [ன்
விலகொளிக்குமிக்கொடுஞ்சியந்தேரினெம்பிரான் விரைவினிலிவர்ந்தா

ஓரெழுகோடியைங்கரர்கோடிவயிரவரொன்பதுகோடி
சீர்கெழுமெண்டோணீலிகள்மயின்மேற்செல்லும்வேலுழவரொண்கோடி
யேர்பெறுமியக்கரொன்றரைக்கோடியிசைநவில்கின்னரர்கோடி
கூர்நுதிப்பிறைப்பற்புயங்கமோர்மூன்றுகோடிதானவரிருகோடி. (௧௨)

முப்பதுகோடிமேலுமுக்கோடிவானவர்முனிவரொண்பான்மேல்
வைப்புறுமாறுயிரர்மனைவாழுமுனிவருமத்துணைவகுத்துச்
செப்புறுகணமோர்கோடிமேலிருபானுயிரந்திவவியாழ்வல்லோ
ரரப்பிலெண்பதினுயிரராறுபதினுயிரவர்வானுறைந்தகூத்தியரோ. (௧௩)

ஏயநற்சேடியுறையும்விஞ்சையர்களிரண்டுநூறுயிரத்தொருபா
னுயிரர்காமதேனுவெட்டிலக்கங்காருடமகளிராறிலக்க
மீயுயர்வரையெண்ணுயிரஞ்சிறந்தவான்பதிவிளம்புமுந்நூறு
பாய்திரைக்கடலேழெண்டிசைக்கரியைம்பத்துமூவாயிரநதிகள். (௧௪)

யாவருஞ்சூழ்ந்துவணங்கினர் போதவென்னையாளுடையவெம்பெருமான
பாவடிக்களிறுபாய்கதிர்ச்செந்நெற்கழனியிற்பகட்டிளவாளை
தாவமுட்குடக்கூன்சங்கினம்வெருவித்தடந்தொறுமலறிமுத்துயிர்க்குங்
காவுடுத்தோங்குகங்கைநீர்வேலிக்காசிமாநகரில்வந்தடைந்தான். (௧௫)

இனையநற்காதைகேட்குநர்நவின்றோரெழுதினோரினிதெனவியந்தோர்
பனைவகிர்ந்தன்னபடர்மருப்பெருமையூர்திதன்பதியினிற்புகாது
கனைகடல்வயிறுகுழையமத்தெறிந்துகடவுளர்க்கின்னமுதீந்த
புனைதுழாயலங்கற்பண்ணவன்காணுப்பூங்கழனீழல்வீற்றிருப்பார். ()

சுஙா-வது-விஸ்வநாதர்காசியையடைந்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௫அஅ.

அறுபத்துநான்காவது.

## விஸ்வநாதர்முனிவனையளித்தஅத்தியாயம்.

கூந்தலம்பிடிசூழ்களிறுபாய்கழனிக்குறைபுனற்காசிமாநகர்விட்
டேந்தெழிற்கும்பமிமந்தரத்தெய்துநாள்முதலிற்றைநாள்காறுங்
காந்துமுத்தழல்செய்சைசிடமுனிவன்கருதரும்யோகினிலமர்ந்தா
னுய்ந்தநூற்கேள்விநந்தியீண்டவனைத்தருதியென்றமலனுங்கறைந்தான்.()

நந்தியாண்டெய்தியோகினிலுறங்குநான்மறைக்கிழவன்மெய்குளிர்ப்ப
க், கொந்துலாங்கமலப்போதினிற்றடவிக்கொன்றையந்தொடையலெம்பெ
ருமான், வந்திடப்பணித்தானெனலுமம்முனிவன்வல்விசைவளியின்வந்
தெய்திச், சந்தணிந்தோங்குதடமுலைக்கவுரிதன்னொடுமிறைவனைத்துதித்
தான். (௨)

தாமரைத்தெரியனுன்மறைக்கிழவன்றவத்தினைவியந்துநீவேட்ட
காமருவரமின்றளிப்பலென்றெறிநீர்க்கங்கையந்திரையலைபுரட்டுந்
தேமலர்ச்சடையோனுரைப்பநின்கமலச்சேவடிப்போதிலெஞ்ஞான்று
மேமுறுமிதயத்தும்பிநீங்காமலிருந்திடவேண்டுமென்றிசைத்தான். (௩)

இருள்புறந்துரக்குமிளநிலாத்திங்களீர்ஞ்சடையந்தணனுவந்து
பொருவருந்தவத்தோயெற்றொழுதன்றிதுகரிலெனனுநெறிபூண்ட

பரிசினல்வேட்டவரமுனக்களித்தேம்நமதுதாள்பணிந்துலகேத்த
மருவருமுத்திபெறுகுவையோகாசாரியனென்னவும்வாழ்தி. (௪)

நின்னுடைப்பெயராற்போற்றுமிவ்விலிங்கநீடுகவருடமூன்றிதனை, மு
ன்னினர்பணிந்தோர்யோகமெய்திடுவருலகெலாமுத்தியெய்துவதற், கன்
னாநல்லிலிங்கத்துறைதும்யாமென்னவரம்பலவருந்தவற்களித்துக், கன்ன
ன்மென்றனையகுதலையந்தீஞ்சொற்கவுரியோர்பங்கன்வீற்றிருந்தான். (௫)

௬௪-வது-விஸ்வநாதர்முனிவனையளித்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௫௬௬.

---

அறுபத்தைந்தாவது.

## விஸ்வநாதர்காசியின்சிறப்புமுனிவருக்குரைத்த அத்தியாயம்.

எறிதிரைபுரட்டும்பூம்புனலசியும்வரணையுமியைந்துழிமுதலாய்க்
கறைமிடறணிந்தசங்கமேச்சுரமீறுகியகடவுணற்றீர்த்தத்
துறையுனராகியருந்தவமியற்றியுணர்வரும்யோகினிலமர்ந்த
மறைபயில்வாழ்க்கைமுனிவரர்யாருமணிமிடற்றெந்தைபாலடைந்தார். ()

அருட்கடன்பூண்டவறுதொழிற்செல்வரடைதலுமவர்முகநோக்கிப் [ண்
பொருப்புவிற்குனித்தபுரிசடைப்பெருமானினிதினினருந்தவம்புரிந்தி
டிருத்திரோவெனலும்வானவர்மகுடகோடிகளிறைஞ்சிடுபொலந்தாட்
டிருத்தகுகமலஞ்சென்னியிற்சூட்டிச்சிந்தைநைந்தேத்தினர்புகல்வார். ()

வேத்தராமகுடத்துச்சியிற்பரிக்கும்விரிகடல்மாநிலமுழுது
மேத்துநல்வளங்கூர்காசிமாநகரினுண்டுகளெறிவளிபுடைப்பச்
சேர்த்துளார்மேற்சென்றுறினுமூவிலைவேற்செல்வராயுறைவரிந்நகரி
னீத்திடாதுறைவார்க்கின்பமேயலதுநிகழ்வதொன்றுளதுகொலென்றூர். (

தீங்கரும்பெருத்திற்றூங்குதேனிறாலிற்சினைவராற்கன்றுபாய்ந்துழக்கும்
பூங்கதிர்க்கழனிவிளிம்புடுத்தோங்குபூம்புனற்காசிமாநகரி
னீங்கருமன்புற்றருந்தவமாற்றிநீவிரிங்கிருத்தலால்வேட்ட [ன்
யாங்கடிதளித்துமெனவிலாக்கொழிக்கு மிளமதிக்கண்ணியோனிசைத்தா

பண்ணுலாங்கிளவிபங்கவூன்பொதிந்தபழிபடும்யாக்கைபோமளவு, மண்
ணலங்காசியுறைந்திடல்வேண்டுமன்றியும்யாங்களீண்டமைத்த, வொண்

ணிறவிலிங்கத்துறைந்திடல்வேண்டுமெனவிருகரங்குவித்திறைஞ்சி, யெ
ண்ணுறுதவத்துமறைபயில்முனிவர்யாவருந்தனித்தனியிசைத்தார். (௫)

தியுமிழ்தறுகட்படவரவசைத்தசெம்மலுமுவந்தொருபதினெண்
ணாயிரத்தறுநூற்றெண்பதின்மேலுமைந்துடையந்தணர்தமக்குப்
பாயிருவிசும்பினமரருமறியாப்பதத்தொடுமெவ்வரமளித்து
மீயுயர்குடுமியிமயமீன்றெடுத்தவிளங்கிழைதன்னொடுமறைந்தான். (௬)

வருபெருந்தவத்துநான்மறைக்கிழவர்யாவருமுளமகிழ்கூர, வருளொடும
மைத்தவிலிங்கபூசனை செய்தன்பொடுமினிதுவீற்றிருந்தார், பொருவிலி
க்காதை யுரைத்துளோர்கேட்டோரெழுதினோருளமகிழ்பூத்தோர், விரிக
டலுலகமுழுவதுமேத்தவெளிதினில்வீடுபெற்றுறைவார். ௭)

சுரு-வது-விஸ்வநாதர்காசியில்சிறப்புமுனிவருக்குரைத்த
அத்தியாயம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கசு00.

---

அறுபத்தாறுவது.

## பராசரவிலிங்கமுதலானவிலிங்கத்தின் கதையுரைத்தஅத்தியாயம்.

பிருகுநாரணர்மார்க்கண்டர்மாண்டவியர்பராசரர்பெருந்தவமதங்க
ரருணர்காபாலிமருத்துவர்குலாலர்காலவர்வச்சரரரீதர்
பொருவிலம்முனிவர்முதலியோரமைத்தவிலிங்கமையாயிரம்புடைசூழ்
மருமலரிதழிபுனைந்தசேட்டேசன்கதையினைக்கேளனவழங்கும். (க)

வேறு.

மைம்மலர்க்கூந்தறாழவால்வளைவாய்விட்டார்ப்ப
வம்மவோமருங்குனொமென்றடிச்சிலம்பலறியேங்கப்
பொம்மல்வெம்முலையிற்றாழ்ந்தநுண்டுகிற்போர்வைசோர
வெம்மையாளுடையவன்னையெழில்செய்பந்தாடினாளே. (உ)

கந்துகம்புடைத்தமுத்திக்கரும்பினைவியந்துநோக்கிச்
சிந்தைமாழாந்துதியவிகுளனுற்பலனென்றோதும்
வெந்திறலசுரர்நெஞ்சின்விழைவினாலுருவமாறி
யெந்தைதன்கணங்கள்போலவிறைவிமுன்னெய்தினாரே. (௩)

ஆங்கவர்போந்தமாயமறிந்திளநிலவுகாலும்
பூங்கதிர்த்திங்கள்வேணிப்புங்கவன்கண்ணிற்காட்டத்

## பராசரவிலிங்கமுதலானவிலிங்கத்தின் கதையுரைத்தஅத்தியாயம்.

தீங்குறுமசுரராவிசென்றிடவாரந்தாழ்ந்த
கோங்கிளமுலையாள்செங்கைப்பந்தினாலெறிந்துகொன்றாள் (௪)

வெந்திறலசுரராவிவீட்டியபொன்னம்பந்து
கந்துகேச்சுரனென்றோதுமிலிங்கமாகியதிக்காதை
சிந்தையினுணர்ந்தோர்கேட்டோர்பவக்கடல்சேராரொன்னி
லந்தநல்லிலிங்கங்கண்டோர்பேற்றினையறையொணாதால். (௫)

அவ்வுழிநிகழ்ந்தகாதையொன்றுளதறைவல்கேட்டி
செவ்வடுபிரகலாதன்மாமன்வெஞ்சினவுவைவே
லெவ்வமிலோசைபோயதுந்துமிநிருதனென்போ
னவ்வியமவித்தநெஞ்சத்தமரருக்கமரினாற்றான். (௬)

விண்ணவர்வலியுஞ்சீரும்விளைவதெவ்வாறென்றுள்ளத்
தெண்ணினனாகிநாளுமெரியினையூட்டியுண்ணு
மண்ணுறைதேவர்தம்மால்வந்ததம்மறையோர்ச்செற்றால்
நண்ணருமாற்றலெல்லாம்நடந்திடுமென்னவோர்ந்தான். (௭)

மாசறுதவத்தின்மிக்கமறைபயில்முனிவர்யாரு
மாசினிவருக்கைபோழ்ந்துகவிழ்தலையரம்பைசெற்றுப்
பாசிலைப்பதுமத்தோட்டிற்பகட்டிளவாளைதுஞ்சுங்
காசியினுறைவோரென்னத்தன்னுருக்கரந்துபுக்கான். (௮)

நீரிடைக்கரந்துவேதமுனிவரைக்கொல்லுநீலக்
கார்தவழ்காவினெய்திக்கண்ணுறுமவரைக்காயு
மூர்வயினதிதிபோலவுறைந்தவருயிரையுண்ணும்
போர்கெழுதறுகட்சீயப்போத்தெனத்தகையநீரான். (௯)

இன்னணந்திரியுநாளிற்சிவநிசியெய்தலோடும்
பொன்னவிர்கடுக்கைவேணிப்புனிதனைப்போற்றல்செய்யும்
பன்னருமறையோர்முன்னர்ப்பாய்சினக்குருதிப்பேழ்வாய்க்
கொன்னுனையெயிற்றவெங்கட்கோளரியென்னச்சென்றான். (௧0)

கொல்லியவெதிர்ந்தகூற்றிற்குறுகியவசுரரோற்றை
யெல்லொளியிலிங்கநாப்பணீர்ஞ்சடையெண்டோள்முக்கட்
டொல்லைமாமறையோன்றோன்றிச்சுடர்மணிக்கரங்கடம்மால்
மல்லலந்தடந்தோள்பற்றியாருயிர்மாய்த்திட்டானே. (௧௧)

அறுதொழில்முனிவர்யாருமடல்கெழுமவுணற்செற்ற
பிறைமுடிப்பெருமான்றாளிற்பெய்மலர்மாரிசிந்தி

யிறைவவீண்டுறைதல்வேண்டுமென்னலுமதற்குநேர்ந்தான்
கறையவிர்ப்புயங்கம்வீக்குகனைகழற்புனிதன்றானே. (கஉ)

அன்றுதொட்டுலகஞ்சேட்டேச்சுரன்றனையன்பினோடு
மின்றிகழெயிற்றுப்பேழ்வாய்வியாக்கிரேச்சுரனென்றோது
மென்றவிக்காதைகேட்டோர்பயின்றுளாரெவரும்வான்றோய்
பொன்றிகழ்குடுமிச்செம்பொற்பொருப்பில்வீற்றிருப்பரன்றே. (கங)

சுசு-வது-பராசரலிங்கமுதலானவிலிங்கத்தின்கதையுரைத்த
அத்தியாயம்-முற்றிற்று.
ஆ. திருவிருத்தம்-கசுசங.

அறுபத்தேழாவது.

# சயிலேசன்முதலானவிலிங்கத்தின்கதையுரைத்த அத்தியாயம்.

கரும்பனமொழியாள்பங்கிற்கடவுள்சேட்டேசன்றென்பா
லரம்பையர்போற்றும்லிங்கமொன்றுளததனின்பாங்கர்ப்
பெரும்புனல்வாவியொன்றுண்டதனிடைப்படியப்பெற்றோர்
விரும்பியயாவுமெய்திவீடுலகடைவரன்றே. (க)

வாசுகீச்சுரன்கபாலிவயிரவன்பிதாமகேசன்
ஏசில்காற்கோடகேசனிடபேசன்கவுமாரீச
னுசில்கங்காதரேசன்கந்தருவேசனாதி
யோசைபோமிலிங்கமாங்குப்பற்பலவுண்டுமாதோ. (உ)

மண்டுதீம்புனலருதவரணையங்கணாயில்வைகிக்
கொண்டல்கண்படுக்குஞ்சோலைக்குளிர்புனற்காசிதன்னை
முண்டனங்குண்டனேசமெனுமிரண்டிலிங்கமுற்று
மண்டரோத்தெடுப்பநாளுமருள்புரிந்தளிக்குமன்றே. (ங)

அத்தலைநிகழ்ந்தகாதையொன்றுளதறைவல்கேண்மோ
மைத்திருமேருகுஞ்சாரல்வான்றொடுகுடுமிநெற்றி
வித்தகவிமயவேந்தைவேட்கைமீதூரநோக்கித்
தத்தரிநெடுங்கட்செவ்வாய்முகிழ்முலைமேனைசாற்றும். (ச)

ஓட்டினிலையமேற்றுண்டேர்பெயரின்றியீமக்
காட்டிடைவதிந்துசாம்பரணிந்துவெங்கரித்தோல்போர்த்த
நாட்டமூன்றுடையபித்தற்களித்தனைக்கைசெய்தி
கேட்டிலமெங்களுளென்றுணர்ந்ததுஇளைத்துசென்றாள். (ரு)

சேட்டிளம்பரிதியென்னச்செழுமணிக்குப்பைசெம்பொன்
மோட்டிளங்குரும்பையென்னமுகிண்முலைமகளிர்வெள்ள
மூட்டரக்குண்டபொற்றாசுலப்பிலகொண்டுதெண்ணீர்
வாட்டமில்வரணைசார்ந்தான்வளங்கெழுமிமயவேந்தே. (சா)

கன்னியம்புரிசைசூழ்ந்தகாசியிலிறந்துளோர்கள்
பொன்னவிர்கடுக்கைவேணிபுனைந்திளமறிமானேந்தி
யின்னமுதுகுக்குந்தூயவிளநிலாக்கண்ணிவேய்ந்து
மின்னவிர்விமானமீதுமிடைந்தனர்போகக்கண்டான். (எ)

ஊடலிற்பிரித்தவோர்காழ்முத்தமுமுயிரையன்னார்
கூடலிற்பரிந்துசிந்துங்குரூஉச்சுடர்மணியுந்தூற்றி
நீடொளிபரப்புவானமீனெனநிலவுகான்று
சேடமைமறுகுதோறுங்கிடப்பனதெரியக்கண்டான். (அ)

நறைமலர்த்தருக்களெல்லாங்கற்பகநதியினுடை
வுறைதருமடவார்யாருமுருப்பசிமுதலாமாதர்
சிறைபடுபுனல்களெல்லாங்கங்கைநீர்திகழுமுன்றிற்
கறவைகள்யாவுந்தேனுவெனவுளங்களிப்பக்கண்டான். (கூ)

சிறந்தொளிர்குடிகளியாவுஞ்சிவகணமாவிநீங்கி
யிறந்துளோர்திங்கள்வேணியெம்பிரானுருவுகொள்வர்
மறந்துமிந்நகர்க்குவேதனெப்புமைவகுக்குமேயென்
றறங்கிடந்தொழுகுசிந்தையலமரநோக்கினின்றான். (கய)

பாவடிப்பருமயானைப்பகட்டெழின்மார்பன்முன்னர்
மாவடுநோக்கிபங்கன்வளநகர்க்கங்கையாடிக்
காவடிகொணர்வோன்றன்னைக்கண்ணிணைகளிப்பநோக்கி
யோவறுதவத்தோயிந்நாட்டரசெவனுரைத்தியென்றான். (கக)

அமைவருமுலகமெல்லாமமைத்தளித்தழிக்குமேலோ
னிமயமென்கொடியினேடுமீண்டரசமைக்குஞ்செய்தி
கமையுடையிமயவேந்தகருதிலைபோலுமென்னத்
தமரவெண்டிரையினேங்குமுவகையங்கடலுட்டாழ்ந்தான். (கஉ)

பன்னகப்பள்ளிமேயபாற்கடல்துயின்றுளோற்கு
மன்னமூர்ந்தவற்குமற்றையமரர்க்குமறியொணுத
முன்னவனுகியங்கண்முழுதுலகளிக்குமூர்த்திக்
கென்னையாமளிப்பதென்னநாணெடுமுள்ளத்தெண்ணி. (கந)

நிதியறைதிறந்ததென்னநெடுநிலைமாடமோங்கி
மதிவடிம்பிடறுங்காசிமாநகர்தன்னில்வெய்யோன்

புதையிருட்குப்பைசீத்துப்புகுமுனிப்பொருளினுலோர்
சிதைவறுகடவுட்பைம்பொற்சினகரமியற்றுகென்றான். (கச)

இலைத்தொழில்பூண்செய்திண்டோளிமயவேந்துரைக்குமாற்றந்
தலைக்கொடுகடவுட்டச்சனியற்றியகோயில்தன்னில்
நிலைத்தலைவிளங்குபாவசயிலமென்றிசையினீங்கா
துலப்பறுதிருவின்மிக்கவிலிங்கமொன்றமைத்துவப்பால். (கரு)

மங்குல்வாய்துடைக்குஞ்சோதிமண்டபமொன்றுதூய
திங்கள்வெண்மணியிற்செய்துதன்பெயரதனிற்றீட்டி
யங்கதிரொழுதல்முன்னர்பஞ்சமாநதத்தினுடித்
தங்கியகோயில்முன்னர்மணியெலாங்குவித்துத்தாழா. (கசு)

துளிமுகில்கடல்வாய்கொண்டுசூலுளைந்தலறுஞ்சாரற்
குளிர்பனிதூங்குஞ்செம்பொற்குடுமிதாழிமயவேந்த
னிளநிலாக்கொழிக்குந்திங்களீர்ஞ்சடைப்பெருமான்பங்கில்
வளரிளமுலையையின்றமன்னவன்போயினுனே. (கஎ)

எண்டிசைப்பரப்புமேயவிருண்முகங்கிழிக்கும்வெய்யோன்
கண்டுயிலெழுப்பத்தோன்றுங்காலையிலிமயவேந்த
னண்டரும்வியப்பச்செய்தவாலயநோக்கிக்குண்டன்
முண்டனனென்போர்செங்கைமுகிழ்த்தனரிறைஞ்சிப்போனுர். (கஅ)

பாட்டளிதுவைப்பவிண்டுபருமுகைவெடித்தமன்றற்
சேட்டிளங்கொன்றையோடுதிங்களங்கண்ணிவேய்ந்த
நாட்டமூன்றுடையபெம்மான்வரணைமாநதியின்வெய்யோ
னேட்டறநிவந்தசெம்பொற்சினகரம்புதிதொன்றுண்டால். (கசு)

யாதெனவறிதறேற்றேமென்றுபூந்துணர்மந்தாரப்
போதரித்தொழுகுநீத்தப்பொருதிரைக்கங்கைசூழு
மேதகுகாசிகாப்போர்மேருவிற்குனித்தமேலோன்
பாதமென்கமலஞ்சென்னிசூட்டினர்பணிந்துசொன்னர். (உ0)

மூதுலகனைத்துந்தானுமுன்னவனறியான்போன்று
மாதொடுவிளைவினெய்திவான்றெடுகுடுமிநெற்றி
மீதுயர்பசும்பொற்றிண்டேரினிதிழிந்திமயவேந்தன்
கோதறவினிதுசெய்தமணிமதிற்கோயில்புக்கான். (உக)

புகுதலுநிலவுதிங்கள்மணியினுலமைத்தபொற்பார்
திகழொளியிலிங்கநோக்கிச்சிதாரிமழைக்கட்கூந்தன்
முகிண்முலையமைத்தார்யாரேமொழிகெனவுதனிற்றீட்டு
நிகரில்வாசகத்தைச்சுட்டிநின்னுடைத்தாதையென்றான். (உஉ)

என்னலுமகிழ்ச்சிபொங்கியிறைவவீங்கிருத்தியார்க்கு
முன்னரிதாயமுத்தியளித்துநாமென்னமுன்னோன்
அன்னநல்லிலிங்கந்தன்னிலமர்ந்தனனியம்புகாதை
தன்னையார்பயின்றோர்கேட்டோர்யாவருமுத்திசார்வார். (உஅ)

கூஎ-வது-சயிலேசவிலிங்கத்தின்கதையுரைத்தஅத்தியாயம்முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் கடுகரு.

---

அறுபத்தெட்டாவது.

## இரத்தினேசன்கதையுரைத்த அத்தியாயம்.

வார்மதுதுளிக்குங்கொன்றைமலர்புனையிரத்தினேசன்
சீர்கெழுகாதைதன்னைத்தெளிவுறப்புகல்வனென்னக்
கார்வயிறுடையநீண்டவரைபகக்கதிர்வேல்தொட்ட
போர்கெழுகுமரன்கும்பமுனிமகிழ்பூப்பச்சொல்வான். (க)

பணவரவசைத்தவேணிப்பரமனையுமையாணோக்கி
மணியினுலமைத்தவின்னவிலிங்கத்தின்வரலாறெல்லாந்
துணிவுறவுரைத்தியென்னத்தொழுதலுமியம்பலுற்றான்
பிணிமுறுக்கவிழ்ந்துதீங்தேன்பெய்மலர்க்கொன்றையோனே. (உ)

கடைக்குழையெறிந்துமீண்டுகயலெனமிளிரும்வேற்கண்
மடக்கொடிநினக்குநுந்தைவழங்குவான்கொணர்ந்தசெங்கேழ்ச்
சுடர்க்கதிர்மணிகளியாவுமிவ்வுழிச்சொரிந்தானன்னோன்
றடுப்பருந்தவத்தாலீண்டோரிலிங்கமாய்ச்சமைந்ததாமால். (ங)

உன்னுடைத்தந்தையுய்த்தபொன்னினுலுலகமீன்றோ
யின்னநல்லிலிங்கம்வைகச்சினகரமியற்றுகென்ன
வன்னைதன்னருட்கணோக்கமடைந்துயர்தெய்வத்தச்சன்
பொன்னவிர்குடுமிநெற்றிச்சினகரம்புனைந்தானன்றே (ச)

கன்னலிற்கனிந்ததீஞ்சொற்கன்னியிவ்விலிங்கநோக்கில்
முன்னரோயுளதாமுந்தைதருமணிமொய்த்தவாற்றா
லன்னநன்மணியினுமமடைந்ததித்தலைநிகழ்ந்த
பன்னருங்காதையொன்றுகேளெனப்பகரலுற்றான். (ரு)

கவின்குழைத்தெழுதுமேனிக்கலாவதியெனுமோர்கூத்தி
பவங்கெடவளிக்குமிரத்தினேசுரன்முனம்பரிவினோடு
முவந்துளங்களிப்பதாயசிவநிசியுற்றகாலைச்
சிவந்தடிமலர்கள்நோவச்சீர்வழாதாடினாளே, (சு)

சிவகிசிதன்னிலெம்முனுடியதிறத்தால்மற்றப்
பவமதுதனிலிரத்தினுவல்லியாம்பழிப்பில்பேராய்க்
கவிரிதழ்முத்தமூரற்கலாவதியென்னுங்கூத்தி
நவையில்கந்தருவவேந்தனன்மகளாயினுளே. (எ)

ஆயதினரிவைநல்லவணிகிளர்நரம்புவீக்குந்
தூயமென்றிவவுநல்யாழ்விஞ்சையின்றுறைகள்போகி
மீயுயர்விசும்புமண்ணும்வனப்பினேவியந்துபோற்றச்
சேயரிநெடுங்கட்செவ்வாய்த்திருந்திழைவளருநாளில். (அ)

தாமரைத்தடங்கட்செவ்வாய்ச்சந்திரலேகைதீஞ்சொற்
றேமலரனங்கலேகைசித்திரலேகையென்னுங்
காமர்தோழியர்களோடுங்கலைமகள்பாதம்போற்றி
நாமநல்விஞ்சையாவும்நலனுறவுணர்ந்தாளன்றே. (கூ)

பொற்பினுக்கிணைமற்றில்லாப்பொம்மல்வெம்முலையினுடன்
முற்பவத்துணர்வுதோன்றத்தோழியர்மூவரோடு
மற்பினிற்றினமுங்காசியடைந்தெமைவழிபட்டல்லால்
விற்கொடும்புருவவாட்கண்விளங்கிழைநுகர்தல்செய்யாள் (க0)

இன்னணஞ்செல்லுநாளோர்கங்குலினெறிவேலுண்கட்
பொன்னவிர்கோதைபாடவுளமகிழ்பூத்துநின்பேர்
மன்னவனொருவனின்னைக்கனவினில்மணக்குமன்னே
னுன்னுடைக்கொழுநனுமென்றொருவரமளித்திட்டேமால். (கக)

அவ்வரம்பெற்றதன்மைதோழியர்க்கிசைப்பவன்னே
ரொவ்வமில்தவத்துப்பெற்றாயிவ்வரமென்னவோதிக்
கொவ்வைவாய்முகிழ்மென்கொங்கைக்கொழுமணிவல்லியோடுந்
தெய்வநாண்மலர்க்கொம்பன்னார்தம்முறைச்சேர்ந்தாரன்றே. (கஉ)

ஆயிரங்கதிர்கள்வீசியலைகடன்முகட்டிற்றோன்றிப்
பாயிருட்பிழம்புசீக்கும்விரிகதிர்ப்பரிதிவேந்தன்
மீயுயர்குடபால்வெற்பின்வீழ்தலும்வேலைசூழ்ந்த
மாயிருஞாலமுண்ணவந்ததுமாலைக்கூற்றம். (கங)

பானிலாச்சொரியுமந்தண்பசிளங்குழவித்திங்கள்
வானுலாய்த்திரிதனேக்கிக்காதல்மீதூரமாழ்கி
வேனிலான்பகழிபாயமெல்லணைப்புறத்துவீழ்ந்து
காலுலாமலர்மென்கூந்தற்கண்படைபொருந்தினளே. (கச)

சூழ்சுடர்க்கற்றைகாலுந்துளங்கொளியிரத்தினசூடன்
காழிருட்கங்குன்மேயகனவினிலழகுவாய்ந்த

பாழியங்தடங்தோள்வெற்பிற்பணைமுலைஞெமுங்கப்புல்லி
யாழினேர்புணர்ப்பினின்பக்கடலகத்தழுந்தினாளே (கரு)

கனவெனக்கருதாதின்பக்கடலிடைத்திளைத்துநாணி
நனவெனவிழித்தலோமேம்நல்லிருட்பிழம்புநீங்கிப்
பனியிருவிசும்பிற்செங்கேழ்ப்பரிதியஞ்செல்வன்றோன்றப்
புனைசெய்மேகலைடாள்காமம்பொறுக்கலாள்புழுங்கினைந்தாள். (கசு)

வேறு.

தோளாமணியனையதூமுறுவற்செங்கனிவாய்த்
தாளார்கமலமலர்த்தாக்கணங்குகண்டகனுக்
கேளாமவர்பாற்கிளப்பதற்குநாணிமிக
வாளாவவரோடுங்காசிநகர்வந்தடைந்தாள். (கஎ)

திங்கள்வடிம்பிடறுதெய்வச்சினகரத்தின்
மங்கையர்சென்றெய்திமணியீசன்றாள்போற்றிக்
கங்கைநதிக்கரையிற்கார்வண்டிசைபாடிக்
கொங்குலவும்பூந்தேறல்கூட்டுண்ணுங்காவடைந்தார். (கஅ)

திங்கள்மணியின்விளிம்படுத்ததீரத்துக்
கொங்குலவுவாவியிடைக்கூந்தற்பிடியாட
வெங்கட்கடாங்கவிழ்க்கும்வேழம்புழைக்கரத்தாற்
கங்கைப்புனல்வாரியாட்டுவதுகண்ணுற்றாள். (கக)

கண்டாள்நெருனற்கனவுதனைநினைந்தாள்
விண்டாளுள்ளாவிவெதும்பினுள்வெய்துயிர்த்தாள்
வண்டார்குழல்சோரவாட்டடங்கண்ணீர்வாரத்
தண்டாதுதூற்றுந்தளிரணைமேற்சாம்பினாள். (உ0)

கள்ளநோய்செய்யுங்கருந்தடங்கட்காரிகைத
னுள்ளநோய்தேராருறுதுயரமென்கொலென
வள்ளவாய்த்தாமரையின்மாமயிலைத்தோழியர்கள்
மெள்ளவேதாங்கிவிழிகலுழ்ந்தீதோதுவார். (உக)

ஐயோகமலத்தணங்கன்னாய்நிற்பிரிந்து
முய்வோமெனவோகிடந்தாயெனவோதிக்
கையோடுகைநெரித்துக்காவிநெடுங்கண்ணீர்கள்
மையோடொழுகவயிறலைத்துமாழ்கினார். (உஉ)

தென்னம்பொதியிற்செழுஞ்சந்தனத்தேய்வை
யின்னிளம்பூந்தென்றலிழுகமேற்பூசுதலுந்

தன்னைமறந்துதழல்போலவெய்துயிர்க்குங்
கன்னிமுலைமேற்கனல்பிறந்தாலொத்ததே. (உ௩)

ஆறணிந்தசென்னியமலன்றன்னைத்தொழுத
பேறிதுவோவென்றுபெருந்தடங்கணீர்வார
நீறுபுனைந்தவிமலன்றனையாட்டு
தேறுகுளிர்வாசநறுந்தெண்ணீர்தெளித்திட்டார் (உ௪)

தெய்வநறுந்தெண்ணீர்ச்சிறுதிவலைமேற்படலு
மையொழுகுவேற்கண்மதர்நீங்கிவார்காந்தட்
கையின்முகவேர்துடைத்துக்கையற்றுநாணிநெடுந்
தொய்யின்முலைமூடித்துயிலெழுந்தாள்போலெழுந்தாள். (உ௫)

மின்னேர்மருங்குல்விளைந்ததுயர்க்கடப்பா
டென்னேமறையாதியம்புகெனவிரப்பத்
தன்னேரிலாததளிரியல்நாண்மீதூரப்
புன்மூரல்கோட்டிக்கனவின்றிறம்புகல்வாள். (உ௬)

கங்குலிடைநின்பாற்கனவிற்கலக்குமவன்
கொங்குண்குழலாய்கொழுநனிணக்காகுமெனத்
திங்கள்மவுலியுணாத்ததிறநினைந்து
தங்குமலர்ப்பூவணைமேற்சாய்ந்துதுயில்கூர்ந்தேன். (உ௭)

பூங்கணைவேளன்னொருவன்பொதியவிழ்ந்து
தேங்கமழும்வாசமலர்ச்சேக்கைதனில்வந்தெய்திப்
பாங்கிமீரென்றோள்நலனுண்டுபையவே
நீங்கினான்போலேயென்னெஞ்சுகுடிபுக்கொளித்தான். (உ௮)

மின்னேரிடையீர்நனவென்றுகண்விழித்தேன்
என்னாயகனையெனதுயிரைக்கண்மணியைப்
பொன்னாரமளிப்புறந்தேடிக்காணாமற்
கொன்னேதளர்ந்துகொடுந்துயரங்கூர்ந்தனனால். (உ௯)

சந்தாரகொம்மைத்தடமுலையீர்கூறிருள்வாய்
வந்தாவிகூட்டுண்டமால்யானைச்சேவகன்றன்
செந்தாமரையாள்திளைக்குமணிமார்ப
மந்தோயானின்னுமணையப்பெறுவேனோ. (௩௰)

எண்ணார்க்கடந்தவெறுழ்வலிப்பொற்றிண்டோளுந்
தண்ணார்மதிமுகமும்வாளாவொருதமிய
னுண்ணீர்மைகொண்டவொளிர்தாளவாணகையுங்
கண்ணாரவின்னமும்யான்காணப்பெறுவேனோ. (௩௧)

நந்தாவிளக்கனையநன்னுதலீரித்துயரந்
தந்தாவிகொண்டவருணோக்கந்தான்கிடக்கக்
கந்தாடுகோபக்கடாயானைமன்னவன்ற
னந்தாரகலமறக்கவறியேனுல். (௧௨)

உள்ளங்கவர்ந்தென்னுளத்தூடுபுக்கொளித்த
கள்வன்றனையெனக்குக்காட்டாதொழிவீரேல்
துள்ளுங்கயல்போற்றுணைவிழியீரிவ்வுலக
மெள்ளும்படியானிறந்துபாடெய்துவனுல். (௧௩)

எவ்வுலகத்துள்ளானெனினுமிமைப்பளவிற்
செவ்விமதிமுகத்துச்செம்மல்தனைக்காட்டீரேல்
நவ்விவிழியீர்நடக்குமெனதாவியென
மெய்வெதும்பிமாழ்கிவிளிகுற்றுள்போல்விழுந்தாள். (௧௪)

வேறு-

சந்திரலேகையென்றுரைக்குந்தையலு
மந்தமில்வனப்புடையனங்கலேகையுஞ்
செந்திருநிகரெழிற்சித்திரலேகையு
முய்ந்திவள்பிழைக்குமாறுள்ளத்தெண்ணினர். (௧௫)

வனையுமூன்றுலகினுள்மன்னர்யாரையும்
புனையுமென்படத்திடைப்பொறித்துக்காட்டினுற்
கனவிடைவந்துயிர்கவர்ந்துபோயினு
னினையனென்றியம்புமென்றெழுதல்மேயினர். (௧௬)

இந்திரன்முதலியவமரர்யாரையும்
புந்தியாற்படமிசைப்பொறித்துக்காட்டினுள்
மந்தரவரையெனவளர்ந்துவீங்கிய
சந்தணிபூண்முலைச்சந்திரலேகையே. (௧௭)

மலர்தலையுலகுறைமன்னர்யாரையு
மிலகொளிப்படத்திடையெழுதிக்காட்டினுள்
விலகிவில்லுமிழ்வடமணிந்துவீங்கிய
வலர்முலைத்திருநுதலனங்கலேகையே. (௧௮)

அவிரொளிப்பாதலத்தரசர்யாரையு
மிவர்வுறப்படத்திடையெழுதிக்காட்டினுள்
கவிரிதழ்ப்பணைமுலைக்காமர்வேல்விழித்
திவவுயாழ்மருட்டுசொற்சித்திரலேகையே (௧௯)

பழுதறுசந்திரலேகைபண்பினு
லெழுதியபடத்திடையமரர்யாரையுந்
தொழுதனள்மனநிலைதுணிந்திலாளென
வழுதனளுயிர்த்தனளன்றியென்செய்வாள். (௪0)

அண்ணலம்பொலங்கொடியனங்கலேகைதா
னுண்ணிதிற்றீட்டியபடத்தைநோக்கினுள்
மண்ணுறைவேந்தரொன்றறிவுமாழ்கினு
ளெண்ணம்வேறுற்றபின்னியைதல்யாவதே. (௪க)

தீதறுசித்திரலேகைதீட்டிய
பாதலத்துறைதருபாந்தள்வேந்தரு
ளேதமிலழகுடையிரத்தினசூடனைக்
காதலால்விழிமலர்களிப்பநோக்கினுள். (௪உ)

அருத்தியிற்கண்ணினுலனங்கலேகைக்குத்
திருத்தகுபூண்முலைச்சித்திரலேகைதான்
வரைத்தவிப்படத்திடைமன்னன்மேலிவள்
கருத்தெனச்சந்திரலேகைகாட்டினுள். (௪௩)

மாணிழைமனநிலையுணரமங்கையர்
காண்வருபடத்தினைக்கையினீக்கலும்
வேணவாவொடுமுளம்விரகமீக்கொள
நாணினள்முனிந்தனள்நகைத்துமாழ்கினுள். (௪௪)

கனவிடைக்கண்டவன்வடிவங்கண்டியா
மினையனென்றறிவுறவியற்றுந்தெய்வமே
வினைகுழல்நின்னிடைக்கூட்டுமையலால்
நினைவழியேலெனநிகழ்த்தினுரரோ. (௪௫)

வேறு.

இன்னகூறிமடமாதர்காசியினகன்றுதம்பதியினேகலு, மின்னுநக்கபி
றைவாளெயிற்றனழல்விட்டுயிர்த்தமுழைவாயினன், கொன்னுனைப்பகழி
காலும்வெஞ்சிலைகுனித்தகையனெதிர்தோன்றினுன், றுன்னுபோரிலிமை
யோரைவென்றுயர்சுவாவெனும்பெயர்படைத்துளான். (௪௬)

மென்றுவாளெயிறுதின்றுகண்ணினிடைவெவ்வழற்சிகைகொளுந்தவோ
குன்றுகால்கொடுநடந்ததென்னவருகொற்றவாளசுரரேறனுன் [ர்
கன்றுநெஞ்சினிடைகாமவெங்கனல்கனற்றவண்டுகறிகற்றிடு
மன்றனுறுகுழல்மாதர்நால்வரையும்வவ்விவானினிடையேகினுன். (௪எ)

அன்னகாலையிலலக்கணெய்திநனியஞ்சிவஞ்சிமிகரங்கலார்
மின்னுடங்குவதுபோனடுங்கியுளம்விம்மிவிம்மிவிழிநீருகப்
பொன்னெடுஞ்சிகரிகால்வளைத்துயர்புரங்கனற்றுமணியீசனே
கன்னன்மென்குதலைபங்கின்மேவிவளர்களைகணேயெனவரற்றினுர்.(௪அ)

தஞ்சமின்றிமணியீசவென்றுரைசெய்தையலார்குதலைமெல்லவே
யஞ்செவிப்படலுமஞ்சலஞ்சலென்றிரத்னசூடனவணெய்துரு
வெஞ்சமர்த்தொழிலின்வல்லையேலமர்விளைத்தியென்முனமெதிர்ந்துநீ
யுஞ்சுபோவதரிதென்றுவெற்றிவளையூதிவாளமருடற்றினுன். (௪௯)

உருத்தவெஞ்சமரிலெய்தினேருயிரருந்திமென்றசையொழிந்திடா
தரத்தமுண்டொளிறுவெஞ்சினக்கதையழன்றுதானவன்விடுத்தலுந்
தரித்தசெங்கைவடிவாள்விதிர்த்தமரர்தலைபணிப்பவுருமேறுபோற்
சிரத்தின்மீதுவருகதையைநூறுதுணிசெய்துபோரிடைசெருக்கினுன். ()

எறிந்தவெங்கதைசிதைந்துவீழ்தலுமிலங்குவாளெயிறுதின்றுதன்
மறங்கனிந்தவரிவிற்குழைத்துமழைபோலவெங்கணைவழங்கலு
மறங்கொள்சிந்தைபெறுரத்னசூடனழலம்பினுலவையறுத்துமே
பிறங்குகின்றபிறைவாய்நெடும்பகழிபெய்தவன்றனுயிர்வவ்வினுன். (௫௧)

சுவாவெனுங்கொடியதானவன்றலைதுணிந்துமண்ணினிடைவீழ்தலு
மூவாமதித்திருமுகத்தினீருமதுபேருமூருமுரையாடுமின்
அவாமிகுந்தவுணனும்மைவவ்வியதெவன்கொலன்பின்மணியீசனுந்
தவாதபேரொளியினுமமோதியிடுதன்மையெங்ஙனெனவோதினுன்(௫௨)

கனவில்வந்துறமணந்தெனுருயிர்கவர்ந்தகள்வனுமிவன்கொலா
நனவில்வந்தெமையெடுத்தவல்லசுரனுமறப்பொருதுகருணையாற்
றுனைவில்நம்முயிரளித்தகோனுமிவனென்றுதோழியருணர்ந்திட
வனைகருங்குழல்மடந்தைகண்கொடுவிளம்பமற்றவர்விளம்புவார். (௫௩)

மென்கருப்புவரிவில்லுமைங்கணையும்விட்டுவந்தவெழில்வேனிலாய்
மன்பெருங்கருணையாழிஞேரில்வசுபூதியென்றுரைசெய்மன்னவ
னின்புறும்புதல்வியிவடனுமமுமிரத்தினவல்லியிவளுக்கியா
மன்பினேவல்புரிதோழிமாரொனவனங்கலேகையுரையாடினுள். (௫௪)

தந்தையேவல்கொடுகாசியீசனடிதாழுநாளிலொருநாளிவட்
கெந்தையுன்கனவில்நின்பெயர்க்கூரிசிலெய்துமற்றையவனின்புறுஞ்
சிந்தைகூர்கொழுநனுகுமென்றுயர்திருந்துநல்வரமளித்தும்
வந்துகங்குலின்மணந்தவாறுமிவள்மம்மர்நோய்மிகவுழந்ததும். (௫௫)

மண்ணில்விண்ணில்விரிபாதலத்திலுறைமன்னரியாரையும் வரைந்து
யாங், கண்வழுக்குபடமன்பினேடுமெதிர்காட்டநாகருலகத்தில்வா, பூண்

ணல்மேல்மனம்விழைந்ததும்பதியினடையுமேல்வைதனிலசுரர்கோ, னு
ண்ணடுங்குறவெடுத்தவாறுமொளிர்சித்திரலேகையுரையாடினாள். (௫௬)

செயிர்விளைத்தவசுரேசனாருயிர்செகுத்தலக்கணுறுமெங்கட
முயிரளித்ததிறல்மன்னநின்குலமுமூருநின்பெயருமோதென
வயிர்படைத்தமதன்வாளியாலுளமயங்கிமத்தினெறிபட்டவெண்
டயிரெனச்சுழலுநெஞ்சினோடுமுயர்சந்திரலேகையுரையாடினாள். (௫௭)

வேறு.

பின்னோதுவனவைகண்கவர்பிறைவாணுதல்மடவீர்
பன்மாமலர்களுலுந்தடமிதனிற்படிகுற்றால்
மூன்னோதியரத்னேசனுமுன்றோன்றுவனென்ன
நன்மாமணியனையாருமங்களிர்வாவிபடிந்தார். (௫௮)

வண்டோலிடுகுழல்மங்கையர்வாவிப்புனல்மூழ்கித்
தண்டாமரையுறைவாளெனவெழுபோழ்துயர்தடனு
மெண்டோளுடைரத்னேசனிலங்குஞ்சினகரமுங்
கண்டார்துளிமுகில்கண்ணுறுமயிலாமெனக்களித்தார். (௫௯)

எங்குற்றனமெங்கெய்தினமென்றென்றுவியப்புற்
றங்கட்டிருவன்னாரினிதுறையும்மமைதியினிற்
றிங்கட்டிருநுதலாருறுசெயரைதனறைய
வங்கக்கடனிகர்கேள்வியன்வசுபூதியடைந்தான். (௬0)

வந்தெய்தியதன்றாதைமலர்ப்பாதம்வணங்கி
யந்தாமரைமயிலன்னவளடிநோக்கினணிற்பக்
கொந்தார்சடையிரத்னேசனினருளாலலர்கோதா
யுய்ந்தாய்கொலெனக்கைகொடுபுறநீவியுவந்தான். (௬௧)

மடமானுயிர்நிகர்தோழியர்வசுபூதிமுன்னெய்தி
யடல்கூர்விடைரத்னேசனின்னருளாலிருள்கங்குற்
கிடைசேர்கனவினில்வந்ததுமசுரேசனையெறிவெம்
படையாலுயிர்கவர்குற்றதுமிவனுமெனப்பகர்ந்தார். (௬௨)

பேராண்மையுமழகுஞ்சிலைவேள்பெண்மையவாவுந்
தாரார்திணிதோளுந்திகழ்தடமார்பமுநோக்கி
யாராமிவனெனுமாசைகொடன்னோனுழையெய்தி
யூர்பேர்குலமுறைசொல்கெனவசுபூதியுரைத்தான். (௬௩)

நின்னுமகிர்க்கும்பெயர்நிலவுப்பிறைநுதலோர்
மின்னாள்வருமொருதானவனுவனைக்கொடுவினைவிற்

ற்ன்மாநகர்புகும்ற்றவன்மடியத்தலைதுணியாப்
பொன்ஞரணிபிதிர்சிந்திளமுலையாவிபுரப்பாய். (௬௪)

அவணின்குலமனையாமெனவவிர்செஞ்சடைமுக்கட்
குவிமென்முலைபங்கன்பகர்கனவின்பொருள்குறியா
விவர்வெள்விடைரத்னேசனைநாடோறுமிறைஞ்சுங்
தவமெய்ப்பயனெய்திற்றெனவன்போடிவைசாற்றும். (௬௫)

வேறு.

மணியறைதிறந்ததன்னபாதலநகரில்வைகும்
பணியரவரசிற்சங்கசூடனும்பழிப்பில்வேந்தற்
கிணையறுகுமரன்யான்மற்றென்பெயரிரத்னசூட
னணிகொள்கந்தருவதேயத்தடல்கெழுமரசவென்ருன். (௬௬)

அணங்கரவணிகொள்பூங்கச்சதைத்தரத்னேசன்முன்னர்
மணங்கமழ்குழலிரத்னவல்லியைமகிழ்விஞேடு
நிணங்கொள்வேலிரத்னசூடற்குதகமோடளித்தானேரா
ருணங்கிரின்றிரங்குமுன்றிலுயர்வசுபூதிதானே. (௬௭)

முருகுவாய்மடுத்துண்டாடிமூசுவண்டரற்றும்பைந்தார்
மருகனைப்புதல்வியோடும்வான்ருேடுகுடுமிநெற்றிப்
பருமணிக்கதிர்கள்கான்றுபாயிருட்பிழம்புசீக்குந்
திருவநீண்மாடமோங்குதன்னகர்க்கொண்டுசேர்ந்தான். (௬௮)

குளிர்மதிபொருவுசங்கக்குடவயிறலறியார்ப்ப
நளிர்கடலனையகேள்விக்கணிதர்நன்கமைத்தநாளி
லளிபடுமலர்க்கோதைக்குநம்பிக்குமழல்சான்ருகக்
களிமகிழ்தூங்கவின்பக்கடிமணம்புரிவித்தானே. (௬௯)

திருநுதலனங்கலேகைசித்திரலேகையோரேழ்
தனைபுகழ்வனப்பின்மிக்கசந்திரலேகையென்னு
மரிவையர்தந்தைமார்தம்மருளினல்ரத்னசூடற்
குரியவிற்கிழமைபூண்டாங்குயிரொனவொழுகுநாளில் (௭௦)

மீயுயர்வெள்ளிவெற்பின்விஞ்சையர்வேந்தன்செங்கேழ்ப்
பாயொளிப்பரிதிமார்பின்மருகற்குப்பரிவிஞேடுங்
காய்சினக்களிறுதிண்டேர்கலினவாம்புரவிவெள்ள
மாயிரகோடிசெம்பொன்கொள்கெனவருளினனே. (௭௧)

கந்தடுபுழைக்கைநால்வாய்க்காய்சினக்களிறுபோல்வான்
சிந்துரத்திலதநெற்றித்தெரிவையர்நால்வரோடு

மந்திரன்பகலென்றோராதாய்கதிர்க்கற்றைகாலு
மிந்திரபவனமன்னதன்னகர்க்கேகினானே. (எஉ)

ஏர்குடியிருக்தமாதரிளமுலைப்போகமாந்தி
யார்வமோடளப்பில்காலமளப்பரும்போகந்துய்த்து
வாரறவிமிர்ந்துவீங்குவனமுலைமகளீரோடுங்
கார்மிடற்றெந்தைசெம்பொற்கழலிணையெய்தினானே. (எங)

திவள்மதிக்குழவிவேய்ந்தசென்னிரத்னேசன்காதை
துவரிதழ்வளைக்கைநல்லாய்சொற்றனநீயுமுன்னைப்
பவமதிற்றக்கணீயவ்விலிங்கமொன்றமைத்தாய்பாங்கி
னவிரொளியம்பிகேசனம்பிகையாயினேமால். (எச)

வரைமுகம்புழுங்கவைவேல்மாட்டியவயிரத்திண்டோள்
முருகனுங்குளனிக்காதைமுறையினிற்பயின்றோர்கேட்டோ
ருரைபகர்ந்திடுவோரன்பினெழுதினோருவப்போர்யாரும்
புரவிநன்மகநூறுற்றும்புங்கவன்போல்வாரென்றான். (எரு)

சுஅ-வது-இரத்தினேசன்கதையுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧எ௪0.

---

அறுபத்தொன்பதாவது.

## கிருத்திவாகேசன்றோன்றிய அத்தியாயம்.

சிறையளிகுடைந்துபாடும்பூங்குழற்செல்வியோடு
மிறைவன்வார்கங்கைவேணியிலங்குரத்னேசன்காதை
யறைதருமமைதிதன்னிலரியயன்முதலதேவர்
முறையிடுமோதைகேட்டுமுழுமுதல்மூரல்பூத்தான். (க)

அண்டநீள்சுவரினெல்லையளந்துணரளவுகோலிற்
கொண்டலினகடுபோழுங்கூர்நுதிமருப்பிற்றாகி
மண்டமராழுவநீந்துந்திறன்மகிடாசுரன்றன்
றிண்டிறற்புதல்வனுங்கயாசுரன்சீற்றவேலான். (உ)

மாசுறுபவன்றன்மேனியளவினைவகுத்துநோக்கி
யோசனைபுகலின்ஞென்பானுயிரமுளதாமன்னோன்
வீசியகரத்தினுற்றவிசைநெடுங்காற்றில்மொத்துண்
டாசையங்கிரிகள்மெல்லென்சருகெனப்பறக்குமன்றே. (௩)

அன்றவனுயிர்ப்புத்தாக்கவன்றுகொல்கடல்களேழு
மின்றளவொழியாதேங்கியரற்றுவதிருள்கால்சீத்து

மின்றிகழ்மவுலிதாக்கவிளங்குறுதிங்கள்முன்னங்
கன்றியதன்றேவின்னுங்களங்கமாயிருந்ததம்மா. (சு)

ஆடகச்செம்பொற்குன்றமங்கையினள்ளியேந்திப்
பீடுறவிதுகொல்லீசன்வில்லெனப்பிடித்ததென்னு
மோடைமால்கரிகளெட்டுமொருகையிற்பற்றிவீசுஞ்
சேடனைப்பறித்துக்கச்சிற்பராணாமேற்சிக்கவார்க்கும். (ரு)

மடிசெவிப்புழைக்கைகால்வாய்க்கயாசுரன்வாங்குதெண்ணீ
ருடைதிரைக்கடல்களேழுங்குளப்படியென்னவுன்னு
மடியினைப்பெயர்க்குந்தோறுமாழியங்குன்றஞ்சூழ்ந்த
படிமுதுகுளுக்கித்தாழ்ந்துபாதலத்தொளிக்குமன்றே. (சு)

கருநிறச்செங்கட்பேழ்வாய்க்கயாசுரனமரினேற்ப
வருவதெத்திசையிற்கொல்லோவெனமலர்ப்பொகுட்டின்மேலோ
னொருமுகமதனுல்நான்குதிசைகளுமொருங்குநோக்கற்
கரிதெனவெண்ணியன்றேநான்முகமாயினுனே. (எ)

அண்ணலங்கமலப்புத்தேளாழியோன்வெருவியோடக்
கண்ணழல்கதுவிச்செந்தீவடவையிற்கனன்றுகால
விண்ணுருமேறுகோடிவீழ்ந்தெனவுரறிமுக்கட்
பண்ணவனுமையினேடுமிருந்துழிப்படர்ந்திட்டானே. (அ)

வெருவலீரமரரொன்னுவிடைக்கொடியுயர்த்தவெந்தை
கருவரைநடந்ததென்னக்கயாசுரன்வருதல்நோக்கி
யெரியுமிழ்ந்தூன்வாய்பில்கியிலகுமுத்தலையவேலிற்
குருதியார்கலியிற்பொங்கக்குத்திமேலேந்தினுனே. (கூ)

கடையுகமுடிவினின்றுகளிநடம்புரியுமெந்தை
விடமுமிழ்சூலமீதில்வேலைசூழ்ஞாலம்போர்க்குங்
குடையெனக்கிடந்தவீரன்நெஞ்சகங்குழைந்துதீய
வடையலர்புரந்தியூட்டுமண்ணலையேத்தினுனே. (க0)

மாண்டபேரன்பாலெம்மைவழுத்தலின்மகிழ்ச்சிகூர்ந்தேம்
வேண்டுவகேட்டியென்னவிளம்பலுமவுணர்கோமா
னுண்டகையெனதுபுன்றேல்மணத்தொடுமேன்மைத்தாய
காண்டகுபோர்வையாகக்கருணையிற்புனைதல்வேண்டும். (கக)

என்னுடைமெய்யுமீங்கோரிலிங்கமாயமர்தல்வேண்டு
முன்னவவெனலுமீசன்முகமலர்ந்தளித்தல்செய்தான்
பன்னகமணிச்செஞ்சூட்டிற்கிடந்தபார்பரவியேத்த
வன்னதுகிருத்திவாகேசரமெனவமர்ந்ததாமால். (கஉ)

காலவேலசுரன்மெய்யிற்கழிந்துமண்கீண்டவாற்றாற்
சூலபாடனமென்றேதுந்தீர்த்தமுந்தோன்றிற்றென்று
மாலைவெள்ளருவிதாழுமலைமகள்மகிழ்ந்துகேட்ப
நீலவெங்கரித்தோல்போர்த்தநிருமலனிகழ்த்தினனே. (கஉ)

நீறுபூத்திளவெண்டிங்கள்நிலாக்கதிர்பரப்புநெற்றி
யீறிலாதோங்குமுக்கட்கிருத்திவாசேசற்கன்பிற்
சாறயர்காலையேற்றுமடிசிலுண்பதற்குச்சார்ந்த
பாறுவெங்கழுகுகாக்கைமுதலியபறவைதாமே. (கஙு)

ஏறும்வலியற்றைகாக்கையாவையுமிரியச்சீறி
மறுகியுண்ணடுங்கியந்தவாவியில்வீழ்தலோடு
நிறைதரும்பனிவெண்டிங்களெடுநிலாவுதறுதூய
சிறையுடைப்பவளச்செங்காலன்னமாய்த்திரிந்தவன்றே. (கநி)

அன்றுதொட்டன்னவாவியாகியததனைச்சூழக்
குன்றவிற்காத்திகாயனேச்சுரன்முதலாய்க்கூறும்
பொன்றிகழ்கடுக்கைமாலைபுனைசிவனேசமீறு
மொன்றியவிலிங்கமோதிலயுதமாயுறைப்பர்மாதோ. (கசு)

சுகூ-வது-கிருத்திவாசேசன்றோன்றியஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-களஉசு.

---

## எழுபதாவது.

## துர்க்கன் அரசாட்சி அத்தியாயம்.

அரம்பையர்காந்தட்செழுமலர்க்கரத்தினலங்குசாமரைபொதியவிழ்ப்ப
விரும்பினராகியரியயன்முதலவிண்ணவரினிதினேத்தெடுப்பக்
கருந்தடங்கண்ணிதன்னெடுமமலன்கருணைகூருருத்திராவாசத்
திருந்திடுமேல்வைச்சிலாதரன்புதல்வன்கைதொழுதீங்கிவையுணர்ப்பான்

மூவகையுலகில்முத்திகூரிலிங்கமுழுவதுங்கொணர்ந்தனனென்றுச்
சேவடிதொழலுமொன்பதுகோடிதுர்க்கையுங்கொணர்கெனச்செப்பத்
தாவிலன்போடுங்கொணர்ந்தனனென்றுதண்டமிழ்முனிவரன்கேட்ப[ன்
மாவடுமருட்டுமதர்வைமென்னோக்கின் வள்ளிகாதலன்மகிழ்ந்திசைத்தா

பாற்குடந்தூங்குமடியினமேதிபாசடைத்தாமரைகுதட்டித்
தாற்றிளங்கதலிப்படப்பைசாய்த்துறங்குந்தண்வயற்காசிமாநகரம்
போற்றிமூவுலகுந்தழைத்திடவினிதுபுரந்தருள்சொற்பனேச்சுரிக்கு
மேற்றிசைவதிந்ததுர்க்கைதன்காதைவிளம்புவனவேலிறைவிளம்பும்(கூ)

ஊன்படுதிகிரிதிசைதிசையுருட்டியுறுவலிச்சுரிகழுத்தாமைக்
கூன்புறத்தமர்ந்தவுலகமோர்மூன்றுந்தன்கொடுங்கோல்நனிசெலுத்தி
வான்படிசெல்வமுழுவதும்வவ்விவானவர்க்கிறையவன்முதல
தேன்படுதெரியலெண்டிசைப்பாலர்திருவெலாந்தனித்தனிகவர்ந்தான்.()

அண்டநீண்முகட்டிலரசுவீற்றிருக்குமருமறைவடித்தவந்தணனும்
வண்டுவீழ்ந்தாற்றுந்தண்டுழாய்முகிலுமணிநெடுவாயிலோர்க்குறுகித்
திண்டிறலவுணர்க்கிறையொடெம்வரவுசெப்பெனமுகமனன்கியம்பித்
தண்டளிர்க்குடங்கைத்தலையணையாகத்தமனியமுன்றிலிற்றுயில்வார். ()

அலங்குளையரிமானனையவாளவுணனணையங்கொடுந்தழற்கஞ்சி, யிலங்
கொளிமழுங்கிப்பரிதியங்கடவுளீங்கதிர்மதியெனத்திரியும், விலங்கிவில்
லுமிழுங்கோணிலைதிரிந்தனான்றினுமவுணர்கோன்விளம்பிற், கலங்குதெ
ண்டிரைநீர்மொண்டுகொண்டெழுந்துகரியமைம்முகிறுளிதூற்றும். (சு)

அறந்தலைவணங்கவந்தணராற்றுமருமகமுழுவதுமொளிப்ப
மறந்தலையெடுப்பவஞ்சமும்பொய்யுநாடொறுநாடொறும்வளர
விறந்தனமென்றுமெய்ம்மைநின்றேங்கவீகையும்ஞானமுமிறப்பக்
கறங்குதெண்டிரைசூழுலகமோரேழுங்கல்யுளங்களிப்புறக்காத்தான் (எ)

விண்ணவரியக்கரவுணர்கந்தருவர்விஞ்சையர்நாகர்வல்லரக்கர்
மண்ணுறைவேந்தருடற்றுவாளமரிலாருயிர்மாய்ந்திடாவண்ணங்
கண்ணுதலளித்தவரத்தினன்செருவிற்கருதலர்க்கசனியேறனைய
வண்ணலஞ்சுடர்வேலவுணர்கோனுலகமறங்கெடவளிக்குநாளதனில்.(அ)

அள்ளிதழ்க்கமல வெள்ளிமண்டபத்தி லரும்பெறலரசு வீற்றிருக்கு,
மொள்ளிழைகேள்வற்குரைத்தும்பாமென்னவோடையம்புகர்முகப்பரூஉ
த்தாள், வெள்ளைமால்யானைப்பாகனேமுதலவிண்ணவர்யாரும் வந்தெய்தி
க், கள்ளயர்வுயிர்க்குநறுமலர்தூவிக்கரமலர்குவித்திவைபுகல்வார். (கூ)

உடல்சினத்தறுகட்டுர்க்கனென்றுரைக்குமொருவனின்றேற்றமருடற்
று,மடலினுக்காற்றுதடைந்தனமெந்தையஞ்சலென்றளித்தருளெனலு,ம
டலவிழ்கமலப்பொகுட்டுநான்முகத்தோன்வண்டுழாய் முகுந்தனோடேகி
க்,கடகளிற்றுரிவைகாண்டகவணிந்தகண்ணுதல்கடைப்புறத்தடைந்தார்.

கந்தடுகளிற்றினீருரிபோர்த்தகண்ணுதல்முன்னரெம்வரவு
நந்திபோயுரைத்தியெனவடிதொழலுநளிர்நிலாப்பூங்கதிரொறிக்குஞ்
சந்திரமவுலிக்குரைத்தலுமீண்டுத்தருகெனவாங்கவன்புகுத்த
வெந்தைதாள்வணங்கியரியயன்முதலவிண்ணவரேத்தினரிசைப்பார்.(கக)

கவிழ்குலையாம்பைமுகிலகடணவுங்கழனிசூழ்காசியெம்பெருமா
னவுணரிற்கொடியதுர்க்கனூல்மிகவும்வருந்தினமளித்தருளென்ன

வுவணமீதுயர்த்தோன்முதலியவமரருனாத்தலும்வெருவனீரொன்னுப்
புவனகோடிகளுமீன்றசிற்றுதரப்பூவையையநோக்கியீதுனைப்பான். (கஉ)

குழைமுகந்தடவியையரிபரந்துகுமிழ்மிசைமறிந்தருள்கொழிக்கு
மழைமதர்நோக்கிதுர்க்கனுமவுணன்மடிந்திடவாளமருடற்றிப்
பழமறைக்கிழவன்முதலபுத்தேளிர்பருவரல்துடைத்தருளெனலுங்
கழையுறழ்தோளிவிழியருள்பரப்பிக்காளராத்திரியைநோக்கினளால். ()

ஐந்தருநீழல்கிளையுளேயரிமானணைமிசையரசுவீற்றிருக்கு
மிந்திரன்முதலவமரர்தம்பதங்கள்வவ்வியயாவையும்வழங்கி
யுய்ந்துபோகுதலோவாளமரழுவத்துன்கிளைப்பரப்பொடுமாவி
சிந்தியேகுதலோகருத்தெனவவுணற்குரைத்திவண்சேர்கெனவிடுத்தாள்()

மாந்தளிர்பொருவுமங்கலுழ்மேனிமாதுமையீங்கிவையுரைப்பக் [வை
காந்தண்மென்முகையின்முகிழ்விரல்குவித்துக்காளராத்திரியெனும்பூ
யேந்திளங்கொம்மைவனமுலைதாங்கியிடுகிடைவருந்துமென்றேங்கிப்
பூந்தளிர்கவற்றுசீறடிச்சிலம்புபூசலிட்டரற்றவேகினளால் (கதி)

மழைதவழ்குடுமிப்புரிசையிற்றொடுத்தமணிநெடுங்கொடிகள்வான்முகட்டிற், குழவிவெண்டிங்கட் கூன்புறந்தடவுங்குளிர்புனற்காசியினீங்கி, முழவுகண்டுயிலாவளநகர்க்கேகிமொய்புகைப்படலம்விண்புதைப்ப, வழல்விழிப்பகுவாயவுணர்கோனுறையும்வேத்தவைசென்றணுகினளால். ()

கண்ணிமைகரியவழல்படவிழிக்குங்காய்சினத்தவுணனைநோக்கி, யண்ணல்மாலியானைப்புரந்தரன்முதலாமாதிரத்தரசுவீற்றிருக்கும், விண்ணவர்செல்வமளித்தியோவமரின்விளிதியோநின்னுளத்தமைந்த, வெண்ணம்யாதென்னவணங்குரைத்திடலுமெழினலநோக்கினனுரைப்பான். (கஎ)

ஆன்றமூவுலகினிவ்வுருவமைந்தவணங்கினைக்கண்டிலன்மேனாட்
டோன்றுநற்றவத்தாலீங்கினிதடைந்தமேதாகையைப்பற்றுமினெனலுங்
கான்றுவெவ்விடங்கால்கண்ணர்கஞ்சுகத்தர்கதிர்மணிவேத்திரக்கரத்த
ரோன்றவட்பற்றநின்மினென்றவுணர்க்கிறைவனைநோக்கியீதுனைப்பாள்.()

நீதுபூத்தலர்ந்தசிந்தையோய்நீதிலரசர்நற்செய்தொழிலிழுக்கித்
தூதியர்க்கவர்தல்செவ்விதோவென்னுத்தூநிலாமணிநகைகோட்டிக்
காதலுண்டென்னிலாதிநாயகிபாற்கன்னியர்பலருளர்கவர்வான்
போதியேற்போதிமுத்தலைப்படைநின்புலவுவாய்மடுப்பமற்றென்றாள். ()

கற்றிரள்புரையுந்தடம்புயன்வெகுண்டுகதிரிளவனமுலையணங்கைப்
பற்றுமினென்னநிலவுகஞ்சுகியர்படர்ந்தனர்தொடர்ந்துபற்றுதலும்
வெற்றிவேலென்னக்குழைபொருதலைக்கும்விழிக்கடைசிறிதுசேப்பூரக்
கொற்றவன்விடுத்தவெஞ்சினவவுணர்குலத்தொடுஞ்சாம்பராயினரால். ()

அவுணர்கோன்விடுத்தசுரேந்திர தபனன்மகப்பகையனுமிருகாக்கன்
றவலருந்தேவகம்பன்வாளூரோமன்முதலியதானவர்தலைவ
ருவரியங்கடலின்மூன்றரைக்கோடி தானையோடுருத்தனர்வளையக்[ழ்ந்தார்
கவர்மூலைத்துவர்வாய்க்காளராத்திரிவெவ்வுயிர்ப்பினுற் றிசைதொறுங்கவி

களத்திடைத்தானைகவிழ்தலுங்காணுக்கட்கனல்வடவையிற்பொங்க
வுளத்திடைவெகுளிமீக்கொளமுன்னருலவுகஞ்சுகியரைநோக்கி
யளப்பருஞ்சேனையாவையுமீண்டுத்தருதிரென்றவுணர்கோனறையத்
துளக்கறுவரையுநெடுநிலவரைப்புந்துளங்குறத்தானைதொக்கனவே. ()

எ0-வது-துர்க்கனரசாக்ஷி அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-களசஅ.

---

எழுபத்தோராவது.

## துர்க்கன்படையெழுச்சி அத்தியாயம்.

---

ஆயிரங்கோடி தானைகாவலர்நூற்றறுபதுகோடிபொற்றடந்தேர்
காய்சினக்களிறுங்கலினவாம்பரியுங்கோடியற்புதமெனக்கணிப்பர்
மாயிருஞாலம்வளைகடற்பரப்பின்மணலுறையிடக்குமாற்றுதேல் [பார்
பாய்புலிப்போத்திற் றிறல்கெழுவயவர் வெள்ளத்தின்பரப்பையாருரைப்

இன்னநாற்படையோடவுணர்கோன்முனிவுற் றெழுதலுமெழில்கனிக்
தொழுகு, மின்னிளங்கொடிபோல்விசும்பிடைப்படர்ந்துமேவருமுலகெ
லாமீன்ற,வன்னைமுன்னெய்தித்துர்க்கன்வெம்போரேற்றடைந்தனனெனை
க்கரங்குவித்தாள், கன்னலிற்கனிந்தமென்மொழித்துவர்வாய்க்காளராத்தி
ரியெனுமணங்கே- (உ)

மும்மையவுலகின்மலவிருளிரியமொய்சுடர்ப்பரப்பொளிவிளக்கியெம்
மையாளுடையவன்னைவீற்றிருத்தல்நோக்கியபுன்றொழிலவுண,னம்மவீ
ங்கிவளைப்புணர்ப்பினலாற்றலமைதியாற்றருதிரேலமரர், தம்முடைச்செ
ல்வமளிப்பல்யானென்னத்தானைகாவலர்க்கினிதுரைத்தான். (௩)

என்றலுமவுணன்மந்திரித்தலைவரிருகரங்கூப்பினரிசைப்பார்
குன்றெடுத்தாயர்கோநிரைகாத்துக்குவலயம்பொதிந்தசேவடியோ
னுன்றனியாணைகடக்கலனுகியுலகெலாமினிதுனக்களித்துப்
பொன்றினன்போலவிரிதிரைபுரட்டுபொற்கடற்புறத்துறங்கினனல். (௪)

கடவுள்மாமணியுங்கற்பகத்தருவுங் கறவையும்வளரிருநிதியு,மடல்கெ
ழுவயிரப்படையினேன்செல்வமனைத்தையுங்கவர்ந்தனமன்றித், தொடு

கடற்கிறைவன்கீர்மலிசிவிறிக்குறுந்துளி தூற்றிநின்றுழலும், படர்வளிக்
கிறைவன்கால்செய்சாந்தாற்றிபற்றினன்பைப்பையத்திரிவான். (ரு)

ஆரழற்கடவுள்மடைத்தொழில்புரியுமரும்பெறலிருநிதிக்கிழவன்
சீர்கெழுநிதியமுழுவதுநினைக்குத்திறையளந்தகன்கடைத்துயிலுங்
கூர்மருப்பெருமையேறிவர்கடவுள்குற்றுடைவாள்சுமந்துழலுங்
காரிருள்சீக்குங்கனைகதிர்ப்பரிதிகடிகையினளவையோர்ந்துரைக்கும்.(சு)

அரவநல்லணிமெய்ப்பூச்சுவெண்சாம்பராடைதோலையமேயுணவு
நிரைகவர்ந்திடுதுமென்னிலீசானனினிதமர்நெடுநகர்வரைப்பி
னமுதிர்கிழவேறொன்றுளதென்றேவிடுத்தனமாதனின்னேவல் [ர்
புரியுனர்க்கரிதொன்றுளதுகொலென்று பொருகடற்றனையோடெழுந்தா

உடுக்கணமுதிரத்திசைசெவிடெறியவொற்றைவெண்சங்கநின்றலற
வெடித்துயரண்டகோடிகளிடியவெங்குரல்முரசமார்ப்பெடுப்ப
வடித்தலம்பெயர்க்குந்தொறுமுயர்சேடனுயிரம்பணமுடியுளுக்கிப்
படித்தலநெளியப்பரந்தெழுதுகளிற் பரவைதூர்ந்திடவெதிர்படர்ந்தார்.(

கடையுகமுடிவினுலகமோரேழுங்கவர்ந்திடக்கரைக்குறும்பெறியா
வுடைதிரைப்பரவைநடந்தெனப்படருமுயர்பெருந்தானையைநோக்கி [யி
விடைவலனுயர்த்தோனிடமருங்கொளிக்கும்வேற்றடங்கண்ணிதன்மெய்
னடல்கெழுசத்திபற்பலகோடிதோற்றுவித்தமர்க்கெதிர்விடுத்தாள். (கூ)

விடுத்தெதிரேற்றசத்திகளனைத்தும்விறல்கெழுதானையங்கடலை
மடுத்துவாய்ப்படுத்துவடவைவிற்சுவற்றிவாகையந்தெரியல்வேய்ந்தனவா
லெடுத்தபேரண்டமங்கையினள்ளியினியமாங்கனியினிற்பிழிந்து
குடிப்பினுங்குடிக்குமென்னிலித்தானைக்குரைகடல்கடக்குமாறரிதே.(கo)

வேறு.

தன்னுடைப்படையுடைதல்கண்டுறுதறுகண்வெஞ்சினவவுணர்கோன்
மின்னுநக்கவொள்வாள்விதிர்த்திணைவிழிபுகைந்தழல்சிந்தவே
கொன்னுனைக்கணைபெய்தவாவம்வீசித்துவெஞ்சிலைகொண்டுவான்
றுன்னுபொற்கொடிகட்டுதேர்மிசைசுடருநாணுறவேறினன். (கக)

ஏறுதேரொலியுருமுநாணுறவெறியுநாணொலிகாய்சினத்
தாறுபாய்கரிபிளிறுபேரொலிதார்வயப்பரியேவிவெம்
பாறுதாழ்படைமன்னரேவியபடைகள்போம்வழிகுருதிநீ
ராறுபாயொலிதிரைநெடுங்கடலரவநாணவொலித்தவே. (கஉ)

வேலெழுப்படையசனிதோமரம்விசிகம்வாள்கதைகப்பணஞ்
சூலமாலிபிலிற்றுமாரியொருங்குவிட்டெதிர்தூவலுங்

காலகாலனிடத்தின்மேவியகருணைமாமழைபொழிதரும்
பாலலோசனைவிற்பழுத்துமிழ்பகழியாலவைமாற்றினாள். (கங)

பண்ணுலாவியமழலைமென்மொழிபடைகள்யாவுமகற்றவெங்
கண்ணழற்பொறிகதுவநீள்புகைகாலும்வெஞ்சினவவுணர்கோன்
விண்ணுளோருயிர்நாளுநாளும்விழுங்கிவெண்ணிணமுடையரு
வண்ணலஞ்சுடர்வேல்விடுத்தலுமஞ்சிவானவரோடினார். (கச)

அஞ்சல்வானவரென்றுசெங்கையமைத்தணங்கரவார்த்திடும்
வஞ்சிநுண்ணிடையவுணர்கோனெறிவேலைவாள்கொடுமாற்றவே
நஞ்சுமிழ்ந்தெரிநேமிதேவர்நடுங்கவஞ்சன்விடுத்தலும்
வெஞ்சினக்கதையொன்றுகொண்டதுவிளியமோதிவிலக்கினாள். (கரு)

கொற்பழுத்துமிழ்நேமிநூறுபடுத்தல்கண்டுசினங்கொளீஇ
மற்பழுத்துயர்தோளினானொருவாளிதொட்டிதுகாவென
வற்பழுத்தளிகிண்டுமென்மலரம்மெலோதிநகைத்துநீள்
விற்பழுத்துமிழ்வெங்கடுங்கணையொன்றுகொண்டுவிலக்கினாள். (கசு)

ஆலகாலமுயிர்ப்பதேழ்கடலடையவற்றவயின்றெழுங்
காலவெங்கனலொடுபிறந்ததுகழிபுலால்முடைகமழ்வது
கோலும்வெஞ்சமரதனில்வானவர்குருதிவேலைகுடிப்பதாஞ்
சூலமொன்றுவிடுத்தணங்கெதிர்நின்றுதோள்புடைகொட்டினான். (கஎ)

பாறுசூழ்வரவலகைகோடிபடர்ந்துமுன்செலவெண்ணிணச்
சேறுபூசியதிர்ந்துவானுருமேறுபற்பலசிந்தியே
மாறடர்த்திடுசூலமெய்தலுமங்கைசூலம்விடுத்தவன்
வேறும்யாமெனுமாசையோடெதிர்மேவுசூலம்விலக்கினாள். (கஅ)

விலக்கருங்கதையொன்றுகொண்டுவெகுண்டெதிர்ந்திகலவுணர்கோ
னலக்கணெய்தவடிக்கவெங்கதையாயிரந்துகளாதலுஞ்
சிலைக்கொடும்புருவக்கருங்குயில்செஞ்சிலம்புபுலம்பவோர்
மலர்ப்பதங்கொடுதைப்பவங்கவன்மண்ணில்வீழ்ந்துமயங்கினான். (கக)

வெய்யவாளசுரேசன்வீழ்தலும்வெம்பரித்திரள்வெள்ளமு
மையல்மாமதயானைவெள்ளமுமள்ளரெண்ணறுவெள்ளமுங்
கொய்யுளைப்பரிபண்ணமைத்தெதிர்குலவுதேர்நிரையானவையு
மையையேவியசத்திசென்றொரரைக்கணத்திலறுத்ததே. (உ0)

எக-வது-துர்க்கன்படையெழுச்சி-அத்தியாயம்-முற்றிற்று.

ஆகதிருவிருத்தம்-கஎசுஅ.

---



எழுபத்திரண்டாவது.

## துர்க்கன்வதை அத்தியாயம்.



ஐயைசேவடியாலுதைப்பவலக்கணுற்றெழுமவுணர்கோன்
வெய்யசேனைகள்யாவுமின்றிவிளிந்தவாறுமனக்கொளா
மையவார்குழலையையோடமர்மலையுமாறறிதென்னவெம்
பையராவின்வெகுண்டுவிண்ணின்மறைந்துபாய்கணைதூவினான். (௧)

ஆலிமாமழைதூவிவானெழுமசனியேறெனவதிர்தலும்
வேலையேழும்விழுங்குதீமுகவெய்யவாளியின்மாற்றினாள்
காலன்வெங்கிடவமர்முருக்கியகருநிறத்திகலவுணர்கோன்
மால்வரைக்குலநூறுகோடிபிடுங்கிநின்றுவழங்கினான் (௨)

விடுத்தமால்வரையாவுநுண்பொடியாகிமண்ணிடைவீழ்தரத்
தொடுத்தபல்கணைகோடிகோடியிமைப்பினின்றெதிர்தூவினாள்
மடித்தவாயினனெயிறுதின்றழல்மாரிசிந்தியகண்ணினன்
பிடித்தவில்லினனன்னைமுன்னொருபெய்மதக்களிறாயினான். (௩)

பாற்றினம்பலகோடிசூழ்வருபருமயானைமுறச்செவிக்
காற்றினாலுயர்குடுமிமால்வரைகால்கிளர்ந்திடவழிகடா
மூற்றிருந்துயரருவிபாய்தரவுரறிவந்தெதிர்மலைதலுஞ்
சீற்றவாளினெடும்புழைக்கைசிதைந்துவீழ்தரவெட்டினாள். (௪)

ஓடைமால்கரியுருவவீழ்தலுமுலகம்யாவும்வெருக்கொள
வாடகக்கிரியடிபெயர்ந்திடவகன்மருப்பினசைத்துமேல்
நீடுயிர்ப்பினிலெழுகடற்புனனிலைபெயர்ந்துயரடைகரைப்
பாடுகொன்றிடமைநிறத்தபகட்டின்வெவ்வுருவாயினான். (௫)

பகட்டின்வெவ்வுருவொழியமுத்தலைவேல்பணித்தலுமவுணன்வான்
முகட்டெழுந்துகையாயிரங்கதிர்முடிகளாயிரமாகியே
தகட்டிதழ்க்கமலப்பொகுட்டுறைசதுமுகத்திறைதன்னொடு
மகட்டினேழுலகும்படைத்தருளன்னைமுன்னரடைந்தனன் (௬)

ஆயிரம்படையாயிரங்கரமிசையெடுத்தடலவுணர்கோன்
மாயிரும்புவிமறையவீசலுமங்கைவானிலெழுந்துபோய்க்
காயும்வெங்கதிர்கதுவவெய்யகனற்கொடுங்கணையொன்றினாற்
றீயனாருயிர்வவ்வினாள்மலர்சிந்திவானவர்துள்ளினார். (௭)

உலகம்யாவுமியற்றிமீளவொடுக்கியோருருவாகிமற்
றலகிலாவுருவெய்திமுக்குணமாகிமுச்சுடராகிநீ
டிலகுபேரொளியாய்நிறைந்தருளிறைவியென்றிருசெய்பதாண்
மலர்வணங்கிமுகுந்தனுதியவமரர்மற்றிதுகூறுவார். (அ)

எஉ-வது-துர்க்கன்வதைஅத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஎஎகூ.

---

எழுபத்துமூன்றாவது.

## வச்சிரபஞ்சரகவச அத்தியாயம்.

அங்கையிற்கரகந்தாங்கும்பிரமாணியருளினோடுந்
துங்கமென்சென்னிகாக்கவயிணவிதுகளிலாக
மெங்கணுங்காக்கசெய்யமேவ்ந்தெழிலுருத்திராணி
தங்குமெண்டிசையுமன்புதழைத்திடவினிதுகாக்க. (க)

கொன்னுனேச்சூலிசென்னிமயிரினைக்குறித்துக்காக்க
மன்னுவெண்பிறைதாழ்சென்னிவயங்கொளிநெற்றிகாக்க
பன்மயிர்ப்புருவநாளும்பரிவொடுமுமையாள்காக்க
வென்னையாள்முக்கணீசனிறைவிகண்ணிணைகள்காக்க. (உ)

வயமிகுமிமயவல்லிமூக்கினைமகிழ்ந்துகாக்க
செயையொடுவிசையைமேல்கீழிதழினைச்சிறந்துகாக்க
வயிலுடைச்சுருதிதூயவஞ்செவிகாக்கதண்ணென்
பயின்மலருறையுஞ்செல்விபல்லினையுவந்துகாக்க. (ங)

சண்டிமென்கபோலங்காக்கதவளநாண்மலரின்வைகு
மொண்டொடிநன்னுக்காக்கவிசையைமங்கலைமற்றெவ்வாக்
கண்கவர்நாடிகாக்ககாத்தியாயனியெஞ்ஞான்று
முண்டகமலரிற்றூயமுகத்தினைச்சிறந்துகாக்க (ச)

காளமுண்டிருண்டநீலகண்டிமென்கழுத்துக்காக்க
கோளில்பூதாரசத்திசுவற்புறங்காக்ககூர்மி
நீளொளிச்சந்திகாக்கவயிந்திரிநெறியினோடுந்
தோளிணைகாக்கபத்மைதுணைமலரங்கைகாக்க. (ரு)

கமலைகைவிரல்கள்காக்கவிரசைகையுகிர்கள்காக்க
திமிரமுண்டொளிரும்வெய்யோன்மண்டலத்துறையுஞ்செல்வி
யெமதிருவாகுமூலங்காக்கவானவர்களேத்த
வமிர்தலகரிநாளுமகன்மணிமார்பங்காக்க. (சு)

தரித்திரியிதயங்காக்கதயித்தியர்ச்செருப்போள்மிக்க
கருத்தொடுமுலேகள்காக்கசகத்தினிலிறைமைபூண்டோள்
திருத்தகுவயிறுகாக்கதிகழ்தபோசதிதன்னுள்ளத்
தருத்தியினுந்திகாக்கவசைவளர்முதுதுகாக்க (௭)

கருதருவிகடைகாக்ககடிதலம்பாமைவாய்ந்த
குருமணிச்சகனங்காக்கதுகாரணிகுய்யங்காக்க
வருடரவருமபாயகந்தினியபானங்காக்க
தெருளுடைவிபுலேயென்றுஞ்சிறப்புடைக்குறங்குகாக்க. (௮)

லளிதைமென்முழந்தாள்காக்கவியற்சபைகணேக்கால்காக்க
களிதருகோனைவாய்ந்தபரட்டினேக்காக்கமிக்க
வளிகொள்பாதலத்திற்செல்வோளணிகெழுபுறந்தாள்காக்க
வொளிர்நகம்விரல்கள்சந்திரீயுக்கிரியுவந்துகாக்க. (௯)

தலத்துறைமடந்தையுள்ளங்காலிணேகாக்கதண்ணென்
மலர்த்திருமனேயைக்காக்கவயங்குகேத்திரதையோங்கி
யுலப்பில்கேத்திரங்கள்காக்கபிரியகரையொழிவருறு
நலத்தகுமக்கடம்மைநன்குறக்காக்கவன்றே. (௧0)

உயர்சனுதனியென்ஞான்றுமொழிவறுமாயுள்காக்க
மயர்வறுசிர்த்தியாவுமாதேவிகாக்கமிக்க
செயிரறுதருமம்யாவுந்தனுத்திரிசிறந்துகாக்க
வியல்புடைக்குலத்தைவாய்ந்தகுலதேவியினிதுகாக்க. (௧௧)

சற்கதிபிரதைநல்லோரியைபினேத்தயாவிற்காக்க
விற்கொடும்போரினீரில்வெளியினில்வனத்திற்குதி
லிற்புறமதனிலோங்குசர்வாணிகாக்கவென்னுப்
பொற்றருமலர்கவிப்புங்கவரோத்திறைோ. (௧௨)

அந்தளிர்ப்புரையுஞ்செய்யவடிமலரிறைஞ்சியேத்து
மிந்திரன்முதலினேரையெழுகெனநோக்கிநீவிர்
சிந்தையுற்றுரைத்தவச்சிரபஞ்சரஞ்செபிக்கிலாகம்
வெந்திடக்கனற்றுந்தீயவெப்புநோயொழியுமன்றே. (௧௩)

இனிதினிக்கவசந்தன்னேயெட்டிருமுறையினேதிப்
புனிதநீருருந்திலுந்திப்பொருக்துநோயனேத்துந்தீரும்
கனேயிருட்கங்குற்போதிற்கவசநன்கோதியேகிற்
றுனேவுறுகுறுந்தாட்பூதம்பேயிவைதொடர்ந்திடாவால். (௧௪)

பொறையுயிர்த்திடாதுநோயிற்புலம்புவோர்க்கினிதுநீவி
ரறையுமிக்கவசந்தன்னேயருகிருந்தோதிற்றூய்தாய்

நறியதண்புனலேயோதியளித்திடில்நவையிலாத
சிறுவரைவிரைவின்மிக்கசிறப்பொடுமுயிர்ப்பர்மாதோ. (௧௫)

களிறுவீழ்ஞாட்பிற்கூறுங்கவசமோர்ந்தினிதிஞேதி
ஞெளிரும்வேற்பகைவர்தானேயுடைந்துவெங்கொடுத்துநீங்கும்
வெளிறிலிக்கவசமோதிமென்புனலளிக்கிற்றீஞ்சொற்
றளர்நடைப்புதல்வர்க்கென்றுமுறுபிணிசார்ந்திடாவால். (௧௬)

இனையநற்கவசந்தன்னையாரொடுத்தியம்புகின்று
ரனையவர்தமையென்ஞேடுஞ்சத்திகளளிக்குமென்னைப்
புனேயிழையமரர்வேட்டநல்வரமளித்துப்பொங்குங்
கனேயிருட்டுபிழம்புசீக்குந்தன்னுழைக்கரந்துபோனுள். (௧௭)

துற்கனேக்கொன்றவாற்றுல்துற்கையாயினளிம்மானேப்
பொற்பின்மங்கலவாரத்திற்புகல்சதுர்த்தசியின்மிக்க
வற்பொடுங்கன்னித்திங்கணவமியட்டமியிற்போற்றப்
பற்பலதுயருநீங்கிப்பார்முழுதாள்வரல்றே. (௧௮)

ஆயிரங்கண்ணியன்னமுகத்தினளன்னகைஉள்
பாய்பரியூர்திவெய்யவயோமுகிதொனிகைபண்பிற்
றீயவெம்பிணத்தின்மேலோள்விச்சுவைகௌரிசெப்பு
மேயவொன்பதின்மர்காசிவியனகரளிப்பரன்றே. (௧௯)

வயிரவரொண்மரொண்ணெண்கூளிகள்வரம்பில்பூதஞ்
செயிரில்தேவியர்களுல்வர்தேம்பொதிநறவமாந்திக்
குயில்குடைந்தாடுஞ்சோலேக்குண்டகழுடுத்தசெம்பொ
னெயில்கடக்தோங்குகாசிநகரினிதளிப்பரன்றே. (௨0)

இன்னநற்கதையைக்கேட்போர்பயின்றுளோரொழுதிவைப்போர்
துன்னருந்துன்பநீங்கியளப்பரும்போகந்துய்த்துக்
கன்னலிற்கனிந்ததீஞ்சொலரம்பையர்கவரிநீழற்
பொன்னுலகினிதுகாக்கும்புரந்தரன்போலவாழ்வார். (௨௧)

எ௩-வது-வச்சிரபஞ்சரகவச அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧எ௩எ.

---

எழுபத்துநான்காவது.

## ஓங்காரவிலிங்கத்தின்கதையுரைத்தஅத்தியாயம்.

கூன்பிறைமுடித்தசென்னிக்கூத்தன்வண்டறைந்துபாடுந்
தேன்படுகூந்தல்கேட்பத்திரிலோசனத்துரைத்தகாதை
வான்படுதவத்தின்மிக்கமறைமுனிகேட்டியென்ன
வூன்சுவைத்தொளிரும்வைவேற்பண்ணவனுரைக்குமன்றே. (க)

அவ்வுழிவிரசைபீடமொன்றுளததனின்பாங்கர்ச்
செவ்விதின்முத்திநல்குந்திரிலோசனவிலிங்கமுண்டாற்
கவ்வைநீர்க்கங்கைதன்னிற்கருதுபிப்பிலமென்றோதுந்
தெய்வநீர்ப்பெருக்கறுதீர்த்தமொன்றுண்டுமாதோ. (உ)

அரசராற்சித்தர்தம்மாலரக்கராலமைத்தலிங்க
முறைசெயிற்பத்துநூறுமொலிபுனற்கங்கையாற்றிற்
றெரிவரிதாகச்சித்தரமைத்தருளிலிங்கஞ்செப்பிற்
குருமணிப்பூண்செய்தோளாய்கோடியாறுகுமன்றே. (ங)

என்னுடையன்பர்தம்மாலியற்றியவிலிங்கம்யாவு
முன்னியித்துணையென்றோதமுடிவிலவிவற்றின்மாளாப்
பன்னருந்துறக்கநாளும்பணிந்தவர்க்குவந்துநல்குந்
தொன்மையவிலிங்கம்யாவுங்கேட்டியென்றினிதுசொல்வான். (ச)

வாய்ந்தவோங்காரலிங்கந்திரிலோசனன்வளர்மாதேவ
னேந்தெழிற்கிருத்திவாசனிரத்னேசனியற்சந்திரேச
னுய்ந்தசீரவிமுத்தேசனருட்டருமேசன்காமற்
காய்ந்தகாமேசன்விஸ்வகன்மேசன்மணிகர்ணேசன். (ரு)

விளங்குகேதாரம்விஸ்வநாதன்வீரேசனென்ன
வுளங்கனிந்தோதிலிங்கமொருபதினான்குண்டாகும்
வளங்கொள்காசியினிவின்னவிலிங்கங்கள்வதிந்தவாற்று
லளந்துணர்வரியமுத்திக்கேத்திரமாயதன்றே. (சு)

அண்டர்கோன்றொழுஞானேசனமுதேசனலாங்கலேசன்
றண்டசன்மகேசன்சொர்க்கத்துவாரேசன்றாரகேச
னெண்டிறல்நந்திகேசனருணேசன்சோதிரூப
னெண்டிசைபுகழ்விருத்தகாடேசனெழிற்பிரமேசன். (எ)

அருள்விருக்கேசன்முத்தித்துவாரேசனெனவமைந்த
வொருபதினான்கிலிங்கமுறைந்தனவவைகள்செங்கேழ்க்
குருமணிகுயின்றசெம்பொற்கொடிநெடுமாடமோங்கி
யிருவிசும்பிடறுங்காசிமாநகர்க்கிதயமென்பார். (அ)

சரமகேச்சுரனீசானன்புரோக்கன்வியாக்கிரேசன்சாற்று
மிரணியகர்ப்பன்சேட்டனுபசாந்தனுக்கிரேசன்
பரவுசம்புகனிவாசன்சயிலேசன்பயில்நாகேசன்
பொருவில்மத்திமகேசன்சீர்பொருந்துசொல்லீசனென்னு. (௯)

இலிங்கமோர்பதினைன்குண்டாலீங்கிவையனைத்துமோரேழ்
தலம்புகழ்காசிக்கோங்குதத்துவமென்பவொன்று
வலங்கிலேச்சூலமேந்துமண்ணல்சாற்றுதலுமன்பின்
விலங்கிவில்லுமிழும்பைம்பொன்விளங்கிழையுரைக்குமன்றே. (௧0)

கடல்வயிறலறியின்றநஞ்சமுண்டமரர்க்காத்த
வடல்விடைப்பாகவிவ்வாறறைந்தனையன்றியின்னும்
படரொளியிலிங்கம்யாவுந்தனித்தனிபகர்தியென்ன
மடவரலினிதுகேட்பமழுவலானுரைக்குமன்றே. (௧௧)

ஈற்றுளேந்தலறிவெள்வாய்வலம்புரியீன்றமுத்தம்
பாற்கதிர்மதியென்றும்பபருமுகைவெடிக்குமந்தண்
சேற்றகல்வயல்சூழ்காசித்திருநகர்தன்னில்முன்ன
மாற்றருந்தவமொன்றுதியந்தணனாற்றினனே. (௧௨)

யுகமொருநூறுதீராயோகினிலுறங்குவேத
வகமலரதனிலோங்குமலங்கொளியொன்றுதோன்றி
நிகரில்பாதலங்களேழுங்கடந்ததனிலையில்மீட்டும்
புகுதலுமுலகம்போர்க்கும்பொங்கொலியெழுந்ததன்றே. (௧௩)

பொங்கொலியெழுதல்கேட்டுப்பொறிபுலனடக்கியாற்றுந்
துங்கநல்விரதநீங்கிச்சதுமுகன்றனைவிளைக்கச்
செங்கண்மாலுருவாயாதிவேதகாரணமாய்ச்சீர்த்தி
தங்குசாத்துவிதமாகுமகரமுன்சார்தல்கண்டான். (௧௪)

இராசதகுணத்திரண்டாம்வேதகாரணமாய்வேதன்
பராவருமுருவமுற்றோர்படிவமாயனைத்துமாகி
விராயபேருலகமீன்றவன்னையாய்விளங்குமென்னுத்
தராதலமுழுதும்போற்றுமுகரமுன்சாரக்கண்டான். (௧௫)

சாமகாரணமாய்நோற்றவரேழிற்குயர்தலைமைத்தாகிக்
காமனையெரித்தமுக்கட்கடவுடன்வடிவுபோன்று
தோமறவிளங்குமிக்கதாமதகுணத்திற்றோன்று
நாமநூல்மறையோரேத்துமகரமுனண்ணக்கண்டான். (௧௬)

உலகெலாமோங்குசத்தப்பிரமமாயுவமையின்றி
யலகில்பேரின்பமாகிவாக்கினுக்காதியாகி

யிலகொளிவிரிக்குந்தூயவிச்சுவவுருவாயென்றுந்
தொலேவிலானந்தமாகுநாதமுன்றோன்றக்கண்டான். (௧௭)

காரணமனைத்துந்தோன்றுங்காரணமாகியெங்கும்
பூரணமாகியோங்கும்பிரமமாய்ப்பொலிந்துநின்ற
வேர்பெறவிளங்கித்தோன்றும்விந்துவைநோக்கியெங்குஞ்
சீர்கெழுபிரணவத்தைத்தெருளுறவேத்துமன்றே. (௧௮)

உலகெலாமளிக்குமாற்றுலோமெனும்பெயரதாயிற்
றலகறுகருமவாரியகன்கரைகடத்தறன்று
லிலகுதாரகமென்றோதும்பெயரொடுமியைந்ததென்ன
மலர்தலேயுலகம்பூத்தமறையவன்பழிச்சுகின்றான். (௧௯)

ஓங்காரவுருவாயோதுமெழுத்ததாயோங்காராதி
நீங்கரும்வன்னந்தோன்றுநிலேயதாயுயிர்கள்யாவுந்
தாங்கியுமதனுட்டோயாச்சதாசிவமாகிநான்காந்
தீங்கறுமறையாய்நாதவிந்துவாய்ச்சிவமதாகி (௨0)

அகரமாயுகரமாகிமகரமாயழிவொன்றின்றிப்
பகர்வரும்பவராய்த்தூயசர்வராய்ப்பிரமமாகிப்
புகலருங்குணக்குன்றாகிப்புவனகோடிகளும்பூத்த
நிகராறுதுரியமாகிநிருமலமாகிநின்றாய். (௨௧)

குறுமையாய்நெடுமையாகிக்குணங்குறியுருவமில்லாச்
சிறுமையாய்ப்பருமையாகிச்சித்துருவாகிநான்கு
மறைபுகலிளேயராகிவிருத்தராய்வண்ணமைந்தா
யறிவருமுதாத்தமிக்கவனுதாத்தஞ்சொரிதமாகி. (௨௨)

எடுத்தலேபடுத்தல்மிக்கநலிதல்மூக்கிதழ்நாப்பல்லோ
டடுத்திடுமண்ணஞ்சார்ந்துபிறந்தவக்கரங்களாகி
நடத்தலோடிருத்தலென்னும்பாவகநண்ணிநண்ணுக்
கடுத்திகழ்மிடற்றராகிக்களேகணுயருவமாகி. (௨௩)

இதயமண்டபத்தினீங்காவிறைவனுயகோரமாகிச்
சதியுருவாகித்தாளமுவந்துறைதலேவனுகி
விதியினில்நிருத்தகீதவாச்சியவிஞ்சையோர்க்குங்
கதியிணேயளிப்போனுகிக்கருதுபல்கலேயுமாகி (௨௪)

மலரயனுகியாவும்வகுத்துமால்வடிவமாகி
யுலகெலாங்காத்துமுக்கணெருவனுயொடுக்கிப்பின்னு
மலகிலாவுருவமாகியேகமாயனுதியாகி
யிலகுபேரொளியேயெந்தாயென்றெடுத்தேத்தல்செய்தான். (௨௫)

வேறு.

உள்ளநெகிழவிழிபனிப்பப்புழிச்சிப்புழிச்சியுவந்தேத்து
மள்ளற்கமலப்பொகுட்டுறையுமலரோன்முன்னரருள்புரிவான்
கொள்ளையினவண்டிசைபயிலக்கொழுந்தேன்பிலிற்றுநறுங்கொன்றை
வள்ளலிலிங்கத்திடையினிதுவந்துதோன்றிமகிழ்ந்துரைப்பான். (உ௬)

விழைந்தகேட்டியெனவமலன்வினவலோடுமலர்க்கிழவன்
றழைந்தவுவகைமீதூரத்தண்டிற்பணிந்துகதிருமிழுங்
குழந்தைமதிதாழ்புரிசடையெங்குழகாநினதுகுற்றடியேன்
பழங்கணகலவிவ்விலிங்கத்திருத்தியென்னப்பகர்ந்தனனால். (உ௭)

அனையநேர்ந்தேனிவ்விலிங்கத்தகலாதடைவலிதனுமம்
வினைகடீர்க்குமோங்காரவிலிங்கமென்னவிளம்பிடுக
வனையுமுலகமுழுதமைக்கும்வரமுமளித்தேம்பிதாமகனென்
றினிதினெவரும்பணிந்தேத்தும்பெருமுனக்கேயீந்தனமால். (உ௮)

உரவுத்திரைநீர்த்தடக்கங்கையோங்காரேசன்றிருமுன்னர்
மருவுபொழ்திலுயர்காசிமச்சோதரியாமல்வேலைப்
பரவியாடுமவர்பேற்றையாறுபகர்வேனெனவோதிக்
குரவமுயிர்க்குநறுங்கூந்தல்கொழுநனிலிங்கத்திடைமறைந்தான். (உ௯)

குடிலைக்கடவுள்காதையினைக்குழைந்துகேட்போர்புறங்காட்டி
லடலைப்பூசிக்காளியுடனுடும்பரமன்பேரருளாற்
கடல்வாய்வெருவத்தனிக்கடைந்தகாயாவண்ணன்றிருவுந்தித்
தடமீன்றெடுத்தநான்முகத்தோனுறையுமுலகிற்சார்குவரால். (௩0)

எ௪-வது-ஓங்காரவிலிங்கத்தின்வரலாறுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க௮உஎ.

---

எழுபத்தைந்தாவது.

## ஓங்காரவிலிங்கத்தின்சிறப்புரைத்தஅத்தியாயம்.

பன்னுமறைகளினிதேத்தும்பரமகற்பத்தினிற்றமன
னென்னுமறையோனொருவனுளன்வடநூற்கலைகளினிதுணர்ந்து
தன்மானொழுக்கநெறிகடவாப்பரத்துவாசன்றரும்புதல்வ
னன்னோன்காதைகேட்டியெனமுருகன்முனியோடறைந்திடுமால். (க)

முன்னூல்வினையமுற்றியபின்முனிவன்சிறுவன்முதுக்குறைவா
லென்னேமனைவாழ்க்கையிற்புகுதின்முத்தியெய்தாதெய்துதினங்

கொன்னேசுழிப்பினுயிர்போகுங்காலங்குணித்தலரிதென்றுத்
தொன்மாமறைதேர்முத்திதனிலடையும்வினையங்தொடங்குவன்யான். ()

அருமாமறையோர்தவமியற்றுஞ்சாலையடைந்துமலங்குதிரை
பொருநீர்க்கடவுணதிபடிந்தும்புவிகளனைத்தும்வலம்வந்துந்
தெருளுஞானப்பொருளுண்மையுரைப்போர்ப்பெறுதுதிகைத்துமுன்ன [ர்ப்
புரியுந்தவத்தாலிவரவந்திக்கணையிலினிதுபொருந்தினனல். (௩)

அழிவிலமரகண்டகமென்றுரைக்குந்தீர்த்தத்தகன்கரையில்
குழவிமதியின்கோடுழக்குநகொன்றைநனைவிண்டிழிபசுந்தேன்
மழையூற்றிருக்குஞ்சடாமவுலியோங்காரேசன்வளர்கோயில்
விழைவினேக்கியுளங்களிப்பவிரைவினுக்குச்சென்றடைந்தான். (௪)

மலமோர்மூன்றுமெறிந்ததற்குநெறியினமைத்தவரைபோல
நிலவுதிரிபுண்டரமிலங்கநீறுபூத்தமெய்ம்முழுது
மிலகுமணிகண்டிகையொளிரவியலாகமத்தினுணர்வரிய
வலகிலுண்மைப்பொருள்கேட்போர்க்கறையுங்குரவன்றனைக்கண்டான் ()

கண்ணுற்றுள்ளமகிழ்வெய்தக்கரகமுனிவன்றுடொழலு
நண்ணுகின்றநீயாரைநம்பியென்னவிளம்புதலு
மண்ணல்முனிவமறைபயிலுந்தமனனென்பேனருஞ்சித்தி
யெண்ணியதகமிகப்புடமிட்டருந்தித்திரிந்துமெய்திலனல். (௬)

கூற்றின்பகுவாயெனத்திறந்தமுழைஞ்சுதோறுங்குறுகியிருந்
தாற்றற்கரியயோகனைத்தும்புரிந்துஞ்சித்தியடைந்திலனல்
தோற்றற்கரியபாசுபதத்தோன்றுல்நினதுதாளடைந்தேன்
சாற்றற்கரியசித்தியினிப்பெறுவான்றருதியெனத்தொழுதான். (௭)

மாசில்புதல்வவருஞ்சித்தியெளிதின்மருவவேண்டுதியேற்
றேசில்கருமமுளிபுற்கான்றெறுதீயாகிப்பவக்கடலின்
வீசுதரங்கப்புனல்சுவற்றும்வடவையாகிமிகவிளங்குங்
காசிநகரமல்லாதுகருதுமிடமற்றென்றுண்டோ. (௮)

பொலந்தாமரையினிதழ்குதட்டிக்கனைக்காற்குவளைப்போதருந்தி
யிலஞ்சிமேய்ந்தமோட்டெருமையிறைஞ்சிப்பழுத்தகதிர்ச்செந்நெற்
கலங்கற்கருஞ்சேற்றகல்வயலிற்றுயிலுங்காசிதனிலிதழி
யலங்கல்வேணியோங்காரவிலிங்கமினிதினமர்ந்துளதால். (௯)

அன்னவீசன்றுள்போற்றியடையாச்சித்தியடைந்தோரை
யின்னவொன்னவொருநாவாலியம்பவற்றோவத்தலையின்
முன்னர்நிகழ்ந்தகாதைமற்றென்றுளதுமுனிவகேட்டியெனப்
பன்னுமறைநூற்றுறைபடிந்தபாசுபதனுண்மைத்திடுவான். (௧௦)

தாற்றுக்கமுகின்மிடறழிந்துதீங்தேனொழுகத்தாவிவயற்
சேற்றிற்கயவாயிளவாளைவிளையாட்டயருஞ்செழுங்காசிக்
கூற்றையுதைத்தகுடிலேசன்கோட்டந்தன்னிலொருதவனை
யேற்றிக்கழித்தவெண்சோற்றையருந்திவலம்வந்தினிதுறையும். (கக)

திருந்துமதிதாழ்செஞ்சடையோற்கேற்றிக்கழித்தசெழுஞ்சோற்றை
யருந்துங்கொடியதீவினையாலலறுங்கொடியகுரற்காக்கை
யிருந்ததவனைதனைக்கவர்ந்துபொருவில்காசிப்புறத்தேகிப்
பொருந்துபசியிற்கூர்வாயாற்குத்திப்போழ்ந்துதின்றதுவே. (கஉ)

நிருமாலியமுன்னருந்தியவெம்பாவத்தாலுநிகரில்முக்கட்
பெருமான்கோயில்வலம்வந்தபேற்றினாலுமுயர்தவனை
விரிநீர்க்கங்கைவிளிம்புடுத்தகாசிநகரிற்குயில்முகமாய்
மருவார்தெரியல்தொடுப்போன்றன்மகளாய்வந்துதோன்றியதே. (கங)

கரும்பிற்கனிந்தசுரமேழுகிராமமூன்றுகற்றுணர்ந்தோர்
விரும்பத்தகுமூற்சனையொருபத்தொன்பான்விளம்புநாற்பான்மேற்
பொருந்துமொன்பான்ருனமுயர்புருடராகமாறவற்றிற்
பிரிந்தோரொன்றிற்கைந்தாம்பெண்டகையராகமுப்பதுவே. (கச)

தேசிகற்கும்விசேடத்தாற்சேருமறுபத்தஞ்சுலகில்
பேசுதாளநூற்றென்றத்துணையராகம்பெரிதுணர்ந்தோன்
மாசில்தவத்துமாதவியென்றுலகமேத்தவருமடந்தை
காசிநகருளோங்காரக்கடவுள்வியப்பநடம்புரிவாள். (கரு)

பொருந்துமிடபவூர்தியிற்றிற்புரைதீர்பதினுன்கினிலுணவொன்
றருந்தலின்றிவிழிதுயிலாதாடியமுதங்கனிந்தொழுகு
நரம்புதடவந்திசையெழுப்பிநாதற்பாடிவைகறையி
லிருந்தயாங்களெல்லோருங்காணவிலிங்கத்திடைமறைந்தாள். (கசு)

அனையகுடிலேசனைவணங்கிலடையாமுத்தியாமென்னத்
துனைவின்முனிவன்றமனனொடுங்குகடீர்காசிநகரெய்தி
வினையின்றொடர்ச்சிகட்டறுக்கும்விமலற்பழிச்சியெவ்வுலகுங்
கனைவெங்கதிரிற்சுடரொறிக்குங்கடவுளிலிங்கத்தடைந்தனனால். (கள)

பிணிவாயவிழ்ந்தசெழுங்கமலம்பெய்ததேறல்கூட்டுண்டு
துணிநீர்க்கயத்துட்கருங்கெண்டைதுள்ளுங்காசிவளநகரில்
பணிவார்சடையெங்குடிலேசன்காதைகேட்போர்பயின்றோர்கள்
அணிமாசித்திமுதலாயகைவந்திறைவனடிசேர்வார். (கஅ)

எகூ-வது-ஓங்காரவிலிங்கத்தின்சிறப்புரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஅசரு.

---



எழுபத்தாறாவது.

## திரிலோசனலிங்கந்தோன்றிய அத்தியாயம்.

உரைசால்சிறப்பின் மறைபரவுமோங்காரேசன் றிருமுன்னர்
விரசாபீடமொன் றுளதாங்கதற்குவிரிநீர்த்திரைக்கங்கை
கரைகொன் றிரங்குபுனல்யமுனைகடவுட்டெண்ணீர்ச்சரஸ்வதியா
மரவப்பேர்யாறொருமூன் றும்வைகலுறுமாட்டுமால். (க)

ஆங்கணுயர்பிப்பிலதீர்த்தமுளதொன்றதனிலாடிலென் றும்
நீங்கவரியபிரமகத்திசேராதிமயநேரிழைக்கங்
கோங்குசுடர்க்கண்மூன்றளித்தவாற்றாலுலகமுவந்தேத்துந்
தேங்கொள்கடுக்கைவேணியற்குத்திரிலோசனப்பேரெய்தியதால். (உ)

ஈசானேசம்பீஷ்மேசந்துரோணேச்சுரம்வான்மீகேச
மாசில்புகழ்சேரச்சுவத்தாமேசம்வாலகில்லேச
மாசிலிலிங்கந்தற்சூழவமர்ந்தகுடிலேச்சுரத்தினிடைப்
பேசுங்காதையொன் றுளதுமுனிவகேட்டியெனப்பேசும். (௩)

எகசுவது-திரிலோசனலிங்கந்தோன்றியஅத்தியாயம்-முற்றிற்று.

ஆகதிருவிருத்தம்-கஅசுசஅ.

---

எழுபத்தேழாவது.

## திரிலோசனலிங்கத்தின் சிறப்புரைத்தஅத்தியாயம்.

உலகமேத்துராசேந்திரகற்பத்தினோங்கி
விலகிவில்லுமிழ்விண்டொடர்சினகரமீதில்
நிலவுசெம்மணிக்கண்ணவெள்ளகிற்புகைநிறத்த
குலவுவெண்சிறைப்புறவுதன்பெடையொடுங்குறுகும். (க)

குழைந்தவெண்மதிகோடுதேய்த்துயர்சினகரத்தி
னமூழ்ந்துமென் றுகள்சிறகர்மெல்வளியினுலவித்தும்
விழைந்தவன்பொடுபூசனைநோக்கியும்வியப்பால்
தொழுந்தவத்தினோர்தம்மொடுகோயில்சூழ்போந்தும். (உ)

உறையுநாளில்மற்றொருபகலொழுகொளிச்செங்கட்
புறவுபோதரல்காண்டலுமுளமகிழ்பூப்பச்
சிறையுடைப்பருந்தொன் றுவெம்பசிப்பிணிதீர்ப்பான்
பெறுதும்யாமுணவின்றெனப்பெரிதுவந்ததுவே. (௩)

படருமஞ்சிறைப்புறவினைநலிந்துயிர்பருகு
மிடனறிந்துவெம்பருந்துமற்றதற்கயலிருப்ப
மடநடைப்பெடைகண்டுதன்புறவொடுமாழாந்
துடனடுக்குறவெய்துயிர்த்துரைத்திடுமன்றே. (௪)

வெய்யவான்பகையெறுழ்வலிவிரிசிறைப்பருந்தொன்
றெய்திநாமிவணுறைந்ததுநோக்கியேகியதென்
செய்யுமோவெனவெனதுளமலமரத்திகைத்த
துய்யுமாறினியுஞற்றுகவெனவுரைத்ததுவே. (௫)

படஹமண்டிலம்வியாடிகம்பட்டிகங்கரண்ட
தடாதிவங்குசங்கிசனிசண்டஹமுட்டஹம்
விடாவருங்கதிபறவைகட்கெட்டுளவிளம்பி
னடாததொன்றிலையெனக்கிவைபயின்றினிதறிந்தேன். (௬)

யாவதென்முனமெதிர்ந்தமரோற்றுயிர்சுமந்து
போவதென்னுடையாற்றனீயுணர்ந்திலைபோலு
மேவருந்துயருழந்தெவன்விளம்புவதென்ன
வாவியன்னதன்பெடையினையாற்றிவைகியதே. (௭)

சேட்டுவெங்கதிர்குடகடற்படுதலுஞ்சிறந்த
மோட்டுவெம்பொறிக்கொடுஞ்சிறைப்பருந்திடமுன்னிப்
பேட்டொடுந்தனிப்புறவுபேருவகையினுறைந்த
கூட்டின்வாய்ப்புறத்தெதிர்ந்தறைகூவியதன்றே. (௮)

ஆற்றலுண்டெனில்வினாவினில்வருகெனவறைந்த
பாற்றொடும்புறவேற்றமர்புரிதலும்பருந்து
சீற்றமீக்கொளப்புறவினைக்கவர்ந்துசென்றிடலுங்
காற்புறந்தனிற்காமரும்பேடைகொத்தியதே. (௯)

காறொடர்ந்திளமடப்பெடைகொத்தலுங்கலங்கிப்
பாறுவாய்வெரீஇவிடுப்பவீழ்புறவொடும்படர்ந்து
தாறுபாய்கவுட்களிறுசாய்த்திழிமதக்கலுழி
யாறுபாய்புனலயோத்திமாநகரடைந்ததுவே. (௧௦)

எருத்திறைஞ்சுபைங்காய்க்குலைக்கதலிசாய்த்தீர்ந்தண்
குருத்தரம்பையங்காடெறிந்தணிமலர்குதட்டி
யொருத்தல்மேதிகண்படுவயலயோத்தியினுறையா
வருத்திகூர்பெடையொடும்புறவாவிநீத்ததுவே. (௧௧)

அண்ணல்மாநகரயோத்தியினுவிர்த்ததனல்
வண்ணவான்சிறைப்புறவுகந்தருவமாநகரில்
நண்ணுசீர்த்திமந்தாரதாமனுக்குநன்மகளு
யுண்ணயந்துலகேத்திடவுதித்ததையன்றே.	(கஉ)

மழலைமென்மொழிச்செய்யவாய்மகன்வளர்நாளில்
விழைவினோடுநல்விஞ்சைகள்முழுவதும்பயின்று
குழவிவெண்பிறைக்கண்ணிதாழ்புரிசடைக்குழகன்
கழல்பணிந்திடல்வேண்டுமென்றுவந்துளங்களித்தான்.	(கங)

அன்னவன்பெயர்பரிமளாலயனவன்றினமும்
பொன்னிறத்தசெம்புறக்கனிகனிந்துதேன்பொழியுங்
கன்னிவாழையம்படைப்பைசூழ்காசியினடைந்து
மன்னுசீர்க்குடிலேசனைப்போற்றினன்வருமால்.	(கச)

புல்லுகாதலினிறந்தமென்பேட்டினப்புறவுங்
கொல்சினத்தவாளரவுறைகோநகர்புரக்கு
மெல்லொளிக்கதிரிரத்னதீபன்றனக்கிரத்னு
வல்லியென்றொருபுதல்வியாயுதித்ததுமன்னோ.	(கரு)

அஞ்சனக்குழம்பொழுகிவார்ந்தெனத்திகழைம்பால்
வஞ்சியன்னவட்கிருவர்தோழியருளர்மகிழ்ந்து
பிஞ்சுநாண்மதிமுடித்துநின்றுடியபெருமான்
கஞ்சநாண்மலரடிதொழுகருத்தினளாகி.	(கசு)

வேளைவென்றகட்கடைச்சியர்குரவையின்வெருவி
வாளையம்பகட்டேற்றினம்வால்விசைமுருக்கிப்
பாளைவாய்கமுகுடைந்துதேன்குதித்திடப்பாயும்
கோளில்வான்புனல்வளங்கெழுகாசியிற்குறுகி.	(களு)

எரிதவழ்ந்தெரிமுரட்படைச்சூலவேலேந்துங்
கருணையங்குடிலேசன்மென்கழலிணைபணிந்து
புரிநரம்பிரங்கிசையெழீஇப்புகழ்ந்துபொற்கோயில்
திருமெழுக்கெறிந்தொழுகொளிச்செஞ்சுடரேத்தி.	(கஅ)

எழினலங்கடந்தேந்திளவனமுலைப்பேதை
யொழுகுநாளினோரிடயனுாயிற்றினிலுவந்து
தொழுதகுந்திரிதிகைதனிற்றுயிலுணவொழிந்து
விழுதுவீழிருட்போதெலாம்விதந்துபாட்டயர்ந்து.	(ககூ)

இருள்புறங்கடிந்தெரிசுடர்ப்பரிதியங்கடவுள்
மருவுகாலையின்வானதிபடிந்துநான்மறையோர்க்

குருவநல்லமுதூட்டியின்னமுதுவந்துண்டு
பொருவில்தோழியர்தம்மொடுங்கண்படைபுரிந்தாள் (உ0)

அமுதமூற்றிருந்தொழுகியவவிர்மதிச்சடையு
மிமிழ்செழுங்கதிர்நீறுபூத்திலகியவுருவு
மிமயமால்வரைப்பூங்கொடிக்கீந்தவோரிடனுங்
கமழ்நறுந்துணர்க்கொன்றையுங்காரிருட்களனும். (உக)

கறையனற்றுளையெயிற்றவெம்புயங்ககங்கணமும்
பொறிவரித்தெறுதழல்விழிப்புலியதளுடையு
மறியுடைப்பொலந்தாமரைத்தடக்கையும்வயங்க
விறைவனுங்குறையிலிங்கத்தினின்றுதோன்றினனால். (உஉ)

கொல்லும்வேலினைக்குருமணித்தடறமைத்தென்னப்
புல்லுநீளிமைபொருந்திடக்கண்படைபுரியும்
வல்லியன்னவரொழுகெனமழுவலானுரைப்ப
வில்லுமிழ்ந்தவேலுறைகழித்தாலெனவிழித்தார். (உ௩)

அவிழ்ந்தபூங்குழலங்கையிற்றிருத்திமென்றூசு
குவிந்தமென்முலைமுகட்டினிற்குலவுறச்சேர்த்திச்
சிவந்தகண்மதர்நீங்கலுந்திருவுருநோக்கி
யுவந்துபாடினராடினருவகையிற்குளித்தார். (உச)

ஐயனுமங்களளப்பிலவெடுத்தெடுத்தோதி
மையுண்கண்ணியர்மலரடிதொழுதுவீழ்ந்தெழலுஞ்
செய்யதாமரைச்செழுமலர்த்தடங்கையாலெடுத்துப்
பையராவணிவேணியானின்னனபகர்வான். (உரு)

உருவப்பூண்முலையோடரிபரந்தவேல்விழியீர்
பொருவில்சீர்த்திமந்தாரதாமன்றருபுதல்வன்
பரிமளாலயனெனப்பகர்விஞ்சையற்புணர்ந்தாங்
கிருவிசும்புறையிந்திரதிருவொடுமிருப்பீர். (உசா)

விஞ்சைவேந்தொடுங்காசிமாநகரிடைமேவி
யஞ்சொலீருயர்முத்தியிலடைதிர்முற்பவத்தின்
நெஞ்சுவந்தெமைவழிபடுமடியர்நீரொன்னப்
பிஞ்சுநாண்மதிமிலேச்சியபிஞ்ஞகனுரைத்தான். (உஎ)

முற்பவத்தினெஞ்செய்தியுமுதல்வநின்மலர்த்தா
ளற்பினுல்வழிபட்டதுமறைதியென்றமுதிற்

சொற்பழுத்தபூங்கொடியனார்தொழுதுளைத்திடலுங்
கொற்பழுத்தவெங்கணிச்சிவானவனிவைகூறும். (உஅ)

நெறிபடுங்குழலிரத்தினவல்லியாம்நீயும்
பறவைசூழ்வருகுருதிவேற்பரிமளாலயனும்
புறவுருக்கொடெங்கோயிலின்முற்பவம்பொருந்தி
யுறைதவத்தினலயோத்தியினுறைந்துயிருலந்தீர். (உகூ)

திருவணிகரயோத்தியினுவிதீர்ந்ததனல்
மருவுரத்னதீபன்றருபுதல்வியாய்வந்தாய்
பொருவில்செல்வமந்தாரதாமன்றருபுதல்வன்
பரிமளாலயனுமெனவுதித்தனுபரிவால். (௩0)

காமர்பூங்குழல்கலாவதிபிரலாவதியென்னுந்
தாமவார்குழல்நின்னுடைத்தோழியர்தங்கள்
ஏமமுற்றமுற்பவங்களுமியம்புவலென்ன
நாமவெந்திறற்கணிச்சியோன்விழைவுறநவிலும். (௩க)

முற்பவத்தின்மூன்றும்பவந்தன்னில்மற்றிவர்கள்
தப்பில்நான்மறைவிளம்புசாராயணன்றனக்காங்
கொப்பில்பேரெழில்மக்களாயினிதுவந்துதித்தார்
செப்புதன்பெயர்கவுதமைபவானியாய்ச்சிறந்தார் (௩உ)

எழில்குவிந்தனவிளமுலைமகளிரைத்தந்தை
யழுதுவாய்ந்தநாசயனனுக்களித்தனனவனுங்
கழைமிடைந்தவெங்கானிடைச்சேறலுங்கனன்று
புழைகொள்பற்கொடும்பாந்தளாற்பொன்றினனன்றே. (௩௩)

கணவன்வீதலுங்கரும்பெனத்திரண்டதோண்மகளிர்
வணரிருங்குழல்குறைத்துடல்மாசொடும்பழக
வணிதுறந்துநோன்பாற்றுழியருந்துவான்மற்றோர்
பணிவருந்தவப்பள்ளியிற்பரிவொடுமடைந்தார். (௩௪)

ஊன்கழிந்திடநோற்பவர்பொங்குயரரம்பைக்
கூன்புறக்கனிகாவினிற்கொண்டதீவினையால்
மான்கவற்றியகண்ணியர்மற்றையபிறப்பிற்
கான்படர்ந்திடுசெம்முகக்கருங்குரங்காகி. (௩௫)

அணிதுறந்தனர்நெறிவழாதாற்றுநல்வினையா
லிணையில்காசியிலுதித்தனரிவருடைப்பதியும்
பணியின்வீந்துநற்றூதைதாள்பணிதலிற்புறவாய்
மணிமிடற்றிறைகாசியில்வந்தவதரித்தான். (௩௬)

அனையனுங்கவர்தமக்குமூன்றும்பவத்தன்பன்
வனைசருங்குழல்நினக்குமுற்பவத்துயர்மனுள
னினிதின்மூவர்க்குமிப்பவமதனில்முன்புகன்ற
கனைகருங்கழற்காளையேகாதலனுவான். (கஎ)

ஈதுநிற்கமுன்னுரைத்தனகுரங்குகளெறிநீர்த்
தீதில்காசியில்திரிலோசனங்கோயிலிற்சிறந்து
மீதுயர்ந்தபொற்பழுமரத்திருந்தும்வெண்டிரைய
கோதில்நீரிடைக்குளித்துமக்கோயில்சூழ்போந்தும். (கஅ)

உறையுநாளினிலேய்மேற்றுண்பவனொருவன்
சிறைசெய்கண்ணியிலவற்றினைச்சிக்கயாத்தேகி
யறைபுனற்செழுங்காசியினாட்டுவித்தபின்று
மறுபுலத்தினிலடைதலுமறிந்தனகவிகள். (ககூ)

காசிமாநகர்க்கடவுள்பொன்முன்றிலிற்கவினும்
பாசிலைப்பழுமரத்திடைப்பயின்றநற்றவத்தா
லோசைபோகியவுரகவேந்துளமகிழ்சிறப்ப
வாசினல்லெழிற்புதல்வியராயினவன்றே. (சo)

சுணங்குபூத்தெழிலரசுவீற்றிருந்தணிசுமந்து
வணங்குநுண்ணிடைதேய்த்துயர்வருமுலைப்பேதா
யணங்கராவருளமுதுறல்சாயல்வார்வண்டின்
கணங்கொள்வார்குழலனையரிக்கன்னியராவார். (சக)

மருவுதோழியரிருவருநீயும்வான்சிறப்பிற்
பரிமளாலயன்றேணலநுகர்ந்துபல்காலந்
திருவொடும்பொலிந்தெறிபுனற்காசியிற்சேர்ந்து
பொருவிலாதுயர்முத்தியிற்பொருந்துவீரொன்று. (சஉ)

வரமளித்துயர்கடவுளவ்விலிங்கத்தின்மறைந்தா
னரிபரந்தவேற்கண்ணியர்தம்பதியடையா
வுரியதந்தைதாய்க்கரனருள்வரமினிதுரைத்துப்
பொருவில்காமநோய்கைமிகவைகுறுபோழ்தின். (சங)

இடபனூயிறுங்கெய்தலுமுக்கணெம்பெருமாற்
கொடிவில்நல்விழாவுற்றுழிநோக்குவானுரகர்
முடிவில்நல்லெழிலியக்கர்விஞ்சையர்முதல்யாரு
மடையுமேல்வைமந்தாரதாமனுமவணடைந்தான். (சச)

சுரும்புவீழ்தருமலர்க்கணை தூணியோடகற்றிக்
கரும்புநீத்தவிற்காமனேயனையநின்மகற்கெ
னரும்புமென்முலைமகட்கொடுப்பேனெனவருளாற்
பொருந்துபேரெழிலிரத்னதீபன்றனிபுகன்றான். (௪௫)

அனையகேட்டமந்தாரதாமனுமுகமலர்ந்து
கனைகருங்கழல்வேந்தொடுங்கருணையினேற்ப
பணிசெய்வெண்மணிகிடந்ததோட்பரிமளாலயற்குப்
புனைசெய்மேகலைமகளினாநன்மணம்புணர்த்தார். (௪௬)

பகழிமாட்டியவரிசிலைப்பரிமளாலயனு
மகினறும்புகைமுகந்தவழும்மலர்க்கோதை
மகளிர்மூவரோடடைந்துதன்கோநகர்வைகிப்
புகழினிந்திரதிருவொடும்பொலிந்தினிதிருந்தான். (௪௭)

வில்விழுங்கிடவீங்குதோட்பரிமளாலயன்சீர்
மல்லலம்புனற்காசியில்மீண்டும்வந்தெய்தி
யெல்லொளிக்கதிர்திரிலோசனவிலிங்கத்தையேத்தி
நல்லிசைத்தொடைநரம்புளர்ந்துறைந்திடுநாளில். (௪௮)

நல்லொளிச்சுடர்முக்கணுயகன்மலர்த்தாளில்
பில்குதேங்குழற்கலாவதிபிரலாவதியிரத்ன
வல்லியோடும்வேற்பரிமளாலயனணிமறைந்தான்
சொல்லுமிக்கதைகேட்டவர்துறக்கநண்ணுவரால் (௪௯)

எஎ-வது திரிலோசனவிலிங்கத்தின்சிறப்புரைத்த அத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௮௬௭.

---

எழுபத்தெட்டாவது.

## கேதாரவிலிங்கத்தின்கதையுரைத்தஅத்தியாயம்.

---

இருகோட்டுப்பிறைதவழுமீஞ்சடையெங்கேதாரத்திறைவன்செய்தி
பொருகோட்டுமதமலையினதள்புனைந்துநின்றுடும்புனிதன்முன்னர் [ன்
வருகோட்டுமுலையுமையாட்குரைத்தபடிமாதவத்தோய்மகிழ்ந்துகேளே
ரொருகோட்டுக்கடாக்களிற்றின்பின்னுதித்தவேற்கடவுளுரைக்குமன்றே

பாச்சடைத்தாமரைமலரும்பாவகரமடுவினிடைப்படிந்துபோகித்
தேசுடையகேதாரத்திறைவனிருபாதமலர்சிந்தித்தேத்திய

பூசனைசெய்திடிலோங்குபொலங்குடுமிச்சினகரத்தின் பொலிவுநோக்கின்
மாசுடையபவக்கடலின்கரைகடந்துமுத்திநெறிமருவுவாரே. (உ)

ஆங்குநிகழ்காதையொன்றுண்டறைகுவல்கேண்மதிமேனாளகிலமுய்ய
வோங்குமிராசேந்திரகற்பத்திலிரணியகருப்பனென்னவோதுந்
தீங்கறுநன்மாதவத்துப்பாசுபதாசிரியனுளனன்னோன்செம்பொற்
பூங்கழல்கள்வசிட்டன்முதல்மாணுக்கர்பலதினமும்போற்றிவாழ்வார். (ங)

ஆறணிந்தசெஞ்சடையோன்சேவடிக்கீழ்த்தொழும்புசெயுமன்பராகி
நீறணிந்துகண்டிகைமாலிகைபுனைந்துகங்கைநதிநெறியினாடி
மாறுசெய்முக்குறும்பெறிந்துவளர்சடாமுடிபுனைந்துமவுனமாகி
வேறடிசில்நுகராமலையமேற்றினிதருந்திமேவலோடும். (ச)

ஆங்கவரிற்குரவனடியிருபோதுந்தொழுதேத்தியறம்வழாது
தீங்கறுநன்மாதவத்துவசிட்டமுனிபாவகரத்தெண்ணீராடிப்
பூங்கதிர்கான்றொளிபரப்பும்வெண்டிங்கட்பசுங்கண்ணிபுனையுஞ்செவ்வி
யோங்கொளியசிவலிங்கமெஞ்ஞான்றுந்தொழுதேத்தியொழுகுநாளின். ()

அறங்கெழுநூற்றுறைபோயமாணுக்கர்பலரோடுமருளான்மும்மைக்
குறும்பெறிந்தபாசுபதாசிரியனியற்கேதாரங்குறுகல்வேண்டிக்
கறங்குகுரலுளையரிமான்சிறுகுருளைகவிழ்தலையவருவியோலி
னுறங்குமுயர்பொலன்குடுமியிமயநெடுஞ்சாரலின்வாயொதுங்கினனே. ()

அருளினிரணியகருப்பமுனிவரன்போயிலிங்கவடிவாகியோங்கு
திரைபொருதுகரைகடக்குங்கேதாரநதியினறுந்தெண்ணீர்மாந்திக்
கரையினிருத்தலுமாவியொழிந்தனன்வான்குடுமிநெடுங்கயிலைநின்றும்
பொருவில்கணம்விமானமொடுபோந்தவனையினிதேற்றிப்போயவன்றே. (

அருள்புரியுங்கடவுள்முனிபிறங்கெளிதிற்கயிலைவரையடைதனோக்கித்
தெரிவரியசுடரிலிங்கமெவற்றினுமிக்கேதாரஞ்சிறந்ததென்னா
விருவினைவேரறநோற்றவசிட்டமுனிகேதாரத்திறைவற்போற்றி
விரிபுனற்காசியினடைந்துயாண்டுதொறும்போய்த்தொழுதுமீளுநாளில்.

தண்டேன்றித்திரைகவுள்வானரைமுடியமுதிர்கிழவுத்தன்மையாதல்
கொண்டாகந்தளர்ந்துமுயர்கேதாரத்தடைதுமெனக்குறித்தல்நோக்கித்
தண்டாவன்புடைமுனிவர்வரைகடந்துபோதலரிதெனவுந்தாழா
துண்டாலம்பழுத்தமிடற்றிறையருளால்வசிட்டமுனியொருப்பட்டானே

கிழவுபழுத்தனையவுடலருந்தவத்தோன்கேதாரத்திறத்தலெண்ணி
விழைவுறுநன்மனவலியையினிதோர்ந்துகனவினிடைவினாவிற்போந்து
பழமறையோயிவ்வுழியாம் படர்ந்தனமவ்வுழியேகலென்னப்புண்பால்
தழைசெவியமதமலையினீருரிபோர்த்தவனோடுமுனிவன்சாற்றும். (க0)

வரமளித்துயெனிலென்றன்மாணுக்கர்யார்க்குமருள்வழங்குகென்னப்
பொருதிரைநீர்க்கங்கைபுனைகாபாலியார்க்குமருள்புரியவேண்டிக்
கருவிமுகில்கிடந்துறங்குமிமயமால்வரைதுறந்துகாசியெய்திப்
பரவுனர்தீவினையெறியும்பாவகரதீர்த்தத்திற்பரிவிற்சேர்ந்தான். (கக)

ஆதலாலித்தீர்த்தமாடுகின்றோர்முத்திநகரடைதல்திண்ணம்
காதலாற்றென்புலத்தோர்கடன்கழிப்பிற்பெறலரியகதியிற்சேர்வ
ரீதலாலதன்வடபாலிந்திரத்துய்ம்மினனென்னும்வழுதிகண்ட
திதில்பேரொளியிலிங்கமொன்றுளதாங்கதன்சீர்த்திசெப்பலாமோ. (கஉ)

ஆங்கதன்றென்பாற்சிறந்தநீலகண்டேச்சுரமுளதாங்கதனின்பாங்கர்
வாங்குசிலைவிப்பிரவாகெனும்வழுதிதனையீன்றமடமானேக்கின்
கோங்கின்முகைகவற்றுமுலைச்சித்திராங்கனையமைத்தகோதில்சீர்த்தித்
தீங்ககற்றியருள்கொழிக்குஞ்சித்திராங்கதவிலிங்கஞ்சிறப்பின்வைகும். ()

அம்பரிடேச்சுரங்காளாஞ்சனஞ்சயமேச்சுரமிவைகளாங்குவைகும்
வம்பவிழ்பூங்கொன்றைபுனைவார்சடையோனிறைவியொடுவழங்குமாறு
கம்பமறுதவமுனிவவுரைத்தனமிக்காதைதனைக்கற்றோர்கேட்டோர் [வார்
உம்பர்மலர்தூஉய்ப்பழிச்சவொருமூன்றுகண்ணினொடு முறைந்துவாழ்

எஅ-வது கேதாரவிலிங்கத்தின்கதையுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஷகக.

---

எழுபத்தொன்பதாவது.

## தருமேசவிலிங்கத்தின்சிறப்புரைத்தஅத்தியாயம்.



பின்னருமிவ்விலிங்கத்திலுயர்ந்ததெதுவெனவுமையாள்பேசவெந்தை
முன்னருரைத்திடுகாதைகேட்டியெனவருந்தவத்தின்முனியைநோக்கித்
தென்னதெனவரிவண்டுஞ்சுரும்புமிசைப்பாட்டயரத்தேறல்நல்கு
நன்மலர்ப்பூங்கடப்பந்தார்துயல்வருதோட்குமரனிவைநவிலுமாதோ.(க)

கனைகுரலேற்றெருமையுடைக்கொடுங்கூற்றமாங்குவந்துகருணையோடும்
பனிபடர்காலையிற்புனலிற்குளித்துமழைக்காலமழைபடவேநின்றும்
முனிதருவெங்தெறுகோடைக்கைந்தழலினடுநின்றுமுடிவில்காலம்
வினையறுநற்றவமாற்றவாங்கவன்முன்புரிசடையோன்வெளிப்பட்டானே

மன்பெருநற்றவமாற்றிப்பலகாலுமுணவொழிந்துவருந்திநோற்ற, வெ
ன்பெழுமியாக்கையைமகிழ்ந்தே மெழுகென்னக் கொடுங்கூற்றமெழுத

லோடு, மன்புடையசராசரங்களெவற்றினுக்குமிறைவனீயவைவெலாகின், றென்புலத்திற்புகுந்திழைத்தவினைவழிநின்னருளொடும்போய்ச் சேர்கவன்றே. (௩)

ஒழிவரியகொடும்பாவநெடுங்காலம்புரிந்துமொருபோதுசிந்தை
விழைவொடுதெண்டிரைபுரட்டுதருமவாவியிற்படிந்துவிதியினின்பேர்
மொழிதருமேச்சுரன்பாதம்பணிந்திடுவோர்பெறலரியமுத்திசேர்வர்
தொழுதகவீபழிச்சியவித்துதிகேட்டோர்நமதுபதந்துனைவிற்சேர்வார். ()

அணிகிளர்கார்த்திகைமதியிற்சுக்கிலபக்கத்தினிலட்டமியில்மேய
வுணவொழிந்துவருங்கக்குற்றுயில்துறந்துதருமேசனுயர்பொற்றளிற்
பணிவருபூசனைபுரிந்தோர்கொடியபவக்கடல்கடப்பர்பரிவாலின்னு
மிணையில்வரங்கேட்டியெனவீர்ஞ்சடையோன்மெய்தடவந்தியம்பினனே

எகூ-வது-தருமேசவிலிங்கத்தின்சிறப்புரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககூகரு.

---

எண்பதாவது.

## கிளியின்கதையுரைத்தஅத்தியாயம்

---

என்பெழுந்தயாக்கையினைத்தடவரலுங்குளிர்ப்பெய்தியிதயநெக்காங்
கன்புகனிந்துற்றிருப்பமறலியிருகரங்கூப்பியையகேண்மோ
வன்சிறையபருந்தொன்றிக்கிளிப்பார்ப்பின்றந்தையுயிர்வவ்வியேகுந்
துன்பமுயிர்பிடித்துந்தவுயிர்த்தபெடையில்லுயிருந்துறந்ததன்றே. (க)

அன்றுமுதலின்றளவுமெனைநோக்கியமர்ந்தவிவையன்பினோடு, முன்றனருள்புரிதியெனக்கொடுமறலியுரைத்திடலுமுவகைபூப்ப, மின்றிரித்தாலெனக்கிடந்தவிரிசடையோன்கிளிப்பார்ப்பைவியந்துபாராப்,பொன்றலரும்வரந்தருதுங்கேண்மினெனப்பார்ப்பினமும்புகலுமாதோ. (உ)

புன்மையாமிப்பறவையுருவெடுத்துநினதுபதமெளிதிற்போற்ற
வென்னதவமிழைத்தனமற்றதனின்வரம்யாதெனினெம்மிறைவகேட்டி
மின்னகுவேற்கொடுங்கூற்றமிழைத்ததவநோக்கியதால்மெய்ம்மைகூர
முன்னைவருபவமனைத்தும்விளங்கியவெம்பாலவற்றைமொழிதுமன்றே()

பானிலவுகொப்பளிக்கும்பனிமதிக்கோடுழுதுநறைபாய்வண்டேறுந்,தேனுகர்பூங்கொன்றையணிவேணியோய்நிற்பணிந்ததிறத்தால்முன்னம்,வானுறையுமமரர்களாய்க்கடைவளைக்குங் கரும்புருவமதர்வேலுண்கட், கானுலவுகறுக்கூந்தலரம்பையர்தோள் புணர்ந்துசின்னாள் களித்தல்செய்தேம், (௩)

மின்பயில்வேற்றுனவராய்விஞ்சையராயியக்கராயரக்கராகி
மன்பதையில்வேந்தராய்த்தண்புனலிற்கொடுங்கானில்வாழ்வதாகி
யன்பினளிக்குனராகிக்கேடுசூழ்பவராகிமற்றுமாகித்
துன்பமுறுமியாக்கைபலவெடுத்தளவில்கோடிபவந்தொலைத்திட்டேமால்

இவ்வாறுபலகோடிபவத்துழன்றுமுண்மையறிவின்றிமற்றொன்
றெவ்வாதபேரின்பக்கடற்படியாதருந்துயரமுழன்றேமீங்குச்
செவ்வான்வெண்மதிபுனைந்ததருமேசனடிபணிந்தசெய்தியானும்
வெவ்வாயகொடுங்கூற்றம்புரிதவநோக்கியதானும்வினைகடீர்ந்தேம். (சு)

மீயுயர்வானவர்க்கிறைவன்விழையுமரும்பெறற்றிருவும்வேண்டேமெங்
கட்,கேயவுணர்வுடைஞானநெறிகாட்டியடைகளைகொன்றிரங்குதெண்ணீ
ர், பாயுநெடுந்திரைக்கங்கைசூழ்கிடந்தவியற்காசிப்பதியின்வைகித், தீய
கொடும்பவக்கடலின்கரைகடப்பானிறப்பவருள்செய்தல்வேண்டும். (எ)

மறைமுதலபலகலையின்கரைகடந்துபூம்பொகுட்டுமலரின்மேலோ
னறைபுனல்வான்றுறையுறையுமஞ்சிறையமடவன்னமலங்குதெண்ணீர்
முறைபடிந்துசெலவயருமகளிர்நடைக்கழிந்தொதுங்குமுடிவிலின்ப
நிறைதருகாசியினிறத்தல்முத்தியாமெனப்பலகாணிகழ்த்தினனே. (அ)

தடவுவெண்ணெய்வாய்மடுத்துப்பொதுவர்மனைவளர்ந்தருளுந்துளவத்
தாரோன், கடவுண்மரகதப்புரவித்தேரோற்கவ்வாறுரைத்தான் கதிரோ
ன்றானுங், கெடலருமாதவம்புரியாக்கியவர்க்கரொடுமஃதேகிளத்தினன்
வெள், விடையுயர்த்தோன்காசிமுத்திநகரொன மந்தரத்துமைக்குவிளம்பி
னனே. (கூ)

பிள்ளைவண்டின்கணங்கோடிதுதைந்தாடிவிருந்தயரப்பெருகிவாசக், க
ள்ளொழுகமுகையவிழ்க்குங்கருங்காவிவளவயல்சூழ்காசியென்று, மெள்
ளரியபேரின்பத்துறைகெழுநன்முத்திநகரொன்னவோராத், தெள்ளருநா
ன்மறைப்பொருளும்விரித்தருளும்வியாதமுனிசெப்புமன்றே. (க0)

முயலரியமாதவத்துரோமசனேமுதலாயமுனிவர்யாருஞ்
செயிரறுநன்முத்திநகர்காசிமாநகரமெனத்தெளிந்தார்யாமும்
புயல்படிந்துகுடித்தகடற்புனல்குமட்டியெதிரொடுத்துப்பொங்கர்தோறுந்
துயிலுமியலானந்தக்கானனமேமுத்தியெனத்துணிந்திட்டேமால். (கக)

தெரிவரியவுலகமொருமூன்றினுமுக்காலநிகழ்செய்தியாவு
மரியயன்மாதவமுனிவரமலநீபவந்தோறுமறைந்தவாறும்
பொருவிலண்டகோளகையினிகழ்வனவுமங்கைநெல்லிக்கனியேபோலத்
தருமலிங்கம்போற்றியதால்தெரிகின்றவுண்மையுணர்தன்மையானேம்.()

என்றுபதமலர்வணங்கிக்கிள்ளைபிளம்பார்ப்பினிதினிசைத்தலோடுங்
குன்றவரிச்சிலைகுனித்துமுப்புரந்தீயூட்டியபொற்குழகன்கூறு

மன்றவுலகொருமூன்றிலரசிருக்கைகாசியலால்மற்றுமுண்டோ
பொன்றவழாலயஞ்சிறந்தவானந்தக்கிழங்கின்மூளைபூத்ததாமால். (கங)

பழமறைகளுணர்வரியபிரமமெனும்பொருள்யாமே பணிந்துநம்பால், விழைவுறுவோர்க்கருள்புரிவா னித்தலத்தினுருவுகொடு மேவினேமிப், பொழிகதிர்வானுயர்குடுமிச் சினகரத்தின்றென்றிசையிற் பொருவிலாத தொழுதகுநன்மண்டபமொன் றுளததனிலெஞ்ஞான்றுந் துன்னிவாழ் வேம். (கச)

வேறு.

மருவுமுத்திமாமண்டபமாதியா
முறைசெய்மண்டபம்யாவினுமோங்கிய
விறைசெய்பீடமுதல்வியன்பீடத்துந்
தருமபீடமுயர்ந்ததுசாற்றுங்கால். (கரு)

இன்னமென்கிளிப்பிள்ளைகள்யாவையு
மன்னபீடத்தமர்ந்தபரிசினால்
மன்னுமென்னுலகத்தினில்வாழ்ந்ததன்
பின்னர்முத்திபெறுவதுதிண்ணமால். (கசு)

என்றுகூற்றுக்கிறைவனிசைப்புழி
மன்றவீசன்வடிவொடுகிள்ளைகள்
குன்றவில்லுடைக்கூத்தன்கயிலையிற்
பொன்றயங்குவிமானத்துப்போயவால். (கஎ)

அ௰-வது-கிளியின்கதையுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசுஙஙு.

---

எண்பத்தோராவது.

## மனோரதத்திரிதிகைவிதியுரைத்தஅத்தியாயம்.

கொழுதிவண்டினமுரன்றுபாட்டயர்தருகொன்றைதேத்துளிதூற்ற
விழுதுவிட்டபூந்துகிலெனக்கிடந்தொளிர்விரிசடைப்பெருமானீ
பழுதிலாதுயர்மனோரதத்திரிதிகைநோற்பவைபகரென்னத்
தொழுதுகூறினள்சில்லரியொழுகியதுணைமலர்த்தடங்கண்ணாள். (க)

பூண்சுமந்தபொற்கொடியெனக்கவினியபுலோமசைவிழைவோடு
மாண்சுமந்தநற்றவம்பலவாற்றியும்விழைந்தனமருவாமல்
பாண்கனிந்துதேமழைபொழிந்தாலெனப்பாட்டயர்ந்தனளீசன்
கோண்பிறைக்கெழில்கொடுத்தவாணுதலுளங்குறித்ததுபுகலென்றான்.()

என்றுகூறலுந்திதலைப்பூத்தழகுவாய்ந்தீர்க்கிடைபுகாதோங்கிக்
குன்றிரண்டெனப்பணைத்திறுமாந்தெழுகுவிமுலைக்கொடிபோல்வாள்
மன்றநன்மகமளப்பிலபுரிந்துயர்வானவர்க்கிறையாய
வென்றிமன்னவன்குலமனைக்கிழத்தியாயினிதிருந்திடல்வேண்டும். (௩)

பொற்பின்மேவருமெவ்வுருவேண்டினும்பொருந்துதல்தரவேண்டு
மற்பின்மேவியகாதலனிறந்துழிக்கைம்மையாகுதலின்றிக்
கற்பழிந்திடலொழிந்துநற்கன்னியாய்க்கணவனைப்பெறல்வேண்டுங்
கொற்பழுத்தொளிர்கணிச்சியோயெனவவள்கூறலுமிறைகூறும். (௪)

வரதமோர்கரமபயமோர்கரஞ்செபவடமொருகரமாகப் [ரே
பொருவில்மோதகமொரு கரத்தமைத்தெழில் பூத்தொளிர்பணைமென்
ளிருபதாமருட்கவுரியோடமிகவுளைறாழ்வலிக்கடாயானை
யுருவமேவுமாசார்விநாயகற்றொழில்விழைந்தனவுறுமென்றான். (௫)

அன்னநோன்பினையாற்றுநல்விதியெனக்கறைந்திடுகெனலோடு
மன்னுசித்திரைத்திங்களில்வளர்மதிமருவியபக்கத்தில்
முன்னியேத்துமூன்றாந்திதிவருவதன்முன்னைநாளருள்கூருந்
தன்னையேத்தியக்கங்குல்வாயுணவினைத்தவிர்ந்துவைகறைப்போதில். (௬)

துயிலெழூந்துமாக்கடம்புநாயுருவிபேரீந்துமாதுளைதோமில்
செயலையத்திநீள்கதிரநன்றுவல்வெண்பிச்சியின்றிரள்கொம்பி
னியைவகொண்டுவெண்பற்கறைதீர்த்தெதிர்காலையிற்கடனாற்றிப்
பயிலுமாலையம்பொழுதினிற்புனிதநீர்படிந்துவெண்டுகில்சுற்றி. (௭)

செய்யசந்தனங்காழகில்மான்மதமரிசனஞ்செழுஞ்சாந்தந்
தொய்யில்நீண்மரமஞ்சள்பத்மாக்கமெய்த்தோமில்சிந்துரமேற்ற
வையதேவதாருவினொடுமுரோசனையிவற்றினல்விருட்போதின்
மையல்யானைமாமுகத்தனைக்கவுரியைவரன்முறைவழாதாட்ட. (௮)

இவையலாதிருகூறுகுங்குமமலர்மான்மதமிருகூறு
நவையில்சாந்தமுக்கூறொருகூறொளிர்நறைகமழ்கருப்பூரம்
குவவில்மற்றதனுறுபெயரியக்கர்மென்குழம்பதாமிஃதாட்டி
னுவகைசெய்யுமெக்கடவுளுமென்பதாலுவந்திவற்றினுமாட்டி. (௯)

பிண்டிபாதிரிமல்லிகையலரிதேன்பிலிற்றுசண்பகங்கோங்கங்
கண்டல்தாமரைவலம்புரிகுமரிமென்கடிகமழ்செழுநீலம்
வண்டறாமலர்தூவிமென்சருக்கரைவயிற்றுறுமடையேல
முண்டுமுந்திறல்நெய்யினலமைத்தவையுவப்பொடுமினிதூட்டி. (௧௦)

புகலருக்கியமுதலியயாவையும்புரிந்துபூசனையாற்றி
மகிழ்சிறந்தருமறையவர்க்கியன்றனவழங்கியாங்கவர்க்கேற்ற

துகளறப்பரிந்தட்டனகூழிஞலமைத்தவைதான்றுய்த்து
திகழுநன்மதிதோறுமிவ்வாறுநோற்முண்டுசென்றியல்காலே. (கக)

முன்னரோதியதிதியினிற்கங்குலின்முறைவழாதருச்சித்து
நன்னிலத்தினில்மெழுக்கெறிந்ததனிடைநவையிரீக்கருமங்கள்
சொன்னசாமவேதத்திருமறையினுல்துகளிலெண்முதலாக
மன்னுதானியமெட்டில்நூற்றெட்டெனவழங்குமாகுதிபண்ணி. (கஉ)

பொருவில்விச்சுவப்பூசைநின்னருள்பெரு'புதல்வனேடினிதாற்றும்
விரதநற்பலன்வழங்குதல்வேண்டுநல்வேழமாமுகத்தோயிங்
கருள்செய்நின்னுடையன்னேயோடிதன்பலமென்னவீழ்ந்தடிபோற்றி
மருவுலாநறுமலர்கடுப்பும்முறைமகிழ்வொடும்வலஞ்செய்து. (கங)

விரதமாற்றுவித்தருளியகுரவனேப்பன்னிதன்னெடுமெல்லென்
பொருவில்கட்டிலினிருத்திநல்லணியொடும்பூசனேயினிதாற்றிப்
பரிவினன்குடைதொடுகழலாடிநற்பாற்பசுவினைவநல்கி
யருளினேடுபின்சென்றுநற்குரவனேவிடுத்தகன்மனேயெய்தி (கச)

அள்ளிருட்கரும்போதகன்றிட்டபினுப்பிழிமலர்க்கூந்தல்
வள்ளேவார்குழைப்பன்னிருகன்னியர்மைந்தரத்துணேயோரை
யுள்ளுவப்புறவெண்ணெயினுட்டுவித்தின்னமுதினிதூட்டித்
தள்ளரும்பெருங்கிளேயொடுமாரமுதருந்திடல்தகைமைத்தே. (கரு)

கருங்கட்கன்னியர்நோற்றிடின்விழைவுறுகணவனைப்பெறுகிற்பார்
திருந்துகாளேயர்நோற்றிடின்வருமுலேத்தெரிவையர்தமைச்சேர்வர்
பொருந்துமங்கலமடந்தையராற்றிடிற்புதல்வனைப்பெறுவார்பூண்
பரிந்தமங்கையர்நோற்றிடின்மறுமையிற்பழிப்பில்காதலற்சேர்வார். (கசு)

பன்னுநான்மறைமுனிவரராற்றிடிற்பலகலேத்துறைசெல்வார்
மன்னராற்றுறினெருகுடைநீழலின்மண்முழுதினிதாள்வார்
பொன்னவாங்குலவணிகராற்றுறினளவறிவருபொருள்செய்வார்
பின்னுளோரிஃதாற்றிடினுளத்திடைவிழைந்தனபெறுகிற்பார். (கஎ)

செய்யதாமரைத்திருமகள்நோற்றுமுன்செங்கண்மால்தனேச்சேர்ந்தாள்
மையவேல்விழியருந்ததிநோற்றுயர்வசிட்டனன்மனேயானு
ளேயநுண்ணிடைக்கொடியனசூயைநோற்றத்திரிதனேப்பெற்ருள்
தொய்யில்வெம்முலேயிம்முறைநோற்கெனச்சொற்றனன்மழுவல்லான். ()

அழகுகண்படுவனமுலைசுமந்தறவலசுநுண்ணிடைச்செவ்வா
யெழுதுவாணுதற்புலோமசைநோற்றுளத்தியைந்தயாவையும்பெற்ருள்
விழைவினிக்கதைகேட்டவர்பயின்றவரொழுதினர்விருப்புற்ருேர்
தொழுதுவாழ்த்துனர்பேற்றையோநாவினுற்சொல்லுதற்கெளிதாமே.

அக-வது-மனோரதத்திரிதிகைவிதியுரைத்தஅத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கக௬உ.

---

எண்பத்திரண்டாவது.

## துர்த்தமன்கதையுரைத்தஅத்தியாயம்.

குரைதிரைக்கடல்குடங்கையினேந்துபுகுடித்த
வருமறைப்பொருடெரிந்தருளகத்தியமுனிவ
தருமதீர்த்தநற்கதையினைச்சாற்றுவனென்னப்
பொருவில்மாமுதறடிந்தவேற்புங்கவன்புகலும். (க)

ஏந்துகோட்டயிராவதப்பொருபகடிவர்வோன்
காந்துவெம்படைவிருத்திராசுரனுயிர்கவரச்
சாந்தவெவ்வினைதீருமாறுரையெனத்தாழா
வாய்ந்தநான்மறைக்குரவனையேத்தினனணைந்தான். (உ)

கொழுமடற்பிணிநெகிழ்குடச்சூற்கமுகெருத்தி
னுழுநரோதையின்வெருவியவாளைபாய்ந்துழக்கட்
பழையர்சேரியிற்கட்குடமுடைந்தெனப்பசுந்தேல்
பொழியுநீள்வயற்காசியிற்செல்கெனப்புகன்ருன். (௩)

அளியுழப்பருமுகைவெடித்தலர்ந்தசெங்கமலத்
துளிமதுப்பரந்தொழுகலாற்ருேமறவிளைந்த
களிறுபாய்கதிர்ச்செந்நெலங்கழனிசூழ்கிடந்த
வளர்புகழ்ச்செழுங்காசியைவாசவனடைந்தான். (௪)

விரிசுடர்ப்பசுங்கதிரொறித்தவுணரூன்விழுங்கிக்
குருதிகொப்பளித்தழலுமிழ்வயிரவாட்குரிசில்
பொருதடந்திரைக்கங்கையம்புனல்படிந்தாடி
யருடருந்தருமேசன்முன்னருந்தவம்புரிந்தான். (௫)

புரியுநற்றவமுவந்தனன்புரந்தரநீயித்
தருமவாவியிற்படிகெனத்தழங்குநீராடிப்

பிரமகத்திவிட்டொழிதலும்பிஞ்ஞகற்போற்றிப்
புரசையானைவேலிந்திரன்வானிடைப்புகுந்தான். (சு)

முருகுதாழ்குழற்புலோமசைமுலைமுகடுழக்குந்
தெரியல்மார்பினன்மீட்டுமாதவரொடுந்தேங்கொள்
விரிதலைப்பசுங்கமுககல்விசும்பகடிடைப்பக்
கருவிமாமழைபொழிபுனற்காசியினடைந்தான். (எ)

சுடரும்வெண்மதிவனேசடைத்தாரகேச்சுரற்குக்
குடபுலத்தினிற்றன்பெயரால்மகிழ்கூர்ந்து
படர்செழுங்சுடரிலிங்கமொன்றமைத்தனன்பரிவா
லடர்செய்வேல்விழிச்சசியுமாண்டிலிங்கமொன்றமைத்தாள். (அ)

அத்திரிப்பெயர்முனிவரனமைத்தருளிலிங்க
முத்தவெண்குடையெண்டிசைப்பாலருமுறையின்
வைத்தலிங்கஞானேச்சுரம்வளர்தரணீசந்
தத்துவேச்சுரமிவைமுதல்தணப்பிலாதுறையும். (கூ)

வேறு.

இன்னுமாங்கொருகாதைநிகழ்ந்துளதுகேட்டியெனவியம்புமோங்கு [ல்
பொன்னெடுமால்வரையினெடு முரணியெதிரியவிந்தப்பொருப்பின்சார
செங்நெல்வளர்கரும்பேய்க்குங்கழனிதொறுந்திங்கள்வடிம்பிடறிநீண்ட
கன்னல்கமுகெழில்காட்டுமுயர்கதம்பசிகரமெனுநகரொன்றுண்டால். ()

அங்நகரந்தனிபுரப்போனுடல்சினத்தினிகலிமிகவமரினேற்ற, மன்வி
ழுங்கித்தேக்கெறியுநெட்டிலைவேல்வலனுயர்த்தமதனனென்பான்,றன்னு
யிர்போற்செயற் கரியதவமாற்றியினிதீன்றதனையன்போரி, லொன்னலர்
வெண்ணிணமருந்தியுறைபுகுவேற்றுர்த்தமனென்றொருவனுண்டால்.()

தாதுதோய்ந்தினவண்டுதுதைநறுந்தார்த்துர்த்தமனுந்தாவில்வேந்தன்
றீதுபூத்தருளவிந்தசிந்தையன்வெங்கொடுங்கோலன்றினமுமிக்க
வேதிலார்மனைவிழையுமிழுதையருமறையினெறியிகழ்ந்ததீயோன்
போதுதூய்ச்சங்கரனைப்புண்டரிகக்கண்ணனைப்போற்றல்செய்யான். ()

சிற்றினஞ்சேர்ந்திடுவதன்றிவிழுமியோர்குழுவினிடைச் சேர்தல்செய்
யான், முற்றுமிருங்குடிகூவப்பொருள்வவ்விமுதுக்குறைவிலுளத்தனுகி
க், கற்றவரைத்தானடித்துக்கல்லாதபுல்லருரைகசிந்துகேட்குங், கொற்ற
வனவ்வுலகுதனதடிப்படுத்திக்கொடுங்கோன்மைபுரியுநாளில். (கஉ)

வேட்டைமேல்மனஞ்செலுத்திவலைஞரொடுமரில்பரந்தவெங்கானெய்திக்
கோட்டுவாரணமுதலகுறுமுயலீறுயெவையுங்கொன்றுமற்றோர்

காட்டினேகலுமரியகல்லதரினெறிபிழைத்துக்கழற்கால்வேந்த
னூட்டமூன்றுடையபிரான்காசிநகர்க்கணித்தாகநண்ணினனே. (கச)

அகில்முருடுகையரிக்கொண்டொழுகுபுனற்காசிநகரமலன்செய்ய
துகிர்விழுதுவிட்டனையதூய்ச்சடைமேற்கங்கைநதித்துவலைமாந்தி
வகிர்மதியினமுதளவிவருந்தென்றல்தூர்த்தமன்மெய்வருடியேகப்
பகர்வரியதுயரினெடுமொழிவரியபாவமும்வேர்பறிந்ததன்றே. (கரு)

பொரியயைதேமாவின்பூந்துணர்ப்பைந்தாதாடிப்பொதிவாய்விண்ட
விரிதலையவொண்டோட்டபொலம்பொகுட்டுத்தாமரையின்விளரிபாடி
வரியளிகண்படுகழனிவிளிம்புடுத்தகாசிவளநகரின்பாங்கர்
தருமலிங்கமினிதுறையுஞ்சினகரங்கண்டுயர்பரியினிழிந்துதாழ்ந்தான். ()

வளர்தருமபீடமிருகண்ணுறலும்பேரறிவுவந்துதோன்றித் [க்
தளர்வினெடுமுன்செய்தகொடுங்கோன்மைதனைநினைந்து தலைவற்போற்றி
களிமதவாரணங்கூந்தலிளம்பிடிக்குக்கற்பகநாண்மலர்ப்பூங்கொம்பிற்
குளகருத்தக்கைநீட்டும்விந்தமால்வரைச்சாரல்குறுகினனே. (கள)

பொன்னகரம்வளமனைத்தும்பொறுக்கரிதாய்ப்புவியினிடைப் போந்த
போலுந், தன்னகரினிடையெய்தித்தனயனையங்கர்காக்குந்தலைவனுக்கித்,
தொன்மறையோர்க்களப்பரியநிதிவழங்கிக்கொடியோரைத்துரந்துபின்னு
ங், கன்னல்மருள்செழுஞ்சாலிக்கழனிவிளிம்புடுத்தோங்குகாசிசேர்ந்தான்

தருமேசன்முள்வணங்கிச்சின்னளிற்றூர்த்தமனுமுத்திசார்ந்தா
னெருவாதுதீவினைகளுலப்பிலவாற்றுநரோனுங்காசியெய்திற்
கருவாழிபடிகிலரிக்கதைகேட்டோர்பயின்றுளோர்கருதல்செய்தோர்
மருவார்பூங்கடுக்கையணியிறைவனடிசேர்வரெனவழங்கினனே (கஅ)

அஉ-வது- தூர்த்தமன்கதையுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஅளக.



எண்பத்துமூன்றுவது.

## கங்காளகேதுவதைஅத்தியாயம்.

வீரேசன்காதையின்னும்விளம்புகவென்றருந்தவத்தோன் வினவலோ
டுஞ், சூர்மாளவேல்பணித்ததோகைமயிற்பாகனிவை சொல்லுமுன்னம்,
பாரேழுமதிநெடுவெண் குடைநிழற்றிவெயிலுமிழ்வெம் பரிதிபோலு,
மோராழிதனிசெலுத்துமித்திரசித்தெனவுளனோருரவுத்தோளான். (க)

புவனகோடிகளுமொருபுடைகிடைத்துஞ்சிற்றுதரப்பூவைவண்ணன்
குவலயமேழும்பொதிந்தகுளைகழற்சேவடிக்கமலப்போதைநீங்கா

வுளைகவரியளியலர்த்துமிதயமலர்தனிலடக்கும்ரவோனும்
பவமொழியவிளைகமழும்பாசிலேத்தண்டுளவோனேப்பணிதல்செய்தான்.

உண்ணலளித்திடுமுலகமனைத்துமிருபோதுமுயரன்பினோடுங்
கண்ணமாதவமுகுந்தகேசவவச்சுதவென்னக்கழறலன்றி
யெண்ணம்வேறிலரோகாதசியெய்திற்றாய்முலையினிரங்குதீம்பா
லுண்ணுருதான்கன்றுமெனிலறிஞர்செய்தவமென்னுரைக்குமாறே. (௩)

இன்னனநீதியினுலகமினிதளிக்குமேல்வையினிலிசைத்தேனூறத்
தென்னதெனவெனமுரலுமகதியாழ்பயில்முனிவன்சினவுளைவேல்
மன்னன்முனமெய்துதலுமருக்கியபாத்தியமுதலவழங்கியேத்திப்
பொன்னடித்தாமரைநோவப்போந்ததெவனெனமுனிவன்புகலலுற்றான்.

யாழினோர்குலத்திறைவன்றவப்பேற்றாலினிதீன்றமயிலஞ்சாயல்
மாழைமாமருணோக்கினெழின்மலையகந்தினியைக்கபாலகேது
காமுலாமனத்தனருள்கங்காளகேதுவெனுமவுணன்வவ்விப்
பாழிவாய்க்கொடும்பாந்தளரசிருக்கும்பாதலத்திற்படர்ந்தானன்றே. (௫)

இயக்கர்கோனிதியறையினெழிற்கதவந்திறந்ததெனப்புலவர்யாரும்
வியக்குநீள்வளங்கிடந்தசம்பகாபதியதனில்மேவுபோழ்திற்
பயக்குமோரோமுலகும்படைத்தளிக்குமாடகேசுரனேப்பாடி
நயக்குமாறினிதேத்தியங்ககரில்யானுமிகநண்ணினேனல். (௬)

எய்துகின்றவெனேநோக்கியெழில்மலையகந்தினியொன்றுரைத்தாளோங்கி
மைதவழுமுயர்குடுமிக்கந்தமாதனத்தின்மகிழ்ந்தாடுமென்னைப்
பைபதலுறக்கவர்ந்தீங்குப்படர்ந்தனனிப்பதகனடல்பழுத்ததன்கை
வெய்யதழல்வெம்படையினன்றியேதிலர்படையின்விளிதல்செய்யான். ()

காளைவரிவண்டரற்றுமந்தாரமாலைபுனேகவுரிமுன்னந்
தாளில்முழுதுலகளந்தோனன்பனிளேமணக்குமெனச்சாற்றினளவ்
வாளரியன்னனொருவனடையிலிவன்படையவன்கைபளிப்பேனென்னப்
பாளைவிரிகமழ்கூந்தற்படர்முலைகூறினளென்னப்பகர்ந்தான்மன்னோ. ()

அங்ககரினெய்துநெறியுரைத்தியெனமித்திரசித்துரைப்பவோங்கி
மன்னுகலனென்றிவர்ந்துவாரிதியினிடையேகின்வையமீதோர்
கன்னிதருவொடும்போந்துவினைபுரிந்தோன்கருமபலன்றாய்க்குமென்ன
வின்னிசைபாடினளேகுநிறைமதிநாளவ்வழிநீயேகுகென்றான். (௮)

யாழ்பயிலுமறைமுனிவனேகுதலுமுலகனைத்துமெயிற்றினேந்தி
யாழியொருகரத்தமைத்தகுறுங்கழுத்தவெண்பன்றியளிப்பவோங்கு
தாழ்திரையகருங்கடலினிடையேகிச்சம்பகாபதியிற்சாரா
வேழுயர்மேனிலேமுகப்பிற்றனித்துறையுமடவரலேயினிதுகண்டான். ()

வேறு.

உலகமூன்றினுள்நல்லெழிலொருங்கெடுத்தினிதின்
மலரின்மேலையோன்மனத்தினுல்வகுத்தவோவியங்கொல்
சிலைகொள்வேனில்வேளினியதெள்ளமுதினிற்றீட்டி
நலநிறைந்தபூங்கொடிகொல்மற்றெனவுளநயந்தான். (கக)

அருப்புமென்முலைதாங்கியவணிமயிலனையாள்
கருப்புவில்லொளித்தெய்தியகாளையைநோக்கி
விருப்பமீக்கொளப்போந்ததென்வேந்தநிற்காணி
னுருப்பவெஞ்சினத்தவுணர்கோனுயிர்குடித்திடுமால். (கஉ)

பொருவில்தன்கையிற்படையினுலலதுயிர்பொன்றுன்

வருமுன்னிவ்வயின்மறைந்துறையெனவுரைவழங்க
வெருவல்மாதெனப்பகர்ந்தவனுறைந்தனன்வேந்தன். (கங)

அலரிமண்டலமத்தமேவுறுதலுமவுணன்
புலவுமேய்ந்தெரிசூலவேல்திரித்தனன்போந்து
கலவமாமயில்கடிமணநாளையென்றியம்பி
மலரடுத்தபூந்தவிசின்மேலினிதுகண்வளர்ந்தான். (கச)

முயலொழித்தவெண்மதிநிகர்முகத்தினுளவுணன்
றுயிறல்நோக்கிவெஞ்சூலவெம்படையினைத்தாங்கி
யயலுறைந்தவேலுழவனையழைத்தனள்கொடுப்ப
வெயிலுமிழ்ந்திடத்துளக்கினன்விடுநகைபுரிந்தான். (கரு)

வேறு.

பாய்கரியொருத்தல்தனதாருயிர்பதைப்பச்
சீயமுரறிக்கடிதுசேர்குவதெனப்போய்
நீயமர்விளைப்பவெழுவாயெனநிகழ்த்திக்
காய்சினமிகத்தனதுகாலினிலுதைத்தான். (கசா)

கூர்துயிலொழித்தவுணர்கோமகனகைத்துப்
போர்செயவெனக்குநிகர்நீகொல்பொறியற்றோய்
சேர்கெனவுரைத்துமுடைசேரிதழதுக்கி
வார்கனைகழற்குரிசில்மார்பினிலடித்தான். (களை)

கோமகனுருத்தசனிபோலெதிர்கொதித்துக்
காமருதடக்கைகொடுவாய்குருதிகக்கத்
தோமுறுகுணத்தவுணனுருயிர்துடிப்ப
வேமுறவுரப்பியரியேறெனவடித்தான். (கஅ)

காவலனடிப்பவிழுகாரிருணிறத்தன்
மேவருமயக்கொழியவேறுணர்வுபெற்றே
மூவுலகுகைக்கொளமுன்மாணுருவெடுத்து
மாவலிமுனுற்றதிருமாலெனநினைத்தான். (கக)

ஆளரிநிகர்க்குமடலோயடுசினத்தின்
வாளமருடற்றிவருவாகைபெறுநர்க்கே
நீளரிமதர்க்கணுரியாளெனநிகழ்த்தித்
தோளிணைபுடைத்தமரர்சோர்வுறவெதிர்த்தான். (உ0)

மாலுயர்துணைக்கமலவார்கழல்வழுத்தி
வேலைபுடைசுற்றுமெழுமேதினிபுரப்போன்
காலனும்வெருக்கொளவிடாதுதழல்கக்குஞ்
சூலமெதிர்விட்டவுணனுருயிர்தொலைத்தான். (உக)

வீறுயர்சினத்தவுணன்வீதலுமிசைத்தே
னூறுமகதித்திவவியாழ்முனிவனுற்றே
சீறடிமழைக்கண்வளர்தேமொழிதனக்கு
மாறில்குருசிற்கும்விதியால்மணமுடித்தான். (உஉ)

மேவுமணமுற்றியபின்யாழ்முனிவிடுத்த
தாவில்வழிபற்றியலர்தாமரைமுகத்தோர்
பாவையொடுமிக்கவெழுபாரினிதளிப்போன்
காவணநிறைந்துவளர்காசிநகருற்றான். (உங)

அ௩-வது-கங்காளகேதுவதையுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கககூச.

---

எண்பத்துநான்காவது.

## வீரேசன்றோன்றிய அத்தியாயம்.



கோழைாயரம்பையின்றகூன்புறக்கனியினேங்கு
தாழைமுப்புடைக்காய்சிந்துதண்வயற்காசியெய்தி
வாழுநாடனிலபீடத்திரிதிகைமரபினுற்றப்
பாழியந்தடங்தோள்வேந்தேபணியெனப்பாவைசொற்றாள். (க)

பொன்னவாஞ்சுணங்குபூத்தபுணர்முலைசுமந்தகோதா
யன்னநோன்பாற்றுகின்றவிதியினையறைதியென்னக்
கன்னல்மென்றனையதீஞ்சொற்காந்தளஞ்செங்கைகூப்பி
மன்னகேளென்னச்செவ்வாய்மலர்க்கையிற்புதைத்துச்சொல்வாள். (உ)

மார்கழித்திங்கடன்னில்வளர்பிறையெய்துகாலைச்
சீர்கெழுமூன்ரும்பக்கத்துணவொழித்திலங்குசெம்பொற்
பூரணகும்பம்வைத்துப்புகன்றவாலரிசிபெய்த
வேர்கெழுசெப்புவள்ளமெழில்பெறவதன்மேற்சேர்த்தி. (௩)

விலைவரம்பறியாப்பூம்பட்டதன்மிசைவிளங்கச்சேர்த்தி
யலரிதழ்க்கமலம்வைத்தாங்கதன்மிசைநான்குபொன்ருல்
முலைசுரந்தொழுகுதீம்பான்முருகனுண்டுறையவைகு
மலைமகளுருவுசெய்துமற்றதன்மீதுசேர்த்தி. (௪)

தென்வரையுயிர்த்தபூங்கேழ்ச்சந்தனத்தேய்வையாட்டிப்
பன்மலர்தூவித்தூபங்கமழ்வித்துப்பரிவிஞேடு
மின்னமுதனையவன்னந்தீங்கனிமுதலவேற்றித்
துன்னிருட்கங்குல்முற்றுங்கண்படைதுறந்துவைகி. (௫)

ஓர்முழுவகலநீளமுற்றதோர்குண்டந்தன்னிற்
சீர்கெழுநெய்யிஞுதல்தேனிஞுதல்தோய்த்த
வேர்கெழுகமலப்போதோராயிரமினிதினேந்திச்
சார்வருசாமவேதமறைகொடுதழலிற்பெய்து. (௬)

புனிற்றிளங்கபிலைநான்குபொன்னிஞலமைத்தவிம்பங்
கனைத்துவண்டிமிரும்பைம்பொற்கமலமென்பட்டிஞேடு
மனைத்தையுங்குரவற்கீந்தாங்கமலனையுமையைத்தூய
மனத்திடையிருத்திமாசில்புதல்வனைவழங்கென்றேத்தி. (௭)

கருணையான்பொழிந்ததீம்பால்கன்னலங்கட்டிகொட்டி
யருமறையந்தணாளராயிரர்க்கடிசிலூட்டிப்
பரிவிஞேடவர்கஞ்சேடம்பாரணமுறையிற்செய்தல்
விரதமென்றுரைப்பவேந்தன்விளங்கிழையோடுநோற்ருன். (௮)

நோற்றலுமகிழ்ந்துதோன்றுமலைமகள்தன்னைநோக்கித்
தோற்றியஞான்றுதன்னில்துறக்கமுற்றிவண்மீண்டெய்து
மாற்றலின்வனப்பின்மிக்ககாளையாம்பருவமாகி
நீற்றொளிபழுத்தமேனிநிமலனுக்கன்பஞகி. (௯)

விளங்குமோர்புதல்வன்றன்னையளித்திடல்வேண்டுமென்ன
வுளங்கனிந்தன்னைநல்கியுயரிருவிசும்பிற்போஞ
ளிளங்களிவரிவண்டார்க்குமீர்ங்குழல்கருப்பமெய்தி
வளங்கெழுமூலநாளின்மைந்தனையினிதினீன்ருள். (௧0)

கணிகரிம்மைந்தன்வைகிற்காவலனிறக்குமென்னப்
பிணிமுறுக்குடைந்துதீந்தேன்பெய்மலர்க்கோதைமாழ்கிப்

பணியரவல்குனல்லீர்பஞ்சமுத்திரையாம்பீடத்
தணிகெழிவிகடைகையினிம்மகவளித்திரென்றாள். (கக)

மழைமதர்நெடுங்கண்சோரவருமுலைபொழிந்ததீம்பா
லிழைதவழ்புதல்வன்மேனியெங்கணுநனைப்பவீன்ற
குழவியைக்கொடுப்பவாங்கிக்கோதையர்விரைவினேகி
விழைவனயாவுநல்கும்விகடைமுன்வைத்துமீண்டார். (கஉ)

அருள்பொழிவிகடையந்தவரும்பெறற்புதல்வன்றன்னைப்
பரவுயோகினிகள்கையில்கொடுத்துநீர்பரிவினோடு
மிருவிசும்புறையுமாதரெழுவர்பாலெய்தியன்னா
ருணாயினையறிந்துவம்மினென்றலுமுவந்துபோனார். (கங)

போயவரெழுவர்கையிற்புதல்வனைக்கொடுத்தலோடு
மேயவப்புதல்வன்மெய்யிலிலக்கணங்கிடக்கைநோக்கி
மாயிருஞாலங்காக்குமன்னவனுருகீரிச்
சேயினைமுன்னர்வைகும்பீடிகைசேர்த்துகென்றார். (கச)

தாளதாமரையின்மேவுந்தாக்கணங்கனையார்மீண்டு
வாளொளிவிரிக்குஞ்செம்பொற்பீடமேல்வைத்தலோடுங்
காளையாம்பருவமெய்திக்கன்னல்வில்லொளித்துவந்த
வேளெனவுலகம்யாவுமேத்திடவிளங்கினானே. (கரு)

ஆலைபாய்துழனிதன்னிலாய்பிழிதூற்றுதண்பூஞ்
சோலைவாய்மலரின்வைகுந்தூங்கிசைவண்டுந்தேனு
மாலைவாயவிழ்ந்தவாம்பல்மலரிடையொளிக்குங்கன்னல்
வேலிசூழ்காசிதன்னில்மெய்த்தவமாற்றினானே (கசு)

அருந்தவக்கிழமைநோக்கியண்ணலஞ்சுரும்புந்தேனும்
விருந்தயர்கொன்றைநாறும்விரிசடைப்பெருமானெய்திப்
புரிந்தநின்றவத்தாலன்புபூத்தனம்விழைந்துகேட்ட
வரந்தருகுவமென்றேதமைந்தனுமகிழ்ந்துசொல்வான். (கள)

புனிற்றிளந்திங்கட்கண்ணிப்பூஞ்சடைப்புனிதகேட்டி
தனிச்சுடராயவின்னவிலிங்கத்திற்றழைந்தவன்பாற்
பனிப்பிறைவடந்தாழ்கொம்மைவனமுலைப்பணையினோடு
மனைத்துலகமுநின்றேத்தவமர்ந்திடல்வேண்டுமென்றான். (கஅ)

அண்ணலிவ்விலிங்கந்தன்னிலமர்வன்யானிதன்பேராரு
நண்ணும்வீரேசனென்றேநவில்கவிக்காசிதன்னில்
மண்ணுறுதீர்த்தகோடிவயங்கொளிவிரித்துத்தோன்று
மெண்ணறுமிலிங்கம்யாவுமிதற்கிணையியம்பொணாவால். (ககூ)

கொலைபழுத்தழல்வாய்காய்ந்துகுருதிகொப்பளிக்கும்வேலோ
யலைகடலாடைசுற்றியாயிரம்படத்திற்றுஞ்சு
மலர்தலையுலகம்யாவும்வரம்பில்நாளளித்துமாயா
விலகொளியாகின்றவென்னுழையுறைதியென்றான். (உ௰)

வேறு.

போதுலாமலர்க்கொன்றைதாழ்புரிசடைப்புனித
வாதிகேசவதீர்த்தமேமுதலலைபுரட்டு
தீதில்பூம்புனற்பகீரததீர்த்தமீறாக
வோதுதீர்த்தமோர்ந்துணையெனவமலனுண்டுளைத்தான். (உ௧)

அ௪-வது-வீரேசன்றோன்றியஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ௰௯௫.

---

எண்பத்தைந்தாவது.

## துருவாசர்வரம்பெற்றஅத்தியாயம்.

சொன்னமறையின்பொருடுணிந்துரைசெய்யென்ன
வன்னமிவர்வேதனையருஞ்சிறையில்வைத்தோன்
தென்வரையின்மீதிலுறைதெய்வமுனியன்புற்
றின்னுமொருகாதைநனிகேளெனவிசைப்பான். (௧)

பாசடைமலர்ப்பழனவாளைகுதிபாய
வாசினிவருக்கையினிழிந்துசுளைவீழுங்
காசிநகரின்பெருமைகண்டுளம்வியந்து
மாசடைவனைந்ததுருவாசனவண்வந்தான். (உ)

ஈசனுறையாலயமியற்றிமகிழ்வோடு
மாசறவிளங்குமொரிலிங்கமுமமைத்துப்
பூசனைபுரிந்தினிதுபோற்றியுலகேத்தத்
தேசுடைமுனிக்கடவுள்செய்தவமிழைத்தான். (௩)

ஆயிரநெடும்பகலருந்தவமிழைத்தும்
பாயும்விடைவானவன்வெளிப்படுதல்காணான்
தீயொழுகுவெவ்விழிசிவந்துபுகைமண்டக்
காய்சினமிகுத்துமுனிகாசியைமுனிந்தான். (௪)

புகைப்படலம்விண்ணகர்புதைப்பமறமெய்தா
வெகுட்சியினெழுந்துரைசெய்மெய்த்தவனைநோக்கி
வகுத்தவன்வணங்கியவிலிங்கமகிழ்கூர
நகைப்பநகையீசனெனநாமம்வில்கின்றார். (௫)

முத்தியருள்காசியைமுனிந்தமுனியாவி
துய்த்திடுதுமென்றுகணநாதர்நனிதுன்னிக்
கைத்தலமெடுத்தனரொதிர்ந்திடுதல்காணு
மைத்தவழ்மிடற்றிறைவிலக்கினன்வழங்கும். (சு)

எண்ணரியமாதவமிழைத்தமுனிகேண்மோ
நண்ணரியகாசியைமுனிந்துவிடல்நம்பால்
கண்ணியவரந்தருதுமென்றுகதிர்முக்கட்
பண்ணவனுரைப்பமுனிவர்க்கிறைபழிச்சி. (எ)

காசியைமுனிந்ததனைநாணிமெய்கலங்கி
மாசறுமதிக்குழவிவைத்தசடையெம்மா
னேசலுறுதீவினையிழைத்ததுபொறுக்கென்
றாசில்முனிவன்புகலவண்ணலுரைசெய்வான். (அ)

நீயினிதமைத்தருளிலிங்கநிகரற்றோ
யேயபெயர்காமநல்லிலிங்கமெனலாக
மேயமடுவன்னபெயர்மேவுகவெனுமுன்
பாயும்விடைமீதிலிவர்பண்ணவன்மறைந்தான். (கூ)

மிக்கசனிவாரமதில்மேவுபதின்மூன்றும்
பக்கமுறுகங்குல்முகமென்புனல்படிந்து
முக்கணமலன்சரணமுன்னினர்வணங்கிற்
செக்கமலமென்னவொளிர்செய்யகழல்சேர்வார். (கo)

அறு-வது துருவாசர்வரம்பெற்ற அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உoஉகு.

---

எண்பத்தாறுவது.

## விசுவகன்மேசவிலிங்கந்தோன்றிய அத்தியாயம்.

---

உயர்விச்சுவகருமேசனியற்கானதயுரைத்து
மயிலொத்திருகுழைமேவியலைக்குங்கயலுண்கண்
முயலற்றொளிர்மதிவாணுதல்முகிழ்மென்முலையென்னுக்
கயிலைத்தடவரைமீதுறைகருணைக்கடல்கூறும். (க)

மலரோனிகர்தோட்டாவருள்மகன்வானிகனொனவே

கலையாவையும்வளர்திங்களின்விதியிற்பயில்காலைப்
புலனைந்தையுநெறியுய்த்திடுமாசானிவைபுகல்வான். (உ)

புனையுஞ்சுடுமெண்ணனனிபுனைவித்தெழிநிகழப்
பனிநீண்மழையணுகாதொளிபழகாதுயர்வாக
வினையின்றிறம்வல்லோர்கள்வியப்புற்றனர்கூற
மனையொன் றுவகுப்பாயெனமறையோனுரைசெய்தான். (ரு)

துளிதூங்கியகுளிர்காலையில்வெச்சென் றுயர்தருமென்
றளிரீன்றிடுவேனிற்கடை தண்ணென்றமர்குவதாய்க்
களிசேர்ந்திடவனைகஞ்சுகமருள்வாயெனக்கரைந்தா
ளளிசேர்தரமறைதேர்தருமாசானுயர்மனையாள். (சு)

பாரின்மிசைசெல்கின்றதொர்பரிசாமெனவொழுகு
நீரின்மிசைசெலவுஞ்செலிற்சேற்றின்னிலைபெறவும்
வாரின்றியுநெகிழாமரவடிநல்குதியென்றான்
கூர்கேள்வியன்மறைதேர்தருகுரவன்றிருமகனே. (ரு)

கரமார்வளைமணிமேகலையொருகாழணிமுத்த
மெரியின்றியுமடுகின்றதொர்பசுமட்கலமெவையு
மொருதாருவிலொருகான்மிசையுறையுந்தனிமனையுந்
தருகென்றனள்மறைதேர்தவமுனிவன்பெறுதையல். (சு)

இவ்வாறவர்மொழிகின்றவையெவையும்பழுதின்றி
யவ்வாறினிதருள்கின்றனனெனவோதினனாகி
வெவ்வாயரவரிமானுறைகானிற்றனிமேவி
யொவ்வாதவையெவ்வாறருள்வோமென்னவுணர்ந்தான். (எ)

மாசற்றவன்மருளெய்தவொர்மறைமாமுனியெய்தி
யாசுற்றதென்மதலாயெனவவனுற்றவையறையக்
காசிப்பதிதனில்மேவியகருணைக்கடலாகு
மீசற்றொழினல்லாலிவையெய்தப்பெறலாமே. (அ)

பாலுக்கழுசிறுவற்குயர்பாலாழியளிக்குஞ்
சூலப்படைமுதல்வன்கழல்தொழவேகுதியெனலுஞ்
சால்புற்றருமறைநூல்பயில்தவமாமுனியோடுங்
காலப்புயல்வறவாதுயர்காசிப்பதியுற்றான். (கூ)

கரைகொன்றெறிதிரைசிந்தியகங்கைப்புனலாடி
யரிநான்முகனிமையோர்தொழுசிவலிங்கமமைத்து
நரைசேர்விடையிவர்வேதியனுமங்கணவிற்றி
விரைநாண்மலர்தூவித்தவம்விழைவோடுபுரிந்தான். (க0)

செய்யுந்தவநெறிகண்டுயர்திருமாலயனறியா
வையன்றவநெறிபோகியசிறுவன்முனமணுகி

யெய்துந்தவமொழிநல்குதும்விழைகின்றவையென்ன
வையம்புகல்தொழில்யாவையும்வனைவானருள்கென்முன். (கக)

மற்றோர்விதியெனயாவையும்வகுக்குந்தொழில்தந்தேங்
கற்றோர்புகழ்தருவிச்சுவகன்மன்னெனுநாம
முற்றுயுயர்குரவன்மனைமகள்மைந்தனுவப்பாற்
சொற்றுரொவையவையன்பொடுசோராமலளித்தேம். (கஉ)

மலரோனிகர்மதலாயிவண்வழிபட்டவிலிங்கத்
தலர்தூவினர்வினையாவுமறுப்போமெனநல்கி
யிலநாண்மலர்நிகர்வாய்மயிலொருபங்கிலிருக்குங்
கலைநாண்மதிபுனைவேணியனவற்றுடகரந்தான். (கரு)

சிற்பத்தொழில்விதிபோகியசிறுவன்கடிதேகி
யற்பிற்குருமுதலோர்தமையலர்தூவிவணங்கிப்
பொற்புற்றிடநனிபன்னியபொருள்யாவும்வழங்கிக்
கற்பத்தினுமழியாதுயர்காசிப்பதியுற்றுன். (கச)

ஈரோழெனமுன்னோதுமிலிங்கத்துறுகாதை
வாரேறிளமுலைமென்னகைமடவாயுரைசெய்தேஞ்
சீர்சால்கதைகற்றோர்தெளிவுற்றோருரைசெய்தோர்
பாரேழ்தொழவுயர்வாழ்வுபடைத்தோங்குவரொன்றுன். (கரு)

அகூ-வது-விசுவகன்மேசவிலிங்கந்தோன்றிய அத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ0சு0.

---

எண்பத்தேழாவது.

## தக்கன்வேள்விசெய்தஅத்தியாயம்.

இன்னுமீரேழுளவிலிங்கமென்றனை
யன்னவையனைத்தினுட்டக்கனேற்றிய
மின்னிவரிலிங்கத்தின்கதைவிளம்பெனத்
தொன்முனிகேட்டலுமுருகன்சொல்லுமால். (க)

அயிலெயிற்றழல்விழியணங்கராவணைத்
துயில்புரிபாசடைத்துளவமாலொடு
முயர்விசும்புறைதருதக்கனுதியோர்
புயறவழ்கயிலையம்பொருப்பினெய்தினர். (உ)

பாயொளிப்பருமணிமுகடுவேய்ந்துயர்
வாயிலினெய்தியெம்வரவுகூறெண

நாயகற்றொழுதனனந்திகூறலும்
நீயவர்த்தருகெனநிகழ்த்தினானரோ. (௩)

மாவடுநோக்கியோர்பங்கன்மாமலர்ச்
சேவடிதேவர்காள்பணியச்செல்கெனப்
பூவைபோல்மேனியான்முதலபுங்கவர்
யாவருமடைந்தனரிறைவற்போற்றினார். (௪)

கண்ணனைவருகெனக்கழறினானல
ரண்ணலைநோக்குறுமுடியசைத்தன
னண்ணுவாசவற்கெதிர்முறுவனல்கினான்
விண்ணவர்யாரையும்விழியினோக்கினான்

மேவலர்க்கடந்துவில்விழுங்குவீங்குதோட்
பூவைபோல்மேனியாயுந்திபூத்திடு
மூவுலகனைத்தையுமுறைபிறழ்ந்திடாக்
காவல்செய்தளித்தியோகளைகணேயென்றான் (௬)

ஐயநின்னருளினாலுலகம்யாவையு
முய்யுமாறளித்தனனென்னவோதினான்
மையணிமிடற்றிறையருளமான்முத
லெய்தினோரியாவரும்விடைகொண்டேகினார். (௭)

போதருநெறிதனிற்றக்கன்புன்மையாற்
றீதுறுநெஞ்சினன்செயிர்த்தநோக்கினன்
மாதுலனென்னவுமதித்திலானெனக்
கோதறுமீசனையிகழ்ந்துகூறுவான். (௮)

தாயிலிதந்தையுந்தமருமற்றிவன்
பேயொடுசுடலையினடிக்கும்பித்தன்வெங்
காயெரிநெற்றியினுமிழுங்கண்ணினன்
பாய்புலிமுடையதளசைக்கும்பான்மையோன். (௯)

குணங்குடிகோத்திரங்குலமொன்றில்லவ
னணங்குநோய்செய்திடுமரவப்பூணினன்
மணங்கமழ்பூச்சினைநீத்துவன்முடைப்
பிணஞ்சுடுசாம்பர்மெய்ப்பூசும்பெற்றியோன். (௧௦)

அருந்துவதலைகடனஞ்சமூர்தியாய்ப்
பொருந்துவதொருகிழவேறுபோர்ப்பது
கருங்களிற்றுரிவையூன்கழிந்தவெண்டலை
திருந்தியதாமரைசெங்கைகொண்டதே. (௧௧)

மறையவனுமெனிலொழுக்கமாறினு
னிறையெனிலளித்திடாதீறுசெய்குவ
னிறைபொருள்வணிகனேலிரக்குநீர்மையா
னறைவதுமறையினற்சதுரனல்லனே. (கஉ)

பிரமசாரியுமலன்றடங்கட்பேதைதோள்
மருவலாற்பொருபடைசுமந்தவாற்றினு
லரியமாதவனலனரில்வெங்கானிடைத்
திரிதலாலில்லறஞ்செய்துளோனலன். (கங)

கோணைநாண்மலரவன்றலைகுறைத்தலா
யாணர்நற்றருமநூலியைந்துளானலன்
வாணுதலொருபுறமாயவாற்றினு
லாணலன்பெண்ணலனலியுமல்லனால். (கச)

அலகிலெவ்வுலகமுமழியுநாளினின்
மலரயன்வெண்டலைமாலையென்பணிந்
திலகுமுத்தலையவேல்திரிவித்தெங்கணு
முலவலாற்புனிதனென்றுரைக்கவொண்ணுமோ. (க௫)

எவ்வலிகொண்டிவனென்னைக்காண்டலுஞ்
செவ்விதினெழுந்திலன்சிறப்புஞ்செய்தில
னவ்வலியறிந்தனன்யானளித்திடும்
மௌவலங்கோதையைமணந்துபெற்றதே. (கசு)

ஒழுகொளியுரோணியையுவந்துநாடொறும்
விழையுமற்றவர்தமைவெறுத்ததிங்களைப்
பழியொடுந்தேய்ந்துடல்பதைப்பவெவ்விய
மொழியினல்மாற்றருமுரணடக்கினேன். (கஎ)

ஆங்கவன்போலிவனுற்றல்தீதுறத்
தீங்குளாத்துலகெலாமிகழ்வசெய்வலென்
றோங்கியவுளத்தொடுமும்பராதியோர்
பாங்கினிற்சூழ்வரப்பதியினெய்தினன். (கஅ)

வே று.

எஞ்சலின்றியருமகமொன்றியற்றுகின்றேனதுகாண்பா
னஞ்சவருவெஞ்சமருழக்கும்வயிரப்படையோன்முதலமரர்
பஞ்சிசூழ்ந்துமணியிமைக்கும்பல்காழல்குல்மகளிரொடும்
விஞ்சுபெருமாதவரோடும்வருகென்றோலைவிடுத்தனனால். (கக)

விடுத்தவோலைகண்ணுறலும்விளிம்புநிலவுச்சுடர்த்தரள
மடுத்தமௌலிப்பொலங்கழற்காலமரரியக்கர்கந்தருவர்
வடித்தமறைதேர்முனிக்கிழவர்பரிதிவேந்தன்மதிக்கடவுள்
கடுத்தாழ்மிடற்றெங்கண்ணுதலைமொழிந்தோர்யாருங்கடிதடைந்தார் ()

மின்கொப்பளித்துவெயில்கான்றவிலையிலாரவடஞ்சுமந்து
பொன்கொப்பளிக்கும்பொறிசுணங்கார்பொம்மல்முலைத்தன்புதல்வியரை
மன்கொப்பளிக்குநெட்டிலைவேன்மதியமுதலமருகர்தமை
யன்புற்றவரோடளவளாய்முறையின்வரிசைவழாதாற்றி. (உக)

தவளக்களிற்றுப்பெரும்பாகன்முதலேழ்திசையிற்றலைவரொடு
முவணப்புள்ளேற்றொருபாகனுறையுஞ்சுவேதத்தீவடைந்து
குவளைத்தடங்கட்செங்கமலைகொழுநவெமதுமகங்காத்தற்
கவனுற்றிடுதியெனநெடுமால்தக்கனோடுமடைந்தனனால். (உஉ)

அண்ணல்சேவலேற்றெகினத்தருமாமறையோனரனின்றி
வெண்ணெய்கமழுங்கனிப்பவளவாயான்காக்கும்வேள்வியையாங்
கண்ணுற்றிடுதுமெனவடைந்தான்ததீசிமுதலகலைவல்லோ
ரெண்ணிற்றக்கற்குறுதிமொழிகூறல்வேண்டுமெனவடைந்தார். (உங)

புலனைந்தவித்தததீசிமுனிபொற்பார்சாலைதனிலெய்தி
யுலகமனைத்துமொருதிகிரியுருட்டுந்தக்கன்மனச்செருக்கு
நிலவுக்கதிர்காலொழுகொளியசிழற்பூண்சுமந்தபொம்மல்முலைக்
கலவமஞ்ஞையனையவவன்மக்கடமையுங்கண்ணுற்றான். (உச)

அளத்தற்கரியசிறப்பெய்திச்செம்மாந்துறையுமமரரைத்தம்
முளத்தின்மகிழ்ச்சிமீதோங்கவுறையுமருகர்தமைநோக்கிக்
களிப்புற்றிருக்குந்தக்கன்முகங்காணக்கடவுண்மறைக்கடலுட்
டிளைக்குந்தெய்வத்ததீசிமுனியுறுதிமொழிகள்செப்புவனால். (உரு)

கடவுட்டழல்களொருமூன்றுமுருவோடமர்ந்தகாயாம்பூ
வடிவிற்றிகழுநெடுமாயோன்வேள்வியளிப்பான்வந்திருந்தா
னொடிவில்கேள்வியந்தணனுங்குரவனுகியினிதுறைந்தான்
படியேழ்புகழும்பிருகுமுனிபிரமத்துவமாய்ப்பாங்கமர்ந்தான். (உசு)

அருநான்மறைகளொருநான்கும்வாணியோடுமடைந்தமலர்த்
திருமாதீங்குவதிந்தோர்க்குச்சிறப்புச்செய்யுந்தடஞ்சினைய
தருவோரைந்தும்வேள்விக்குத்தகுவயாவுந்தனிவழங்கும்
பொருவில்செருத்தற்குவிமுலையபுனிற்றுவவிகள்மிகநல்கும். (உஎ)

பொருவிலமரர்முதலெவையும்பூத்தபுகழ்க்காசிபன்முதல
மருகர்யாருந்தத்தமதுமனையினோடும்வந்திருந்தார்

கருதினெனவையுமினிதியற்றுந்தெய்வத்தச்சன்கதிரொறிக்கு
முருவப்பைம்பூண்மாடமுதலனைத்துமொழியாதியற்றுவனால். (உஅ)

இன்னவாற்றால்நன்கெனினுமீசனொழிந்தவிச்சாலை
கொன்னேயுயிர்போம்வெற்றுடலைக்கட்டிலேற்றிப்பலர்குழுமிப்
பொன்னில்மணியில்கைவல்லோர்புனைந்தாற்போலுமஃதன்றேல்
மன்னுமோரிபேய்குமலிவழங்குசுடலையாமென்றான். (உகூ)

தோளாமணியினிரைகவற்றுந்தூய்மென்முறுவற்றிருவினொடுந்
தாளாலுலகமுழுதளந்தோன்முதலோர்மேயசாலையினை
வாளாசுடலையெனவுரைத்தாய்மதியிலோயிங்குன்மாற்றங்
கேளாதொழிவேற்குறுதிமொழிகிளக்குமாறென்னெனமுனிந்தான். (௩0)

முனியுந்தக்கன்முகநோக்கிமுறுவல்பூத்தமுகத்தினனாய்
கனைவண்டிமிரும்பசுந்துளவோனுறையுஞ்சாலைபுறங்காடாய்
நினையலென்னவுரைத்ததெவனிகழ்த்துநெடியோன்றனையன்றோ
தனிநான்மறையுமெங்கைபுணர்நான்காஞ்சத்தியெனச்சாற்றும். (௩க)

புரவிமகநூறினிதாற்றும்புத்தேள்விசும்புபுரப்பதெல்லா
மரனைவழிபட்டடைந்தவிந்தவாற்றாலன்றோகொடுமறலி
பரவுவேள்விகாப்பனெனப்பகர்ந்தாய்தொழுமார்க்கண்டனுயிர்
விரைவிற்கவர்போதவன்றாளால்விளிந்தாரொவர்கொல்விளம்புதியால். ()

அளத்தற்கரியநிதிக்கிழவனமலன்றுணைவனலநிறங்
களத்திலமைத்தபதினொருவர்கடவுளுருவம்பெற்றுள்ளோர்
விளக்குஞ்சுடர்களொருமூன்றுமன்னோன்விழிகள்மறைநான்குந்
துளக்கலில்லாப்பிரமமெனமடவோயாரைச்சொல்லுமால். (௩௩)

எல்லாவுயிர்க்குமுயிராகியேகமாகிப்பலவாகிச்
சொல்லாநின்றநீயாகியானாய்நின்றசுடர்க்கொழுந்தை
யல்லாற்பொருளொன்றுளதாங்கொலவன்சீரறிஞரறிவதன்றிக்
கல்லாவெளிற்றுப்புல்லறிவோர்க்கறியலாமோகழறுதியால். (௩ச)

பொருளிற்றீர்ந்தபுன்கவியும்புதல்வர்வழங்காப்பாழ்மனையு
மருளிற்றீர்ந்தவெற்றுடலுமன்பற்றணந்தவனிதையரும் [ம்
வருமென்முலையார்தமையொழிந்தமனைவாழ்க்கையும்வெண்டிரைபுரட்டு
விரிநீர்ப்பேர்யாறலைத்தொழுகவிளங்காதோங்குவியன்பதியும். (௩ரு)

கொடையிலாதான்வாழ்வுமறைகூறுமறையோனல்லொழுக்கு
மடைவிற்றருப்பைவனையாமலாற்றுங்கடனுமெள்ளின்றி
யுடையகிழமைத்தென்புலத்தோர்க்கூட்டும்புனலும்போலுநரை
விடையோனன்றிநீயாற்றும்வேள்வியென்னவெகுண்டுரைத்தான். (௩சு)

தனழுவேய்குரம்பைத்தவப்பள்ளித்ததீசியுரைப்பதக்கன்வெகுண்
டழல்வாய்விதியினினிதாற்றுங்கருமமதன்பேறளிக்குமென
மொழிதலோடுஞ்செய்கருமஞ்சடமாமுதல்வன்சான்ருகி
யொழிவிலதன்பேறளிக்குமெனக்கடவுள்முனிவனுரைத்தனனால். (௩எ)

கருமஞ்சடமவ்விறைசான்ருய்த்தன்பேறளிக்குமெனக்கரைந்தா
யுரைசெய்தெய்வஞ்சான்றலதுபயன்றாவாதாலுறுவித்து
மருவுங்காலந்தனிற்ருேன்றிவளர்ந்துபயனல்குதல்போல
விரியுங்கருமகாலத்திற்பலன்கடாமேவிளைத்திடுமால். (௩அ)

என்னலோடுமுறைபிறழாதியற்றுங்கருமகாலத்தின்
மன்னுபலநீயளிக்குமென்ருயவனதருளின்றேல்மடவோய்
சொன்னகருமம்விதிமுறையினியற்றியிடினும்பயன்றாவா
தன்னேனருளால்விதியின்றியாற்றுகினுமப்பயனளிக்கும். (௩௬)

மண்ணிற்றெளித்தவித்தனைத்துந்தத்தங்காலம்வரிற்ருேன்றி
நண்ணும்பலன்களளிக்குமெனநவின்ருய்காலவுருவாகிக்
கண்ணுமதனைத்தோற்றுவித்துங்கருமபலன்களினிதளித்து
முண்ணின்றியற்றுமொருபொருளேயதனினுறைந்துமுறையாதால். ()

என்றுகூறியுலகனைத்துமீன்றுகாத்துத்துடைத்தவற்றை
மன்றமறைப்பித்தருள்புரியும்வரதனின்றிமகம்புரிவோய்
பொன்ருயல்லையெனவோதித்ததீசிபொருவில்துருவாசன்
மின்ருழ்சடிலத்தவத்துங்கன்சவனன்முதலோர்விரைந்தகன்ருர். (௪௧)

கோணைக்களிற்றினிடர்களைந்தோன்முதலவமரர்கூட்டுண்ண
மாணுற்றுள்ளமகிழ்தூங்கத்தக்கன்மகமாற்றிடுமேல்வை
யாணர்க்கமலமலர்ப்பொகுட்டினுறையும்புத்தேளினிதீன்ற
வீணைக்கிழவனிவர்ந்தோங்குவெள்ளிப்பொருப்பிற்செலவயர்ந்தான். ()

அஎ-வது-தக்கன்வேள்விசெய்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ௦அஉ.

---

எண்பத்தெட்டாவது.

## தேவிதக்கன்வேள்விச்சாலையடைந்தஅத்தியாயம்.

கத்திகைக்கொன்றையங்காடுசாடிமேற்
றத்துநீர்வேணியங்கடவுள்சார்தரு
மைத்தவழ்வெள்ளிமால்வரையின்யாழுடை
வித்தகமுனிவரன்மேவினனரோ. (௧)

புவனகோடிகளெலாம்பூத்தபேதையோ
டவிர்மதிபுனைசடையண்ணல்காதலிற்
கவறெறிந்தாடுதல்நோக்கிக்கைதொழாத்
திவவியாழ்முனிவரன்செப்பன்மேயினான். (உ)

மாலுடனுலகெலாம்வயிறுவாய்த்தருள்
பாலலோசனிநினைப்பயந்துளோனுயர்
நீலமால்வரையகனெற்றிச்சாரலிற்
கோலினனொருமகங்கொடிதுபோலுமால். (௩)

உன்னுடனொருவயிற்றுதித்தமங்கைய
ரன்னவர்கொழுநர்மற்றமரர்யாவரு
மன்னினருந்தைநல்வரிசையாற்றிடப்
பன்னருஞ்சிறப்பொடும்பரிந்துவைகினார். (௪)

உடல்சினக்கணிச்சிவானவனையுந்தைவெம்
படிறுரைத்திகழ்தலுந்தீசிலைதலுற்
றடுசினத்தோடும்வைதகலயான்செவிப்
புடைபுதைத்திங்கெடும்புவியிற்போந்தனன். (௫)

என்றுநாரதனுரைத்தேகுமெல்லையிற்
பொன்றவழ்இளமுலைப்புரிமென்கூந்தலாள்
குன்றவிற்குரிசிலைநோக்கிக்கோதறு
மன்றலஞ்சேவடிவணங்கிக்கூறுவாள். (௬)

எந்தையாற்றுறுமகநோக்கியெய்துவன்
றந்தருள்விடையெனத்தையல்கூறலும்
பந்தணைமெல்விரற்பாவையீங்கிது
சிந்தைசெய்திடலெனவிறைவன்செப்பினான். (௭)

இழித்துரைபுகன்றனனென்னைநின்னையு
மழைத்திலன்கேட்டைநாள்நவமியன்றியும்
பழித்திடுசனிவிதிபாதஞ்சிலமுங்
கிழக்கவணேகுறிற்கேடுண்டாமென்றான். (௮)

முழுநெறிக்குவளைமென்முகைநெறிந்தன
மழைமதர்நெடுங்கணிற்சிவப்புவாய்ந்திட
விழைதவழிளமுலைக்கோதையெந்தைதா
டொழுதனளருள்பெறுள்துனிவொடேகினாள். (௯)

குணில்பொருபல்லியங்குழறியார்ப்பெழப்
பணிதருமுயர்கணம்பாங்குசூழ்வர

மணியொளிர்விமானம்விட்டிழிந்துவானுத
லணிகெழுசாலையிலடைதல்மேயினாள். (௧0)

வெண்ணெய்மெய்பூசிமெல்விரல்மடக்கியோ
ரண்ணலங்கருங்கலையுரிவைகையமைத்
தெண்ணிருசடங்கிகணடுவணெய்திய
நண்ணருந்தந்தையைத்தாயைநண்ணினாள். (௧௧)

நண்ணியபுதல்வியையுளநயப்புறுக்
கண்ணொடுதொடுத்தெனநோக்கிக்காதலான்
மண்ணமைதிரள்புயத்தந்தைமாட்சியாற்
பண்ணியசிறப்பினைப்பகரவொண்ணுமோ. (௧௨)

சிறந்துளீரித்துணைச்சிறப்பையென்னொடும்
பிறந்துளோர்ப்புகுந்துழியழைத்துப்பேணுவா
னறிந்திலீர்மருகனையழைத்தபோதினில்
மறந்தனீர்போலுமேமழுவலானையே. (௧௩)

என்னலுஞ்சுணங்குபூத்தெழில்குவித்துயர்
பொன்னவிரிளமுலைபூத்தகொம்பனா
யுன்னுடைக்குற்றமன்றுன்னையீந்துளேன்
றன்னுழைத்தவறினைச்சாற்றக்கேட்டியால். (௧௪)

உலகெலாம்படைத்தளித்தொழிக்கும்பண்ணவன்
கலைமதிக்கீற்றணிகடவுளாமென
மலரயனெனதுளமருட்டிக்கூறலா
லலர்முலைநின்னையானவனுக்கீந்தனன். (௧௫)

அடலைமெய்பூசுவதரவம்பூண்பது
கடல்விடமுண்பதுகபாலமேந்துவ
துடல்சினநரைவிடையூர்வதன்னவன்
மடவரல்வேள்வியின்வருதற்பாலனோ. (௧௬)

என்றலுந்தீயவனீன்றயாக்கைநீத்
தொன்றியநல்லுருவுறைவல்யானெனப்
பொன்றல்போலுடலமென்போர்வைநீக்கினள்
மன்றமுழிமயமால்வரையிற்றோன்றினாள். (௧௭)

நண்ணுறுகாலையினானலந்தெனப்
பண்ணவர்யாவரும்பையுளெய்தினார்
மண்ணகநடுங்கினவரையசைந்தன
விண்ணுருமதிர்ந்தனமின்னும்வீழ்ந்தவே. (௧௮)

சூறையப்பெருவளிசுழன்றெழுந்தன
பாறுவீழ்ந்தமரர்பொன்முடியிற்பாய்ந்தன
ஆறுசெங்குருதிவெண்ணுரைதுளித்தன
கூறுமுத்தழல்சிகைக்கொழுந்துற்றில்லையால். (௧௯)

ஆடகக்குழிசிபெய்யவிகள்யாவையும்
பாடுறுஞமலிகள்பற்றிவவ்வினை
சேடுயர்பரிதியைநோக்கிச்செவ்வனே
கூடுறுநரிக்குழாநனிகுரைத்தவே. (௨0)

மன்னியதீமையைநோக்கிமாயனு
மென்னுறுமோவெனவுள்ளத்தெண்ணினு
னங்கிலேநோக்கியதக்கனந்தணீர்
நன்மகமியற்றுதிரொனநவின்றனன். (௨௧)

அஅ-வது-தேவிதக்கன்வேள்விச்சாலையடைந்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-உக0௬.

---

எண்பத்தொன்பதாவது.

## தக்கன்வேள்வியையழித்தஅத்தியாயம்.

அன்னவேலையின்மெல்வளிதைவரினமுதி
னின்னரம்பிரங்கிசையெழுமகதியாழ்முனிவன்
பொன்னிணர்ப்பசுங்கொன்றைபைந்தேன்றுளிபொழியுஞ்
சென்னிவானவன்கயிலேமால்வரையினிற்சென்றான். (௧)

ஒள்ளழற்சிகைதவழ்தரநெட்டுயிர்ப்பெறிந்து
வெள்ளநீரிடைக்கண்மணிநீந்திடவிழித்துத்
தள்ளருந்துயரோர்வடிவெடுத்தெனத்தாழா
வள்ளலோடிவையாழ்முனிமென்மெலவழங்கும். (௨)

விரிகதிர்ப்பசுந்திங்களங்கண்ணியெம்விமல
திருவில்தக்கனிற்பழித்தவெந்தீமொழிகேளா
வுருவிரண்டினிற்றேன்றுருவொழித்துணர்வரிதா
மருவமாயினளுலகெலாமீன்றருளன்னே (௩)

என்றுகூறிடவனையவளிறந்துபாடெண்ணி
நன்றுநன்றெனப்பண்ணவனகைபுரிந்திடலுங்
குன்றமேழ்கடலண்டகோடிகணிலேகுலேந்து
பொன்றுகாலமேபோன்றதச்சீற்றமார்புகல்வார். (௪)

அண்டகோளகைமுகட்டினில்மணிமுடியுறைய
வெண்டிசாமுகமெறும்வலித்தடம்புயமளப்ப
மண்டுசெங்கதிர்வடவைகட்கடைதொறும்வழங்கக்
கொண்டசீற்றத்திற்றோன்றினன்கூற்றின்வெங்கூற்றம். (ரு)

கூற்றினாருயிர்குடித்தபொற்குரைகழல்வணங்கி
யாற்றல்சால்பெரும்புவனங்கள்முழுவதுமள்ளி
வீற்றுவீற்றவாய்விழுங்குகோவிண்ணவர்பதங்கள்
மாற்றுகோபெரும்புறக்கடல்முகந்துவாய்மடுக்கோ. (சு)

மண்ணருந்துகோமண்பொதிபுனலைவாய்மடுக்கோ
தண்ணறும்புனல்பொதிதழல்விழுங்குகோதழல்சூ
ழண்ணலம்பெருங்காற்றினைநுங்குகோவவைசூழ்
விண்ணயின்றகட்டொருபுடைகிடத்தினன்விடுக்கோ. (எ)

உலகம்யாவையுமுண்டவன்றனையெடுத்துண்கோ
கலைமுதற்பெயரளவில்பல்காலமுங்கலக்கோ
பொலன்முகட்டுயர்மேருவைத்துகள்படப்புடைக்கோ
கொலைசெயுங்கொடுங்கூற்றுடற்பிழிந்துயிர்குடிக்கோ. (அ)

பணித்தல்யாதெனத்தொழுதலும்வீரபத்திரகேள்
தணிப்பருந்திறற்றக்கனீண்மவுலியஞ்சென்னி
துணித்துமற்றவனாற்றியவேள்வியுந்தொலைத்துக்
கணித்தபேருலகனைத்தையுங்கனற்றிடலென்றான். (கூ)

என்னலோடுமவ்வீரபத்திரனெனுமிறைவன்
மின்னுநக்கவாளெயிற்றினர்வியனிலஞ்சுமந்த
பன்னகத்தினில்வீக்கியகச்சினர்படையா
தன்னையொப்பவரளப்பிலாருயிர்ப்பினிற்றந்தான். (க0)

கூன்புறத்தசெங்கட்கரும்பன்றிவெண்கோடு
மூன்கழிந்தமோட்டாமையின்புறத்தவெள்ளோடுங்
கான்பழுத்தபைந்துளவினோன்கழித்தவெண்டலையும்
வான்பொறுத்துயர்முடிதொறுமுடிதொறும்வயங்க. (கக)

குருதிநீர்படிந்தாடுவெங்கணிச்சிவேல்குலிசம்
பரிதிவாளெழுத்தோமரங்கப்பணம்பலகை
யெரிகவிழ்க்குமுத்தலையவேலிவைமுதற்படைகள்
பொருவிறோள்களீராயிரந்தரித்தனன்பொலிய. (கஉ)

நீறுபூத்தொளிர்நெற்றியங்கட்கடைபொழிதீ
பாறுசூழ்வருபடைதொறும்படைதொறுமுமிழ்தீ

யீறுசெய்துலகொளித்திடவேந்தியதெறுதீ
மாறுகொண்டுசெந்தழற்சிகைமாலையிற்றவழ. (கரு)

படகமாகுளிமுடுகுபேரிகைவயிராம்பை
குடவயிற்றுவெண்சங்கினங்குடமுழாமுதல
வெடிபடத்தனியதிர்ந்துவான்வெளிமுகடுடைந்து
கடையுகத்தெழுகடலுடைந்தாலெனக்கறங்க. (கச)

மற்பழுத்ததிண்டோளுடைத்திறல்மணிமானுங்
கொற்பழுத்தவெம்முரட்படைநந்தியுங்குழைந்த
விற்பழுத்துமிழ்வெங்கணைச்சண்டனும்விரிந்த
வற்பழுத்தமெய்க்காளியுமதிர்ந்துமுன்னடப்ப. (கரு)

வெருவருந்திறல்வாளினர்வேலினர்வெகுளி
யொருவரண்டங்கள்யாவையுமொருங்குவாய்மடுக்கும்
பொருவிலாற்றலர்பொருப்புறழ்தோளினர்பொங்கி
யிருமருங்கினுமெண்ணருங்கணந்தொடர்ந்தேக. (கசு)

அலரிமண்டலம்வீழ்தருமத்தமால்வரையும்
பொலன்முகட்டுயர்மேருவும்புணரிசூழ்வரைப்பும்
நிலைகுலைந்திடச்சேடனுநெடுமுதுகுளுக்க
மலைநடந்தெனநடந்தனன்வயங்கெழுவீரன். (கஎ)

மிடைந்துசேனைமுன்னடத்தலும்விரிதுகட்படலம்
படர்ந்துதெண்டிரைபொருமெழுகடல்திடர்படுத்தி
மடந்தைபாகனையிகழ்ந்துயர்மகவினைபுரிவா
னடைந்தவானவர்கட்புலஞ்செம்மியதன்றே. (கஅ)

அறைகருங்கழற்கொடிப்படையார்ப்பொலிகேளாச்
சிறகர்வண்டுளர்பசுந்துழாய்ச்செங்கண்மான்முதலோர்
முறைதிறம்பியிவ்வுலகெலாமுதலொடுமுடியு
மிறுதியின்றெனநினைவுழிச்சேனைசென்றிறுத்த. (கசு)

சேட்டிளங்கதிர்ச்செல்வனதொளிகெடச்சிரிக்கு
மோட்டுமாமணிச்சாலையின்மொய்சுடர்த்தெறுதீ
யூட்டினர்சிலர்சிலர்மணியூபங்களொடித்தார்
வீட்டினர்சிலரமரரைச்சிலரவிமிசைத்தார். (உ0)

அண்டகோளகைமுகட்டினிற்சிலர்தமையடித்தார்
மண்டுதீம்புனற்கடலிடைச்சிலர்தமைமடுத்தா
ரொண்டிசைக்கரிபற்றினர்சுற்றினரெறிந்தார்
கொண்டலேழையுமழலெழமுறுக்கினர்குடித்தார். (உக)

ஓங்குமுத்தழலவித்தனர்சிலர்சிலரோடி
வீங்குதூணிடையார்த்தபல்பசுக்களைவிடுத்தார்
பாங்கினிற்சிலரியக்கர்கின்னரர்பதைபதைத்து
மூங்கைபோலுறநாவினைமுதலொடுமறுத்தார். (உஉ)

குடங்கையிற்சிலரோழ்கடலள்ளினர்குடித்தார்
விடங்கவிழ்த்திடச்சேடனைவோரொடும்பிடுங்கிப்
படங்கிழித்தனர்சூட்டுடைப்பருமணிபறித்து
வடங்களாமெனக்கோத்தனர்மார்பினிலணிந்தார். (உ௩)

பாழிமால்வரைமுழுவதுமடியொடும்பறித்துப்
பூழிபட்டிடச்சிலர்விரல்நுதியினிற்புடைத்தா
ராழிவெற்பினையகழ்ந்தெடுத்தொருகுறட்பூதந்
தாழ்தடக்கையிற்கங்கணமெனத்தரித்ததுவே. (உச)

அனையகாலையினடுகளத்தாரமரோற்றுக்
கனைகடாக்களிசெருக்கலிற்கண்படைபெறாத
பனைநெடுங்கரத்தடலயிராவதப்பகட்டின்
புனையெருத்தமேற்றோன்றினன்வயிரவாட்புனிதன். (உரு)

வயிரவாட்படைவிண்ணவன்மண்டமர்க்கெழலுஞ்
செயிருடைக்கொடுந்தழற்கிறைதெண்கடற்செல்வ
னுயிர்குடிக்கும்வெங்கூற்றுவனிருதிவேநதுலவை
வெயில்விரிக்கும்வேலியக்கர்கோனுடைமர்விளைத்தார். (உசா)

மரகதப்பசும்புரவியூர்வயங்கொளித்தடந்தேர்ப்
பொருவிலாதபர்பொழிகதிர்த்திங்களங்கடவுள்
வெருவருந்திறல்மருத்துவர்விறல்கெழுவசுக்க
ளிருவிசும்புறைதேவர்மற்றெவருமேற்றெழுந்தார். (உஎ)

ஏற்றெழுந்துவாய்காய்ந்தொளிர்வெந்தழலிறைக்கும்
பாற்றினஞ்சுழல்பரிதிவேல்தோமரமுசுண்டி
யூற்றிருந்துசெங்குருதிகொப்பளிக்குமொண்பகழி
யாற்றல்சால்கணநாதர்மேல்விடுத்துநின்றார்த்தார். (உஅ)

கைம்முகந்தெறிநாணிடிக்குரலொலிகலிப்பத்
தெம்முகந்தலைபனிப்புறக்கொடுங்கணைசிந்த
வம்மவோவெமதாற்றனன்றாயதென்றழன்று
கொம்மைகொட்டினனந்திவெள்விடையுயர்கொடியோன். (உகூ)

செந்தசைப்புலவொழிந்திடாதிடிக்குலஞ்சிதறு
மைந்துடைக்கொடுங்குலிசம்வானவர்க்கிறைவழங்க,

நந்தியேந்தியவெந்திறற்கணிச்சிமுன்னண்ணி
வெந்துசாம்பராய்வீழ்தலுமகபதிவெகுண்டான். (கூ0)

கொற்றவெஞ்சிலேகுழையநீள்குடுமிநாண்கொளுவி
யற்றமில்கணையமரர்கோன்பொழிதலுமையன்
பற்றியாங்கவனடலயிராவதப்பகட்டைச்
சுற்றிவாய்வழிகுருதிநீர்சொரிதரப்புடைத்தான். (கூக)

புயலுகைத்தெழுமமரர்கோன்போரினுக்காற்றுன்
குயிலுருக்கொடுபறத்தலுநஞ்சுகொப்பளிக்கு
மயிலெயிற்றவெம்பஃறலேயரவகங்கணத்தோன்
பயில்கொடுஞ்சிறையங்கையாற்பற்றினன்பறித்தான். (கூஉ)

ஏழ்தடங்கிரியேழ்கடலேழ்பெருந்தீவும்
பாழிவாயிடைப்புகுத்தியும்பசிகொடாதுழலுங்
காழ்நிறத்தனகூளிவெங்கனலிநாவேழும்
போழ்படும்படிகுறைத்துயர்கொடிற்றிடைப்புடைத்த. (கூகூ)

செங்கட்கார்நிறமேதியின்றிரள்மருப்பொடித்து
வெங்கட்கூற்றினைப்பிடித்தழல்விழியிணைபிதுங்க
வங்கைப்பாசத்திற்கழுத்தினிலிறுக்குறவார்த்து
துங்கமௌலிநுண்டுகள்படத்துகைத்தனன்சண்டன். (கூச)

மங்குல்வாய்திறந்துண்டெழும்வார்கடற்கிறைவன்
பங்கிபற்றிநீணிலத்திடைப்பதைத்திடவீழ்த்தி
யங்கவன்றனிவயிற்றினையுகிரினுலகழ்ந்து
தங்குமீருள்வாய்ப்பெய்ததோர்தழல்விழிப்பூதம். (கூரு)

திருகுசீற்றமால்விடையிவர்செல்வனையின்றிப்
புரியும்வேள்வியிற்புகுந்தினிப்போதியோவென்று
நிருதியைப்பிடித்தொருகையாலமூந்துறநெருக்கிக்
குருதிவாய்வழிகொட்டிடப்புடைத்ததோர்கூளி (கூசு)

சூர்த்தநோக்கினிற்றெறுதழல்வடவையிற்றாங்கப்
பார்த்துவெந்திறற்காற்றிறையாருயிர்பதைத்துப்
போர்த்தநீண்மயிர்க்காறெறுங்குருதிநீர்பொடிப்ப
வார்த்துமூக்குவாய்பதைத்துயிர்ப்பவித்ததோரலகை. (கூஎ)

கற்றையஞ்சுடர்கான்றுவெங்கணையிருள்பருகு
மொற்றையாழியந்தேருடைப்பகன்றனையுடன்று
பற்றிமற்றவன்கண்ணிணைவேரொடும்பறியா
வெற்றிமன்றிடைவீழ்த்திநின்றிழுத்ததோர்பூதம். (கூஅ)

உலகம்யாவையும்விழுங்கிருட்குறும்பெறிந்தோட்டு
மலர்செழுங்கதிரரியமாவென்னும்வானவன்றன்
குலவரைத்தடந்தோளினைவாளினாற்குறையா
வலகையொன்றுதன்புலவுவாய்மடுத்துநின்றுடும். (௩௯)

முல்லைமெல்லரும்பனையநல்லவிமுகந்தினிதி
னல்லுநன்பகலுந்தனியயின்றுடல்தடித்த
வெல்விளக்குபூடாதவன்றனைப்பிடித்தெற்றிப்
பல்லுகுத்ததோர்சுழல்விழிப்பாழிவாய்ப்பூதம். (௪0)

இயக்கர்வேந்தனைவசுக்களோரெண்மரையாரும்
வியக்குநல்லெழில்மருத்துவரிருவரைவெகுண்டு
துயக்கமுற்றுநெய்த்தோர்பலேவாய்தொறுஞ்சொரிய
வயக்கொடுங்கதையொன்றினாலடித்தனன்மணிமான் (௪௧)

நீளிருங்கதிர்த்திங்களஞ்செல்வனைநெருக்கி
வாளினாலமர்மலைந்தவன்வாட்படைநூறி
தோளினாற்பிணித்தணிமுடிதுகள்படவீழ்த்தித்
தாளினாலகனிலத்தொடுந்தேய்த்தனன்சண்டன். (௪௨)

பிள்ளைவெண்பிறைபிணித்தவார்செஞ்சடைக்காளி
கள்ளவாவுயிர்க்குங்குழற்காமர்பூந்திருவை
வள்ளவாய்ப்பொலம்பொகுட்டுவெண்டாமரைமயிலை
யள்ளிலைச்சுடர்வாளினால்மூக்கினையரிந்தாள். (௪௩)

இடுகுநுண்ணிடையிறுமிறுமென்பதையுணர்ந்தோ
கொடியகூற்றினுமென்பதையுளத்திடைக்குறித்தோ
வுடல்சினத்தபோர்க்காளியொள்வாளினாலிலங்கு
படைகொள்வேல்விழிப்புலோமசையடர்முலைகுறைத்தாள். ()

தக்கனன்மனைக்கிழத்திதன்றாழ்குழைகொய்தாள்
தொக்கவிண்ணவர்மடந்தையர்துணைமுலைசெவிநா
மைக்கருங்குழல்குறைத்தனள்வாய்வழிகுருதி
கக்கநல்லெழிலதிதியைக்கவிரிதழரிந்தாள். (௪௫)

குடல்வயிற்றெளிர்குருமணிக்குண்டலக்குழைய
கடவுட்காசிபன்முதலியமுனிவரர்கலங்க
முடியுடைத்தலைகீழுறமுனிவொடும்பற்றி
யொடிவில்யூபத்திற்றூக்கிமார்புறச்சிலருதைத்தார். (௪௬)

ஈருள்மூளைதோலென்புசெந்தசைகுடர்நரம்பு
சோரிசிந்திடக்காலினாற்சிலர்தமைத்துகைத்தார்

பாரின்மீதிலிட்டனைத்தனர்சிலர்தமைப்பலரைக்
காரினூடுபுக்கொளித்திடக்கைவிசைத்தெறிந்தார் (௬௭)

தொழுதுபற்றேகைதோன்றநின்றிரந்தனர்சிலர்மற்
றழுதுநெஞ்சகங்குழைந்துநின்றரற்றினர்சிலர்வெங்
கழுகுகொத்திடக்களத்திடைக்கவிழ்ந்தனர்சிலர்தாம்
விழுதுவிட்டனகொத்துடைக்கரத்தவிண்ணவரோ. (௬௮)

தாளிழந்தனர்சிலர்சிலர்தடக்கைகளிழந்தார்
தோளிழந்தனர்சிலர்சிலர்துணைவிழியிழந்தார்
காளமுண்டிருள்களிந்தமைக்கண்டனையிகழ்ந்தோர்
நாளுலந்திடாதுய்ந்தவர்நானிலத்தெவரோ. (௬௯)

அ௯-வது-தக்கன்வேள்வியையழித்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ௯௫உ.

---

தொண்ணூறாவது.

## தக்கன்வதைஅத்தியாயம்.



முன்னரெய்தியகொடிப்படையின்னனமுடிப்பப்
பன்னகத்தொடும்புடவிபாதலத்திடையொளிப்பச்
சென்னியண்டகோளகைகிழித்தப்புறஞ்செல்லத்
தன்னடித்துணைபெயர்த்தவண்வீரனுஞ்சார்ந்தான். (க)

எம்மையாளுடையீசனையிகழ்ந்தனனுய
செம்மைதீர்தொழிற்றக்கனைச்சேர்ந்ததீமையினல்
மும்மையாகியவுலகமுங்கணத்தினின்முடிந்த
வம்மவோவெனவதிசயம்பூத்திடவறைவான். (உ)

தக்கனெங்குள்னன்னவன்றீமகச்சாலை
தொக்கவானவரெங்குளர்விரைவினிற்றொடர்ந்து
புக்கபுக்கவெவ்விடந்தொறும்நீவிரும்புக்குச்
சிக்கயாத்திவட்டருகெனச்சிலர்தமைவிடுத்தான். (௩)

விரைவினிற்கணஞ்செல்வுழிவேள்வியம்புருட
னிரலையேறெனநடத்தலுமெதிர்த்தொருபூதந்
திருகுகோட்டினைப்பற்றிநீள்சென்னியைத்திருகிக்
குருதிவாளுடைவீரன்முன்கொணர்ந்ததையன்றே. (௪)

கடிமலர்ப்பொலங்கற்பகக்காடுகாவலனே
டையமற்றுளவமரர்கள்யாவருமவிந்தா

ருடல்சினத்தவைம்படைசுமங்தோரடியதனுற்
படியளந்ததண்பசுந்துழாய்மாலுளனென்றூர். (௫)

எங்குளானவனெங்குளானனவுருத்தெழுந்து
பொங்குவெங்கவுட்கடாக்களிற்றெருத்தன்மேற்போதுஞ்
சிங்கவேறெனச்சேறலுந்தாமரைபூத்த
மங்குல்போன்மெனத்தோன்றியமாயனைக்கண்டான். (௬)

கொன்றைவேணியோன்குளைகழற்போதினிற்றூவி
மன்றவேத்துவானுயிரந்தாமரைமலரி
லொன்றிலாமையிலுனதுகண்ணிடந்துதூயன்றே
வென்றிநேமியும்விளம்பருஞ்செல்வமுமடைந்தாய். (எ)

கருமுகைச்செழும்பூவைபோன்மேனியங்கண்ண
புரியும்வேள்வியம்புருடனீதக்கனைக்காத்துச்
செருவிளைத்தியோதீயனையறிவொடும்பற்றித்
தருதியோவுயிரிழத்தியோசாற்றுதியென்றான். (அ)

தவலறுந்திறற்றக்கனைக்காக்குவனெரிகா
லவிர்கொடுப்படையெறிந்தமராற்றுதியென்னுக்
குவலயம்பொதிகுளைகழற்றாமரைக்குரிசில்
கவனவேகவெங்கலுழன்மேலிவர்ந்தனன்கடிதின். (௯)

வேறு.

அண்டகோளகையுடைந்துமோழைபடவப்புறத்திலுயரண்டமும்
விண்டுபோழ்படவிலங்குபொற்குடுமிமேருமால்வரைவெடிப்பநீ
ளெண்டிசாமுகமுமொலியினிற்செவிடுபடமனழக்கருவிருந்ததோர்
கொண்டல்வண்ணனுருமேறெனக்குளிறுகுடவயிற்றவளையூதினன். (௧0)

அஞ்சிறைக்கலுழன்மீதிவர்ந்துவருமைம்படைக்கடவுளழலொடு
நஞ்சுயிர்க்குமடல்வாளிகோடிகணநாதரோரொருவர்மேல்விட
வெஞ்சமத்திடையெதிர்ந்ததானவரைவெல்வதன்றுகணநாதர்மு
னுஞ்சுபோவதரிதென்றுமாயனைநகைத்துவீரனுரையாடினன். (௧௧)

உலகம்யாவையுமொடுங்குகாலையினிலுடைதிரைக்கடலினுள்ளுறு
மலகிலண்டமுமுடைக்குமோர்கதைகொடாடல்வீரனெதிர்மோதமால்
விலகிவில்லுமிழும்வாளரக்கருயிருண்டுவெங்குருதிமுடையறாப்
புலவுவெங்கதைகொடெற்றமற்றதுசிதைந்துபூழியெனலாயதே. (௧௨)

மட்டுவார்தருபசுந்துழாய்மவுலிபின்னுவார்சிலைகுனித்துமேல்
விட்டவெம்பகழிமாரிகண்டுகொடுவெஞ்சினத்திலடல்வீரனுங்

கட்டுவாங்கமதுகொண்டுதிண்சிலையெடுத்தகைமுரியமோதலுந்
தொட்டவெஞ்சிலைவிழுந்ததம்புவிசுமந்தவாளரவுளுக்கவே. (கந)

பரிதியாயிரமெழுந்ததென்னவுயர்பாய்செழுங்கதிர்பரப்பிவா [ங்
னுருமுமின்னுமொருகோடிகோடியுயர் தாரைதாரைதொறுமுமிழும்வெ
குருதிநேமிநெடுமால்விடுப்பவதுகொற்றவீரன்மணிமார்பினிற்
பொருவில்விந்தையடுசெயமரத்திடைபுனைந்தமாலையெனலாயதே. (கச)

வெயில்விரிக்குமடல்நேமிமாலையின்விளங்கலோடுமுகில்மேனியான்
செயிர்விளைத்துவடிவாள்விதிர்த்தமருடற்றல்கண்டுதிறல்வீரன்வா
ளெயிறதுக்கியழலெழவிழித்துடலும்வெஞ்சினத்தெதிருறுக்கினன்
புயனிறக்கடவுள்வெருவிமாழ்கியுயிர்பொன்றினரினுடல்வாடினன். (கரு)

நீலமால்வரைவிழுந்ததாமெனவிழுந்தநீனிறமுகுந்தனைச்
சூலவேல்கொடுதுழாய்முடித்தலைதுணிப்பவீரன்வருபோழ்தினில்
மாலிறந்துபடமைந்தவாருயிரைவவ்வல்வவ்வலெனவானின்வா
யாலமுண்டமருய்யவின்னருள்பொழிந்தவண்ணலுரையாடினன். (கசு)

ஐயன்வானிடையுரைத்தவின்மொழியினருணினைந்துதிறல்வீரன்மா
லுய்யுமாறுவகையொடும்விடுத்தயலுறைந்ததக்கனெதிரோடிநீ
செய்யுமாமகமுடிந்ததோவெனநகைத்துரைத்துவளர்செங்கிறக்
கையினுலுருமினெற்றவெற்புறழ்களத்தொடுந்தலைதெறித்ததே. (கஎ)

தெறித்தசென்னியையெடுத்தவீரனுயர்செங்கையங்கையின்மடுத்துமுன்
னெறுத்தவானவரையொழியநின்றவர்தம்முடல்பிழிந்துயிர்குடித்துவெம்
பொறித்தழற்சிகையினுலகம்யாவுமுயிர்பொன்றுகாலையினடித்திடு
மறித்தடக்கையுடைமழுவலானெனவயங்கொள்வெஞ்சமரினாடினன். ()

வேறு.

மண்டமர்கடந்தவிம்மனச்செருக்கின
லண்டகோடிகளுமின்றள்ளியள்ளிநின்
றுண்டிடும்வீரனென்றுள்ளத்தெண்ணினன்
புண்டரிகத்தவிசுறையும்புங்கவன். (கக)

எண்ணியெவ்வுலகமுமீன்றபுங்கவன்
கண்ணுதலுறைதருகயிலைமால்வரை
நண்ணிவார்கங்கைதாழ்நளிர்மதிச்சடை
யண்ணலையேத்தியீதறைதல்மேயினன். (உ0)

அல்லல்செய்தறம்புரிதக்கன்தீமையா
லெல்லையிலமரராண்டிறந்துபோயின

றொல்லையினளித்தியென் றுரைப்பமால்வரை
வில்லினான்முகனொடுவிரைவினெய்தினான். (உக)

கொழுதிவண் டிமிர்தருகொன்றை வார்சடை
முழுமுதலெய்தலுமூரிவீரனோ
டெழுதருநந்தியேமுதலயாவருந்
தொழுதனர்மலர்மழைதூவிநின்றனர். (உஉ)

அன்னகாலையின் மறைக்கிழவனண்ணறன்
பொன்னடிதொழுதுமால்முதலபுங்கவ
ரின்னுயிரளித்தியென் றிரப்பதன்னுழை
மன்னியவீரனைவழங்குவாயென்றான். (உ௩)

வெந்திறல்வீரனும்விளிந்தவிண்ணவர்
செந்தசையென்புதோல்சென்னிதோள்கரங்
கந்தரமூக்குநாக்கண்ணளித்தவ
ருய்ந்திடவாவியுமுதவினனரோ. (உ௪)

காத்துலகமைத்தவைகடியுமீசனை
யேத்திடாவிறைவரோபசுக்களென்பவாற்
றீத்தொழிற்றக்கன்வான்சென்னிகண்டிலன்
மோத்தையாடெறிந்ததன்முகத்தையொட்டினான் (உ௫)

கண்டுயிலேற்றவனொன்னக்கார்நிற
வண்டுழாய்மாயவன்முதலவானவர்
தொண்டரோம்பிழைத்தவைபொறுத்திதூய்ச்சடை
யண்டநாயகவெனவடிவணங்கினார் (உ௬)

அண்ணலுமருள்புரிந்திமயமால்வரை
நண்ணினன்கணங்களைநாமவீரனைக்
கண்ணனேமுதலியகடவுளோரெலாம்
புண்ணியத்தாண்மலர்போற்றிப்போயினார். (உ௭)

நந்தியேமுதல்கணநாதர்யாவரும்
வெந்திறல்வீரனும்விடைநெடுங்கொடி
யெந்தைசேரிமயமால்வரையினேகினார்
தந்தையுந்தக்கனைநோக்கிச்சாற்றுவான். (உ௮)

காசியினிலிங்கமொன்றமைத்துக்காதலாற்
றேசுடனருச்சனைசெய்யினல்லதை
யீசனையிகழ்ந்ததீங்கொழிந்திடாதென
வாசநாண்மலரவன்வழங்கிப்போயினான். (உ௯)

திருவமர்காசியிற்றக்கன்சேர்ந்தவண்
பொருவருமிலிங்கமொன்றமைத்துப்பூசைசெய்
தொருபதினாயிரம்பருவமொள்ளழ
லெரிநடுவிருந்தருந்தவமியற்றினான். (௧0)

திரைதவழ்கங்கைதாழ்திங்கள்வேணியான்
வரைமகள்மணவினைமுற்றிநாண்மலர்
விரைவளர்தருமலர்ச்சோலைமேயவான்
கரைபொருதடம்புனற்காசியெய்தினான். (௧௧)

அருந்தவம்பற்பகலாற்றியன்பினீங்
கிருந்தவித்தக்கனுக்கிறைவிநல்கெனச்
செருந்திதாழ்பூஞ்சடைச்செல்வன்றக்கனை
விரும்பியகேளெனவிறைவிற்கூறுவான். (௧௨)

துறக்கமீதுறையினாநரகிற்றேயினு
மிறக்கினும்பிறக்கினுமின்பந்துய்க்கினும்
பிறைக்கொழுந்தணிசடைப்பெருமநின்னடி
மறக்கொணாநல்வரம்வழங்குவாயென்றான். (௧௩)

கொவ்வைவாய்மலைமகள்கொழுநன்கூறுவா
னவ்வரமளித்தனமமைத்தலிங்கமுஞ்
செவ்விதினின்பெயர்புனைந்துசீரொடு
மெவ்வலர்திசைகளுமேத்தவோங்குக (௧௪)

அளப்பினாளுலகெலாமமைத்துப்பின்னருந்
துளக்கறுமுத்தியந்துறையிற்சேர்கெனக்
களிற்றுரிபோர்த்தவெங்கடவுள்தன்னுடை
யுளத்துறுமுவகையோடுரைத்துப்போயினான். (௧௫)

தக்கனுந்தன்னுடைப்பதியிற்சார்ந்தன
னிக்கதைகேட்பவர்பயிலவெண்ணினோர்
முக்கணற்பழிச்சுறுமுறைதிறம்பினு
மக்குறைகொளாதரனளிக்குமென்றனன். (௧௬)

௬0-வது-தக்கன்வதைஅத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உகஅஅ.

---



தொண்ணூற்றோராவது.

## பார்வதீசன்கதையுரைத்த அத்தியாயம்.



மாறுபடுஞ்சூர்மாளவிடும்போர்வடிவேலோய்
பாறுவதீசன்காதைவிளங்கப்பகரென்னக்
கூறலுமன்பான்மாதவனெஞ்சங்குழைவெய்த
வூறுபசுந்தேனின்னமுதென்னவுரைசெய்தான். (க)

இமயநெடுங்குலவரையினகன்றெம்மிறையன்பா
லுமையவளோடுங்காசியடைந்தாங்குறைபோதி
லமலவிளங்கானந்தநெடுங்கானனமென்றாய்
கமையிலுணர்ந்தானந்தசமூகங்கழறென்றாள். (உ)

மஞ்சுபடிந்தார்தண்டலைசூழும்வளர்காசி
யஞ்சுகுரோசத்தெல்லையுமெட்டேவுதலாகா
வீஞ்சுமிலிங்கமேயவவற்றின்மேலோர்தா
மெஞ்சலில்நல்லானந்தசமூகமென்பாரால் (௩)

என்றெமையாளுமீசன்விளம்பவெறிவைவேல்
வென்றதடங்கண்மாதுமைநெஞ்சின்விழைவோடு
மன்றொரிலிங்கமமைத்தனள்மற்றங்கதனும்மம்
பொன்றலில்பாறுவதீசனெனப்பேர்புகல்வாரே. (௪)

அன்னையளித்தருளீசன்பைம்பொனடிதாழ்வோர்
தன்னைவழுத்துவர்விண்ணவர்யாருந்தமதன்பா
லென்னில்விருப்புடனிக்கதைகற்றோரியல்பாகச்
சொன்னவர்பேறிம்மாலுடரோரனிசொல்வாரே. (௫)

௯௧-வது பார்வதீசன்கதையுரைத்த அத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௧௯௫.



தொண்ணூற்றிரண்டாவது.

## கங்கேசன்வரலாறுரைத்தஅத்தியாயம்.



கொங்கூற்றிருக்குநறைக்கொன்றைக்குழகன்மாலைபுனைவேணி
கங்கேச்சுரன்றன்காதையினையுரைத்துமென்னக்காய்சினத்த
வெங்கூற்றனையதாருகனைவிழுங்கிப்புலவுத்தேக்கெறியுஞ்
செங்கேழ்ப்பரிதிநெட்டிலைவேற்செல்வனதனைச்செப்புமால். (க)

நெய்வாய்துடைப்பவுறைகழிப்பினேரார்மகளிர்நெடுந்தடங்கண்
மைவாய்துடைத்தாலன்றிமணித்தடம்புகுதாவடிவேலோன்
பைவாயரவந்தனிசுமந்தபாரோழ்புரக்கும்பகீரதன்முன்
வெவ்வாரழலிற்றவமாற்றிவிரிநீர்க்கங்கைகொணர்போழ்தில். (௨)

கங்கைமணிகன்னிகைமடுவிற்கலத்தலோடுமெதிர்கமஞ்சூல்
மங்குறவழுங்குடுமிமதிலுடுத்தகாசிவளநோக்கி
யங்கணிலிங்கமொன்றமைத்தானதன்பேர்கங்கேச்சுரமதனைப்
பொங்குமுவகையொடுமலர்தூய்ப்புகழ்வோர்கருவிற்புகுதாரால். (௩)

கன்னிக்கமுகின்பசுங்கழுத்தின்கமஞ்சூம்பாளைவயிறுடையச்
செந்நெற்பழனத்திளவாளையுகளுங்காசித்திருநகரிற்
பின்னற்றிரைவார்புனற்கங்கைசமைத்தவிலிங்கம்பேருலகி
லின்னற்கிடமாங்கலியுகத்தில்விளங்கித்தோன்றாதிருக்குமால். (௪)

முத்தங்கோத்தநிலாத்தொடையின்மூழ்குதடந்தோள்வேல்வேந்தர்
தத்துதிரைநீர்க்கங்கேசன்காதைகேட்பிற்பஃறலையிற்
பைத்தெவ்வுலகுந்தனித்தாங்குஞ்சேடனென்னப்பார்தாங்கி
மைத்தாழ்கண்டன்பொலங்கமலமலர்ச்சேவடியினடைகுவரால். (௫)

முத்தீயாற்றுமருமறையோர்முதலவெவரும்பூங்கொன்றைத்
தொத்தார்கண்ணிக்கங்கேசன்காதைகேட்பிற்றொடுகடலின்
மத்தாய்நெடுமால்வரைநிறுவிமதிப்பவெழுதீவிடமுண்ட
புத்தேள்கமலச்சேவடியிலடைவரென்னப்புகன்றனனால். (௬)

௯௨-வது- கங்கேசன்வரலாறுரைத்த அத்தியாயம்முற்றிற்று.

ஆகதிருவிருத்தம்-௨௧௯௧.

---

தொண்ணூற்றுமூன்றாவது.

## நருமதேசன்வரலாறுரைத்தஅத்தியாயம்.

முருகுவாய்மடுத்துண்டளிதெவிட்டிமூச்செறியு
முருள்பசுந்துணர்க்கடம்பணியொளிரும்வேலுரவோய்
நருமதேச்சுரன்காதையைநவில்கெனநவின்றான்
றிருகுசீற்றத்தவில்வலற்செகுத்தமாமுனிவன். (௧)

மறைவடித்தநாமுனிவரர்வராககற்பத்தி
னிறைபெரும்புனலாற்றினுட்சிறந்தவைநிகழ்த்தென்
றறையவெந்திறற்கூற்றினதாருயிரகல்வான்
கறைமிடற்றனேயேத்தியமார்க்கண்டன்கழறும். (௨)

அரிகுரற்பகுவாய்வலம்புரிகிடந்தலறும்
விரிதிரைக்கடல்மேவுறுநதிகளில்விளங்கு
கரையலைத்தெறிகங்கைநற்சரஸ்வதியமுனை
நருமதைப்பெயர்நதியிவைநான்குமேம்படுமால். (ஙு)

இங்குகங்கைநல்லிருக்குவேதத்துருயமுனைத்
தரங்கமாநதியுருவிரண்டாமறைசாமம்
பரந்ததீம்புனற்சரஸ்வதிநருமதைபகரின்
விரிந்ததீவினைவிலக்குநான்காமறைவிளம்பின். (சு)

கங்கைமாநதியெவற்றினுஞ்சிறந்தமைகருதி
யங்கதற்குநேரமைந்திடநருமதையாறு
பங்கயாசனற்பழிச்சவப்பண்ணவன்றன்றி
யிங்குனக்குளம்விழைந்தனகேளெனவிசைத்தான். (ரு)

அரில்படுங்கொடிப்பவளவெண்டிரைமுகந்தலைக்கும்
விரிதடம்புனற்கங்கையைநிகர்த்திடல்வேண்டும்
வரமளித்தருளின்றெனநருமதைவழங்கப்
பொருவில்தாமரைப்பொகுட்டுறைபுண்ணியன்புகலும். (சூ)

திங்கள்சூடியசெல்வனைநிகர்த்திடுந்தேவும்
பங்கமற்றுயர்காசியைநிகர்த்திடும்பதியு
மங்குல்போன்றெளிர்மாயனிற்புருடனுமுண்டேல்
கங்கைமாநதிநிகர்க்குமாறுளதெனக்கரைந்தான். (எ)

என்னவோதலுமிறையலதளிக்குமோவென்று
முன்னியோதியல்முத்திகூர்காசியினடைந்து
பின்னுதெண்டிரைப்பிப்பலதீர்த்தத்தின்கரையில்
மன்னிலிங்கமொன்றமைத்துவான்றவமியற்றியதால். (அ)

நிலவுகண்படுநித்திலங்கூன்முதுகிப்பி
யலைகொழித்தெறிநருமதையருந்தவநோக்கிக்
கலைகொழிக்கும்வெண்டிங்களங்கண்ணியோன்றன்றி
யுலைவினற்றவமொழிதிகேள்வரமெனவுரைத்தான். (கூ)

கங்கையோர்முறைபடிந்திடில்யமுனைகாமருநீர்
தங்கியேழுநாள்படிந்திடில்சரஸ்வதிநாள்மூன்
றங்கதன்புனல்படிந்திடிலருவினையகற்று
மிங்குநின்முகங்காண்டலுமிரிந்திடும்பாவம். (கo)

நின்னிடத்துறுசிலையெலாமிலிங்கமாய்நிகழ்க
வன்னலிங்கமுநருமதேச்சுரப்பெயராக

சொன்னலிங்கமேத்துநர்தமைமறலியுந்தொழுக
வென்னநல்வரமளித்தரன்மறைந்தனனென்று. (கக)

கோளில்மாதவர்க்குலகெலாங்குரைகடல்கொளினு
நாளுநலந்திடாமார்க்கண்டனவிலவாங்கவன்றன்
றாள்பணிந்துயர்முனிவரர்தம்பதியகன்றார்
நீளிருங்கதைகேட்டவர்நிரயமீதடையார். (கஉ)

கூஙு-வது-நருமதேசன்வரலாறுரைத்தஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உஉகக.

---

தொண்ணூற்றுநான்காவது.

## சதீச்சுரன்வரலாறுரைத்தஅத்தியாயம்.

---

தளர்நடைப்பசுங்குழவிவெண்டிங்கள்தாழ்கண்ணி
நளிபுனற்சடைச்சதீச்சுரன்கதையினைநவில்து
முளமுவந்துயர்குறுமுனிகேட்டியென்றுரைத்தான்
றுளிமதுக்கமழ்நறுமலர்க்கடம்பணிதோளான். (க)

மின்னரம்புடைவீங்குசூற்கொண்டல்கண்படுக்குங்
கன்னிமூதெயில்விளிம்புடுத்தோங்குகாசியினில்
முன்னநாண்மலர்ப்பொகுட்டுறையொருதனிமுதல்வன்
பன்னெடும்பகலாற்றினனருந்தவம்பரிவின். (உ)

மறைகொணான்முகத்தொருவனாற்றியதவமகிழ்ந்து
சிறுகருந்துழாய்ப்படலைதாழ்சென்னியனறியாக்
கறைமிடற்றவேற்றந்தணன்கருணையிற்றோன்றி
யறைதிவேட்டதென்றுரைத்தலுநான்முகனறைவான். (ங)

கடவுணீற்றொளிபழுத்தசெம்மேனிமுக்கண்ண
விடையறாதுலகியற்றுவான்வேண்டுமென்னெற்றி
நடுவட்டோன்றுகநீயினித்தக்கனன்மகளாய்த்
தடமுலைக்கொடிவருகவென்றுரைத்தனன்றாழ்ந்தான். (ச)

எரிதவழ்ந்தெறிமுத்தலைச்சூலவேலேந்து
கருணையங்கடல்குறுநகைகோட்டிமென்கமலத்
தரசிருக்குநற்பண்ணவன்றியானமாற்றுழியிற்
புருவநாப்பணிற்றோன்றினன்பூவையோர்பங்காய். (ரு)

கொழுதிவண்டிமிர்கொன்றையான்றோன்றியபின்ன
ரழுதலாலவற்குருத்திரனெனும்பெயரமைந்த

துழுதுதேனினமுண்டிடுந்தாமரைக்கிழவன்
ருெழுதுமங்கையோர்பாகனை நோக்கினன் றுணிவான். (சு)

பெண்ணுமாணுமாயமைப்பினல்லாலுயிர்பிறப்பி
னண்ணயாவையுந்தோற்றுவித்தறிவறநாட்டற்
கொண்ணுமோவெனக்காட்டியவுருவிதென் றுணர்ந்தான்
றண்ணந்தாமரைமீதுறைசதுமுகக்கிழவன். (எ)

வாய்ந்தபெண்ணுருவாணுருவாய்மலர்க்கிழவ
னேய்ந்திடும்படிவகுத்திடவொன்ருெடொன்றியைபிற்
ருேய்ந்துதோய்ந்திடையரு துதோன்றியதுபேருலகஞ்
சாந்தமென்முலேதக்கனன்மகளெனவுதித்தாள். (அ)

ஏழினலங்கனிந்தேந்திளவனமுலைப்பேதை
குழைமுகம்பொதிமழைமலர்ச்சோலைதேங்கொழிக்குங்
கழனிசூழ்புனற்காசியிற்காய்கனலுமிழு
மழுவலாற்பெறவருளொடுமாதவம்புரிந்தாள். (கூ)

அருவியங்கடாக்களிற்றுரியந்தணனிலிங்க
வுருவிற்ருேன்றிநீவிழைந்ததுபெறுகவுள்ளுவப்பால்
மருவிலிங்கரின்பேரொடும்பொலிகமற்றிதனைப்
பரவியேத்துநர்விழைந்தனபரிவொடும்பெறுக. (க0)

இற்றைஞான்றினுக்கெட்டெனவுரைக்குஞான்றுன்னைப்
பெற்றதந்தையெற்கருளுகவென்றுபெட்போடுங்
கற்றைவார்குழற்பூங்கொடிக்குரைத்தனன்கரந்தான்
வெற்றியைங்கணைக்கிழவனையழலெழவிழித்தான். (கக)

தரைபிதிர்த்தெறிகவின்குளம்பூர்பரித்தக்க
னருமணிப்பொலங்காஞ்சிசூழ்படவரவல்கு
லுருவப்பூங்கொடிதன்னைமால்விடைக்கொடியுயர்த்த
பரமற்கற்றைநாட்கடிமணம்புணர்த்தினன்பரிவின். (கஉ)

உலகெலாந்தொழுஞ்சதீச்சுரன்காதையீங்குரைத்தே
னிலவுமிக்கதையுரைத்தவர்கேட்டவர்நீங்கா
வலகில்தீவினைத்துயர்க்கடற்படிந்திடாராகி
யுலைவில்ஞானவாரிதியினிற்படிந்தினிதுறைவார். (கங)

கூச-வது-சதீச்சுரன்வரலாறுரைத்தஅத்தியாயம்முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உஉஉசு.

---



தொண்ணூற்றைந்தாவது.

## அமுதேசன் முதலியவிலிங்கத்தின்சிறப்புரைத்த அத்தியாயம்.

கதிர்விட்டெறிக்குங்குழவிமதிக்கண்ணிவேய்ந்தவமுதேசன்
முதலவிலிங்கமெவற்றினையுமொழிதுமென்னமுனிகேட்ப
வதிர்தெண்டிரையிற்கவிழ்தலையசூர்மாத்தொலையவலங்குவனை
பிதிரவடிவேல்பணித்தவருட்பெருமானினிதுகூறுவனால். (க)

முன்னைப்பவத்திற்சனருவெனுமுனிவனொருவனுளனவன்றான்
பன்னற்கேள்விமறைப்பொருளின்றுறைபோய்நெறியிற்படர்கின்றோன்
பொன்னிற்பிதிர்ந்தசுணங்கணிவெம்முலையாள்பங்கன்பூங்கழல்கள்
சென்னிதாங்கியில்லறத்திற்றிறம்பாதினிதுசென்னளில். (உ)

ஓதுமறைதேர்முனிவரனுக்குவசம்பனியென்றுரைக்குமொரு
காதற்புதல்வனுளனவன்வெங்களிறுவழங்குபெருங்கானிற்
போதலோடும்பஃறலையபொறிவாளரவொன்றெயிறான்றச்
சாதல்நோக்கியவனையுடன்சென்றோர்மனையிற்கொடுசார்ந்தார். (௩)

விடங்கொப்பளிக்குந்துளையெயிற்றவெவ்வாயரவின்வாய்ப்பட்டுக்
கிடந்தபுதல்வன்றனைக்கொடுபோய்க்கிளைத்துக்கலித்தகொடிக்கரும்பு
படர்ந்துநிலவுக்கதிரெறிக்கும்பருமுத்துயிர்க்கும்வயற்காசி
யடைந்துசொர்க்கத்துவாரத்திலன்னோன்றந்தையிட்டனனால். (௪)

வெவ்வாயரவின்கொடும்பிறைப்பற்சுவட்டிற்குதட்டவீந்தோனை
யெவ்வாறழலிற்பெய்வதெனத்தந்தையுளத்தினெண்ணுதலு
மவ்வாய்வில்லத்துருவொடுமோரிலிங்கந்தோன்றுதமர்ந்தனல் [ன்
செவ்வாய்ப்புதல்வன்றுயிலுணர்ந்தான்போன்றாங்கெழுந்து துயர்தீர்ந்தன

என்னேதீவாய்க்கொடுந்தறுகட்பாந்தள்தீண்டவீங்கிறந்தோன்
கொன்னேபிழைத்ததெவ்வாறென்றெண்ணியாங்குக்குறுகுதலுந்
தன்னுருயிரிற்பிறியாவோரொறும்புவிளியவதுதாங்கி
முன்னோர்சிறுகட்பெண்ணெறும்புவருதனோக்கிமுனிகின்றான். (௬)

ஆவிநீத்தகிண்கிணிக்காற்புதல்வன்பிழைத்தவந்நிலையின்
மேவலோடுமுயிர்வாளாவீந்தவெறும்புமுய்ந்ததனாற்
சாவப்பெற்றோருய்வதிதன்றன்மையெனவாங்கோர்பிடிமண்
ணேவில்தவத்துமுனியெடுப்பவிலிங்கந்தோன்றியோங்கியதே. (௭)

உலகுவிளக்குங்கதிர்ப்பரிதிகோடியெழுந்தாலெனவோங்கி
யிலகுமிலிங்கந்தனைவழிபட்டேத்தியிதன்பேரொஞ்ஞான்று
நிலவுமமுதேச்சுரமென்னநிகழ்த்திச்சனருமுனியென்பா
னலகிலுவகைமீதூரப்புதல்வற்கொடுதன்பதியடைந்தான். (அ)

அன்றுமுதலாவவ்விலிங்கமமுதேச்சுரப்பேராகியது
துன்றுகொடியகலியுகத்திற்றோன்றுதுறையுமஃதன்றி
மன்றவுலகமுழுதேத்தவயங்குமுத்தித்துவாரத்தி
லென்றுமோங்குமெழிற்கருணேச்சுரப்பேரிலிங்கமொன்றுளதால். (கூ)

கரியமிடற்றுச்செம்மேனிக்கருணேச்சுரனைமதிவாரத்
தருளாற்கடிநாண்மலரிலைகொண்டருச்சித்தொருபோதுணவாயோர்
பருவம்விரதமாற்றுமவர்விழைந்தபெறுவார்பன்மலர்தூய்த்
தெருளால்முத்தித்துவாரேசற்றொழுவோர்முத்திசேர்ந்திடுவார். (க0)

பொருவில்சொர்க்கத்துவாரேசற்றொழுவோர்துறக்கம்பொருந்திடுவர்
கருடப்பசும்புட்கரும்பாகனைமிவாவிக்கனாயினிருந்
தருளிற்புரிந்ததவநோக்கியடைந்தசோதிரூபேசற்
பரவித்தொழுவோரொஞ்ஞான்றுஞ்சோதியுருவிற்பரிந்துறைவார். (கக)

அறைந்தவிலிங்கம்பதினன்கிற்றக்கேச்சுரனேமுதலாக
வுறைந்தவிலிங்கமோரெட்டுமோங்காரேசன்முதலாகச்
சிறந்தவிலிங்கம்பதினன்குஞ்செயிரில்சயிலேச்சுரன்முதலாய்
நிறைந்தவிலிங்கம்பதினன்குமிகரிலிலிங்கமெனவுரைப்பார். (கஉ)

அருள்கூரிலிங்கமாகியவிம்முப்பத்தாறுமத்துணையாய்
மருவவருதத்துவவுருவாம்வரதனுறையுமிவையாவுந்
தெரியவரியமறைப்பொருளாயுறைந்துமுத்திச்செலநல்கு
முரிமையதனல்முத்திநகரொனும்பேர்காசிக்குளதாகும். (கங)

மிடறுதிறந்தபசுங்கமுகின்வெள்ளிப்பாளைமடல்கிழிய
விடறுகயவாய்நெடுவாளையெழுந்துதடவுச்சினைப்பலவின்
குடமுட்கனிப்பொற்சுளைகிழிப்பக்கொழித்தபசுந்தேன்குமிழியெழுந்
தடமுற்றியகாசியையலதுமுத்திநகரந்தானுளதோ. (கச)

முன்னவரியவமுதேசன்காதைமொழிந்தோர்கேட்டோர்கள்
மன்னுஞானஞ்சிவபூசைதானந்தவமந்திரம்யோக
மின்னயாவுந்தருபலன்களெளிதினெய்திமறைநான்கும்
பன்னவரிதாய்ச்சிறந்தோங்கும்பரமனடியிற்சேர்குவரால். (கரு)

கரு-வது-அமுதேசன்முதலியவிலிங்கத்தின்சிறப்புணர்த்த
அத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-உஉஈகூ



தொண்ணூற்றுமூவது.

## வியாதன்கையும்நாவுமெழாதுநின்றஅத்தியாயம்.



அருமறைதேர்வியாதமுனிகாதையினிதறையுமெனப்
பொருவரியதவமாற்றும்பொதியவரைமுனிகேட்ப
வெரிதவழுநெட்டிலையசுடர்வேலாலெழுந்தோங்கு
வரையகடுதுளைபடுத்திமாத்தடிந்தோன்கூறுமால். (க)

இவர்விடையேற்றரனருள்கூரொண்பத்தெண்ணுயிரராஞ்
சவுனகராதியநைமிசாரணியத்துறைவோர்பாற்
குவலயமோரேழ்புகழக்கோதிலருமறைவடித்து
நவையறுநூற்கடல்கடந்தவியாதமுனிநண்ணினான். (உ)

நண்ணுமறைமுனிவரனையினிதேத்தியுளநயந்து
பண்ணுமருக்கியமுதலயாவுமிகப்பரிந்தாற்றிக்
கண்ணுதல்வானவன்போலுங்கடவுளர்மற்றுளர்கொலெனப்
புண்ணியமாதவர்கேட்பப்பொருவரியமுனிபுகல்வான். (௩)

எக்கலையுமெப்பொருளுமுறையுணர்ந்துமிழுதைபோற்
சிக்குறுமாணவமலத்திற்சிமிழ்ப்புண்டுதெருளிலனுய்ப்
பொக்கமுறுமுளத்தோடும்பூவைபோற்றிருமேனி
யக்கடவுள்பிரமமெனக்கையெடுத்தாங்கறைந்தனனால். (௪)

இற்றெனநான்மறைமுனிவனியம்புதலுநகைகோட்டிக்
கற்றதனுல்செருக்கெய்திக்கழறினனென்றுளத்தெண்ணி
யொற்றைநெடுங்குழைக்கிழவன்காசியில்வந்துதைத்திமென
முற்றுமுணர்ந்தருள்முனிவர்முதுக்குறைவாற்புகன்றனரால். (௫)

மருள்பூத்துமதிமருண்டமறைமுனிவன்முனிவரொடுந்
தெருள்பூத்துச்சிறப்பெய்துங்காசிநகர்சென்றெய்தி
யருள்பூத்தபஞ்சநதமாடிமாதவற்போற்றி
முருகூற்றுப்பசுந்துளவமுகில்வண்ணன்சீர்பாடி. (௬)

தண்டுளவமணிபூண்டுபாகவதர்தற்சூழ
மண்டுதீம்புனல்ஞானவாவியின்கீழ்ப்பானில்லா
வெண்டிசையிலுள்ளோருங்கேண்மின்களிறையாவான்
புண்டரிகக்கண்ணனெனக்கையெடுத்துப்புகன்றனனால். (௭)

அருவுருவாயேகமாயாதியாய்நிறைந்தருளும்
பொருவரியசிவனல்லாற்புண்டரிகக்கண்ணனே

பிரமமெனமயக்குற்றுப்பிதற்றுகின்றபிழையதனு
லுனைபயில்நாக்கையசையாதூமனெனமுனியிருந்தான். (அ)

அத்தலையிற்பிழைகூறியவுரெய்துமுனிவரன்பால்
மைத்தசெழும்புயலனையமணிவண்ணன்கரந்தெய்திப்
பித்தரின்யானிறையென்னப்பிதற்றியதென்மதியில்லோ
யெத்திறத்தாலெனையாளுமீசனைநீமறந்தனையே. (கூ)

முக்கண்ணன்சேவடியில்விழிமுளரிபெய்தன்றோ
சக்கரமுமலர்மகளுந்தணப்பருஞ்செல்வமுமடைந்தே
னக்கடவுளருள்சிறிதுமடையாரேற்றம்பதத்தி
லெக்கடவுள்தேவென்றுங்கேமாப்புற்றிருக்குமால் (க0)

ஊனமுறுசடமொருவனுனுற்றினன்றியாடாதால்
யானுலகமளிப்பதுவுநான்முகத்தோனியற்றுவது
மானிவருஞ்செஞ்சடையோனுட்டுவித்தலாமதனுல்
வானவர்தஞ்செயலெல்லாமரப்பாவைக்கூத்தாமால். (கக)

தண்ணிலவுமதிக்கண்ணிதாழ்சடையோன்றுள்போற்றும்
புண்ணியநற்சிவகணங்கள்பூங்கழலிற்கிடப்பதெல்லா
மெண்ணிறந்தவரிபிரமர்தலையன்றோவெனிற்சிறிது
நுண்ணறிவிலாயெனையேன்பிரமமெனநுவல்கின்றுய். (கஉ)

நின்வயிற்சேர்கொடியபிழைமொழிசெவியினேர்படலு
மென்வயிற்றினெரிதவழவுளம்வெருவியீண்டடைந்தேன்
பொன்னசலச்சிலைகுனித்துப்புரமூன்றுமழலூட்டு
முன்னவனையானறியாமுழுமுதலைப்போற்றென்றுன். (கங)

அண்ணல்மால்விடையூர்ந்தவரும்பொருளைப்பழிச்சுதற்கு
மண்ணிடந்தோயெனதுநாவழங்கவருள்வழங்கென்னக்
கண்ணினல்முனியுரைப்பக்கண்ணுதல்பேர்ச்செவியினிசைத்
தொண்ணிறகேமியங்கடவுள்விசும்பிஞெளித்தேகினனுல். (கச)

நீறணிந்தசெம்மேனிநீலகண்டனன்னுமக்
கூறியதுசெவிப்புலத்திற்குறுகுதலுமருடீர்ந்து
தேறிமுதுக்குறைவெய்திச்செழுமறைதேர்வியாதமுனி
யாறணிந்தசெஞ்சடையெம்மந்தணனையேத்துவனுல். (கரு)

மாலவன்றன்னுடலின்னுங்கரிதாகவருங்கொடிய
வாலமுண்டுதுயர்கூராதமரருயிரளித்தோனைப்
பாலனுக்காக்கூற்றுதைத்தபண்ணவனைப்பவளவரை
போல்பவனையலதுநாப்போற்றுதுபோற்றுதே. (கசு)

மண்ணகம்பொற்றிண்டோமாமறைகள்பாய்பரியாத்
தண்மதிவெய்யோனிலங்குபாண்டிலாத்தண்டுளவோ
னெண்ணிறவம்பாய்ப்புரங்களொருமூன்றுமொருங்கவித்த
கண்ணுதல்பொற்றாளன்றிக்காணுக்கண்காணுவே. (கஎ)

பாணிகரஞ்சிறைத்தும்பிபடிந்தாடுங்கொன்றையந்தார்
வாணிலவுமதிக்கண்ணிவனைந்தருளும்புரிசடையோன்
சேணமர்ந்ததேவர்மணிமுடியுமுழுதுசேர்ந்தொளிர்பொற்
றாண்மலர்க்கல்லாதுசென்னிதாழாதுதாழாதே. (கஅ)

கறையனற்பேழ்வாயுரககங்கணத்தோனெவனெழுதா
மறைமுழுதுந்தனியேத்திவழிமடுவோனெவன்கோணற்
பிறையணிந்தோன்யாவனீங்கவனல்லாற்பெட்பினொடு
மிறைவனெனவெனதுள்ளத்தெண்ணேன்மற்றெண்ணேனே. (கக)

ஆதியாய்முழுமுதலாயருவுருவாய்ப்பூரணமா
யோதுநான்மறைதெளிந்தவுபநிடதப்பொருளாகி
நாதமாய்வெறுவெளியாய்நாரணனுங்காண்பரிதாஞ்
சோதியாலயமலதுசூழாக்கால்சூழாவே. (உ0)

மையநெடுவரைபோலுமழைமதமால்கரியுரித்துச்
செய்யதிருமேனிதனிற்போர்த்தருளுஞ்சேவகன்ற
னையசெழும்பொற்கமலமலர்போலுமடியினல்லாற்
கொய்மலர்கடூவிநின்றுகூம்பாக்கைகூம்பாவே. (உக)

வே று.

என்றுகூறிமுனிவரனேத்தலுங்
கொன்றைவேணியனின்னருள்கூர்தரத்
துன்றுபாவந்தொலைந்தவனுங்குகை
மன்றமுன்னையதாகவழங்கிற்றால். (உஉ)

தண்டுழாய்மணிமாலைதணந்தொளிர்
கண்டிகைத்தொடைசூடிக்களிப்பொடும்
புண்டரங்கள்புனைந்துசிவனடித்
தொண்டர்தாண்மலர்சூடினனுடினன். (உங)

அன்றுதொட்டெம்மமலனுக்கன்பனாய்
மன்றவோங்குகண்டாகனன்வாவியிற்
றுன்றுதண்கதிர்ச்சோதியிலிங்கமாங்
கொன்றமைத்துள்ளுவந்தருச்சித்தனன். (உச)

இன்னவீசனற்காதையியம்பினர்
துன்னுபாதகங்கோடிதொகுப்பினு
மன்னயாவுந்தொலைத்தரன்சேவடி
மன்னிவாழ்குவரென்னவழங்கினுல். (உ௫)

௯௬-வது-வியாதன்கையும்நாவுமெழாதுநின்றஅத்தியாயம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உஉ௬௪.

---

தொண்ணூற்றேழாவது.

## வியாதன்சாபமிட்ட அத்தியாயம்.

விடைக்கொடியுயர்த்தோன்றொண்டர்க்கன்பனும்வியாதன்முன்னங்
கடக்கருஞ்சாபங்காசிக்கிடுமெனக்கரைந்தாயவ்வா
றடக்கருமுவகையேற்கின்றறைகெனமுனிவன்கேட்பப்
படைக்கடலுடைக்கும்வைவேற்பண்ணவனுரைக்குமன்றே (௧)

அடைபுடைபொதிந்துதீந்தேனரும்புபூங்கரும்புவேலி
படர்வயற்காசிதன்னிற்பாயொளியிலிங்கமொன்று
கடவுணுன்மறைவியாதனமைத்தநாள்முதலாய்க்காமர்
சுடர்மணிகன்னிகைப்பூம்புனலில்வைகறையிற்றோய்ந்து. (உ)

எறிசுடர்ப்பணிலமுத்தமீர்ங்கதிர்மதியென்றெண்ணி
யறைபுனற்றுறைதோறும்பலரும்பறவெடித்துமன்ற
னறவுகொப்பளிக்குங்காசிநகரில்வீற்றிருக்குமுக்கட்
கறைமிடற்றெந்தைசெம்பொற்கழலிணை கருதியேத்தி (௩)

பத்தியிற்குயின்றமுத்தம்பனிச்சுடரொறிப்பவோங்கு
முத்திமண்டபத்தின்வைகிவழிபடுமுனிவர்கேட்ப
மைத்திருடேங்குசோலைமதிமுகந்துடைக்குஞ்செவ்வி
வித்தகன்மருவுகாசிவியன்சிறப்புரைக்குமன்றே. (௪)

கூன்பிடர்ப்பவளச்செந்நெல்கொழுமடற்கமுகினேங்கி
வான்படர்வயல்சூழ்காசிமாநகரடைந்தபோதே
தேன்படுமொழியாள்பங்கன்சீறடிசேர்வனென்னுத்
தான்படர்நெறியினீங்கித்தவறிழைத்திடுதலாகா. (௫)

பிறன்மனையினிதுவேட்டல்பிறன்பொருள்கவர்ந்துகோடல்
தெறுதொழில்முதலவாயதீவினைபுரிதலாகா
விறுவதுகாசிதன்னில்வேண்டுமென்றெண்ணியாவி
மறலிதன்றூதர்கொள்ளவலிதினில்வழங்கலாகா. (௬)

மற்றையதலத்திலிங்கங்கோடிமேல்வழங்குபேறு
முற்றுநீர்க்கங்கையோங்குகாசியில்முடிவிலாத
கற்றையஞ்சுடரிலிங்கமொன்றினைக்கண்டலோடும்
பெற்றுவிண்ணவர்களேத்தப்பெறலரும்வீடுசேர்வார். (எ)

முயலடைகிடக்குந்திங்கள்மோலியவிலிங்கமொன்றைப்
பயின்மலர்தூவியோர்காற்பழிச்சிலெண்ணிருமாதான
மியைவுறக்கொடுத்தபேறிங்கெய்துமைந்தமுதத்தாலாட்
டயர்பவர்புரவிமேதமாற்றியபயனுண்டாவார். (அ)

குலைபொருதலையுந்தூநீர்க்குடம்படுகுரும்பைத்தெங்கி
னிலைதலைவிரிக்குங்கானமிருசுடர்தடுக்குங்காசி
யலர்கதிரிலிங்கமொன்றிற்கோர்பொழுதடிசிலேற்றின்
மலர்தலையுலகில்வாசபேயமாற்றியதைமானும். (கூ)

கொலைத்தலைச்சூலவெள்வேற்குழகனுக்கருளினோடுங்
கலைத்தலைத்திங்களன்னகவிகைவெண்கவரிசங்க
நலத்தகுகொடிகளின்னநல்கினோர்குடையினீழ
லலைத்தலைசுமந்தவாழியகனிலமுழுதுமாள்வார். (க0)

பாவடிப்பணைக்கைவேழமுரித்தருள்பரமன்செம்பொற்
சேவடிப்போதிற்றூவியேத்துவான்சிறந்தவந்தண்
பூவலர்சோலைவாவியின்னனபுரிவித்தீந்தோர்
யாவரங்கவர்தம்வீட்டிற்கற்பகமிருக்குமன்றே. (கக)

படுமணிமிடற்றசேதாமடிசுரந்தொழுகுபாலிற்
கடவுணல்லிலிங்கமாட்டிற்பாற்கடற்றுயில்வர்கங்கை
புடைகிடந்தலைக்குந்திங்கட்புரிசடையண்ணல்கோயில்
வடிவுறப்புனைந்தோரோங்குகயிலைமால்வரையின்வாழ்வார். (கஉ)

எண்ணிருதானமற்றைத்தலங்களினீதறன்னில்
மண்ணமைமுழவந்துஞ்சாவளங்கெழுகாசிதன்னில்
நண்ணியோர்யோகிக்கீதனன்றெனவுரைத்தான்மீட்டும்
புண்ணியவிரதம்யாவுப்புகலெனப்புகலுமன்றே. (கங)

ஒருபகலுண்டல்கங்குலுண்ணல்யாசிதம்நல்லுண்டி
வரைகுதல்நான்கும்பாதகிரிச்சரம்வடந்தருப்பை
யரசுநல்லத்திவில்லமவற்றிலொன்றோர்நாள்தோய்த்து
தருபுனல்நுகர்தல்பன்னகிரிச்சரமென்பர்தக்கோர். (கச)

ஓர்பகலோரொன்றாகவுவந்துபிண்ணாக்குத்தீம்பால்
மோர்புனல்பொரிமாக்கோடல்முறையினோர்வைகலுண்டி

தீர்தலின்நெறியில்யாதுந்திறம்பிலராற்றினுரு
மேர்பெருசவுமியப்போக்கிரிச்சரமென்பமன்னோ. (௧௫)

மூன்றுநாள்பிடியோரொன்றுமுறைபடவருந்திமுன்னு
ளான்றவவ்வுணவுதீர்தலதிகிரிச்சரமதாகு
மேன்றுயரிருபத்தோர்நாள்பால்குடித்தினிதிருத்தல்
சான்றவர்கிரிச்சராதிகிரிச்சரமென்பதாமே. (௧௬)

மும்மைநாட்காலையுண்டல்மும்மைநாளிரவருந்தல்
மும்மைநாட்கிடைப்பிற்றுய்த்தல்மும்மைநாளுணவுதீர்தல்
மெய்ம்மைசேர்பிரசாபத்தியகிரிச்சரமுணவுவிட்டிங்
கம்மபன்னிருநாள்வைகல்பார்க்கிரிச்சரமதாமால். (௧௭)

கோசலமோர்நாளோர்நாள்கோமயமோர்நாள்தீம்பால்
மாசில்வெண்டயிரோர்நாள்நெய்யொருபகல்மற்றையோர்நா
ளாசறுதருப்பைதோய்த்தபுனலுணலகற்றலோர்நா
ளேசறவாற்றிற்சாந்தபனகிரிச்சரமென்பாரே. (௧௮)

கோசலமுதலவாகக்கூறியவிவற்றிலோரொன்
றூசறவேழ்நாளாற்றினதன்பெயர்தவத்தின்மேலோர்
பேசருமுயர்மாசாந்தபனகிரிச்சரமாம்பெட்புற்
றோசைபோமுனிவகேட்டிசாந்திராயணமென்றோதும். (௧௯)

ஒடிவில்சுக்கிலபக்கத்திறுதியாய்த்தொடங்கியோரோர்
பிடிகுறைத்தபரபக்கமுதலவாய்ப்பெட்பினோரொன்
றடைவினிலேற்றியிவ்வாறருந்திமுப்போதுநீரிற்
படிவதுமேலோர்சாந்திராயணமெனப்பகர்ந்தார். (௨0)

சுக்கிலபக்கமாதிதொடங்கியொன்றேற்றிமற்றைப்
பக்கமேமுதலோரொன்றுகுறைப்பினும்பகர்வரப்போர்
புக்ககாலையினுங்கங்குற்போதுநன்னன்குபிண்டந்
தக்கவாறருந்தல்வாலசாந்திராயணமதாமால். (௨௧)

தினமுமுக்கவளமுண்டலல்லதையோமசேட
மினிதினிற்றுய்த்தலின்னசாந்திராயணமாமென்பர்
புனேநெடுவாய்மைகல்விஞானத்தாற்பொருவிலாக்கை
வினையறும்மனம்பூதான்மாப்புந்திதான்விமலமாகும். (௨௨)

மேவருசித்தங்காசியடைந்தல்லால்விமலமாகா
தாவயினுறைதல்முத்தியாமெனவியாதன்றன்பொற்
சேவடிபணிவோர்யார்க்குஞ்செப்பினன்பலியேற்றுண்டு
காவணமிலங்குமந்தண்காசியினுறையுநாளில். (௨௩)

நீர்முகந்தளந்தகொண்டல்நீனிறவண்ணன்காணு
வார்கழற்புனிதன்செம்பொன்மணிக்குடம்பதித்ததன்ன
வேரிளவனமென்கொங்கையிலவிதழ்ப்பவளச்செவ்வாய்
கார்புரைகரியகூந்தற்கவுரியைநோக்கிக்கூறும். (உச)

மறைவளம்பழுத்தசெந்நாப்புலமையவியாதன்மன்னும்
நெறியுடையன்புதேர்தல்வேண்டுநீயேகியன்னோர்க்
குறுபலிவழங்காதிங்ஙன்விலக்கெனவுலகமீன்ற
பிறைகிடந்தனையநெற்றிப்பெய்வளைவிலக்கினாளே. (உரு)

விரிகடலனையகேள்விவியாதமாமுனியுமற்றை
யருமறைபயில்வோர்யாருமகனகர்மனைகடோறு
மொருபகலந்திகாறுமுறுபலிபெறாதவாற்றால்
பெருகுவெம்பசிநோய்பற்றப்பேதுறவோடும்வைகி (உசு)

மற்றையஞான்றுமையமேற்பவைமனக்கொண்டேகி
யற்றைஞான்றினுமுள்ளாவியலமரவையம்யாதும்
பெற்றிலனதனாலோதுஞ்சிறுவரைப்பெரிதுநோக்கி
யுற்றதோர்குறையுண்டாங்கொலிந்நகர்க்குரைமினென்றான். (உஎ)

அருமறைவியாதற்போற்றியடிகள்கேட்டருள்கவோங்கித்
திருவநீணகரம்யாவுஞ்செல்வமுஞ்சிறப்புமிக்க
வொருகுறைகளுமின்றென்னமறைபயில்சிறுவரோத
வருபசிபிணிமீதூரவயிறெரிதவழ்ந்துபொங்கி. (உஅ)

தெறுசினந்தலைக்கொண்டோங்கவிருநிதிசிறந்தமுத்தி
யறிவருங்கல்விமூன்றுதலைமுறையகல்கவென்று
மறைபயில்வியாதன்காசிநகரினைவைதுகையி
னுறுபலியேற்பக்கொண்டவோடும்விட்டெறிந்துபோனான். (உகூ)

ஈற்றுளைந்தலறுஞ்சூற்சங்கீன்றவெண்டாளக்குப்பை
பாற்றிரைக்கதிர்கள்கான்றுபாயொளிபரப்புமந்தண்
சேற்றகல்வயல்சூழ்காசிநகரினைமுனிந்துசெல்லு
மாற்றல்சால்முனிமுன்ஞாலமளித்தருளன்னைசென்றாள். (௩0)

கடைந்தசெப்பென்னவீங்குகதிர்முலைமுனிவன்பாற்சென்
றடைந்தெனதன்பனுண்ணனதிதிபூசனைசெய்தல்லால்
தொடர்ந்தபேருவகையுள்ளந்தூண்டவெம்மையமேற்றுப்
படர்ந்திடுகென்னவோடும்பழமறைவியாதன்கூறும். (௩க)

பற்பலகலையுமெம்பாற்பயிலுநராளவிலோர்யா
மற்றவர்தம்மோடன்றியருந்திலமாதேயென்ன

வற்புமீதூரயாருமடைதிரென்றுரைத்தலோடுந்
தற்பதந்தொழுமாணுக்கர்தம்மொடும்வியாதன்சார்ந்தான். (௩உ)

சேர்தலுமமுதமன்னதீஞ்சுவைடிசிலுள்ளத்
தார்வமோடுவந்துநல்கவருந்திநற்கலன்வெண்டேசு
தார்நறுந்தெய்வச்சாந்தந்தரவணிந்தியல்மாணுக்கர்
யாரொடுமுவகைபூப்பமுனிவரனேகுமேல்வை. (௩௩)

உலகெலாம்பூத்தவுந்தியொருதனிமுளரிப்பூவை
மலர்புரைவண்ணன்காணுவரதனோர்மறையோனாகிச்
சிலைநுதலேழையோர்க்குத்திருத்தகுமறனேதென்னப்
பலகலைமுனிபாற்கேட்டியெனவவள்பகர்தலோடும். (௩௪)

அருந்ததிக்கற்பினல்லார்க்கறனுயிர்க்கேள்வருள்ளம்
பொருந்தியவேவல்செய்தலெனமுனிபுகலச்செவ்வி
திருந்திழையனையாள்யார்க்கும்பொதுவறன்செப்புகென்னக்
கருந்தடங்கண்ணிகேட்டியெனமுனிகழறுமன்றே. (௩௫)

வெருவரமொழிந்திடாமைவெகுளுதல்செயாமைதானம்
வருதவங்கருணைசிந்தைதுணிந்துகூறுதல்மற்றொன்றிற்
கருதரும்பொறுமையின்றித்தன்னுயிர்போலக்காத்தல்
தருமமென்றுரைப்பவாதியந்தணன்சாற்றுமன்றே. (௩௬)

இன்னனதருமமென்னவிசைத்தனையிவற்றேதேனு
முன்னிடையுளதேற்சாபமுரைத்தவாறென்னையென்ன
வன்னதுகருதான்சாபமிடுமெனிலவன்பாலந்தப்
பன்னருஞ்சாபஞ்செல்லுமெனமுனிபகர்ந்தான்மன்னோ. (௩௭)

பகர்தலுமினையோர்முத்திப்பதிதனிலுறைதநீதா
மகல்கநீயெனவியாதற்கருள்புரியமலன்கூறப்
புகலருங்கொடியதீமைபரிந்தனன்பொறுத்திதண்ணென்
வகிர்மதிபுனைந்தவேணிவரதவென்றடியில்வீழ்ந்தான். (௩௮)

முளரிபோல்முகத்தநல்லார்முலைதிமிர்ந்துகுத்தசாந்த
வளறுகாலிழுக்கச்செல்லாதரசிளங்குமரர்வீழும்
வளமலிமறுகுசூழுங்காசிவாளவனையுள்ளந்
தெளிவுறப்பதினுன்கெட்டாம்பக்கமீங்கிவற்றிற்சேர்ந்து. (௩௯)

தொழுதனைபோதியென்னத்தூய்ச்சடையண்ணல்கூறி
மழவிடையிவர்ந்துவெற்பின்மயிலொடுஞ்செலவியாதன்
விழைதகுகடவுட்டெண்ணீர்க்கங்கையின்மேற்பாலோங்கு
மொழுகொளிபயிலும்லோலார்க்கவனுறையிடத்தின்கீழ்பால். (௪0)

க்ஷேத்திரவளமுந்தீர்த்தத்தின்கதையுமுரைத்த உகூஎ அத்தியாயம்.

ஆரமுற்கடவுள்வைகுந்திசையினின்றளவுநீங்கான்
சீர்மலிகாசிநோக்கியுறைந்தனன்சிந்தைவேட்ப
யாரிதுபயின்றோர்கேட்டோரவரெலாமிமையோரேத்தச்
சார்வரிதாகியோங்குமுத்தியிற்சார்வரென்றான். (சக)

கூஎ-வது-வியாதன்சாபமிட்ட அத்தியாயம்-முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-உகூ0டு.

---

தொண்ணூற்றெட்டாவது.

## க்ஷேத்திரவளமுந்தீர்த்தத்தின்கதையுமுரைத்த அத்தியாயம்.

---

எவ்வமில்காசியுறைதருமிலிங்கந்தீர்த்தமற்றெத்துணையென்ன
வவ்வியமவித்தமுனிவரன்கேட்பவழலுமிழ்நுதல்விழிக்கடவுள் [த்
கொவ்வையங்கனிவாய்வரைமகட்குரைத்தவண்ணம்யான் கூறுவலென்ன
தெவ்வடுகுருதிவேல்வலனேந்துசேவலங்கொடியவனுரைப்பான். (க)

தீர்த்தமென்றேதுபெயரிலிங்கத்தின்சிறப் புடைப்பெயர்சிவன்முதலோர்
பூத்தசெங்கமலக்கையினிற்றொடலால்புனலுமப்பெயரொடும்பொலிந்த
தேத்தருங்காசிநகரில்மாதேவவிலிங்கமேமுதலவாந்தீர்த்தம்
பார்த்தவருவக்குநான்கருள்கூபமதன்வடபாலிலொன்றுளதால். (உ)

ஆங்கதன்குடபாற்கங்கையாளுருவோடமருமாதேவுறைகீழ்பாற்
றீங்கறுகயிலேயமைந்தநல்லிலிங்கஞ்சிறப்பின்மேவிடுமதன்றென்பாற்
பூங்கதிரொறிக்குந்திங்களங்கண்ணிப்புரிசடைத்ததீச்சுரன்பொருந்து
மோங்கொளியுருவினெடுமதன்றென்பாலத்திரீச்சுரனுவந்துறையும். (ங)

புனிற்றிளஞ்சேதாப்பொருந்துழியமைத்த பொங்கொளியிலிங்கத்தின்
கீழ்பாற்,கனற்றுவெம்பொறியுமிலிங்கமொன்றுறையுங்கருணைகூர்ந்தாங்
கதன்குணபால்,வினைத்துயரகற்றிவீடருள்சதுர்வேதேச்சுரமுறையுமற்ற
தன்பாற், கனைத்துவண்டிமிருந்தண்டுழாய்மவுலிக்கடவுணல்லிலிங்கமொ
ன்றமரும். (ச)

தீவிர்சுடரொறிக்குமைம்படைசுமந்தவாதிகேசவற்குறக்கீழ்பாற்
பவவினைக்கடலுட்புகாதருள்சங்கமேச்சுரன்பரிவின்வீற்றிருக்கும் [ம்
புவனகோடிகளுந்தொழுவதன்குணபாற் புகழ்விராதேச்சுரன்பொருந்து
பவளமுத்துயிர்க்கும்வரணைமாநதியின்பூங்கர்குந்தீச்சுரனுறையும். (ரு)

குவிமுகிழருக்கங்கண்ணிசூழ்வேணியோங்குகுந்தீசுரன்வடபாற்
றவழ்திரைமுத்தங்கொழித்திடுகபிலவாவிபூம்புனலொடுதயங்குஞ்
சுவைகனிந்தமுதிற்பழுத்தவந்தீம்பாற்சுரபிமுன்பழிச்சியவிலிங்க
மூவகையினுறையுமதன்வடக்கனசூயேச்சுரவிலிங்கமொன்றோங்கும். ()

மற்றதன்கீழபாலருள்தருசதுர்வினாயகன்மங்குழ்சிறந்திருக்கு
முற்றதன்மேல்பால்விளங்கொளியிரணியேச்சுரமுளததன்மேல்பால்
வெற்பெனவோங்குமுயர்சினகரத்துவிளங்குமுண்டீசுரவீச
னற்புடனுறையுங்கோப்பிரோரகத்தினயல்விடபேச்சுரனமரும். (எ)

மறைமுதலறியாதொளிர்மகதேவலிங்கத்தின்மேற்றிசையிலங்கு
மறைகடல்வயிறுபுழுங்கமாட்டியவேலாதிகங்தேச்சுரனுறையும்
பெறலருமுத்தியருள்விசாகேசன்பெட்பொடுமவ்வுழியுறையு
முறையுமத்தலையிற்கறைமிடற்றணிந்தநயிகமேச்சுரனுவந்துறையும். ()

நந்தியேமுதலகணமினிதமைத்தநளிகதிர்பூத்தொளிரிலிங்கம்
புந்தியினுணர்ந்தாங்கித்துணையென்னப்புகலரிதவ்வுழிச்சிலாதன்
சிந்தையினன்புகனிந்ததன்பெயராற்செய்தவோரிலிங்கமுண்டன்பால்
வந்தனைபுரிவோர்க்கினிதருள்வழங்குமாணியாக்கேச்சுரன்மருவும். (கூ)

அரவகங்கணத்தவட்டகாதேசமனையதன்வடக்கதன்வடபால்
பிரசனவதனேச்சுரமதன்பாலிற்பிறங்குநீர்வாவியொன்றுளதாற் [யா
குறைகடல்குடித்துத்தேக்கெறிந்தெழுந்த கொண்டல்போல்மேனியனறி
விரிசுடர்ப்பிழம்பாமித்திராவருணவிலிங்கமத்தலையின்வீற்றிருக்கும். ()

அலங்கிலைச்சூலவேல்வலனுயர்த்தவட்டகாதேச்சுரற்கருளா, லிலங்கு
தென்மேல்பால்விருத்தவாதித்தேச்சுரமுளதிசைத்தமற்றதன்பால், வல
ங்கொள்பேராழிவலனுயர்கிருஷ்ணேச்சுரன்வதிந்திடுமதனுழையில், நல
ங்கிளரருமாதவம்புரியாக்கியவர்க்கநல்லிலிங்கநண்ணுறுமால். (கக)

பேசியவதன்பாற்பிரகலாதேசன்பிறங்குமாங்கதனுழைப்பெட்பின்
மாசறுஞானநெறியருள்வயிரோச்சுரமுறுமதன்வடபாலி
லோசையோடியபேருவகைகூர்வலீசமுளததன்பால்வருணேச
மாசறவிளங்குஞ்சந்திரேச்சுரன்பால்வயங்குவிஸ்வேச்சுரனமரும். (கஉ)

அறைந்ததன்றென்பால்மதிமுகிழணிந்தவவிர்சடையண்ணல்வீரேசஞ்
சிறந்திடுமதன்பால்விகடையென்றுரைக்குந் தேவியும்பஞ்சமுத்திரையெ
றுறைந்தபீடமுமாங்குண்டதன்வடமேற்குயர்சகரேச்சுரமோங்கும் [ன்
பிறங்கியவதனின்றென்குணபுலத்திற்பெட்பினுளீச்சுரன்வதியும். (கங)

மல்குநீர்க்கங்கைபுனைந்தகாளீசன்சேர்ந்தனவடபுலமதனிற்
கொல்சினவடிவேற்சுக்கிரீபேசங்குறுகியதாங்கனுமேசம்

## க்ஷேத்திரவளமுந்தீர்த்தத்தின்கதையுமுரைத்த ௨௯௯ அத்தியாயம்.

நல்வினையளிக்குஞ்சாம்பவதீசநண்ணியகங்கைமேல்கரையி
னெல்லொளிக்கதிரோன்பல்லுகவடர்த்தவச்சுவனேசமெய்தியதால். (௧௪)

மற்றதன்வடபாற்பக்கிரகிருதமடுவுளததனின்மேற்றிசையிற்
பற்பலகோடியமரர்நின்றேத்தும்பத்திரேச்சுரமினிதுறையு
முற்றதன்வடமேற்கருளுபசாந்திசிவமுறைந்துளததன்வடபாற்
கற்பகோடியினுமொழிவருஞ்சீர்த்திச்சக்கரேச்சுரன்கரந்துறையும். (௧௫)

சக்கரேச்சுரற்குவடபுலமதனிற்சக்கரகாதமென்றுரைக்கப்
புக்கநல்வாவியமர்ந்திருவினையும்போக்குமற்றதன்வடமேல்பாற்
செக்கர்வான்பூத்தவிளநிலாமவுலிசிறந்தசூலேச்சுரஞ்செயிரில்
முக்கணெம்பெருமான்வடிவமாஞ்சூலவாவிமென்பூம்புனல்முழங்கும். ()

நண்ணருஞ்சூலவாவியின்கீழ்பால்நாரகேச்சுரமுளததன்பால்
புண்ணியர்சாருங்குண்டமொன்றுளதுபுகன்றவாவியின்வடமேல்பால்
விண்ணவர்மகுடகோடிகளிறைஞ்சும்விக்கினேச்சுரமும்வானதியி
னுண்ணிறைநெடுநீர்விக்கினகரமென்றுரைத்திடும்வாவியுமுளவால். ()

அலங்கொளிவிரிக்கும்நாரகேச்சுரமும்நாரகுண்டமுமதன்வடபா
லிலங்கிடுமெறிநீர்வரணையங்கரையிலியல்வரணேச்சுரனுறையும்
நலங்கெழுமதன்மேற்குயர்சயிலேசனண்ணுறுமாங்கதன்றென்பாற் [ம்
பொலங்கெழுகுடுமிநெடுமதிற்கோயிற் பொலிந்தகோடீச்சுரன்பொருந்து

தீம்புனல்பெருகித்திரைபொருகோடிதீர்த்தமாங்குளதுதென்கீழ்பாற்
பாம்புடனெளிப்பப்பஃறலைத்தாங்குமசானதம்பமுமுளததன்பாற்
காம்பிசைகனியச்செய்யவாயமைத்தகண்ணனேத்தருங்கபாலேச
னேம்பலினுறையுங்கபாலமோசனமென்றியம்புதீர்த்தமுமவணியையயும்.(

அரும்புசாய்த்தொழுகுநாண்மலர்ப்பசுந்தேனலம்புமங்காரகதீர்த்தம்
விரும்பினர்க்கருளும்விசுவகன்மேசம்விளங்குமாங்கதன்வடபாலில்
வரும்பவந்தொலைக்குஞ்சோதிஞானேசமருவிடுமன்னதன்றென்பாற்
கரும்பிமிரிதழிபுனைமகாகுண்டேச்சுரமொளிபெருகிடத்துளங்கும். (௨௦)

இலங்குமங்கேசிமோதகமென்னமோட்டராமுடியினின்றெழுந்த
வலங்குநீர்க்கூபமொன்றுளததன்பாலருண்மகாமுண்டையென்றேதும்
வலம்படுகுருதிச்சூலியாங்குறையுமவ்வழிக்கட்டுவாங்கேசன்
விலங்கிவில்லுமிழுமுயர்பொலங்கோட்டுச்சினகரமேவிடுமன்றே. (௨௧)

தூங்கிருள்விழுங்குவிரிசுடர்ப்புவனேச்சுரம்புவனேச்சுரகுண்ட
மாங்குளவிமலேச்சுரமுயர்விமலகுண்டமென்றுண்டதன்றென்பா

லோங்குபேருவகைபுரிதரும்பிருகுகோயிலுமுளததன்றென்பாற்
றுங்கருந்தவத்துக்கபிலநன்முனிவற்கருள்புரிசனீச்சுரன்மேவும். (௨௨)

அவ்வுழிக்கபிலேச்சுரமறைமுனிவரருந்தவம்புரியுமோர்குகைமற்
றெவ்வமிலச்சோதகமுளதச்சோதரியினிதிருந்ததன்வடபால்
வெவ்விடம்பழுத்துக்கனிந்தகார்மிடற்றுவெற்றுநாகேச்சுரமேவுஞ்
செவ்விசேர்கவுத்துவேச்சுரன்பாங்கர்ச்சங்குகன்னேச்சுரன்சிறக்கும். ()

சங்குகன்னேசன்மணிநெடுங்கோயில்வாயிலிற்றங்ககோரேசம்
பொங்குதண்கடவுட்புனல்கெழுமகோரதீர்த்தம்வான்புகழ்தமனேச
மங்கண்மாஞாலந்தொழுகருப்பேசமிவையுளவன்னதன்றென்பால் [யும்
மங்குல்வாய்துடைக்குங்கொடிநெடுங்கோயிலுருத்திரேச்சுரமகிழ்ந்துறை

உருத்திரவாசகுண்டமுமாங்கணுளதுதென்மேற்றிசைமுனிவ
ரருத்தியிற்போற்றுங்காலநல்லிலிங்கமமர்ந்ததவ்விலிங்கத்தின்முன்னர்த்
திருத்தகவிறந்தோர்க்குறுகடன்கழிக்குந்திகழ்பிதிர்கூபம்வைதரணி
மருக்கமழ்வாவியியாழவீச்சுரங்காமேசமாகுண்டமும்வயங்கும். (௨௫)

ஒழுகொளிச்சூலமேந்தியகாமேச்சுரனினிதுறைவதன்கீழ்பால்
விழியருள்கொழிக்குமியல்நளகூபரேச்சுரமேவியதாங்குப்
பழவினைப்பவத்தின்வேரறுத்தருள்கூர்பாவனகுண்டமொன்றுளது
தொழுதகுநளகூபரனுழைச்சந்திரசூரியவிலிங்கம்வைகியதால். (௨௬)

அரிகுரற்பகுவாய்வலம்புரியலம்புமாழ்கடலகடுளேந்தீன்ற
விருசுடரிலிங்கமதனுழையத்தகேசிசித்தேச்சுரம்யாண்டும்
பரவுமண்டலேசமறைதொழுசவனேச்சுரஞ்சனகேச்சுரம்பரத்திற்
றெரிவருசனதேச்சுரஞ்சனற்குமாரமிவையெலாஞ்சிறந்துவீற்றிருக்கும்.

அன்னதன்றென்பாலாகுதீச்சுரம்புண்ணியேச்சுரமழிவருஞ்சீர்த்தி
மன்னுமாண்டவியவாவிகுண்டேசம்வயங்குசண்டேச்சுரமருவும்
பன்னருமறைகடுணிவருகபாலேச்சுரமதன்றென்றிசைபயிலுஞ் [கும்
சொன்னதன்றென்பாற்றினைபொருநெடுநீர்க்குண்டமோர்மூன்றருள்சுரக்

பத்துநூறடுத்தபருமடன்முளரித்தமனியப்பொகுட்டின்மேற்பயிலு
மெய்த்திருவமைத்தவிலிங்கமுமாங்குமேவியதத்தலந்தனக்குச்
சித்திகூர்சொர்க்கத்துவாரமென்றுரைப்பரன்னதன்றென்புலமதனில்
முத்திகூர்காயத்திரியொடுஞ்சாவித்திரிப்பெயரிலிங்கமொய்த்துளவால். ()

கலைபொருநீத்தமடைதிறந்தொழுகுங்கடவுண்மச்சோதரிக்கணாயி
னெருதனிச்சுடராஞ்சத்தியதபேசனுக்கிரேச்சுரனுவந்துறைவர்
பரிபவந்துடைக்குமுக்கிரகுண்டமொன்றதன்றென்றிசைபயிலும்
பொருவருமதன்மேற்குயர்கரவீரேச்சுரமருள்பூத்தினிதிருக்கும். (௩௦)

# க்ஷேத்திரவளமுந்தீர்த்தத்தின்கதையுமுரைத்த கூாக அத்தியாயம்.

மரகதநிறத்தபாசடைத்துளவமாலைதாழ்சென்னியனறியா
விரிசுடர்க்காவிகரேச்சுரன்கோயில்மேற்புறத்தருண்மரிகேச
னெரிதவழ்குடுமிப்பரிதிநெட்டிலைவேலிந்திரத்துய்ம்முனனிருப்பர்
பரவதன்மேற்பால்சந்திரேச்சுரனுஞ்சந்திரகுண்டமும்பயிலும். (கூக)

ஆரமூற்புரவிவேள்விநூற்றுமிந்திரேச்சுரனுறைவதன்பால்
வார்சினைச்சங்கமீற்றளைந்தாரம்வழங்குகாற்கோடகவாவி
சேர்தரும்விளங்குதருமசண்டேசஞ்சிறந்திடுமேற்றிசைத்தென்பால்
வேரியங்கமலக்காடுசூழ்பகுவாய்விரிபுனற்குண்டமொன்றுளதால். (கூஉ)

அதனின்மேற்காக்கினீச்சுரங்கீழ்பாலவிரொளிவாலசந்திரேசம்
பிதிர்நெடுங்கூபமுளவதன்மேல்பால்பிறங்குசித்தேச்சுரங்கீழ்பால்
மதிதவழ்கோயிலுருத்திரேச்சுரஞ்சேர்விருத்தகாளேச்சுரமருவு
முதுதிரைபுரட்டிமுழங்குநீர்காலோதகமதன்முன்னரொன்றுளதால். ()

செந்தசைப்புலவுச்சூலவேற்காலேச்சுரமுறையிடத்தன்றென்பால்
வெந்திறற்றக்கேச்சுரமிருத்தேசமேவிடுமாங்கதன்மேல்பா
லந்தகேசுரமீங்குரைத்ததன்றென்பாலத்திபாலேசமற்றதன்பால்
நந்தலிலயிராவதேச்சுரமயிராவதநெடுவாவிநண்ணியதே. (கூச)

மாதரீச்சுரஞ்செந்தேச்சுரமாங்குவயங்கும்வன்மீச்சுரஞ்சிறந்த
மேதகுகுண்டமுயர்பிருங்கேசம்வயித்தியேச்சுரமடுவியப்புற்
றோதுதன்மந்திரேச்சுரம்வளர்தன்மந்திரமடுவரிகேசந்
தீதில்மாகாளகுண்டத்தின்வடபாற்சிறந்துவீற்றிருந்திடுமன்றே. (கூ௫)

துங்கநாமத்தின்றென்புலஞ்சிவேசந்துளங்கிடுமாங்கதன்றென்பாற்
றங்கியவயிரவேச்சுரநந்தீச்சுரமொடுவயிரவகூப
மங்கதன்மேற்குப்புகழ்வியாதேசம்வியாதநல்வாவியுமமர்ந்த
பொங்குநீர்க்கண்டாகன்னனல்வாவிபுகன்றதன்மேற்றிசைபொருந்தும்.()

அனையதன்பாங்கர்சந்திரசூடேசனமருமற்றதனுழைமருவும்
பனிவருகமலமலராறுநெடுநீர்ப்பஞ்சசூடாசலவாவி
வனைகுழற்கவுரிகூபமுமதன்மேற்குள்ளதுமற்றதன்வடபால்
வினையறுஞ்சோககூபமுமந்தாகினிநெடுவாவியும்விளங்கும். (கூஎ)

மற்றதன்வடபால்விச்சுவதேவேச்சுரன்வருமத்தியமேசன்
கொற்றவைவாவிபத்திரகாளீசன்குருதிவேல்வீரபத்திரேச
னுற்றினிதிருப்பரதன்வடபுலத்திற்புண்ணியகூபமுண்டதன்மேற்
கற்றமில்சீர்த்திச்சவுனகவாவிசவுனகேச்சுரமினிதமரும். (கூஅ)

சவுனகேச்சுரற்குத்தென்றிசைக்கஞ்சுகேச்சுரஞ்சார்ந்திடும்வடபா
லவிரொளிபரப்புமுயர்மதங்கேசமமர்ந்திடுமதன்வடமேல்பாற்
பவவினைதுடைக்குமுனிவரரமைத்தவிலிங்கமற்றளப்பிலபயிலும்
நவையறுமதங்கேச்சுரனுழைத்தென்பால்பிரமார்த்திரேசநண்ணியதே. (

தென்புலத்தவர்களமைத்திடுமிலிங்கமளப்பிலவாங்குளதென்பால்
மன்பெருந்தவத்தோரேத்துசித்தேசஞ்சித்தநற்கூபமும்வயங்கு
மன்புறுவியாக்கிரேச்சுரமதனின்குணக்குளதன்னதின்றென்பால் [ம்
பொன்பழுத்தென்னப் புரிசடைச்சேட்டேசுரமுறைந்துலகெலாம்புரக்கு

சேட்டிளங்கொன்றைபுனைந்தசேட்டேசனமர்ந்ததன்றென்புலமதனிற்
சூட்டரவணிந்தபிரகசிதேவேச்சுரனுறுமன்னதன்வடபால்
வீட்டுநல்லின்பந்தருநிவாகேசஞ்சேட்டமாதேவியும்விளங்கு
மூட்டரக்குண்டசெய்யதாட்சண்டீச்சுரமதன்மேற்றிசையுறையும் (சக)

விளம்பியவிதற்குவடபுலந்தண்டகாதகூபந்திகழ்மேற்பால்
களங்கமில்தேவலேச்சுரஞ்சதகாலேச்சுரமுமாபதிகருணை
துளங்கொளிச்சரதாதபேச்சுரமருவுஞ்சொற்றதன்மேற்கெதுகேச
முளங்கவர்கணுதீச்சுரஞ்செபாதேசஞ்சக்ரபாணீச்சுரமுறையும். (சஉ)

சக்கிரபாணீச்சுரனுறைதென்பாற்றயங்குபூதேசமேற்றிசையின்
மிக்கொளிவிரிக்குங்கறைமிடற்றரவிரிடீச்சுரம்விளம்பியவதன்கீழ்த்
திக்கினிற்றுருவாசேச்சுரமதனின்றென்றிசைமழகதிரெறிக்குங்
கக்குசெங்குருதிமூவிலைநெடுவேற்பரரபூதேச்சுரங்கவினும். (சங)

மறையொருநாள்குந்தெரிவியாதேசனுறைவதன்கீழ்ப்புலம்வாய்ந்த
வெறிதிரைக்கங்கைபுனைந்தசங்கேசம்விச்சுவேச்சுரம்விருதேச
மறையதன்வடகீழ்த்திசையவதூதேச்சுரமவதூதநற்றீர்த்தம்
பெறலருமதன்கீழ்த்திசையிடைப்பசுபதீச்சுரம்பெட்பின்வீற்றிருக்கும்.(

பசுபதீச்சுரற்குத்தென்புலமதனில்படரொளிக்கோப்பிரேச்சுரமேற்
கசைவில்சீமூதவாகனம்பஞ்சநதத்தினில்மயூகவாதித்த
னிசைபடுசத்தீச்சுரமுலகேத்துபக்கிரகாதமெய்தியவித்
திசையதின்வடபாற்கங்கைநீர்வளர்க்குங்கற்பகவாவிசேர்ந்துள.தால்.(சரு)

கடன்முரசதிர்க்குங்கருப்புவில்லனங்கற்செற்றருள்புரிகபத்தீச
னிடத்ததன்றென்பால்மங்கலகவுரியிலங்குகங்கேசனின்வடபால்
விடக்கருஞ்சேறுபழுத்திருங்கேகுமிடற்றசித்தீச்சுரமதனின்
வடக்குயர்தொட்டேச்சுரம்விரித்திரோசம்வேண்டியவரமளித்துறையும்

அதன்வடதிசையின்சத்திகாதேவியமருமற்றவள்முனஞ்சிறந்த
கதிரொதிரொறிக்கும்விரிசுடர்வடிவேலிரேவதேச்சுரங்கவின்கொழிக்கு

# க்ஷேத்திரவளமுந்தீர்த்தத்தின்கதையுமுரைத்த ௬௱௬ அத்தியாயம்.

மிதன்முனம்பஞ்சநதேச்சுரம்வயங்குமெறிபுனல்மங்கலோதகமென்
றுநதிநஞ்சருந்துமங்கலதேவியுறைவதன்மேற்புறத்தொளிரும். (௪எ)

வண்டொடுசுரும்புங்கலித்தசில்லோதிமங்கலகவுரியின்றென்பால்
வெண்டலைமாலைபுனையுபமன்யவிலிங்கமேவிடுங்கபத்தீசன்
றண்டலில்கோயில்தென்றிசைத்தசாங்கேச்சுரஞ்சயித்தியரதஞ்சார்ந்த
வொண்டிறலிரோவதேச்சுரன்றென்பால்சயிமினீச்சுரமுவந்துறையும். ( )

பற்பலகோடியிலிங்கமாங்குளதுபின்னரும்பகர்ந்தனவடபா
லுற்றதுராவணேச்சுரந்தென்பாலுயர்வராகேச்சுரமுறையு
மற்றதன்றென்பால்மருவிடுமாண்டவேச்சுரமாண்டவேச்சுரற்குத்
தெற்கினிதமர்ந்தவயோகனதேசஞ்சிறந்தொளிதயங்குவாதேசம். (௪௯)

அதன்முனஞ்சோமேச்சுரமதனிருதிமூலையிற்கன்னிகேச்சுரமற்
றதன்வடபாலிற்பஞ்சபாண்டவர்களமைத்தருள்சுரக்குநல்லிலிங்க
மதன்முனஞ்சனவாதேச்சுரமதன்மேற்கருந்தவம்புரிசுவேதேச
மதனின்மேற்குலகந்தொழுதகுகலேசமமர்ந்தினிதிருந்ததையன்றே. ()

வாய்ந்ததன்வடபாற்சித்திரகுத்தேச்சுரங்கலாகேசனின்வடபாற்
சேந்தொளிர்கருணைவாமதேவேசந்தென்புலங்கம்பனேச்சுரந்தார்ப்
பூந்துணர்புனையச்சுவதரோச்சுரம்விண்புகழ்நளகூபரவிலிங்கஞ்
சார்ந்தனவதனின்றென்றிசைமணிகன்னேச்சுரந்தயங்கியதன்றே. (௫௧)

வார்கதிர்பரப்பிப்புதையிருள்விழுங்குமணிகன் னேச்சுரற்குமேற்புறத்தி
சாரதரோசமதனின்மேற்பாலிற்றவலருஞ்சீர்பிதாமகேசம் [ன்
னீரளவறியாப்பிதாமகவாவிநிகழ்ந்ததன்றென்றிசையதனின்
யாருமேத்தெடுப்பவினிதருள்புரியுமியல்வரணேச்சுரமுளதால். (௫௨)

அருமறைவடித்தபிதாமகவாவியருகுகூர்ப்பாண்டமாவிலிங்கம்
பொருவறுமதனின்குணபுலத்திராக்கதேச்சுரம்புகன்றதன்றென்பால்
விரிபுனல்வேணியிலங்குகங்கேசம்விளங்குறுவச்சுதேச்சுரந்தார்
மருவிரிகடுக்கைபுனைதருசக்கரேச்சுரம்நாடொறும்வயங்கும். (௫௩)

மின்னகுவடிவேற்சாரகேச்சுரம்யாழ்மென்மொழிச்சானகேச்சுரமுன்
சொன்னபாரேசனருள்மருத்தேசந்துளங்கொளிபயின்றசக்கிரேசம்
பொன்னவிரிதழிபுனையரங்கேசநதீச்சுரமுடற்றுவெம்போரி
லொன்னலர்க்கடந்தலோகபாரேசரளம்பிலராங்கினிதுறைவார். (௫௪)

உரகர்கந்தருவரியக்கர்கிம்புருடர்தானவரும்பரினுறைவோர்
பெரிதுணர்சித்தர்வித்தியாதரரேமுதலினோர்பெட்பொடுமமைத்த

தெரிவருமிலிங்கமனேககோடிகளுண்டிலங்குசக்கிரேச்சுரன்றென்பாற்
பரவினர்க்கருள்கூர்பாசுவதேசம்பற்குனேச்சுரமிவைபயிலும். (ருரு)

வடபுலமீசானேச்சுரன்மேல்பால்வயங்கொளிதிகழ்சமுத்திரேச
னடையிலாங்கிலீசனவ்வுழிலகுலீச்சுரன்கபிலேச்சுரனரு
மடிதொழும்பிரதிகேச்சுரனுறைவர்மேற்றிசையலங்குநீர்கரவாத்
தடமுளததன்மேற்றிசையினிற்றண்டபாணிமாநகர்தனையளிக்கும் (ருசு)

அசைநடைத்தென்றற்கன்றுலாவீதியவிமுத்தேச்சுரனுறைவதன்பால்
வசையறுமுத்தியீசன்மற்றதற்குவடபுலங்குணேசன்ஞானேசன்
றிசைமுகங்கமழுந்தேம்படுநறுந்தார்கிடந்ததோட்சிறந்தசொன்னேச
னிசைபடவுறைவர்கொடிமதிற்கோயிற்பாக்கியகவுரியாங்கிருக்கும்.(ருஎ)

கயமலர்துவைத்துக்கரைதவழ்பணிலங்குழனிதோறலங்கு முத்துயிர்ப்பப்
புயல்வளஞ்சுரக்குங்காசிவிச்சுவேசனுறையுளின்றென்புலம்புனேதா
ரயிலுடைச்சூலமேந்துகும்பேசனதனின்மேற்கருள்செய்விக்கினேசன்
செயிரில்கும்பேசன்கோயிலின்றென்கீழ்த்திசைவிருபாக்கமேவிடுமால்.()

தீவினைதொடருமருட்பிணியகற்றிப்பெறலருமுத்தியிற்சேர்க்குந்
தாவருகுருக்கேத்திரத்தினிலுறைந்ததாணுவாமிலிங்கம்வெங்கதிர்க்கால்
மேவருலோலாதவனினிதுறையுமீயுயர்கோயிலின்மேல்பா
லோவருமுத்தியடியவர்க்கருளியுவந்துவீற்றிருந்ததையன்றே. (ருகூ)

நனந்தலையுலகமுழுவதும்புகழுநைமிசாரணியத்தினுறையுஞ்
சினங்கனிந்தொழுகுமழுவலனேந்துதேவதேவப்பெயரிலிங்கங்
கனம்பொழிகாலைக்கனையழிந்தொழுகுகாளிந்தியெனக்கடாங்கவிழ்க்கு
மனம்படுதுண்டிவிநாயகன்கோயில்வடபுலத்தினிதிருந்ததுவே. (சுo)

மழைவளஞ்சுரக்குங்கோகனத்துறையுமாபெலவிலிங்கமீண்டெய்தி
யொழுகொளிச்சாம்பாதபனுழைவதிந்தவுயாபிரகாசகேத்திரத்திற்
றழைவுறுசிபூரணமெனுமிலிங்கந்தயங்கொளியிரண்டுமோசனத்தின்
விழைவுறுகீழ்ப்பாலமராேத்தெடுப்பமேவிவீற்றிருந்ததுமாதோ. (சுக)

இருள்படுசோலையுடுத்தவுச்சினிநகர்மகாகாளநல்லிலிங்கம்
பிரணவவிலிங்கமுறைவதன்கீழ்பாலமர்ந்ததுபிறங்குநீர்க்கங்கைப்
புரிசடையோகந்தேச்சுரவிலிங்கம்புட்கரதீர்த்தத்தினோடு
மருள்கொழித்தெழுமச்சோதரவாவியதன்வடபுலத்தமர்ந்ததுவே. (சுஉ)

நெடுநிலமாடமிருசுடர்தடுக்குநிகரில்சீரட்டகாதெசத்திற்
கடவுளர்புகழ்நாகேச்சுரமுக்கட்கடவுடன்வடபுலத்துறைந்த [று
தடியவர்க்கருள்கூர்மகோற்கடேச்சுரம் வாளணிமகுட்கோடம்விட்டகன்
விடுசுடர்பசப்பிவிளங்குறுகாமேச்சுரன்வடபாலின்மேவியதால். (சுஙு)

# க்ஷேத்திரவளமும்தீர்த்தத்தின்கதையுமுரைத்த ௩௱௫
# அத்தியாயம்.

மழைதவழ்குடுமிப்புரிசைசூழ்கிடந்தவிச்சுவதானத்துவயங்கு
மொழுகொளிவிமலேச்சுரஞ்சிவலோகத்துயர்வடபுலத்துறைந்ததுநாள்
விழவறுவீதிசூழ்மகேந்திரத்திலருள்மகாவிரதநல்லிலிங்கந்
தொழுதகுகங்கைதரித்தருள்கங்கேச்சுரனிடத்தினிதமர்ந்ததுவே. (௬௪)

அரியயன்முதலதேவர்பின்றேத்தவருண்மகாதேவநல்லிலிங்கம்
விரிதிரைபுரட்டுமிரணியகருப்பத்தீர்த்தத்தின்மேற்றிசைவந்த
துரவுநீர்த்திரைதாயொழுகுசீர்தீர்த்தத்துறைந்திடும்பிதாமகேச்சுரமீண்
டிருமையுமடியர்க்கருள்புரிதருமேச்சுரனுழையிருந்ததையன்றே. (௬௫)

தண்புனற்பிரயாகைசூலடங்கேசம்பிரயாகைதன்னொடுதிருவாண
மண்டபமதன்மேற்றிசையினிற்சுடரின்வயங்குபொற்கோயிலின்மருங்கு
கண்கவர்மாடமறுகுசூழ்சங்குகன்னத்தில்மகாவொளியிலிங்கம் [ல்
வெண்பிறைக்கண்ணிபுனையருட்பினுகேச்சுரத்ததன்குணக்கின்மேவியதா

திரைபொருதலேக்குமுருத்திரகோடிதீர்த்தத்தினருண்மகாயோகீச்
சுரமெனுமிலிங்கம்விளங்குபாருவதீச்சுரத்துழையுறைந்ததுதேவர்
பரிவுறுமேகாம்பரதலத்தமர்ந்தகிரித்திவாகேச்சுரர்பரிவிற்
கரியுரிபோர்த்துவிளங்குறுமுக்கட்கரும்புறைதலத்தின்வைகியதால். ()

இருள்படப்பொதுளுமிளமரச்சோலேயிடையறுதுயர்மதங்கேசத்
தருள்புரிசண்டேச்சுரனியற்பாசபாணியாங்கணத்துழையமரும்
பொருவறுகாளாஞ்சரத்துறைநீலகண்டமாவிலிங்கமால்போற்றக்
கருணைகூர்கூடதெந்தனென்றுரைக்குங்கணத்தருகுறைந்ததையன்றே. (

அசைநடைத்தென்றல்முருகுயிர்த்துலவுமகன்பணேக்காசுமீரத்தின்
விசையநலிலிங்கமுயர்கிரிசண்டையூர்த்தரேச்சுரனெனவிளங்கி
யிசைபடுமிலிங்கமிலகுகூர்ப்பாண்டகணத்துழையிருந்தமுக்கணனும்
வசையில்பேரிலிங்கந்திரிசந்தவிட்டருள்கூர்முக்கணனுழைவதிந்ததுவே.

பொருப்புடுத்தன்னபுரிசைசூழ்மண்டலேசுரதலத்தினிற்பொலிந்த
வெருட்சிதீரகண்டவிலிங்கமாமுண்டவிநாயகர்க்குத்தரத்தமர்ந்த
திரைத்தெழுநசாகதண்டமாதீர்த்தத்தினிதுறைந்தருள்கபாத்தீசன்
றிருத்தகுபசாதுமோசனவாவியகன்கரைச்சிறந்திருந்திடுமால். (௭0)

துளங்கொளிபரப்புமாம்பிராதக்கேத்திரத்துறைசுக்கமேச்சுரன்றூன்
வளங்கெழுவிகடத்துடனருகுறையும்வயக்குவபோதானபாங்கி

னுளங்கவர்மனுகேச்சுரத்துறைசயந்திலிங்கமுற்றதுதிருச்சயிலம்
விளங்கொளித்திரிபுராந்தகம்விசுவேச்சுரற்குமேற்றிசையின்மேவியதால்.

குக்குடேச்சுரம்வான்றொடுமெதிட்குடுமிச்சவுமியதானம்விட்டிலகு
வக்கிரதுண்டகணத்தருகுறையும்வயங்குசாலேச்சுரத்தகன்று
செக்கர்வான்பூத்தபச்சிளங்குழவித்திங்களஞ்சடைத்திரிசூலி
புக்குயர்கூடத்தந்தவைங்கரத்தோனிருந்துழிப்பொலிந்துவைகிடுமால்.()

தாங்கருநீத்தந்தருபுனலருவிதழங்குவாமேச்சுரத்தமர்ந்த
வோங்கொளிச்சேடதேவனோர்தந்தகணபதிக்குத்தரத்துறையும்
பூங்கதிர்க்கழனிபயிலரிச்சந்திரகேத்திரம்பொலிந்தனரோசன்
றீங்கறுமரிச்சந்திரன்றன்முன்னமரரோத்திடச்சிறந்துவைகியதால். (எ௩)

வலஞ்சுழித்தொழுகுபுனலருக்கமூனிமத்தியமகதலத்தமர்ந்த
நலங்கெழுசதுர்வேதேச்சுரமருள்கூர்தலேச்சுரநண்ணுமெச்சேச
மலங்கிலேச்சூலமேந்துமாதேவனருகிருந்தனசொல்லாயிரங்கண்
ணிலிங்கமுஞ்சயிலேச்சுரந்தனிற்சுவநாக்கதமொழிந்திருந்ததுமாதோ. ()

அரிதகதரிபீதேச்சுரமந்தமணேச்சுரனருகினிலமரு
முருவமூவிலைவேலுருத்திரேச்சுரன்வாழுருத்திரமகாபலநீத்தந்
திரிபுரேச்சுரன்பால்வைகியதிடபேசத்துறைபுகழிடபேசம்
வரியரவசைத்தபுரிசடைவரணேச்சுரனுழைவைகியமாதோ. (எரு)

அறைபுனற்றுறைதோறளிவிருந்தூட்டுபொய்கைசூழ்ந்தணிகொள்கே
தாரத், துறையுமீசானேச்சுரன்பிரகலாதகேசவனுற்றுழியுறையு, மறுகு
தோறெழுதாமறைகிடந்தொலிக்கும்வயிரவகேத்திரத்தமர்ந்த, திறல்கொ
ள்சங்காரவயிரவன்பருவவிநாயகன்றன்றுழைச்சேரும். (எசு)

கனகலத்துக்கிரேச்சுரனருக்கவிநாயகனிருந்துழிகலக்கும்
பனிமலர்ச்சோலைவத்திராபுகத்திற்பவேச்சுரன்வீமசண்டேசன்
றனதிடத்தமருநறுமலர்த்தேவதாருநல்வனத்ததண்டீசன்
சினவுமூவிலைவேலேந்தினனிருக்குந்தேகளிவிநாயகன்மருங்கே. (எஎ)

பொருவில்பத்திரகன்னேச்சுரன்பத்திரகன்னனன்மடுவொடும்போதா
வருள்செயுந்தண்டகணபதிகோயிலதன்கிழக்கமர்ந்திடுமோங்கு
கனைபொருதலைக்கும்புனலருவியமலிங்கத்திற்காலலிங்கேசன்
விரிகதிர்பரப்பிவிளங்குசந்திரேசன்கோயிலின்குணக்குவீற்றிருக்கும். ()

தாற்றிளங்கதலிப்படப்பைசூழ்வேலித்தண்வயலுடுத்தநேபாளத்
தூற்றிருந்தொழுகுகுருதிமூவிலைவேற்பசுபதீசனுமவணுறையுஞ்

## க்ஷேத்திரவளமும்தீர்த்தத்தின்கதையுமுரைத்த ௬௭௭ அத்தியாயம்.

சேற்றிதழ்க்கமலமலர்காவீரதீர்த்தத்திலுறைகபாலீசன்
பாற்றிரைபுரட்டுபாலமோசனத்தின்கனகனைப்பரிவொடுமமரும். (எசு)

கன்னலங்காடுபடர்வயலாரோகணத்தலகுளீச்சுரனடையு
மன்னமூர்ந்தவனுமேத்தருங்கங்காசாகரத்தருளமரீசன்
றன்னுளத்துவகைமீக்கொளவிலங்குசத்தகோதாவிரியுறைய
மன்னுமந்நதியினுறைதரும்வீமேச்சுரனவண்மகிழ்ந்துவைகியதால். ()

மதிமுகந்துடைக்குமேமகூடத்தில்வாழ்விருபாக்கநல்லிலிங்கம்
பொதியவிழ்மலர்த்தேன்படுபுனற்கங்காத்துவாரத்திற்புகழிமத்தேசங்
கதிரொளிமழுங்கவொளிர்கயிலாயத்துறைதருகணபதிகருங்கார்
முதுகுபதேசகந்தமாதனத்தில்மொழிவரும்புற்பவவிலிங்கம். (அக)

பாதலத்தாடகேச்சுரம்விசும்பிற்படரொளித்தாரகவிலிங்க
மேதமில்கிராதத்துறைகிராதேசமிலிங்கமாபுரிமகத்தேச
மாதவன்றொழுகோடீச்சுரத்தினிதுவைகியசேட்டமாவிலிங்கங்
காதலிற்சிறந்தவமரர்நின்றேத்தக்கருணையினுவந்துவைகியதே. (அஉ)

வேறு.

வெள்ளிக்குருத்துவிரித்தநிலாமுடித்தவிருபாக்கேசனுயர்
வள்ளற்கோயில்தென்றிசையின்சுக்கிலேசமதன்வடபா
லெள்ளற்கரியபேரின்பமுத்தியருள்தெய்வானீச
முள்ளத்துறைசுக்கிலேச்சுரற்குக்குணபாற்கூபேச்சுரமுறையும். (அக)

ஆங்கோர்கூபமுளததனிலாடிற்புரவிமகப்பலனுண்
டோங்குபவனீச்சுரநளகேச்சுரங்கொன்னேச்சுரம்மோசை
தேங்குமதலேச்சுரமரிகேச்சுரங்கோனேசஞ்செழுந்திரைநீர்
வாங்குகடல்வாய்நஞ்சமுண்டகவேசம்யாவுமன்னுமால். (அச)

அதன்வாயுளதோர்துருவகுண்டமதனின்வடபால்பிசாசேசம்
பிதிரோச்சுரமுன்பிதிர்குண்டந்துருபேச்சுரர்க்குமுன்பிறங்கு
மதர்வாணெடுங்கட்பேதைபுணர்வயித்தியநாதனவன்றென்பால்
கதிர்கான்றொழுகுமனோலிங்கமுசுகுந்தேசங்களித்துறையும். (அரு)

பிறவித்துன்பக்கடல்கடத்தும்பிரியவிரதேச்சுரம்பாங்கர்
விறல்வல்வீரபத்திரேசங்கெவுதமேசம்விளங்குதென்பா
லறியவரியவீரியசிங்கேசமவைமுன்பிரமேசங்
கறைவாழ்மிடற்றுமுக்கணுடைப்பருச்சனேசங்கலந்துறையும். (அசு)

பரிச்சனேசனுறைந்ததன்கீழ்ப்பாலின் குடக்கேசுரம்பாங்கர்
விருப்பினுறையும்விசாலாக்ஷிவிசாலாக்ஷேசனவர்தென்பாற்
பொருப்பின்வீங்குபணைநெடுந்தோட்சராசந்தேசன்புகல்தென்பால்
கருப்பவினைதீர்த்தருளிரணியாக்கேசன்காதலினுறையும் (௮௭)

அங்கட்கமலத்தயனறியாவாதீச்சுரமற்றதன்மேற்பால்
வெங்கட்களிற்றினுரிபோர்த்தபகீரதேசமேய்தன்முன்
றிங்கள்மவுலித்திலீபேசம்விசுவாவசுதேச்சுரஞ்செயிரில்
பொங்குபுகழ்முண்டேசமவர்தென்பால்விதீசம்புகுந்துறையும். (௮௮)

விதீசன்பாங்கர்தசாசுவதமேதமுயர்மாதருதீர்த்தங்
கதிர்கால்புட்பதெந்தேசந்தென்கீழ்த்திசையிற்காதலினால்
முதுமாதவத்தின்றுறைபடிந்தமுனிவரமரரினிதமைத்த
சதுராননத்தோனேத்தரியவிலிங்கங்கோடிசார்ந்துளவால். (௮௯)

மைத்தவிடவாளரவணிந்தபுட்பதெந்தேச்சுரன்வடபாற்
சித்தீச்சுரன்பார்புகழுமரிச்சந்திரேச்சுரற்குத்திகழ்மேற்பால்
முத்திவழங்குநிருதேசகிரீசனதனின்மொழிதென்பாற்
றொத்தாரிதழிபுனைசயமேச்சுரன்சித்திராங்கேச்சுரனுறையும் (௯0)

உரவுக்கறைப்பாவடிக்களிற்றினுரிபோர்த்தருள்சித்திராங்கேசன்
மருவுமதனின்றென்புலத்துக்கோதாகேசன்வளர்தென்பா
லிரவுப்பகல்செய்வெண்டிங்கள்வெய்யோன்குலத்தினியல்வேந்தர்
பரவித்தொழுநீடொளியிலிங்கங்கோடிமேலும்பலவுளவால். (௯௧)

அண்ணலேற்றுக்கொடியுயர்த்தவாசாபூரகன்னேச
நண்ணுமதன்மேற்றிசைக்காந்தமேசனடஞ்செய்மகாதுர்க்கை
மண்ணுமதன்பாற்சங்கேசன்மற்றுஞ்சங்குகன்னேச
னெண்ணினதன்மேற்றிசையின்மகாசித்திவாயினினிதுறைவார். (௯௨)

மூட்கூனெயிற்றுவிடநாகமணிந்தமுடிதாழ்சங்குகன்னன்
பெட்பாலினிதுவைகியதன்மேல்பால்விளங்குவிதண்டேசன்
கொட்பாம்பிறவியகற்றுதுவாரேசன்விறல்வேற்குகனேசன்
புட்பாகனனும்போற்றுதுவாரேசியிவர்கள்பொருந்தினரால். (௯௩)

குடபால்சுரந்துவழிந்தமடிக்குறுந்தாண்மேதிமலர்கறித்து
மடைகீழ்க்கிடந்துமூச்செறியும்வளங்கூர்காசிநகரளிக்குஞ்
சுடர்பூங்கதிர்வேற்கணநாதரனேகருளர்தோமறுகாங்கட்
கடற்பார்புகழுமரீதீசன்சாங்கலேசன்கரந்துறையும். (௯௪)

கனகனுகமுகிரிடந்தகண்ணன்கமலமலர்பூத்தோ
னினையவரியகாத்தியாயினேசன்பாங்கர்மகுடேச
னினிதினுறையுமத்தலையோர்கூபமுளதின்புறவாடி
வினைகடீர்க்குமகுடேசற்றொழுவோர்வேட்டபலன்பெறுவார். (௬௫)

அதனின்வடபாலோர்தலமுண்டாங்குநாறுயிரவிலிங்கம்
விதியினுளபொற்சினகரமோரைந்துண்டாங்குவீற்றிருந்து
மதர்வேலுண்கட்பூங்கொடியார்தொழில்மூன்றியல்வான்வழங்குவழிக்
கதிர்காலிலிங்கமோரொருவரமைத்தவொன்றேகழறினமால். (௬௬)

இன்னுமாங்குப்பலகோடியிலிங்கமுளவித்துணையிலிங்க
மன்னுகூபமணிக்குண்டமின்னவென்னவகுத்தெம்மால்
பன்னியுரைப்பதரிதுபசும்பராரைக்கமுகின்மிடறொடியக்
கன்னிப்பருக்கண்வராலுகளுங்காசியிலிங்கவுருவாமால். (௬௭)

நீரேற்றணைந்தசூற்கொண்டல்நெடுவாய்திறந்துதுளிகவிழ்ப்பப்
போரேற்றெருத்தின்வயிரநுகம்பூட்டிக்களமருழுசேற்றில்
வாரேற்றணிந்தமுலைக்கடைசிமடவார்நடுதண்வயற்காசி
யாரேத்துனர்மற்றவரேநம்புதல்வரினுமன்பினிதுள்ளார். (௬௮)

வண்டீற்றறையாமுகைமுளரிமடல்வாய்திறப்பமடைதிறந்து
தண்டேன்குதிக்கும்வளவயல்சூழ்காசிநகரந்தனிலுதிக்கும்
விண்டோயமரம்புல்லுமெல்லாமீட்டும்பிறவாநெறிசேர்தல்
கண்டாலகல்வானுறைவோரிற்சிறந்ததென்னக்கழறுமால். (௬௯)

௬௮-வது-க்ஷேத்திரவளமும்தீர்த்தத்தின் கதையுமுரைத்த

அத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௲௦௪.

---

தொண்ணூற்றொன்பதாவது.

## முத்திமண்டபத்தின்கதையுரைத்தஅத்தியாயம்.



வண்டிஞ்சுரும்புமீற்றுளைந்துமலர்வாயிரங்கிவயாவுயிர்க்குங
கண்டல்வேலிவிளிம்புடுத்தகாசிநகரிலுமையோடு
மண்டர்பெருமானடைந்ததற்பினிகழ்ந்தவெல்லாமயிலூர்தி
கொண்டறவமும்பொதியமலைமுனிவற்கினிதுகூறுமால். (௧)

கமலக்காடுபூத்தனையகன்னித்துளவமால்முதல
வமரரோடுமெம்பெருமான்றிரிவட்டபத்தினகன்றேகிக்
குமரிப்பாளைமடல்கிழியக்கயல்வாய்வாளைகுதித்துகளுங்
தமரத்திரைநீர்க்கங்கைபுனைகாசிநகரஞ்சார்ந்தனனால். (௨)

பொன்செய்கொல்லர்கைசெய்யாப்பொலம்பூண்டுயிலுமுலைசுமந்து
மின்செய்மருங்குநோவவரமகளீர்விழைவினாட்டயரக்
கொன்செய்நேமிகான்முகத்தோன்குலிசப்படையோன்முதலமர
ரன்பினேத்தியடிபோற்றக்கடவுட்கோயிலகம்புக்கான். (௩)

தென்றல்வழங்குசாளரத்திற்செங்காற்புறவுதூதருந்தி
நின்றுபேட்டில்சிறையுளருநெடுவெண்மாடமருங்குடுத்த
மன்றவோங்குதிருமதிளோடெட்டுங்கடந்துவான்குடுமிக்
குன்றமனையவருள்முத்திவழங்குமாடங்குறுகினனால். (௪)

தரணிபொதிர்ந்தநிலாத்திங்கள்தவழுஞ்சடையோன்பாலனுக்காய்
முரணியெதிர்ந்தகூற்றுடலமுரியவுதைத்தமலர்த்தாளி
லருணமுளரியலங்கிதழ்ப்பூம்பொகுட்டிலிருக்குமருமறையோன்
கருணையொடுநன்மலர்தூவிப்பழிச்சிப்பழிச்சிக்கைதொழுதான். (௫)

நெடுவெண்களிற்றுப்பெரும்பாகன்முதலவமரர்நிழலுமிழ்பொற்
சுடிகைப்பிறைவாளெயிற்றரவநகரிலுறைவோர்தீங்தொடையாழ்
தடவந்தமுதினிசையூற்றுதன்மையோர்மற்றெவருளருங்
கடிமென்மலர்தூய்தாழ்ந்துள்ளங்கசிந்துகசிந்துகளிப்புற்றார். (௬)

மின்னுக்கொழுந்துவிட்டெறிக்குமிளிர்பூண்சுமந்துவீங்குபசும்
பொன்னஞ்சுணங்குபூத்தமுலைமாதரொழுவர்புகழ்ந்தேத்தி
மன்னுநீராஞ்சனமேந்தமகிழ்கூர்ந்தருளான்மறைக்கிழவன்
றன்னையீன்றோன்பழிச்சுதலுமெந்தையினிதுசாற்றுமால். (௭)

ஆலமொழுக்குமாயிரவாயமளித்துயிலுமழைவண்ணு
ஞாலமளிக்குந்தனிச்செங்கோற்றிவோதானனுக்குமுத்திநல்கிச்
சோலைக்கரும்பிற்றொடுத்தவிறல்பெருகிநறவத்துளிதூற்று
சாலித்தடஞ்சூழ்காசியின்யாமடையும்வண்ணந்தந்தனையால். (௮)

கருந்தாட்செங்கட்பொறிச்சுரும்பும்வண்டுந்தேனுங்களிதூங்கி
விருந்தாட்டயருந்துழாய்முடியோயெமதுவிழைவும்விசைத்துவரால்
பருந்தாட்குடக்காய்முடத்தெங்கின்பழங்கள்சிந்தமலர்குதட்டி
வருந்தாண்மேதிவெரீஇப்பெயருங்காசியலதுமற்றுண்டே. (௯)

கரும்புவிளைந்துகழுத்திறைஞ்சும்வயல்சூழ்காசிநகரினுளம்
விரும்புமதுபோல்மூவுலகும்வேண்டுகில்லேநமதேவல்
புரிந்துள்ளாரிற்சிறப்புடையைநீயேயன்றேபுகல்வேட்ட
வரங்கடருதுமெனவுரைத்தான்கண்மூன்றுடையமறையோனே. (கo)

கறங்குபகுவாய்மணிமிடற்றவெள்ளேறுகைக்குங்காபாலி
யறைந்தமாற்றந்தலைக்கொள்ளாவமலவரமின்றருளுதியே
னிறைந்தவுவகைமீதோங்கநின்பாலன்றியாமயலே
மறந்துமுறையாவரந்தருதல்வேண்டுங்கயிலைவானவனே. (கக)

என்றுபறவாப்பசும்பூவைவண்ணனுரைப்பவிசைத்தவரம்
நன்றுதந்தேம்நினைத்தொழுதோர்க்கியாமேமுத்திவழங்குவம்வான்
குன்றமெடுத்துநிரைகாத்தோய்குறுகாமுத்திமண்டபத்தின்
சென்றநமதன்போங்குநெடுங்கயிலையிடத்துஞ்செல்லாதால். (கஉ)

அருள்கூர்முத்திமண்டபத்தினமைந்தவுவகைநமதன்பர்
மருளாவிதயமலரிடத்துமிலையாமகிழ்வுற்றுங்கிருந்து
தெருளால்நம்மையொருபோதுசிந்தைசெய்வோரொழிவரிய
கருவாழியிற்புக்கிறந்துபிறந்துழலார்முத்திநெறிகாண்பார். (கந)

வண்டல்வாரித்திரைபுரட்டுமணிகன்னிகைத்தண்புனல்மூழ்கி
யண்டமுகடுகிழித்தோங்குமுத்திமாடத்தமர்ந்தொருகாற்
பண்டைமறைகடெரிந்துசெபந்தானமோமம்பண்ணுகின்றோர்
கொண்டல்விளையாட்டயர்குடுமிக்கயிலைவரையிற்குறுகுவரால். (கச)

மணிகன்னிகையிற்சிறந்தோங்குமலர்வாவியும்பொன்வயங்குகதி
ரணிசேர்முத்திமண்டபத்தைநிகர்மண்டபமுமலங்குதுதிப்
பணவாளரவின்முடிகிடந்தபாரில்விசும்பிற்காசிநகர்க்
கிணையாநகருமெஞ்ஞான்றுமில்லையில்லையில்லையால். (கரு)

இம்பர்வருமூன்றுமுகத்திலெழில்சேர்முத்திமண்டபத்துக்
கும்பரேத்துகுக்குடமண்டபமென்றொருபேருளதாமென்
றம்பொற்சிலைமால்வரைகுனித்துப்புரந்தீயூட்டுமடலேற்று
நம்பனுரைப்பமாயனிதுநவில்கென்றிறைஞ்சநவில்கின்றான். (கசு)

மறைதேர்வாழ்க்கைமாகாநந்தனென்பானொருவன்வான்கலையின்
றுறைபோயுலகிற்பலகலைக்குமொருவனென்னுந்துணிவெய்தி
யுறையுநாளிலவன்றாதையிறப்பக்காமமீதூர்ந்து
பிறன்மற்றொருவன்றேந்திராநண்புநாளும்பெரிதோங்க. (கஎ)

நண்பிற்றீரான்போன்றவனிற்கிழத்திமுலைமென்னலநுகர்ந்தும்
பண்பிற்றிரிந்துங்கொலைகளவுமுதலபாவம்பலபயின்றும்
வண்சொற்பயிலுமறைநெறியின்வழுக்கிக்காமவயத்தனாய்த் [ம்
திண்பொற்றடந்தோளெறுழ்வலியாற் பிறர்பாற்பொருள்கடினங்கவர்ந்து

பாகவதரோடியைந்துசைவநெறியைப்பழித்துஞ்சைவநெறி
போகுமவர்பாலியைந்துதினம்பாகவதரைப்புறமொழிந்தும்
யாகமுனிவர்க்கிடர்விளைத்தும்யாவர்பொருள்நல்கினரவர்கட்
காகநெறியிற்கிரிநாளும்பகர்ந்தும்பதிதனாயினனால். (௧௯)

கதிர்முத்துரிஞ்சுமுலைக்கருங்கட்காமர்கோதைமுலைவேட்டுப்
பதிதனாகிப்படிற்றொழுக்கிற்பயிலுநாளோரிழிகுலத்து
முதியோனொருவனளப்பரியநிதியங்கொணர்ந்துமுதுக்குறைவால்
மதிதாழ்குடுமிப்பருவததேயத்தினகன்றுவந்தனனால். (௨0)

காமர்சிறைமென்பெடைக்குருகுகயலாய்ந்தெடுத்தாங்கிரைகுதட்டிப்
பூமென்றவிசின்புரத்துமடப்பெடையோடுறங்கப்பொறிவாளை
தேமென்கதலிப்படுபழங்கள்சிந்தவுகளும்பொழிற்காசி
நாமமெடுநீர்த்திரைபுரட்டுமணிகன்னிகையினயந்தாடி. (௨௧)

காண்டல்செல்லா வினைபுரிசண்டாளன்யானும்பொழிகருணை
வேண்டிவேண்டுபொருள்கொணர்ந்தீங்கடைந்தேன்கோடல்வேண்டுமென
பூண்டபேரன்பொடுமுவகைபூப்பமணிகன்னிகைப்புறத்தி
னீண்டுதவஞ்செய்மாதவனைநோக்கியினிதினியம்பினனால்.

முன்னைவினையின்வேரொறிந்தமுதியதவத்தோரதுகேளா
வன்னேனென்வாங்குமெனநோக்கியறைதலோடுமிழிகுலத்தோன்
பன்னுமறையினெறிதிறம்புமறையோற்பணிந்துபகர்ந்திடலு
மன்னுபொருளெத்துணையீங்குகொணர்ந்தாயென்னவழங்குமால. (௨௩)

உனதுவிழைவெத்துணையுளவத்துணையபொருள் யானுதவுவலென் [ல்
றனையோனுரைப்பக்கொணர்ந்தபொருளனைத்து மெனக்கின்றருளுதியே
நினதுதானமேற்பலெனநிதியமனைத்துமவன்கொடுப்ப
வினிதுமகிழ்ந்தாங்கிழிகுலத்தோன்வழங்குதானமேற்றனனால். (௨௪)

வேற்றுக்கொடியவிழிகுலத்தோன்வழங்குநிதியந்தனைவிழைவி
னேற்றவதனாற்சண்டாளனிவனேயாகுமென்றென்று
போற்றல்செய்யாரிழிகுலத்தோனென்னவெவரும்புறங்கூற
வாற்றல்தீர்ந்துதன்மனைவிட்டகலாதாங்குலைவகினனால். (௨௫)

சண்டபெயர்யாவருமிவனைக்கண்ணிற்காணுதகற்றுகென
வண்டுண்கோதைபின்றொடரமக்களோடுமணித்தோட்டுக்
நண்டுசினைபூத்தலர்கனைக்காற்குவளைப்பசுந்தேன்குமிழியெழக்
கெண்டைகுதிக்கும்வளவயற்கீகடதேயத்திற்செலவயர்ந்தான். (௨௬)

கங்கைபடிந்துகாவடிகொண்டேகுவார்பின்கரந்தேகி
வெங்கட்களிறுபுலிவழங்குகொடுங்கானிடையின்மேவுதலுந்
துங்கச்சிலையர்தொடுதோலர்தூணிப்புறத்தர்நிரையுளைய
சிங்கப்போத்தினுருகெழுவெந்திறலோர்விரைவிற்சென்றெதிர்ந்தார். ()

ஈனுக்குறுங்கட்பசுங்கமுகினெழில்சேர்கண்டத்தேந்திழைக்கா
யானுக்கொடுந்தீவினையிழைத்துக்கொணர்ந்தபொருள்களனைத்தினையு
மூன்வாய்ப்பிலிற்றிநிணங்கமழுமொள்வாயெயினர்கவர்வரெனப்
போனன்போகுநெறியினிடைப்புகுந்தாரேற்றுப்புலிபோல்வார். (௨௮)

காழிற்சிறந்தகூன்பிறைவெங்கதையாற்புடைத்துக்கலைமறையோ
னூழிற்கொள்ளாக்கொடும்பாவிதியமனைத்துமொருங்கள்ளி
மாழைக்கருங்கணேக்கியையும்வலிதிற்குறைத்துமாகாந்தன்
தாழ்வுற்றுவிசிதைந்தொழியமக்களோடுந்தடிந்தனரால். (௨௯)

கரும்புகுதட்டிச்சாறொழுகுங்கடைவாய்மேதிகண்படுக்கு
மிருந்தண்புனல்சூழ்காசிதனையிதயத்தெண்ணியிறந்தனனால்
வரம்பிற்சாலிமுத்துயிர்க்கும்வயற்கீகடத்தில்முற்பவத்திற்
றிருந்துமுணர்வோடவனரத்தச்சூட்டுச்சேவலாயினனால். (௩௰)

மக்களிருவர்பார்ப்பாகமடமானேக்கிபேடாக
வொக்கவுறையுநாளதனிற்காசிக்கேகுமவரோடுஞ்
செக்கர்நிறத்தகூர்வாயசூட்டுச்சேவல்பெடைதொடரத்
தொக்கபார்ப்பினொடுங்காசித்தொல்லைநகரிற்சென்றதுவே. (௩௧)

செங்கட்கயவாய்மோட்டெருமைசெழுநீர்க்குவளைப்போதருந்திப்
பங்கப்பழனத்துளைந்துழக்கப்பணிலமுழங்குகாசியினிற்
றிங்கடவழ்ந்துவிளிம்புரிஞ்சுமுத்திமாடத்திடைச்சேரா
வங்கணிறந்துபடுபேற்றாற்கயிலைவரையினடையுமால். (௩௨)

அன்றுமுதலாய்க்குக்குட்மண்டபமென்றோதுமகனுலக
மன்றவிதனைக்கேட்டோர்கள்மருளாமுத்திதனிலடைவா
ரொன்றுகூறத்திருநெடுமாலிதயநெகிழவிழிபனிப்பக்
குன்றவில்லிசேவடிக்கீழ்க்குழைந்துகுழைந்துதொழுதனனால். (௩௩)

ஆயகாலையளப்பரியவிலிங்கபூசையாற்றுகின்றோர்
பாயபசும்பொற்படுமணியினோதைசெவியினிடைப்படா,

மாயன்கமலப்பொகுட்டுறையுமறையோன்முதலோர்வாழ்த்தெடுப்பச்
சேயபசும்பொற்சிங்காரமணிமண்டபத்திற்சென்றடைந்தான். (கூச)

காதைகேட்கின்றோர்க...
ரனையோர்பாதம்பணிந்திடுவோர்பணிந்தோர்க்கடிமைபூண்டுள்ளோர்
கனைவண்டிமிருங்கற்பகப்பூங்காட்டினமரர்பணிந்தேத்தப்
பனைவெம்புழைக்கைவெள்ளானைப்பாகன்பரவவீற்றிருப்பார். (கூரு)

ககூ-வது-முத்திமண்டபத்தின்கதையுரைத்தஅத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உசகூகூ.

---

நூறாவது.

## விஸ்வநாதர்மகிமையுரைத்தஅத்தியாயம்.

வானிற்றடவுஞ்சிங்காரமணிமண்டபத்திற்புகுந்ததற்பின்
கூனற்பிறைதாழ்கோடீரக்குழகன்செய்தியுரைத்துமென
ஞானத்துறைவாய்படிந்தகுறுமுனிவனுவப்பநலங்கெழுதண்
பானற்கருங்கட்செங்கனிவாய்க்குறத்திகொழுநன்பகர்ந்திடுமால். (க)

இருண்மேய்ந்திலங்குகதிர்நாவாற்கடைவாய்நக்குமெரிமணிசே
ரரியாசனத்தினினிதேறியழற்கட்பெருமானமர்ந்திடலும்
கரியான்முதலபுத்தேளிர்வணங்கக்காந்தள்முகைகவற்றும்
வரிவால்வளைக்கைவாணிமுதலமரர்மாதர்வாழ்த்தெடுத்தார். (உ)

கன்னிப்படலைத்துழாய்முடியோய்கேட்டிகமழ்தேனூற்றிருக்கும்
பொன்னிற்பழுத்தகொன்றையந்தார்புனையுஞ்சடைவிச்சுவநாத
னென்னவுரைக்குமவ்விலிங்கம்பிரமமாகுமீங்கதனில்
மன்னியன்பர்க்கென்ஞான்றுமழியாமுத்திவழங்குவமால். (கூ)

நிலவுகதிர்கான்றிலகொளியவெண்ணீறணிந்தநிலாநெற்றி
மலமூன்றெறிந்தபாசுபதர்வடிவநமதுவடிவாகு
மலர்தூய்வணங்கியாங்கவரையொருகாற்பழிச்சிலாயிரக்காற்
பலன்வேண்டாமலெனையேத்துபான்மையோரிற்பலன்பெறுவார். (ச)

என்னையேத்திவணங்குதற்குக்காண்டலரியதெஞ்ஞான்று
மன்னவாற்றாலிவ்விலிங்கந்தனையேவழிபாடியற்றிடுமின்
சொன்னேன்சொன்னேன்முக்காலுமின்னவிலிங்கந்தொழுதிடுவோர்
மன்னுமுத்திதனில்நாளும்வாழ்தலுண்மையுண்மையே. (ரு)

வினைப்பூட்டறுக்குமிவ்விலிங்கந்தன்னைவிழைவினெண்ணுது
நினைப்பினவர்தமிருப்பிறவிக்கொடியபாவ்வினைநீங்கு

மனத்தின்விழைந்துவழிபடுவான்போதல்செய்யின்மற்றவர்கள்
கனைக்குங்கடலின்விரிந்தகன்றகொடுந்தீவினையின்கடல்கடப்பார். (௬)

கருணையோடுமிவ்விலிங்கங்காண்டல்செய்யினவனொளிதிற்
புரவிமகநூறாற்றுபலனடைவர்தீண்டிற்புகலரிதாய்ப்
பரவவருமாயிரராசசூயமாற்றும்பலனடைவார்
விரிநீராட்டிற்புரவிமகங்கோடியாற்றும்பலன்மேவும். (௭)

இன்னகடவுளிலிங்கத்தின்மேனிகுளிர்ப்பவெழுந்தோங்கு
தென்னம்பொதியினறுஞ்சாந்தத்தேய்வைகொட்டினுங்கவர்மே
லன்னம்பொருவுமரமகளிர்தெய்வச்சாந்தமகிழ்ந்தணியப்
பொன்னந்துணர்க்கற்பகநீழலரியாசனத்திற்பொலிந்திருப்பார். (௮)

மணங்கொள்தூபமளிக்கின்றோர்மணங்கூர்தெய்வவுருவாவர்
கணங்கொள்தீபமெடுக்கின்றோர்கதிர்காலுடுவின்வடிவாவா
ரிணங்குநறியகருப்பூரத்தீபமினிதினெடுத்தோர்கள்
பணங்கொளரவகங்கணத்தோன்படிவமாகிவீற்றிருப்பார். (௯)

ஆர்வமோடுமின்னமுதமளிப்போர்நமதுகயிலைவரை
சேர்வர்நீதமாடல்பலவியமுன்செய்வித்திடுமவர்தா
மூர்பொற்றிதலைபூத்தமுலையரம்பைமாதருவந்தாட
வேர்முற்றியபூந்தருநீழற்குலிசப்படையோனெனவிருப்பார். (௧0)

நறைதூமலராலிவ்விலிங்கந்தன்னைநாளும்பணிவோரைத்
திறைதூயுலகமொருமூன்றுஞ்சேவைசெய்யுமீங்கிதன்பே
ரறைவோர்தம்பாற்கூற்றணுகாதன்பானோக்கியுவந்திடுவோர்
கறைதாழரவக்குண்டலயணிந்துகணத்தின்முதலாயினிதிருப்பார். (௧௧)

அலகில்புகழ்விச்சுவநாதவென்னவொருகாலறைவோரை
இலகுநமதுநல்லுருவென்றெண்ணிமுத்தியினிதளிப்போ
முலகம்புகழெண்டிசைப்பாலர்பதமுமழியுமுவந்துவந்து
பலகாலிதனைத்தொழுமவர்தமபதமற்றழியாதழியாதால். (௧௨)

இலகுசுடர்விச்சுவநாதற்கிணையாங்கடவுளிலிங்கமுநீர்
சுலவுமணிகன்னிகைக்கிணையாந்துகடீர்தெய்வதீர்த்தமும்வான்
சலவமஞ்ஞைநடம்பயிலுங்காசிக்கிணையாநன்னகரு
முலகமொருமூன்றினுமிலையீதுண்மையுண்மையுண்மையால். (௧௩)

என்றுகூறியுமையோடுமெண்டோள்முக்கணெம்பெருமான்
றுன்றுகதிர்கால்சுடரிலிங்கமதனிற்சேரத்துழாய்முடியோன்
மன்றற்கமலவீட்டுறையுமுரவோன்முதலவானவர்கள்
நின்றுபழிச்சிப்பழிச்சியென்றுநீங்காதாங்கணுறைந்தனரால். (௧௪)

கன்னற்காடுவிளிம்புடுத்தகாசிநகரின்பெருமையெல்லாம்
பன்னிவிரிப்பின்முடியாதாற்சுருக்கினக்குப்பகர்ந்தனம்யா
மென்னவுவந்துசூர்மாளவிலங்குவடிவேல்பணிகொண்டோன்
தென்னம்பொருப்பினினிதுறையுஞ்சீர்சால்முனிவற்குரைத்தனனால். ()

அலகில்புகழிப்பெருங்காதைநவின்றோர்கேட்டோரன்புற்றோர்
நிலவுமொழியுந்தனிக்கவிகைநிழற்றவரியாசனத்தேறி
யுலகமூன்றுமொருதிகிரியுருட்டியரசர்திறையளப்ப
மலரினுறைபொற்றிருமடந்தைவாழ்த்தவினிதுவாழ்ந்திருப்பார். (கக)

௧00-வது-விஸ்வநாதர்மகிமையுரைத்தஅத்தியாயம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௪௫௫.

---

நூற்றோராவது.

## சேவியத்திறமுரைத்தஅத்தியாயம்.

பூசிவரிவண்டிசைபயிலுமுட்டாட்கமலத்தடமுடுத்த
காசிநகரிலுறைபிலிங்கம்போற்றுமுறைமைகழறுகென
வாசில்மறைகள்முழுதுணர்ந்தமலயமுனிவனறைந்திடலும்
பூசல்புரியுங்கயனெடுங்கட்குறத்திகொழுநன்புகலுமால். (க)

அசைத்ததுகிலோடலைபுரட்டுமணிகன்னிகையிலமர்ந்தாடி
யிசைத்ததேவர்முனிவரர்தென்புலத்தோர்கடன்களினிதாற்றிப்
பசுத்தபுரவிநெடுந்தேரோன்றுரோபாதீசன்மால்பாந்தள்
விசித்தண்டபாணிமச்சேச்சுரன்றுள்முறையின்வியந்தேத்தி. (௨)

பின்னர்த்துண்டிவிநாயகனைப்பெட்பினோடுமினிதேத்தி
நன்னித்திலஞ்சூழ்சங்குயிர்க்குஞ்ஞானவாவிநீர்தெளித்துப்
பொன்னிற்பொலிந்தசடைநந்திதாரகேசன்மகாகாளர்
பன்னற்கரியபுகழ்த்தண்டபாணிபாதந்தினம்பணிக. (௩)

மழலைத்தும்பிபாட்டயரமதுவூற்றிருக்குமலர்ப்பொதும்பிற்
குழவித்திநீர்க்குடக்குரும்பைசிதறவாளைகுதித்துகளும்
பழனத்தடஞ்சூழ்காசியகிலேசற்போற்றும்பரிசினியான்
மொழியக்கேட்டிபெறலரியவருமாதவத்துமுதலோனே. (௪)

ஓங்காரேசன்றனையருச்சித்துவப்பினெடுமச்சோதகியி
னீங்காதாடிக்கடன்கழித்துநிகரில்திரிவிட்டபத்தீசன்
றீங்கில்கிருத்திவாகேசனிரத்னேச்சுரன்சந்திரேச்சுரன்பார்
தாங்குபுகழ்க்கேதாரேசன்பிரமேச்சுரன்சொல்வீரேசன். (௫)

அணிசேர்கருணைக்காமேசனருள்கூர்விஸ்வகன்மேசன்
மணிகன்னேசனவிமுத்தேச்சுரனீங்கிவரைவரன்முறையில்
பணிககாசியகிலேசற்பணிகநாளும்பணியாரேற்
றணவாமுத்திதருகாசியகன்றுபோகித்தளர்குவரால் (௬)

இன்னவீசர்தமைமுறையினிறைஞ்சினமரபக்கத்து
முன்னர்த்திதியைமுதற்பதினன்களவுந்தொழுகவஃதின்றேற்
பன்னுமீசர்பதிலுல்வர்தமையுமருளாற்பதினன்கு
தன்னிலேனுந்தொழவேண்டுமென்னமறைகள்சாற்றுமால். (எ)

இருநான்கிலிங்கமின்னுமுளகேத்திரேச்சுரன்பாருவதீச
னருள்கூர்பசுபதீச்சுரன்கங்கேசனருமதேசனன்பு
தருமோங்கொளியகபத்தீசன்சதீசன்தாரகேச்சுரன்றுள்
தெருளாலுணர்ந்தட்டமிதொறும்போய்ச்சேவைசெய்யவேண்டுமால். ()

தடங்கொள்வரணைதனிலாடிச்சயிலேசனையுஞ்சங்கமத்திற்
படிந்துசங்கமேசனையுஞ்சுவலவாவிதனிற்படிந்தாங்
கடைந்தசுவலேசனையுமுத்தியருள்கூர்மந்தாகினிப்புனலிற்
குடைந்துபுகழ்மத்தியமேசன்றனையுந்தொழுதுகைகூப்பி. (௯)

பூசைபுரிந்தாங்கிரணியகற்பத்திற்படிந்தப்பெயர்புனைந்த
வீசன்றனையுமுயர்மணிகன்னிகைதோய்ந்தீசானேசனையும்
பேசுபுகழ்கொப்பிரேக்கத்திற்படிந்தப்பெயர்மெய்க்கடவுளையு
மாசில்கபிலமடுமூழ்கியிடபக்கொடியோனையும்வாழ்த்தி. (௧0)

மறைகளோதுமுபசாந்திமடுவிலாடியுபசாந்தி
யிறைவன்றனையுமெழிற்பஞ்சசூடவாவியினிதாடி
நறவுதுளிதூங்கிதழிபுனைசேட்டேசனையுநற்கடப்பேர்
பெறுகூபத்திற்படிந்தாங்கணுறைந்தபெருமானையுமேத்தி (௧௧)

மகதேவுறைபொற்சினகரத்துவாவிதோய்ந்தவ்விறைவனையுந்
தகைசால்தருசுக்கிரேசர்முன்னர்த்தடத்திற்படிந்தக்கடவுளையுந்
துகடீர்தண்டகாதத்திற்றோய்ந்துவியாக்கிரேசனையு
முகில்வாய்மடுக்குஞ்சவுனககுண்டத்தினுங்குபுனல்மூழ்கி. (௧௨)

முற்றுக்குருத்துமுளைத்திங்கள்முடித்தசவுனகேசனையுங்
கற்றூரிதயமலர்களிப்பக்களிகூர்சம்புகேசனையு
முற்றுதரவினமரபக்கத்துயர்முற்றிதியைமுதற்றொடங்கி
மற்றோர்பதினன்களவேத்திவணங்குமவர்வீடடைவாரே. (௧௩)

அறைவலின்னுமீசர்பதினொருவருளராக்கினித்திரப்பேர்
பெறுவாவியினிற்படிந்தாக்கினித்திரேச்சுரன்றண்பிறைவேணி

யுறுவசீசன்விளங்குமகிலேசனேங்குசடாமீசன்
பொறிவாளரவகங்கணத்துப்புனைதார்ப்பாரபூதேசன். (௧௪)

புனிற்றுமடமானிடனேந்துமிலாங்கலேசன்புராந்தகனன்
மனப்பிரகாசேச்சுரன்பிரிதிகேசன்மாதலேசன்வண்டு
கனைக்குமிதழிபுனைவேணித்திலவன்னேசன்கழலிணைகள்
நினைத்துமுறையிற்சேவைசெய்யுமவரேமுத்திநெறிகாண்பார். (௧௫)

கரும்புசாற்றுகமைமென்றேட்காமர்கவுரிசேவைமுறை
விரும்பிக்கேட்டிசுக்கிலபக்கத்தின்மேபதிரிதிகையி
லரம்பைகுலைத்துமுகங்கவிழுமகன்கொப்பிரேக்கந்தனிலாடிச்
சுரும்புண்கூந்தற்கருநெடுங்கட்சுகரிக்காளிதாள்போற்றி. (௧௬)

சேட்டவாவிதனிற்படிந்துசேட்டகவுரிதனையுமுத்தி
காட்டுஞானமடுமூழ்கிச்சௌபாக்கியநற்கவுரியையும்
வீட்டினின்பமினிதருள்சிங்காரகவுரியருள்கோயில்
மோட்டுவாவிபடிந்தவள்பொன்முளரிமலர்த்தாளையுமேத்தி. (௧௭)

வெண்ணந்துயிர்த்தமுத்தமிருள்விழுங்குகோட்டுவிசாலகங்கை
தண்ணம்புனலிற்றேய்ந்துவிசாலாட்சிதனையுமருவினையா
மெண்ணந்தொலைக்கும்லலிதமடுமூழ்கிலலிதகவுரியையும்
வண்ணநதிகமழும்பவானிட்டந்தப்பேர்மடமானையுமேத்தி. (௧௮)

விந்துதீர்த்தப்புனலாடிவியன்மங்கலப்பேர்க்கவுரியையுந்
தந்தமுறையிற்பணிந்துமலர்த்தையல்பாதமலர்க்கமலஞ்
சிந்தைசெய்துசதுர்த்திதொறுமலர்தூய்வணங்கிச்சேவைசெயி
னந்திலதனுற்கொடுங்கூற்றமடையுநகரிலடையாரால். (௧௯)

மகிழ்கூர்ந்தினிதுமங்கலவாரத்தில்வயிரவனைத்தொழுக
புகழ்ஞாயிற்றிற்கன்னியொடுபொருந்துமஞ்ஞான்றினிற்புதல்வ
ரிகழாதேத்துந்துலாமியைந்தவவ்வாரத்திலிருள்சீக்கும்
பகலோற்பணிகொற்றவையைப்பணிகநவமியட்டமியில். (௨0)

தடவுப்பசுந்தாள்நெடுமுடவுத்தாழைபுடைசூழ்வயற்காசிக்
கடவுட்கோயிலகத்துணிகழ்சேவைகேட்டிவைகறையி
லடைவிற்புனலாட்டயர்ந்துபஞ்சவேழமுகவற்பணிந்ததற்பின்
விடமுற்றியகார்மணிமிடற்றெம்மகிலேசன்றருள்வியந்தேத்தி. (௨௧)

மதியமுரிஞ்சுநிருவாணமணிமண்டபத்திலிருந்துமறை
விதியினகத்துநிகழ்சேவைபுரிவல்கொடுந்தீவினையகற்றிக்
கதியின்றருளல்வேண்டுமெனக்கருதிமவுனமொடுமலர்த்தேன்
பொதியுமணிகன்னிகைநறுந்தண்புனலினன்புபுரிந்தாடி. (௨௨)

மணிகன்னிகையைமலர்த்தூவிவணங்கிக்கம்பளாச்சுவத
வினையிலிலிங்கம்புயகேசன்பருவதீசனுலகெல்லாம்
பணியவருகக்கேசனன்பாம்லளிதாகவுரிபணைநெடும்பொற்
றிணிதோட்சராசுந்தேச்சுரன்சோமேசன்வராகஞ்சிறந்தேத்தி. (௨௩)

பிரமேச்சுரனைப்புகழகத்தீச்சுரனைக்கச்சியபேசனையோங்
கரிகேச்சுரனைவயித்தியநாதனைமெய்த்துருவேசனையிலங்கு
விரிதார்க்கோகன்னேச்சுரனையாடகேசன்றனைவிதிக்குந்
தெரியாவுருவாந்தடாகேசன்றனையாங்குவகைசிறந்தேத்தி. (௨௪)

பொன்னங்கொன்றைபுனைகீகடேசன்பாரபூதேசன்
மின்னுக்கதிர்வேல்சித்திரகுத்தேசன்விறற்சித்திரகண்டை
பன்னுமறையினுபநிடதப்பொருளாம்பசுபதேச்சுரனீள்
கன்னங்கரியமணிமிடற்றுப்பிதாமகேசன்கழல்போற்றி. (௨௫)

கலசேச்சுரன்சந்தேச்சுரன்வீரேசன்விசுவேச்சுரன்கருணை
யிலங்குந்தேசன்வளர்சிந்தாமணியைங்கரன்வானிமையோர்கள்
மலர்தூஉஞ்சேனுவிநாயகன்சீர்வசிட்டன்வாமதேவன்வரைச்
சிலையாற்புரமூன்றழலூட்டுதிரிசந்தேசனடிபோற்றி. (௨௬)

தள்ளாவிழுச்சீரொடுமோங்குவிசாலாட்சேசன்தருமேசன்
வெள்வேலேந்துவிச்சுவபாகுவன்சீராசாவிநாயகன்று
ரொள்வாள்விருத்தாதபன்சதுர்வக்கிரேசன்பிரமீச்சுரனுடைந்து
கள்வாயுமிழ்தார்மனப்பிரகாசேசனணிபொற்கழல்வாழ்த்தி. (௨௭)

ஏற்றுக்கொடியேந்தியவீசானேசன்சண்டிசண்டீசன்
போற்றுபவானிசங்கரனீள்புழைக்கைத்துண்டிவிநாயகன்வெங்
கூற்றையுதைத்தபொலங்கழற்றுட்சராசந்தேசன்கொன்றைநற
ஆற்றுசடிலத்திலாங்கேசன்சூலீச்சுரன்றுளுவந்தேத்தி. (௨௮)

பரிதிச்சுடர்வேலுயர்த்தருள்பார்ச்சேசனருட்பாத்திரவேசன்
பிரதிக்கிரேசனிட்களங்கன்மார்க்கண்டேசன்பெய்மலர்ப்பூந்
தெரியற்பரிசாசேச்சுரன்கங்கேசனிவர்தாள்சேவைசெய்யா
வருவிப்பசுந்தேனலைபுரட்டுஞானவாவிதனிலாடி. (௨௯)

நந்திகேசனருட்டாரகேசனுலகநன்குதொழ
வந்தமகாகாளேசன்விறற்றண்டபாணிமகேசன்வினைப்
பந்தமறுக்குமுத்தீசன்விடையூர்வீரபத்திரேச
னேந்துவேழமுகனவிமுத்தேசனிவரையடிபோற்றி. (௩௦)

வளங்கொள்காசியகிலேசன்றிருமுன்போந்துமவுனமொழிந்
துளங்கொள்மறையின்பொருளோதியின்னசேவையுஞற்றினன்யான்

விளங்கவென்பாலருள்புரியவேண்டும்விமலவெனவேத்தித்
துளங்குமுயர்தென்மண்டபத்தினிருந்துபோந்ததுயர்நீங்கி. (௯௧)

பின்னர்த்தனதுமனைக்கேகிற்பாவநீங்கிப்பேரின்ப
மன்னியிருப்பர்பதினொன்ருந்திதியிற்கடவுண்மாதீர்த்தந்
தன்னிலாடிமணிவண்ணன்சேவைதாழாதியற்றுவரேல்
முன்னவரியபேரின்பமுத்திநெறிக்குவழியாமால். (௯௨)

குலதம்பத்தைப்பூரணையிலுவாவிற்போற்றிக்கைகூப்பி
னலகைவருத்தாசேவையன்றிவீழ்நாள்கழித்தலாகாவா
னிலவுதினங்தோறிருபோதுநெடுநீர்க்கங்கைமாநதிதோய்ந்
துலகமேத்துமகிலேசன்பொற்ருள்வணங்கியுறைகவே. (௯௩)

காவிமேய்ந்துகள்ளொழுகக்கயவாய்மேதிகிடந்துயிர்க்கும்
வாவிசூழ்ந்தகாசிநகர்வதிந்துசேவைசெய்யாமல்
யாவருறைந்தாரவர்மரபினிறந்தோர்சிறிதுமருளின்றிப்
போவரொன்னவெஞ்ஞான்றுமருமாமறைகள்புகலுமால். (௯௪)

உலகுபுகுதத்திறந்தகடையோங்குமதிட்காசியிலுறைந்து
மலைநீர்புரட்டுகங்கைதனிலாடியகிலேசனைப்பணியார்
கொலைசெய்பிறைவாளெயிற்றழல்கட்கூர்முத்தலைவேல்காலனெனு
மிலகுமணிச்சூட்டலங்குதுத்திப்பாந்தள்வாய்ப்பட்டிறந்துழல்வார். (௯௫)

அணிபொற்கனத்ததகடுபொதிந்தலங்குசோதிக்கதிரொறிக்கு
மணிகன்னிகையிற்றினமூழ்கியகிலேசன்ருள்வழுத்துகின்றே
ரிணையில்கடவுட்டீர்த்தங்கள்பாவும்படிந்துசேவைசெய்தார்
தணிவிலுயர்பேரின்பமுத்திசார்வருண்மையுண்மையே. (௯௬)

வேறு.

யாழினசமிடற்றமாங்குயிலகவுமிலைதலைவிரித்ததண்சோலை
சூழ்கிடங்தோங்குகாசிகண்டத்தின்றொடர்புயர்வதனுடைசிறப்பு
மாழ்கடற்பரப்பின்கண்ணறிவரிதாமருந்தமிழ்முழுவதுந்தெரிந்த
தாழ்வில்சீர்முனிவகேளெனச்சூர்மாத்தடிந்தவனருளொடுஞ்சாற்றும். ()

மின்னவிர்பசும்பொற்குடுமியநெடுவான்முகட்டுயர்விந்தமால்வரையை
இன்னிசைமகதியாழ்பயில்முனிவனெதிர்ந்தனனியம்பியவாறும்
பன்னருமறைநான்முகத்தவனுலகிற்பண்ணவர்போகியவாறு
மன்னவர்மலயத்தருந்தவமுனிவன்சாலையினடைந்திடுமாறும். (௯௮)

கடவுண்மீன்கற்பிற்றிருந்திழைமகளீர்செய்திறன்கழறியவாறுங்
குடுமிவான்பொதியத்தருந்தவன்விந்தவரையிடைக்குறுகியவாறு
முடைதிரைநெடுநீர்ப்புண்ணியதீர்த்தத்துயர்சிறப்போதியவாறுங்
கெடலருஞ்சீர்த்திசிறந்துயர்சத்தபுரிவளன்கிளத்தியவாறும். (௯௯)

புண்ணியசீலன்சுசீலனென்றுரைக்குமாயவன்கணங்கள்முன்போந்து
திண்ணிதினுரைப்பவருசிவசன்மன்றென்புலநோக்கியவாறும்
பண்ணமைபுரவியேழுடைத்தோரோனுலகிடைப்படர்ந்துபோமாறும்
விண்ணவர்க்கிறைவனினிதுவீற்றிருக்குமுலகினில்மேவியவாறும். (௪0)

ஆரழற்கடவுளுலகினிலடைந்தவாறுமற்றடல்கெழுநிருதி
யேருடையுலகும்வருணனீடுலகுமெய்தியவாறுநீள்காற்றின்
பேர்பெறுமுலகுங்குபேரனீடுலகும்பேசியவாறுமீசானன்
சார்தருமுலகுந்திங்கள்சூழுலகின்றன்மையும்வழங்கியவாறும். (௪௧)

அவிரொளிபரப்புதாரகையுலகுபுதனுலகடைந்துபோமாறுங்
கவியுறையுலகமெய்தியவாறுங்கருணையங்காரகனுலகும்
புவிதொழுகுருவினுலகமுஞ்சனியினுலகமும்பொருந்தியவாறுந்
தவமுயல்முனிவரெழுவர்தம்முலகின்றன்மையைவிளம்பியவாறும். ()

அருந்தவமிழைப்பான்விறல்கெழுதுருவன்போகியவாறுமங்கன்னேன்
புரிந்திடுசெய்திசாற்றியவாறும்புரிந்துதன்பெயருடைப்பதம்பெற
றிருந்திடுமாறுமுயர்மகலோகமுதலநான்குலகெதிர்ந்தனவுந் [ம்
திருந்துநான்முகத்தோன்காசியைத்துதித்தசெய்கையாங் குரைத்திடுமாறு

தொல்லுலகளவைபுகன்றுமாயவற்குச்சுடர்முடிசூட்டியவாறும்
பல்கலைதெரிந்தபுகழ்ச்சிவசன்மன்பரகதிமேவியவாறும்
வில்வலற்செகுத்தோன்வரைபகவெறிந்தவிறைவனைக்கூடியவாறுங்
கல்லொலிமணிகன்னிகையின்வான்சிறப்புக்காதலிற்கழறியவாறும். (௪௪)

விரிதிரைபொருநீர்க்கங்கையின்றன்மைவிளம்பியவாறுமக்கங்கைத்
திரையிடைக்கழுகோரொன்பிடமுன்னைத்தீவினையகற்றியவாறும்
பொருவிலாக்கடவுட்கங்கையினுமமாயிரம்புகன்றிடுமாறுங்
கரைபொருவாரணசியுடைத்தன்மைகருணையிற்கூறியவாறும். (௪௫)

வடிகெழுகுருதிசூலிலைச்சூலவயிரவன்றோன்றியவாறு
மடல்கெழுதண்டபாணிபார்போற்றவன்பினிற்றோன்றியவாறுந்
தடமலிஞானவாவிசாற்றுழியிற்றருபடநோக்கியவாறும்
படைநெடுந்தடங்கட்கலாவதிசெய்திபரிவொடுகிளத்தியவாறும். (௪௬)

வழுவிலில்லொழுக்கங்கழ்த்தியவாறுமுன்னராச்சிரமத்தின்வருவாய்
மொழிதருமாறுமணிநுதன்மகளீரிலக்கணமொழிந்திடுமாறும்
பழுதிலாசாரம்விளம்பியவாறுமில்லறம்பகர்ந்திடுமாறு
மழிவிலாமுத்திவீடருள்யோகநிலைமையையறைந்திடுமாறும். (௪௭)

காலமுற்றுணர்வானுரைத்ததுமீறுக்கணிக்கிலத்தியாயமோர்நாற்பால்
மேலுமொன்றாகும்பூருவகாண்டம்வியப்பினத்தொகை தனைக்கேட்போர்

ஞாலமோரேழுமொருகுடைநிழற்றவரசுவீற்றிருந்துநாளுலப்பிற்
பாலலோசனன்றன்செய்யபொற்கழற்கார்பங்கயப்போதினிலடைவார். ()

அருள்புரியவிமுத்தேசனற்காதையறைந்ததுமருட்டிவோதானன்
புரவுபூண்டிருந்ததுரைத்ததுங்காசிச்சிறப்பினைப்புகன்றதுங்கங்கைத்
திரைதவழ்காசிநகரில்யோகினிகள்சென்றிடுமாறும்விண்புகழும்
விரிசுடருலோலாதவனுயர்காதைவிளக்குறப்பகர்ந்திடுமாறும். (௪௯)

உருவவொண்கதிர்காலுத்தராதித்தன்காதையாங்கோதியவாறும்
விரிகதிர்ச்சாம்பாதவனியற்காதைவிளம்பியவாறுமேம்பரித்தேர்
துருபதாதித்தன்மயூகவாதித்தன்காதைகள்சொல்லியவாறு
மருவருங்கடோற்காதவன்கருடேசன்காதைகள்வழங்கியவாறும். (௫௦)

ஆய்கதிரருணைதவன்முதற்றபனர்காதைகளறைந்திடுமாறும்
பாய்பரிமகமோர்பத்துநான்முகத்தோன்பரிவுடனாற்றியவாறுஞ்
சேயவான்குஞ்சிச்சிவகணம்வளங்கூர்காசியிற்சேர்ந்திடுமாறு
மேயவோரலகைதன்னுருநீங்கிவிண்ணவனாகியவாறும். (௫௧)

அருவியங்கடாத்தவைங்கரன்காசியடைந்திடுமாறுமைங்க
கருணையினுலகுபுகழ்திவோதானற்கண்டலுங்கடனிறவண்ணன்
பொருவறுகாசிசேர்ந்ததுந்திவோதானனுக்கருள்புரிந்திடுமாறும்
விரிதிரைப்பஞ்சநதவரலாறும்விந்துமாதவனுதித்ததுவும். (௫௨)

அருள்புரிவிந்துமாதவன்றோன்றியக்கினிவிந்துவுக்கியல்பாற்
பொருவறுதீர்த்தமான்மியமுரைத்ததன்மையும்புரிசடைக்கடவு
ளெரிமணியிமைக்குமந்தரநீங்கிக்காசியினெய்தியவாறு
மருவருஞ்சேட்டதானத்தினடைந்துமறைமுனிக்கருள்புரிந்ததுவும். ()

காசியின்பெருமைமுனிவரர்க்குரைத்தவண்ணமுங்கலைமதிபுனைந்த
மாசறுகடவுட்பராசரலிங்கமுதலியலிங்கத்தின்வரவுந்
தேசுறுசயிலேச்சுரன்முதலீசர்காதையுஞ்சிறந்தரத்னேச
ஞசறுசிறப்புங்கிருத்திவாசேசனன்புறவினிதுதோற்றியதும். (௫௪)

உலகொருமூன்றும்புகழ்பெறுதுர்க்கனரசினதுரிமையுமன்னோன்
புலவுகாறழல்வேற்சூலிமேற்றாண்டுபொருபடையெழுச்சியுமவனைக்
கலையிவரணங்குசெற்றதும்வச்சிரபஞ்சரகவசமுங்கதிர்கான்
றிலகுமோங்காரவிலிங்கமெய்தியதுமன்னதனைத்தருஞ்சிறப்பும். (௫௫)

முக்கணெம்பெருமான்றோற்றமுமன்னோன்பெருமையுமுடிவில்கேதாரந்
தொக்கநற்கதையுந்தருமலிங்கத்தின்றோற்றமுங்கிள்ளையின்கதையு
மிக்கவான்செல்வநோற்றவர்க்களிக்குமன்னோரதத்திரிதிகைவிதியுங்
கக்குவெங்குருதிவேல்வலனுயர்த்ததுர்த்தமனினியநற்கதையும். (௫௬)

ஒண்ணிறவடிவேலேந்துகங்காளகேதுவின்வதையுமோங்கொளிய
வண்ணல்வீரேசன்காதையுமமரரோத்திடவருந்தவக்கிழமை
நண்ணியார்மாட்டுமுனிதுருவாசனல்வரம்பெற்றதுமறையு
மெண்ணருஞ்சீர்த்திவிசுவகன்மேசவிலிங்கமுன்றோன்றியவியல்பும். ()

தக்கனோர்வேள்விமுயன்றதுந்தேவிதந்தைதன்சாலேபுக்கதுவு
மிக்கவவ்வேள்விசிதைத்ததுந்தக்கன்வீந்ததும்பாருவதீசன்
புக்கதுங்கங்கேச்சுரன்வரலாறுநருமதேச்சுரன்பொருந்தியது
மைக்கருமிடற்றுத்திங்களங்கண்ணிவனேசடைச்சதீச்சுரன்வரவும். (௱அ)

புனிற்றிளந்திங்கள்புனேயமுதேசன்முதலியவிலிங்கத்தின்பொலிவுங்
கனிச்சுவையன்னகவிபுனேவியாதன்கையொடுநாவெழாவாறு
நினேப்பருஞ்சாபமவன்விளம்பியதுநிகரில்கேத்திரவளனேடு [யும்
கனேத்துவெண்டிரைதாழ்தீர்த்தவான்சிறப்புமுத்திமண்டபத்தினற்கதை

அலங்கிதழ்க்கொன்றைத்தெரியல்சூழ்வேணியகிலநாயகனுயர்சிறப்பு
நலங்கெழுசேவைபுரிதருமுறையுமாகநன்கிசைத்தவத்தியாயம்
புலங்கொளநோக்கினேம்பதோடொன்பான்புகலினீதுத்தரகாண்டம்
விலங்கலில்காண்டமிரண்டினத்தியாயநூறெனவுரைப்பர்மிக்குணர்ந்தோர்

கலேமுழுதுணர்ந்துதவத்துறைபோயகடவுணன்முனிவரகாந்தத்
துலகெலாமேத்துகாசிகண்டத்தின்பெருமையிங்கொருமுறைகேட்போ
ரலேதிரைபுரட்டுபுண்ணியதீர்த்தமாடுநர்பெறுபலனடைந்து
கொலேமுதலாயதீவினேக்குறும்புகொன்றுயர்முத்திவீடடைவார். (௬௧)

புத்தகத்திதனேவரைந்துளமுவகைபூப்ப நன்களிப்பவரதனி, லெத்து
ணேக்காதையெத்துணேக்கவிக ளெத்துணேப்பதம்வரியெழுத்தாங், குய்த்
தவேடணிந்தநாணிழைபொதிந்ததுகில்முதலிவைகளோரொன்றிற்,கத்த
மால்வரைபோற்களிற்றுரிபுனேந்தோன்கயிலேயினளப்பினுறைவார். ()

இனிதினிவ்வேடொன்றளித்திடிற்புராணம்யாவுமீந்திடுபலனெய்து
மனேயதுவிழைந்துகேட்பின்வந்தியருமருமகப்பெறுவர்தீர்வரிதா
முனிதருபிரமகத்திபன்னிருகாற்கேட்டிடிற்றீர்ந்திடுமுக்கட்
டனிமுதற்கடவுளாணேமுக்காலுஞ்சத்தியஞ்சத்தியமாமால். (௬௩)

பெறலருவிரதமருந்தவந்தானம்வேள்வியாற்றுநர்பெறுபலனு,மறை
முழுதுணர்ந்துங்கயையினிற்பண்டம்வழங்கியும்புராணமுற்றறிந்து, மற
நெறிவழுவாதொழுகியு மறையோர்க்கடிசிலூட்டியுமெதுபோது, முறை
யுளரெய்துபேறுமிக்காதையோர்முறைகேட்டுளோர்பெறுவார். (௬௪)

கொழுந்துவிட்டிலகுக்குருச்சுடர்மாடக்கொடிநெடுவீதிதோறரம்பைப்
பழங்கனிந்தொழுகுமமுதமுற்றிருக்கும்வளவயற்காசியெம்பரமன்

பொழிந்திடுகருணைவாரிதிபடிந்தபுலமையோர்க்கன்றியெஞ்ஞான்றும்
விழைந்துளமுவகைபூப்பவிக்காதைகேட்குநல்வினையமெய்திடாதால். ()

ஓதுமிக்காதை முழுவதுங்கேளா தொழிந்திடினுரைத்தகாதையினிற்,
பாதியாயினுமத்தியாயமொன்றேனும்விருத்தமொன்றாயினும்பரிவிற், றீ
திலோரெழுத்தாயினுமுணர்ந்தொருவன்செவிப்புலத்துறவுரைப்போனை,
மேதகுகுலத்துத்தமதுதெய்வதமென்றருச்சனைபுரிந்திடல்வேண்டும். ()

அன்னவன்றனக்குவேண்டுவநல்கிமகிழ்ச்சிசெய்திடிலகிலேசன்
றன்னுளமகிழ்ச்சிசெய்திடல்போலுஞ்சாற்றுமிக்காதைகேட்டறிந்தோர்
புன்னெறியொழுக்கம்பயின்றிடார்தீமைபுரிகிலார்திருவொடும்பொலிந்து
பன்னெடுங்காலம்விரிகடலுடுத்தபாரினிலினிதுவாழ்ந்திருப்பார். (கூஎ)

என்றினிதருளால்வரைபகவெறிந்தவிலங்கிலைவேல்வலனுயர்த்தோன்
குன்றுறைதெய்வமுனிவனுக்குரைத்தயாவையுமுளமகிழ்சூர
மன்றநான்மறைதேர்வியாதனின்னருளால்வழிபடுசூதனைம்புலனும்
வென்றுறைகடவுணைமிசாரணியத்தருந்தவர்வியப்புறவுரைத்தான். ()

கoக வது- சேவியத்திறமுரைத்த அத்தியாயம்- முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உடுஉச

... மலலம.

---

காசிகாண்டம்

முற்றுப்பெற்றது.

திருஞானசம்பந்தன்திருவடிவாழ்க.

Sundaravadivelu Mudaliar

V. B. SUBRAHMANIYASARMA
TAMIL-PANDIT.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# காசிகாண்டத்தின்

## அத்தியாயவகராதி.



பாயிரமுட்படஆ அத்தியாயம்-க0உக்கு

திருவிருத்தம்-உருஉச.

காசிகாண்டத்தின்அத்தியாயவகராதி

முற்றிற்று.



சிவமயம்.

சக-வது- துருபாதித்தன்கதையுரைத்த அத்தியாயமும்-ரு0-வது-மயூகாதித்தன்கதையுரைத்தஅத்தியாயமும் ஆகியவிவ்விரண்டத்தியாயங்களையும், நாற்பத்தொன்பதாவதாகிய, துருபாதித்தன்கதையும், மயூகாதித்தன்கதையுமுரைத்த அத்தியாயமென ஓரத்தியாயமாகக்கொண்டு அதுமுதல் அத்தியாயவிலக்கங்களை ஒவ்வொன்றாகக்கழித்து நூறத்தியாயமாகக்கொள்க.